உ

கணபதி துணை.

திருவாலவாயுடையார்

# திருவிளையாடற்புராணம்.

செல்லிநகர்ப்

## பெரும்பற்றப்புலியூர் நம்பி

இயற்றியது.

இது,

மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

பல கையெழுத்துப்பிரதிகளைக்கொண்டு

ஆராய்ந்து

நூதனமாக எழுதிய குறிப்புரை முதலியவற்றுடன்

சென்னை:

கேசரி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

(இரண்டாம் பதிப்பு)

விலை ரூபா 2—8—0.

பிரபவ௵ சித்திரை௴.

1947.



Formes 1 to 47 Printed at the Commercial Press, Triplicane and the remaining portion at the Kesari Press.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

---

பக்கம்.



---

# இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டிய * நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

அருணகிரி - அருணகிரிப்புராணம்.
அழகர்கல - அழகர்கலம்பகம்.
இரகு - இரகுவம்சம்.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இலீலா - இலீலாசங்கிரக அத்தியாயம்.
இறை - இறையனாரகப்பொருள்.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
கட - கடவுள்வாழ்த்து.
கடம்ப, கடம்பவன - கடம்பவனபுராணம்.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம்.
கலி - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கோயிற்பு - கோயிற்புராணம்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சீவக - சீவக சிந்தாமணி.
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனார்.
சூடா - சூடாமணிநிகண்டு.
சூளா - சூளாமணி.
ஞான - ஞானவாசிட்டம்.
தக்க, தக்கயாக - தக்கயாகப்பரணி.
தத்துவ - தத்துவராயர் பிரபந்தங்கள்.
தாயு - தாயுமானவர் பாடல்.
திருக்காளத்தி - திருக்காளத்திப் புராணம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருஞா திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.
திருநா - திருநாவுக்கரசுநாயனார்.
திருநாகைக்காரோண - திருநாகைக்காரோணப் புராணம்.
திருமயிலை - திருமயிலைத்திரிபந்தாதி.
திருவா - திருவாசகம்.
திருவாத - திருவாதவூரர் புராணம்.
திருவிளை - திருவிளையாடற் புராணம்.
திவ் - திவ்யப்ரபந்தம்.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியர்.
நள - நளவெண்பா.
நால்வர்நான்மணி - நால்வர்நான்மணிமாலை.
நாலடி - நாலடியார்.
பக் - பக்கம்.
பதி - பதிகம்.
பட்டினப் - பட்டினப்பாலை.
பதிற் - பதிற்றுப்பத்து.
பயகர - திருவிளையாடற் பயகரமாலை.
பரி - பரிபாடல்.
பா - பாயிரம்.
பி - ம் - பிரதிபேதம்.
பிரபு - பிரபுலிங்கலீலை.
பு. வெ - புறப்பொருள் வெண்பாமாலை.
புறநா - புறநானூறு.
பெரிய - பெரிய புராணம்.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மது, மதுரை, மதுரைக் - மதுரைக்காஞ்சி.
மதுரைக்கல - மதுரைக்கலம்பகம்.
மதுரைப்பதிற் - மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி.
மீனாட்சி - மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ்.
யா. வி - யாப்பருங்கலவிருத்தி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
வி-பாரத, வி-பாரதம் - வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.

---

* நூல்களிலுள்ள உறுப்புக்களின் பெயர்கள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

கணபதி துணை.

# முகவுரை.

## தேவாரம்.

### திருச்சிற்றம்பலம்.

வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணு வேன்றேன்
றோதியே மலர்க டூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ்சூடு
மாதியே யால வாயி லப்பனே யருள்செய் யாயே.

திருவாலவாயென்பது பாண்டிவளநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற பதினான்கு ஸ்தலங்களில் முதலாயது;

பதினான்குஸ்தலங்களாவன:

"கூடல் புனவாயில் குற்றால மாப்பனூ
ரேடகநெல் வேலி யிராமேச-மாடானை
தென்பரங்குன் றஞ்சுழிய றென்றிருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்" என்பன.

இத்தலம், கருணைக்கடலாகிய ஸ்ரீசோமசுந்தரக்கடவுள் ஆன்மாக்களை உய்வித்தருளவெண்ணி, ௬௪ - திருவிளையாடல்கள் செய்தருளிய ஒப்புயர்வற்ற பெருமைவாய்ந்தது; இதற்குரிய தேவாரப் பதிகங்களாவன:

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

| தேவாரத்தின் முதல் | | | பண் |
|---|---|---|---|
| நீலமாமிடற்று | .... | .... | குறிஞ்சி |
| மந்திரமாவது | .... | .... | காந்தாரம் |
| மானினேர்விழி | .... | .... | கொல்லி |
| காட்டுமாவது | .... | .... | கௌசிகம் |
| செய்யனே | .... | .... | ,, |
| வீடலாலவாயிலாய் | .... | .... | ,, |

| | | |
|---|---|---|
| வேதவேள்வியை | .... .... | நாலடிமேல்வைப்பு |
| ஆலநீழல் | .... .... | திருவியமகம் |
| மங்கையர்க்கரசி | .... .... | புறநீர்மை |

திருநாவுக்கரசுநாயனர்

| | | |
|---|---|---|
| வேதியா | .... .... | திருநேரிசை |
| முளைத்தானை | .... .... | திருத்தாண்டகம். |

இத்தலத்திற்குரிய பழையவரலாறுகளைப் புலப்படுத்தும் வட நூல்களும், வடமொழித் துதிகளும், தனித்தமிழ்நூல்களும், தனிப் பாடல்களும் பல உள்ளனவென்பது யாவருக்கும் தெரிந்ததே. வட மொழியிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யப்பெற்றனவாய் மூர்த்தி விசேட முதலியவற்றை விளங்கத் தெரிவிக்கும் நூல்கள் சில; அவை திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், கடம்பவன புரா ணம், சுந்தரபாண்டியம், திருவிளையாடற் புராணம், அட்டமிப் பிர தக்ஷிணமான்மிய மென்பனவாம்; அவற்றுள், —

௧. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமென்னும் இந்நூல், * உத்தரமகாபுராணமென்னும் வடநூலின் ஒருபகுதியாகிய சாரசமுச்சய மென்பதிலிருந்து மொழிபெயர்த்து, செல்லிநகர்ப் பெரும்பற்றப் புலியூர்நம்பி யென்பவரால், செய்யுள்நடையாக இயற் றப்பெற்றது. இஃது, "ஓதரிய" (பக். உ௫௰) என்னும்செய்யுளாலும், "அம்பது மத்தார்" (பக். ௩௧௫௰) என்னும் செய்யுள் முதலியவற்றாலும் விளங்குகின்றது. இந்நூலின் செய்யுட்டொகை, ௧௭௫௩. இது பழைய திருவிளையாடல், வேம்பத்தூரார் திருவிளையாடல், திருவிளையாட லெனவும் வழங்கா நிற்கும்; இதனுடைய மற்றவிசேடங்கள் பின்னர் அவ்வவ்விடத்து எடுத்துக்காட்டப்படும்.

௨. கடம்பவனபுராண மென்பது, தொண்டை நாட்டிலுள்ள இலம்பூரிலிருந்த வீமநாதபண்டித ரென்பவரால் நீபாரண்யமாஹாத் மியம் அல்லது கதம்பவனபுராண மென்னும் வடநூலிலிருந்து மொழி பெயர்த்துச் செய்யுள் நடையாக இயற்றப்பெற்றது. இதன் செய்யுட்டொகை, ௧௦௯௦. இதில் இலீலாசங்கிரக அத்தியாயத்தின் முதலிலுள்ள, ௯௪ - செய்யுட்களாற் கூறப்பெற்ற, ௯௪ - திருவிளை யாடல்களும் மேற்கூறிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலுள்ள முறைப்படியே அமைந்துள்ளன. இந்நூல் அச் சிடப்பட்டுள்ளது.

---

* உத்தரமகாபுராணமென்னும் வடநூல் இப்பொழுது கிடைக்கவில்லை.

௩. * சுந்தரபாண்டிய மென்பது, தொண்டைநாட்டிலுள்ள வாயற்பதியிலிருந்த அனதாரியென்னும் புலவர்பெருமானாற் சுந்தர பாண்டியமென்னும் வடநூலிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள் நடையாக இயற்றப்பெற்றுள்ளது; "மிண்டரை வெல்லும் வளைச் சிங்க ராயன் விலைகொடுப்பத், தண்டமிழ் மேக முரத்தூரில் வேதியன் றானும்விற்பக், கொண்டவன் பின்சென்று மண்டலத் தேபுகழ் கொண்டபிரான், வண்டமிழ்க் கும்ப னனதாரி யுந்தொண்டை மண்டலமே" என்னுந் தொண்டைமண்டலசதகத்தாலும், "கம்பனென் றுந் தாதனென்றுங் † சாழியொட்டக் கூத்தனென்றுங், கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ - அம்புவியின், மன்னு வலர்புகழும் வாயலனதாரியப்ப, னந்நாளி லேயிருந்தக் கால்" என்னும் பழைய வெண்பாவாலும் பாராட்டப் பெற்றவர் இந்த அனதாரியேயென்று தெரிகின்றது. இந்நூல் செய்யப்பெற்றகாலம், சாலி. ௧௪௮௫; கி. பி. 1563. இஃது இன்னும் அச்சிடப்படவில்லை; முற்றும் கிடைக்கவுமில்லை.

௪. திருவிளையாடற்புராணமென்பது பரஞ்சோதிமுனிவரென்பவரால் ஸ்ரீ ஹாலாஸ்யமாகாத்மியமென்னும் வடநூலிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுள்நடையாக இயற்றப்பெற்றது. இதன் செய்யுட்டொகை ௩௩௬௩. இக்காலத்து எல்லாராலும் மிகுதியாகப் பாராட்டிப் படிக்கப்பெற்றுவருவது இந்நூலே. இஃது அச்சிடப்பட்டுள்ளது.

௫. அட்டமிப்பிரதக்ஷிண மான்மியமென்பது தேவாரத்தலமுறையை முதலிற்பதிப்பித்தவரும் மதுராபுரி வாஸியுமாக இருந்த ஸ்ரீ இ. இராமஸாமிப் பிள்ளையவர்களால் வடநூலிலிருந்து வசன நடையாக முன்பு இயற்றிப் பதிப்பிக்கப்பெற்று வழங்குகின்றது.

இந்நூல்கள் ஐந்தனுள், முதலாவதும் நான்காவதுமாகிய நூல்கள் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுடைய அற்புதத்திருவிளையாடல்கள் அறுபத்துநான்கையும் மிகச் செவ்வையாக விரித்துப் பாராட்டித் தெரிவிப்பனவாம். இவ்விரண்டனுள் ஒன்றனோடுமற்றொன்றற்குள்ள வேறுபாடுகள் பல.

இந்நூலிலுள்ள மூர்த்திபார்க்கரசளித்த திருவிளையாடல் (௫௧) முதலிய மூன்றுகதைகளும் அந்நூலிற்காணப்படவில்லை; அதிலுள்ள வருணன்விட்ட கடலைவற்றச்செய்த திருவிளையாடற்கதை இதி

* இந்தநூல் மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன்புத்தகசாலையிற் கிடைத்தது.

† காளியொட்டக் கூத்தனென்றும் வழங்குவதுண்டு.

ளுள்ள (௬௨) நான்மாடக்கூடலான திருவிளையாடலிலும், அதிலுள்ள நாகமெய்த திருவிளையாடல், மாயப்பசுவைவதைத்த திருவிளையாடற் கதைகள் இதிலுள்ள (௬௬) மதுரையான திருவிளையாடலிலும், அதிலுள்ள திருநகரங்கண்ட திருவிளையாடற்கதை இதிலுள்ள (௫௬) புலிமுலைபுல்வாய்க்கருத்திய திருவிளையாடலிலும் அமைந்துள்ளன; இதில் திருவிளையாடல்கள் அமைந்துள்ள முறைவேறு; அதிலமைந்துள்ள முறைவேறு; அது கதையை விரித்துக்கூறுவது; இது சுருக்கமாகக் கூறுவது; அன்றியும், சங்கச்செய்யுட்கள்முதலிய பண்டைத் தமிழ் நூல்களிலுள்ள இந்நகரவரலாறுகளை விடாமல் தழுவிச்செல்வது இஃது; அஃது அன்னதன்று.

சிலநூற்றாண்டுகளுக்குமுன் இந்நூலை எல்லாராலும் படிக்கப்பெற்றுவந்ததன்றி, இந்நூலிலுள்ள திருவிளையாடல்களின் முறையையும் இதன் சொன்னடை பொருணடைகளையுமே தழுவிப் பலர் இத்தலசம்பந்தமான நூல்களைச் செய்துவந்தார்களென்று தெரிகின்றது. இது * திருவிளையாடற் பயகரமாலை, கடம்பவன புராணத்துள்ள இலீலாசங்கிரக அத்தியாயம், † திருவுசாத்தான நான்மணிமாலையின், ௨௭ - ஆம் செய்யுள் முதலியவற்றால் நன்கு விளங்கும்.

இதுவே திருவிளையாடலென்று முற்காலத்திற் பாராட்டப் பட்டுவந்ததென்பதையும் இதன்செய்யுட்கள் பழைய உரைகளில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுவந்தனவென்பதையும் கோலமறுத்தற்குத் திருப்போரூர்ச்சிதம்பரசுவாமிகளெழுதியவுரை நன்கு விளக்குகின்றது ; ௸ நூல், ௭, ௧௬-ஆம் செய்யுட்களின் உரைகளைப் பார்க்க.

மேற்கூறிய உண்மை யாவருக்கும் விளங்கும் பொருட்டே பழையவுரையுடன் பிரதிலேப்படியிற் கிடைத்ததான ௸ திருவிளை

---

* இந்நூலாசிரியரின் பெயர் வீரபத்திரக்கம்பர் என்று ஓர் ஏட்டுப் பிரதியால் தெரியவந்தது.

† இந்நூலை இயற்றியவர், நொச்சியூர்ப் பழனியப்பஞ்சேர்வைகாரர்; இவரும் திருவுசாத்தானத்தின பழைய தமிழ்ப்புராணமியற்றிய அம்பலவாணமுனிவரென்பவரும் ஒரேகாலத்தினர். ௸ முனிவருடையகாலம், இற்றைக்கு ௬௬௦- வருடங்களுக்கு முந்தியதென்றும் இதனை, அம்முனிவர் தமது காத்தால் எழுதிய சுதாசிவவியாக்கியானமென்னும் புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள சகாத்தம் தெரிவிக்கின்றதெனறும் ஆண்டுள்ளார் சொல்லுகின்றனரென்றுஞ்சொல்லி, ௸ நான்மணிமாலையை எனக்குவாங்கித்தந்தவர், பின்னத்தூர், ஸ்ரீ அ. நாராயணஸாமி ஐயரவர்கள்.

யாடற்பயகரமாலை மூலத்தையும் இலீலா சங்கிரக வத்தியாய முதலிய வற்றையும் வேறுசில பழைய பிரதிகளோடு ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்து குறிப்புரையுடன் பதிப்பித்து இப்புத்தகத்தின்பின்னர்ச் சேர்த்திருக்கிறேன்.

பயகரமாலை யென்னும் பெயரைப் பயங்கரமாலையெனத் திருத்தி விட்டதல்லாமல், இத்திருவிளையாடலையே மேற்கோளாகக்கொண்டு அதுசெய்யப்பெற்றதென்பதையுமறியாமற் சில பாடல்களை மாற்றியும் சில பாடல்களைக் குறைத்தும் சிலபாடல்களை நூதனமாக இயற்றிச் சேர்த்தும் சற்றேறக்குறைய ௫௦ - வருடங்களுக்குமுன் யாரோ ஒருவர் பதிப்பித்து விட்டனர்.

இப்புத்தகத்தில் ௧௨௧, ௧௮௪, ௧௪௭, ௧௯௦, ௨௨௭-௮-ஆம் பக்கங்களின் கீழே 'இது வெள்ளிபாட்டு' என்றும், 'சிலபிரதிகளிற்காணப்படவில்லை' என்றும் குறிப்பிட்ட செய்யுட்களெல்லாவும் வெள்ளி பாடல்களென்றே ஓர் ஏட்டுப்பிரதியில் வரையப்பட்டிருந்தன. [வெள்ளி-வெள்ளியம்பலவாண முனிவர்.]

இதுகாறும் கூறியவாற்றால், வெள்ளியம்பலவாண முனிவர், திருப்போரூர்ச் சிதம்பரஸ்வாமிகள், திருவிளையாடற் பயகரமாலை நூலாசிரியரான வீரபத்திரக்கம்பர், இலம்பூர் வீமநாதபண்டிதர், நோச்சியூர்ப்பழனியப்பஞ்சேர்வைகாரர் ஆகிய இவர்களுடையகாலத்திற்கு இந்நூலாசிரியருடைய காலம் முற்பட்டதென்பது வெளியாகின்றது.

இந்நூலால், சங்கநூல்கள் சம்பந்தமான சிற்சில பழையசெய்திகளும், சிலநாடுகள், சிலமலைகள், சிலஊர்கள், சில புண்ணியதீர்த்தங்களும், சில சிவஸ்தல விசேடங்களும், திருவிளையாடல் சம்பந்தமான சில பழமொழிகளும், சில திருவிளையாடல்கள் முதலியன நடந்தமைக்கு அறிகுறியான இடப்பெயர் முதலியனவும், சில புலவர்களுடையசரித்திரங்களும், அவர்களுள் இன்னாரின்னார் இன்னஇன்ன அமயத்து இன்னஇன்ன பாடல்கள் இன்னஇன்ன நூல்கள் செய்தனரென்பதும், சில நூற்பெயர்களும், திருவாசகத்துள்ள பதிகங்களுள் இன்னஇன்னபதிகங்கள் இன்னஇன்ன அமயத்துப் பாடப்பட்டனவென்பதும், சில அரசபரம்பரைகளும், பற்பல பழைய வழக்கங்களும், இந்நாளிற் பெரும்பாலும் வழங்காத சிற்சில அரிய சொற்களும் வாக்கியங்களும், இக்காலத்துப் புலப்படாதனவாகிய இசை, சுதிரை, நவமணி முதலியவற்றின் இலக்கணங்களும், ஒரு

வகையான யுத்தபரிபாஷைகளும், சில சாதிவகையும், சில குலவகை யும், இன்னும் எத்தனையோ அரியவிஷயங்களும் அறியலாகும்.

ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் இந்நூலுள்ளே பெரும்பாலும் சொக்கனென்றே வழங்கப்பெறுவர். 'சொக்கன்' என்பதற்கு அழகன் என்பதுபொருள்; சொக்கு - அழகு; பேரழகென்னும் பொருள் கூறுவதுண்டு; இதனை, இந்நூல், இந்திரன் பழி தீர்த்த திருவிளையாடல், ௨௬-ஆம் செய்யுளாலுணர்க. பண்டைக்காலத்து இப்பெயரே பெரும்பாலும் வழங்கப்பெற்றுவந்தமையின், இந்நூலாசிரியரால் இத்திருநாமம் மிக எடுத்தாளப்பட்டதென்று தெரிகின்றது. அங்ஙனம் வழங்கி வந்தமையை, சொக்கலிங்கம், சொக்கர்தீபாராதனை, சொக்கத்தாண்டவம், சொக்குப்பாட்டு, சொக்கரப்பம், சொக்கர் தலைக்கீடு (சொக்கர்லேஞ்சு), பழைய சொக்கநாதர் கோயிலென்னும் உலக வழக்காலும், தேவாரம், கடம்பவனபுராணம், சுந்தர பாண்டியம், மதுரை மும்மணிக்கோவை, மதுரைச் சொக்கநாதருலா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி, மதுரைத் திருப்பணிமாலை, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், திருவாதவூரர்புராணம், பழைய திருப்பெருந்துறைப் புராணங்கள் முதலிய நூல்களாலு முணர்க. அன்றி, வடமொழிப்பெயராகிய 'சுந்தரர்' என்பதை எடுத்தாளுதலினும் தென்மொழிப் பெயராகிய 'சொக்கர்' என்பதைத் தமிழ் நூலில் எடுத்தாளுதல் அழகென்று இவர் எண்ணி யிருக்கலாமென்றும் தோற்றுகிறது; சுந்தரரென்ற திருநாமமும் இதிற் சிறுபான்மையாக வழங்கும்.

தாமியற்றிய திருவிளையாடற்புராணச் செய்யுட்களைப் படித்துக் காட்ட நினைந்து, ஒருநாள், அந்திப் பொழுதில் வேம்பத்தூர்க்கு வந்த பரஞ்சோதி முனிவரை அவ்வூர்க்கவிஞர்களுள்ளே தண்டிகை பெற்று விளங்கிய பெரியார் அறுபத்துநால்வர் மறுநாட்காலையில் வரச் சொல்லிவிட்டு, இன்னஇன்ன பகுதியை இன்னார் இன்னார் இயற்றுதற்குரியரென்று அன்றிரவில் யோசித்துத் தமக்குள் நிச்சயித்துக் கொண்டு ஒவ்வொருவர் ஒவ்வொன்றாக அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் விடியற்காலத்துள் தனித்தனியே செய்து முடித்து அவற்றை ஒருங்குசேர்த்துவைத்துக்கொண்டிருந்து, காலையில்வந்த பரஞ்சோதிமுனிவரை நோக்கி, இதைக்கேளுமென்று தாமியற்றிய நூலைப் படித்துக்காட்டி, திருவிளையாடற்புராணம் தமிழில் முன்னமே யிருக்கையில் நீர் செய்தது எதன் பொருட்டென்றுவினவ, அம்முனிவர் மனநொந்து சபித்துவிட்டுப் போயினர்; அதனால், இந்நூல் வழங்

காது போயிற்றென்று ஒரு கட்டுக்கதை கூறுவாரும், வடநூல்* ஆதாரமில்லாமையால் இந்நூலை ஒருவரும் அங்கீகரிக்கவில்லையென்று சொல்லுவாரும், சோமசுந்தரக் கடவுளை அருமையாகச் சொல்லாமற் பத்தியின்றி, 'சொக்கன் சொக்கன்' என்று பலவிடத்துங் கூறியிருத்தலால் இதை ஒருவரும் கையால் தொடவில்லையென்பாரும், பரஞ்சோதி முனிவரியற்றிய திருவிளையாடல் வழங்கத் தொடங்கியபின்பு இது வழங்குதலற்றதென்பாரும், இன்னும் தத்தமக்குத் தோற்றியவண்ணம் பற்பல கூறுவாருமாக அங்கங்கே பற்பலர் உளராயினர்; இவைகள் யாவும் கதாநுகதிகந்யாயமென்பது இந்நூலை ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு இனிது விளங்கும்.

இப்புத்தக ஆராய்ச்சிக்குக் கருவிகளாக இருந்த தமிழ் நூல்கள் அட்டமிப்பிரதக்ஷிணமான்மியம், அருணகிரிப் புராணம், அழகர் கலம்பகம், இரகுவம்மிசம், இலக்கணக்கொத்து, ஐங்குறுநூறு, கடம்பவனபுராணம், கந்தபுராணம், கம்பராமாயணம், கல்லாடமும் திருநெல்வேலி மயிலேறும் பெருமாள் பிள்ளையுரையும், கலிங்கத்துப்பரணி, கலித்தொகை, காளையார் கோயிற்புராணம், ஷெடி வசனம், குறுந்தொகை, கூடலழகர் புராணவசனம், கோயிற்புராணம், சிதம்பரபுராணம், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, சுந்தரபாண்டியம், சூளாமணி, ஞானவாசிட்டம், தக்கயாகப்பரணி, தத்துவராயர் பிரபந்தங்கள், தாயுமானவர் பாடல், திருக்காளத்திப் புராணம், திருக்கானப்பேர்ப்புராணம், திருச்சிற்றம்பலக்கோவையார், திருநாகைக் காரோணப் புராணம், திருப்பரங்கிரிப் புராணம், திருப்பூவணப் புராணம், திருப்பெருந்துறைப் புராணங்கள் (பழையன, புதியது), திருவாசகம், திருவாதவூரர்புராணம், திருவிளையாடற் பயகர மாலையும் அதனுரையும், திருவிளையாடற் புராணம் (பரஞ்சோதி முனிவர் செய்தது), திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா, திருவுத்தரகோசமங்கைப் புராணம், திருவேடகப் புராணம், திவ்யப்ரபந்தம், தேவாரம், தொல்காப்பியம், நளவெண்பா, நாலடியார், பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, பரிபாடல், பிரபுலிங்கலீலை, புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, பெரியபுராணம், மணிமேகலை, மதுரைக் கலம்பகம், மதுரைச் சொக்கநாதர் உலா, மதுரைச் சொக்கநாதர்

---

* இந்நூல் வடநூலாதாரங்கொண்டே இயற்றப்பெற்றதென்பதை, "குறைவற", "அவைநடு", "ஓதரிய", "வியாதனவான்மீகி" எனனும் முதற்குறிப்பையுடைய இந்நூற்செய்யுட்களாலுணர்க.

மும்மணிக்கோவை, மதுரைத்திருப்பணிமாலை, மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, மருதவனப் புராணம், யாப்பருங்கல விருத்தி, வில்லி பாரத மென்பன; வடநூல்கள்: ஸ்ரீவாதபுரமாஹாத்மிய முதலியன.

பயகரமாலை முதலியவைகளும் மேற்கோள்களாக இப்புத்தகத்தில் அங்கங்கே எடுத்துக்காட்டப்பட்டுள்ள பாடல்களும் சிலசில விடத்து அச்சுப் புத்தகப்பாடங்களுக்கு வேறுபட்டுத்தோன்றும்; அங்ஙனம் தோன்றுபவைகள் ஏட்டுப்பிரதிகளிற் காணப்பட்டவை யென்று கொள்க.

முதல் நூல்கள் அகப்படாமையின், இதிலுள்ள குதிரையிலக்கணை முதலிய பகுதிகளுட் சிலவற்றிற்குப் பொருள் விளங்கவில்லை; இதன் குறிப்புரையில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டிய இசை மரபுச் செய்யுள் முதலியன பழைய உரைகளிற்கண்டவை.

படிப்போரும் தேடுவோருமற்று மூலையிற்கிடந்த இந்நூற் கையெழுத்துப் பிரதிகளிலிருந்த பாடவேறுபாடுகளும் பிழைகளும் அளவுபடுவனவல்ல. ஆதலால், இதைப்பதிப்பித்தகாலத்தில் நேர்ந்த உழைப்பிலும் பொருட்செலவிலும் இதனை ஆராய்ச்சி செய்தகாலத்து நேர்ந்த உழைப்பும் பொருட்செலவும் மிக அதிகம்.

## பரிசோதனைக்குக் கருவியாகக் கொண்ட இந்நூற் கையெழுத்துப் பிரதிகள்:

| | | |
|---|---|---|
| திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துப் | பிரதி | க |
| திருப்பெருந்துறை ஆலயத்துப் புத்தகசாலைப் ... | ,, | க |
| சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைப் ... | ,, | க |
| மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் ... ... ... ... | ,, | க |
| களக்காடு ஸ்ரீ சாமிநாத தேசிகரவர்கள் வீட்டுப் ... ... | ,, | க |
| திருநெல்வேலி ஸ்ரீ கவிராசநெல்லையப்பபிள்ளையவர்கள்வீட்டுப் | ,, | க |
| வேம்பத்தூர் ஸ்ரீ பிச்சுவையவர்கள்வீட்டுப் ... ... | ,, | க |
| ,, ஷெ ஊர் சாமாவையரென்கின்ற ஆண்டிஐயரவர்கள் வீட்டு [சாலி. கஅஎசு; கி. பி. 1753] | | க |
| ,, பின்னத்தூர் ஸ்ரீ அ. நாராயணசாமி ஐயரவர்கள்தந்த ... | ,, | க |
| ,, மதுரை ஸ்ரீ மு. ரா.கந்தசாமிக்கவிராயரவர்கள்தந்த | ,, | க |
| கும்பகோணம் மகாதளம் பேட்டை இராமலிங்கதேசிகர் வீட்டுப் | ,, | க |
| பட்டுக்கோட்டையைச்சார்ந்த சிதம்பரவிடுதி கோவிந்த ஐயர்வீட்டுப் | | க |

இந்நூலாராய்ச்சிக்காக ஸ்ரீ வாதபுரமாஹாத்மியமாகிய வடநூலை வருவித்துதவியவர், மதுரை ஹைகோர்ட் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ வே. முத்துராமலிங்க ஐயரவர்கள்.

மதுரையின் சம்பந்தமான சில விஷயங்களைச் சொன்னவர்கள் மதுரை ஸ்ரீமத்-பரமேசுவரபட்டரவர்கள் முதலியோர்.

இதன் முதற் பதிப்பு 1906-ஆம் வருஷம் வெளியாயிற்று. அதன் பின்பு செய்து வந்த ஆராய்ச்சியால் இந்நூலும் குறிப்புரை முதலியனவும் அடைந்த திருத்தங்கள் பல.

முதற் பதிப்பில் மூலத்துக்குப்பின்னே தனியே பதிப்பிக்கப் பெற்றிருந்த பாடபேதங்களையும் குறிப்புரையையும் சிலபயன் கருதி மூலங்கள் உள்ள பக்கங்களில் அடிக்குறிப்பாக அமைத்தும், அதில் தனித்தனியே காட்டப்பெற்றிருந்த பழைய தமிழ்நூற்பிரயோகங்களையும் 64-திருவிளையாடல்களைத் தனித்தனி முறையே பாராட்டியுள்ள தேவாரம்முதலிய மேற்கோள்களையும் பிறவற்றையும் உரிய பக்கங்களில் குறிப்புரையோடு சேர்த்தும் படிப்பவர்களுக்கு அநுகூலமாக இருக்கும்படி இது பதிப்பிக்கலாயிற்று.

இந்நூலால் தெரிந்த ஊர்கள் முதலியவற்றின் பெயர்களும், இந்நூலாராய்ச்சியால் தெரிந்த பல அரியவிஷயங்களும், இந்நூலிற்காணப் பட்ட அரும்பதங்களும், திருவிளையாடற்பயகரமாலை, இலீலாசங்கிரக வத்தியாயம், திருவுசாத்தானநான்மணிமாலை உ௮-ஆம் செய்யுள், திருவிளையாடற் கருணைத்திருவிருத்தம், கக-ஆம பாடல் இவற்றிலுள்ள அரும்பதங்களும் இப்புத்தகத்தில் 'அரும்பத முதலியவற்றின் அகராதி' என்னும் பகுதியில் அமைந்துள்ளன.

நூற்பரிசோதனைக்கு உடனிருந்து உதவிபுரிபவர்கள் விஷயத்தில் நான் கவலையுறுவண்ணம் பலவருடங்களாக மாதவேதனமளித்து ஆதரித்துவரும் ஸ்ரீ சேது ஸமஸ்தானாதிபதிகளும், மதுரைத் தமிழ்ச் சங்கத்துத்தலைவர்களும், சென்னைச் சட்டநிரூபணசபை யங்கத்தினர்களும், தமிழ் யூனிவர்ஸிடிக்கமிட்டியின் தலைவர்களுமான கௌரவம் பொருந்திய மகாராஜ ராஜஸ்ரீ பா. இராஜ ராஜேசுவர சேதுபதி மகாராஜா அவர்களுடைய பேருதவியை இப்போதும் தமிழகத்துக்குத் தெரிவிக்கிறேன்.

இந்நூலைப்போலவே, இனிப்பதிப்பிக்கக் கருதிய நூல்களுள் ஒவ்வொன்றையும் கருதிய வண்ணம் பதிப்பித்து நிறைவேற்றுதற்பொருட்டும் பிரதியுதவி ஒப்புநோக்குதல் முதலிய உதவிகளை அன்புடன் செய்தவர்கள் பெருவாழ்வடைந்து மகிழ்வெய்தும் பொருட்டும் திருவருள் சுரக்கும்படி சங்கப்புலவர் நடுவில், மதுரைப் பேராலவாயானென்னும் திருநாமம்பூண்டு வீற்றிருந்து அவர்களுடன் தமிழாராய்ந்தருளிய ஸ்ரீமீனாட்சிசுந்தரேசருடைய திருவடித்தாமரைகளைச் சிந்திக்கின்றனன்.

'தியாகராஜ விலாசம்'<br>திருவேட்டீசுவரன் பேட்டை<br>சென்னை, 15—4—1927.

இங்ஙனம்,<br>வே. சாமிநாதையன்.

கணபதி துணை.

## இந்நூலாசிரியராகிய

# பெரும்பற்றப்புலியூர் நம்பியின் வரலாறு.

இந்நூலாசிரியராகிய பெரும்பற்றப்புலியூர்நம்பியென்பவர் பாண்டிவளநாட்டுள்ள செல்லிநகரிற் பிராமணவருணத்தில் ஸ்மார்த்தர்களாகிய வேம்பத்தூர்ச்சோழியர்வகுப்பிற் *கௌணியகோத்திரத்திற் சிதம்பரம் ஸ்ரீ ஆனந்தநடராசருடைய திருவடிக்கண் மிகுந்த பத்திச்செல்வம்வாய்ந்த குடும்பத்திற் சனித்தவர். இவர்க்குப் பெரும்பற்றப்புலியூர்நம்பி யெனவும், இவர்பரம்பரையிற்பிறந்தவரும் மதுரைத் திருப்பணிமாலையிற் கூறப்பெற்றவருமாகிய ஒருவருக்கு ஆனந்ததாண்டவநம்பியெனவும் பெயர்கள் அமைந்திருத்தலையும் இந்நூற் கடவுள்வாழ்த்திற் பெரும்பற்றப்புலியூர்த்துதிமுதலியன அமைந்திருத்தலையும் உற்றுநோக்குமிடத்து, இவர் குடும்பத்தார்கள் சிதம்பரம் ஸ்ரீ ஆனந்தநடராசர் திருவடிக்கண் மிக்க அன்புடையவர்களென்பது வெளியாகின்றது.

இவர்பெயர் தில்லைநம்பி யெனவும் வழங்கும்; வேம்பத்தூர்ச் சோழியர்களில் அநேகருடைய இயற்பெயர்களின்பின் நம்பியென்பது சார்த்தப்பட்டுப் பண்டைக்காலத்தில் வழங்கிவந்ததென்பதை அவர்கள் வீட்டிலுள்ள பழைய ஓலைச்சாதனங்களில் இன்றும் காணலாகும்.

செல்லிநகரென்பது செல்லிநாடென்றும் பரசுராம சதுர்வேதிமங்கலமென்றும் செய்யுட்களில் வழங்கப்பெறும்; அக்கிரகாரத்தைச் சதுர்வேதிமங்கலம் அல்லது சதுர்வேதமங்கலமென்றல் மரபு; இது பழைய சிலாசாஸனமுதலியவற்றானும் விளங்கும்; இந்நகர், இக்காலத்துப் பனையூரென்று வழங்கப்படுகின்றது. இது, சங்கரநயினார் கோயில் தாலூகா, கரிவலம்வந்தநல்லூர்க்குச்சமீபத்தில் உள்ளது; செல்லியாரம்மையென்று பெயருள்ள தூர்க்காதேவியைத் தனக்கு அதிதேவதையாக உடைமையின், இவ்வூர் செல்லிநகரென்று பெயர் பெற்றதென்று சொல்லுகின்றனர்.

---

*கௌணிய கோத்திரம் - கௌண்டின்னிய கோத்திரம்; புறநானூற்றிலுள்ள 'நன்றாய்ந்த' (௧௬௬) என்னும் செய்யுளின் ஆசிரியரான சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்பவரும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் இந்தக்கோத்திரத்தினரென்பது அறிதற்பாலது.

[வேம்பத்தூர்]

வேம்பத்தூரென்பது, பாண்டிவளநாட்டில் மதுரைக்கு வடகிழக்கில் இரண்டுகாதத்தில் வைகைநதிக்கு வடக்கே உள்ளது; இது நிம்பையென்றும் வழங்கும்; நிம்பம்- வேம்பு; பிரமோத்தரகாண்டத்தின் பாயிரத்தில், "நேசான" என்னும் செய்யுளில், "நிம்பை, யீசான மாமுனிவன்" என இப்பெயர் வந்திருத்தல் காண்க. பண்டைக்காலத்தில் இப்பெயர் வேம்பற்றூரென்றே வழங்கிவந்ததாகத் தெரிகின்றது. மணலூரிலிருந்த குலசேகரபாண்டியனால், இவ்வகுப்பினர்க்கு முன்பு தானஞ்செய்யப் பெற்றதாதலின், இவ்வூர், குலசேகரசதுர்வேதமங்கலமெனவும் பெயர்பெறும்; இவ்வூரைக் குலசேகரபாண்டியர் தானஞ்செய்தாரென்பதை,

> "தனக்கொருபத் தேழு கலிக்கொ நுபத் தாறு
> புனக்குடுமிக் கோமான் புதல்வன் - மனக்கினிய
> தென்னிம்பை யூரதனைச் சீர்மறையோ ருக்களித்தான்
> கன்னன் குலசே கரன்"

என்னும் பழைய வெண்பாவாலுணர்க.

குலசேகரபாண்டியனென்பவன், அகரமேற்படுத்த நினைந்து சாகேதபுரியென்ற இடத்திலிருந்து பிராமணர் இரண்டாயிரத்தெண்மரை அழைப்பித்து, அவர்கள் நாமாவலியைப் பதிந்துகொண்டு, முறையே ஒவ்வொருவருக்கும் மனையும் நிலமும் கொடுத்துக் கொண்டே வந்து, இறுதியில் எஞ்சிய கணபதியென்னும் பெயருள்ளவரை அழைத்தகாலத்து, யாதுகாரணத்தாலோ அவர் வரவில்லை; அப்பொழுது, ஸ்ரீ மஹாகணபதி, ஒரு பிரமசாரி வடிவங்கொண்டுவந்து, 'யான் கணபதி' என்று கூறி, அவற்றை ஏற்றுக்கொண்டு மறைந்தருளினர். உடனே அரசன் வியந்து பரவசமுற்று அவருக்கென்று கொடுத்த மனையிற் கோயில்கட்டுவித்து, அதில் அவருடைய திருவுருவத்தைப் பிரதிஷ்டைசெய்து நிலத்தையும் தேவதானமாக விட்டனனென்றும் அவ்வூரே இதுவென்றும் ஒரு பழையசரிதம் பாண்டிநாட்டில் கர்ணபரம்பரையில் வழங்கிவருகின்றது. வேம்பத்தூரில் அக்கிரகாரத்திற்குமேற்கே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மஹாகணபதிக்கு அமைந்துள்ள இரண்டாயிரத்தெண் விநாயகரென்னும் திருநாமமும் இந்தப் பழைய சரிதத்தை வலியுறுத்தும்.

வானரவீரமதுரை (மானூமதுரை) யிலிருந்த குலசேகரபாண்டியனென்ற ஓரரசன், இரண்டாயிரத்தெட்டுக் குடும்பத்தார்க்குப் பாண்டி

காட்டில் வேம்பத்தூர் முதலிய உ00அ-ஊர்களைக் கொடுத்தானென்று கூறுவதுமுண்டு; இதனை, மதுரைத்துதிமணிமாலை யென்னும் புத்தகம் ஒருவகையாகத் தெரிவிக்கின்றது.

வேம்பற்றூரென்பதும் குலசேகரசதுர்வேதமங்கல மென்பதும் இவ்வூர்க்குப் பெயர்களென்பதை இவ்வூர்ப் பெருமாள்கோயிற் கருப் பக்கிருகச்சுவரின் வெளியேயுள்ள சிலாசாஸனத்தாலும் அறியலாகும்; அகநானூறு, கருகூ-ஆம் செய்யுளுக்கும், புறநானூறு, ௩௧௭-ஆம் செய்யுளுக்குமுரிய ஆசிரியரின் பெயராகிய வேம்பற்றூர்க்குமரனா ரென்பதிலுள்ள வேம்பற்றூரென்பது இவ்வூராகவே கருதப்படுகின்றது. இவ்வூர்ப்பிராமணச் சிறுவர்களும் தமிழ்க்கவி செய்தலில்வல்லுநராயிருந்தனரென்பதைத் தமிழ் நாவலர் சரிதையும் புலப்படுத்தும். இவ்வூரச் சோழியர்களில் அநேகர் வேறு வேறிடஞ்சென்று தங்கள் தங்கள் கல்விமிகுதியையும் வருத்தமின்றிச் செய்யுட்களியற்றும் வன்மையையும் நன்கு புலப்படுத்திப் பண்டைக்காலத்திலிருந்த அரசர் முதலியோர்களால் நன்கு மதிக்கப்பெற்று முற்றூட்டாக அவர்கள்கொடுத்த ஊர்களைத் தமக்கிருப்பிடமாகக் கொண்டு தமிழ் நூலாராய்ச்சி செய்து வந்தார்கள்; ஆனாலும், இவர்கள் வேம்பத்தூரா ரென்றே எல்லாராலும் அழைக்கப்படுவார்கள். இவர்கள் அங்ஙனமிருந்த ஊர்களுள் இப்பொழுது தெரிந்தவை: வீரசோழன், அல்லது விரை, தென்காசி, கீழைப்பாவூர், வல்லநாடு (திருநெல்வேலிக்குக்கிழக்கே ஒரு காததூரத்திலுள்ளது) இருப்பையூருணி (கோயிற்பட்டிக்குக்கிழக்கேயுள்ளது), திருநெல்வேலி, கரிவலம்வந்தநல்லூர், கற்குளம் (வல்லநாட்டைச் சார்ந்தது), பனையூர், குறுங்காவனம் அல்லது குறுங்களாவனம் (கீழைப்பாவூருக்குச் சமீபமாகவுள்ளது) என்பன. இக்குழாத்தின ரெல்லோரும் ஒரேவிதமான சமயக்கொள்கையை உடையவர்களல்லர்; தங்கள் தங்கள் முன்னோர்கள் தழுவிவந்ததும் வைதிகமாயதுமானகொள்கை எதுவோ அதனையே மேற்கொண்டவர்கள். இஃது அவரவர்கள் இயற்றிய நூல்களாலும் தனிப்பாடல்களாலும் விளங்கும்.

பாடுதுறைமுதலிய பற்பல நூல்களியற்றிய தத்துவராயரும், வரதுங்க ராமபாண்டியருடைய ஆசிரியராகிய ஈசானமுனிவரும், ஆனந்தலகரி சௌந்தரியலகரி முதலிய நூல்களியற்றிய வீரைக் கவிராச பண்டிதரும், ஞான வாசிட்ட நூலாசிரியரான ஆளவந்தான் அல்லது ஆளவந்தான் மாதவபட்ட ரென்பவரும், பகவத்கீதையியற்றிய ஸ்ரீ புட்டரும், பராபரை மாலைபாடிய அம்பிகாபதியும், நெல்லை வருக்கக்

கோவைபாடிய திருநெல்வேலிப் பெருமாளையரும், ஐயாயிரம்பாட லுள்ள பாகவதமியற்றிய செவ்வைச்சூடுவோரும், அழகர்கலம்பகமியற்றிய கவிகுஞ்சரமையரும், அழகர் பிள்ளைத் தமிழியற்றிய சாமிகவி காளருத்திர ரென்பாரும், பிரபந்ததீபிகை இயற்றிய முத்துவேங்கடசுப்பையரும் இந்தவேம்பத்தூர்ச் சோழிய வகுப்பினரே.

இக்குழாத்தினர்க்கு வேம்பத்தூர்ச்சங்கத்தாரென்னும் ஒரு பெயர் பண்டைக் காலந்தொடங்கி வழங்கிவருவதுண்டு; இஃது அழகர்கலம்பக முதலியவற்றால் விளங்கும்.

முற்காலத்தில் ஏதேனும் நூலியற்றிய தமிழ்ப்புலவர்கள் அந்நூலைக்கொணர்ந்து இவ்வூர்ப்புலவர்களுக்குக் காட்டிச் செவ்வை செய்வித்து இவர்களுடைய உடன்பாடு பெற்றபின்பே அந்நூலைவெளிப்படுத்துதல் பெரும்பான்மையான வழக்கமாக இருந்ததென்று பலர் சொல்லக் கேள்வியுண்டு.

கம்பர் தாமியற்றிய இராமாயணத்தை இவ்வூரில்வந்து படித்துக் காட்டி இவர்களால் நன்குமதிக்கப் பெற்றனரென்பதும், காளமேகப் புலவர் இங்கே வந்து இவ்வூராரில் ஒருவர் * சமத்தியாகக்கொடுத்த, 'கண்டங்கத் தரிக்கொத்துக்காய்'' என்பதை இறுதியடியாக அமைத்து, கொடுத்தவர் எண்ணிய வண்ணமே ஒருசெய்யுளும் ஆங்கிருந்த வேறுசிலர் விரும்பியவண்ணம் அருமையான சில சிலேடைவெண்பாக்களும் வருத்தமின்றிக் குறித்தகாலத்துட் பாடிமுடிக்க, இவர்கள் நன்குமதித்து இவ்வூருக்குத் தெற்கேயுள்ளதும், "காளமேகத்தாறு" என்று இக்காலத்தில் வழங்கப்படுவதுமாகிய ௧௨-மா அளவுள்ள நன்செய்நிலத்தை அவருக்கு முற்றூட்டாகக் கொடுத்தனரென்பதும் கன்ன பரம்பரைச் செய்திகள்.

திரிசிரபுரம் மஹாவித்வான் ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் முதலியோர்களாற் சிறந்த கவிஞரென்று பாராட்டப்பெற்றவரும் பல வருடங்களுக்கு முன்பு இராமநாதபுரத்தில், பல தமிழ்ப்புலவர்கள் தனித்தனியே கொடுத்தவிஷயங்களை யமைத்து, அவர்கள் குறித்த இரண்டரை நாழிகைக்குள், ௧௨-சிலேடை வெண்பாக்களை எளிதிற் பாடி, சிலேடைப்புலியென்னும் பட்டப்பெயரையும் உயர்ந்த சிலபரிசில்களையும் ஸ்ரீ பாஸ்கரஸேதுபதியவர்களாற் பெற்றவரும் தனஞ்சயகோத்திரத்தினரும் மேற்கூறிய வீரைக்கவிராச பண்டிதருடைய வழித்தோன்றலுமாகிய பிச்சுவையரென்பவரும் வேறு சில வித்துவான்களும் இவ்வேம்பத்தூரார்களே.

---

* ஸமஸ்யாவென்னும் வடமொழி இங்ஙனம் சிதைந்து வழங்குகின்றதென்பர்.

இவர்கள் சரித்திரங்களாகக் கன்னபரம்பரையில் வழங்குவன வும் செய்யுள்முகமாக உள்ளனவும் இன்னும் எவ்வளவோ பல; அவை விரிவஞ்சி நிறுத்தப் பெற்றன.

கடைச் சங்கப்புலவர்காலந்தொடங்கி இன்றுவரை, தமிழ் மணங்கமழப் பெற்றுப் பற்பல வித்துவான்கள், தமிழ் நூல்களையே ஆராய்ச்சி செய்துகொண்டும் பாடஞ்சொல்லிக் கொண்டும் நூதன மாக நூல்களியற்றிக்கொண்டும் தமிழ்ச் சுவையைப் பிறருக்குப் புலப் படுத்தி வீற்றிருத்தற்கு இடமாகவிளங்கும் இந்த வேம்பத்தூரின் பெருமை என்போலியரால் எங்ஙனம் சொல்லற்பாலது; * "பாட் டுக் குருகுந் தமிழ்ச்சொக்கநாதரே" அறிந்தருளுவார்.

சற்றேறக்குறைய அறுபது வருடங்களுக்கு முன்னே இவ்வூரு க்கு வந்து இவர்களுடைய தமிழ்ப்பயிற்சியையும் செய்யுள் செய்யும் வன்மையையும் குணவிசேஷங்களையுமறிந்து மகிழ்ந்த பழனி மாம் பழக்கவிச்சிங்கநாவலர் மிக்க அன்புடன் இவ்வூரார் விஷயமாகப் பாடிய வெண்பாக்கள் வருமாறு:—

௧. "வேதநூல் வாழிதவ வேள்வித் துறைவாழி
நீதிநூல் வாழி நெறிவாழி - ஓதுதமிழ்
வல்லாராய் நிம்பை வளம்பதிவாழ் மாசனங்கள்
எல்லாரும் வாழி யினிது"

௨. "பொங்குகடல் வாழி புயல்வாழி சீர்வாழி
தங்குநூல் வாழி தமிழ்வாழி - துங்கமிகுந்
தேசமெங்கும் போற்றத் திறல்படைத்த வேம்பத்
மாசனங்கள் வாழி மகிழ்ந்து." [தூர்

[நூல் இயற்றிய இடம்]

இந்நூலாசிரிய நம்பியவர் செல்விநகரராக இருந்தாலும், இதனைப் பாடுங் காலத்தில் இவரிருந்தஇடம், கார்வளங்கொண்மண்டலத்திற் கப்பிஞ்சிநா டென்னும் பெயரையுடைய சிறுநாடென்று தெரிகின்றது; இதனை, "கார்வளங் கொண் மண்டலத்துக் கப்பிஞ்சி நாட்டுறைத் தோன்" [பக்கம் ௩௧௬] என்னும் நூற்சிறப்புப்பாயிரத்தாலுணர்க; கார்வளங் கொண்மண்டலமென்றதை மதுரைக்குக்கிழக்கே யுள்ள தான மழைக்குப்புணை கோடுத்தமங்கல நாடென்று சொல்லுகின் றனர்.

* மதுரைக் கலம்பகம், ௭௧.

## [பெற்றபரிசில்]

இந்நூலை ஆக்குவித்தோனாகிய பாண்டியனொருவன் மிக்கசிறப்புடன் இதனை அரங்கேற்றுவித்துப் பல்லக்குமுதலிய விருதுகளையும் பல இரத்தினாபரணங்களையும் கொடுத்தளித்தானென்றும், அப்பொழுது இந்நூலாசிரியர் மகிழ்ந்து, *"பல்லக்கு மேலேறி" (பக்கம் ௩௧௧) என்னும் வெண்பாவைப் பாடினாரென்றும், பின்னர் மகிழ்ந்து இவருடைய சனனபூமியாகிய செல்விநகரையும் அதனைச் சார்ந்த ஊர்களையும் இவரும் இவர் பரம்பரையோரும் அனுபவிக்கும்படி முற்றூட்டாகக்கொடுத்தானென்றும், அதுபற்றி, செல்வியூரும் அதனைச்சார்ந்த ஊர்களும் செல்விநாடென்று வழங்கப்பெற்று வந்தனவென்றும், இவர் பரம்பரையோர் மிகுந்த செல்வமுடையவர்களாகிப் பலதருமங்களைச்செய்து விளங்கினார்களென்றும் சொல்லுகின்றனர். இதனை,

"கன்னலுஞ் செந்நெலுஞ் சூழ்செல்வி நாடன் கவுணியர்கோன்
நன்னர்க ளெண்ணிய வானந்த தாண்டவ நம்பிகற்பாள்†
தென்னவர் போற்றிய வங்கயற் கண்ணம்மை செல்வித்திருச்
சன்னிதிக் கோபுரங் கட்டின ‡ டம்மந் தழைக்க வென்றே"

என்னும் மதுரைத்திருப்பணிமாலைச்செய்யுளும் வலியுறுத்துகின்றது.

## [காலம்]

மேற்கூறிய செய்யுளிற் கூறப்பட்டுள்ள ஆனந்ததாண்டவநம்பி அம்பிகையின் சந்நிதிக்கோபுரம் கட்டுவித்தகாலம், சாலிவாகனசகாப்தம், ௧௧௫௦ [கி. பி. ௧௨௨௭ - அ; கொல்லம், ௪௦௨ - ௪௦௩] என்று மதுரைக் கோயிலொழுகு தெரிவிக்கின்றமையால், ஆனந்த தாண்டவநம்பியென்பவர், இற்றைக்கு ௭௦௦-வருடங்களுக்கு முந்தியிருந்தாரென்றுமட்டும் ஒருவாறு தெரிகின்றது; அதற்குமுன், இந்நாலுடையார்காலம் இவ்வளவினதென்று தெரியவில்லை.

---

* இவ்வெண்பாவிலுள்ள, 'பல்லக்குமேலிட்டோம்' என்பதற்குப் பல இரத்தினாபரணங்களை மேலே அணிந்தோமென்றும் பொருள்கொள்ளலாம்.

† கற்பாள் - பத்தினியார்; மனைவியார்; ஆனந்ததாண்டவநம்பியேகோபுரம் கட்டியதாக மதுரைக் கோயிலொழுகு தெரிவிக்கின்றது; அஃது எழுதினோரால் நேர்ந்தபிழையோ வேறுயாதோ உண்மைவிளங்கவில்லை.

‡ தம்மம் - தருமம்.

[ஞானாசிரியர்]

சிதம்பரம் மாளிகைமடத்திலிருந்த வெண்காடருடைய சிஷ்யராகிய விநாயகரென்பவர் இவருடைய ஞானாசிரியர் ; இதனை இந்நூற் கடவுள் வாழ்த்து, ௨௬. ஆம் செய்யுளாலுணர்க. இங்கேகூறிய மாளிகைமடத்துத் தலைவரொருவர், வேதாரணியபுராணப் பாயிரத்திலும் திருக்கானப்பேர்ப்புராணப் பாயிரத்திலும் துதிக்கப்பெற்றுள்ளார்.

[குணவிசேடங்கள்]

இந்நூலாராய்ச்சியால்விளங்கிய ஆசிரியருடைய குணவிசேடங்கள் பல; அவை, வேதாகமங்களில் மிக்க பிரீதியுடைமை, வடமொழிப் பயிற்சி, தமிழ்ப்பாஷையில் மிக்கஅன்பு, தமிழில் ஐந்திலக்கணவுணர்ச்சி, சங்கத்தமிழ்நூல் முதலியவற்றிலும் பழையவுரைகளிலும் தேவாராதிகளிலும் திவ்யப்ரபந்தங்களிலும் மிக்கபயிற்சி, நடுவுநிலைமை, எல்லாவருணத்தாரிடத்தும்எல்லாச்சாதியாரிடத்தும் அன்புடைமை, சிவபக்தி, அடியார்பக்தி, சிவசின்னங்களில் அன்புடைமை, தம்முடைய கருத்தைப் பிறர் எளிதில் அறிந்துகொள்ளும் வண்ணம் செய்யுள் செய்யும் வன்மை, அங்ஙனம்செய்யும் செய்யுட்கள் படிப்பவர்களுடைய மனங்களைக்கவரும்படி இடத்துக்கேற்ற சந்தங்களில் அவற்றை அமைத்தல், பலவகைத்துதி செய்யும் அழகு, வடநூற்கருத்துக்களை அங்கங்கேயமைத்தல், பிறரை நல்வழிப்படுத்தநினைத்தல், சரிதங்கூறுகையில், பரமகருணாநிதியாகிய சிவபெருமானுடைய திருவருளின் பெருமையை நினைந்துநினைந்து மனமுருகி இடையிடையே செயலற்றிருத்தல் என்னும் இவையும் பிறவுமாம். இங்கே எடுத்துக்கூறியவையெல்லாம் இந்நூல் அரும்பதமுதலியவற்றின் அகராதியைப் பார்ப்பவர்களுக்கு இனிதுவிளங்கும்.

---

## நூலாராய்ச்சி.

---

[நூலிலுள்ள முக்கியமான சிலகுறிப்புகள்]

பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடலுக்கும் இதற்குமுள்ள வேறுபாடுகள் பலவற்றுள், ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் வையைநதியை அடைத்தற்குக் கூலியாளாக வந்து வேலைசெய்யாமல் உழப்பிய பொழுது, பாண்டியனுடைய ஏவலாளர்கள் சினந்து அவர் முதுகில்

அடித்தாரென்று ஆசிரியர் கூறியிருப்பதொன்று; * (௬௦) ௬௭ - ஆம் செய்யுளைப்பார்க்க; பலநூல்கள் பாண்டியனை அடித்தானென்று கூறியிருக்கவும் இவர் இங்ஙனம் கூறியதற்குக் காரணம் இன்னதென்று புலப்படவில்லை; இந்நூலைச்செய்வித்த அரசனுடைய வேண்டுகோளாக இருத்தல் கூடுமென்பது சிலருடைய கருத்து; "அந்தணாளிட்டுக் கரகமண் சுமந்த வானைமன் னவன்றனை தாளா, மைந்தரிலொருவ னடித்ததாத் துணிந்தோர் வண்டமிழ்க் கவிஞரே யினனே" என்பது புலவர்புராணம், திருவாதவூரர். ௫௮.

பழைய நூலாசிரியர்களும் பழைய உரையாசிரியர்களும் பாண்டியர்களிற் சிலரைத் தெய்வப்பாண்டிய ரென்று கூறுதல் மரபு. இந்நூலாசிரியர் அதனைத் தழுவி, சுந்தரமாறனை, "தெய்வப்பாண்டியன்" (௮. ௧௧) என்றும், "தெய்வவான்வழுதி" (௬ : ௪) என்றும் கூறியிருக்கின்றனர்.

ஸ்ரீ சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோயில், இத்தலத்துள்ள கோயில்கள் பலவற்றிற்கும் காலத்தால் முந்தியதும் பெரியதுமாதலின், அதனை விளக்கவேண்டி இந்நூலாசிரியர் அதனைத் தொல்லையாலயமென்றும் பெரியகோயிலென்றும் அங்கங்கே வழங்குவர்; இத்தலத்திற் கோயில்கள் பலவுள்ளனவென்பதை, "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும், உவணச் சேவ லுயர்த்தோ னியமமும், மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப். ஊர்காண். ௭ - ௧௦) எனவும், "வடதிரு வாலவாய்திரு நடுவூர், வெள்ளி யம்பல நள்ளா றிந்திரை, பஞ்சவ னீச்சரமஞ்செழுத் தமைத்த, சென்னி மாபுரஞ் சேரன் றிருத்தளி, கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை, ........ .. ஒருபரங் குன்றஞ், சூழ்கொள விருந்த கூடலெம் பெருமான்" (கல். 'நெடுவரைப் பொங்கர்' - ௯௧) எனவும் வருவனவற்றாலுணர்க.

இந்நூலாசிரியர், இலைமறைகாய்போற் பழைய நூல்களில் அங்கங்கே மறைந்துகிடந்த அரியசெய்திகளை இதனுள் உரிய இடங்களில் அமைத்து விளக்கிச்செல்லுகின்றனர். இதனால், நெடுநாளாக இருந்த ஐயங்கள் ஒருவாறு தீர்வனவாயின. அவற்றுள், சிலவருமாறு:—

௧. 'நான்குமாடங்கள் கூடுதலின் நான்மாடக் கூடலென்று பெயர்பெற்று. அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திரு

---

*இங்கேகாட்டிய எண்கள், ( ) இவ்வடையாளத்திற்குட்பட்டது திருவிளையாடலையும் ஏனையதுபாடலையும் புலப்படுத்துவன; பின்வருவனவற்றையும் இப்படியேகொள்க.

நமிலூர் ; இனி, கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்றமாம்' என் பது, கலித்தொகை, கூஉ-ஆம் பாடல், நச்சினார்க்கினியம். இந்தவுரை யில் முன்னுள்ள திருவாலவாய் முதலிய நான்கும் இன்னவையென்று இந்நூல், சஎ-ஆம் திருவிளையாடலாலும் பின்னுள்ள கன்னி முதலிய நான்கும் இன்னவையென்று இந்நூல் திருநகரச் சிறப்பிலுள்ள கூஉ-ஆம் பாடல் முதலிய நான்கினும் ஒருவாறு விளங்குதல் காண்க.

உ. 'நீலமணியின் குற்றம் வந்த வழிக் கண்டுகொள்க' என் பது சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, கஅ0-ஆம் அடி, அடியார்க்கு நல்லாருரை ; நீலத்தின் குற்றம் பன்னிரண்டென்றும் அவற்றின் பெயர்கள் இவையென்றும் இந்நூல், (உரு) கக-ஆம் செய்யுளால் விள ங்குகின்றது. இதனால் அடியார்க்குநல்லாரினும் இந்நூலாசிரியர் தமிழ் நூலாராய்ச்சியில் மிக்கவரென்பது வெளியாகும்.

## [துதிவகைகள் *]

கடவுள் வாழ்த்திலன்றி நூலினுள்ளே அங்கங்கேவந்துள்ள விநா யகர்துதி, சிவஸ்துதி, அம்பிகைதுதி, திருஞான சம்பந்தர்துதி, மூர்த்திநாயனார்துதி முதலியன யாவரும் படித்தறிந்து இன்புறு தற்பாலன.

## [நூலாசிரியர் கூற்றுக்கள்]

நூலாசிரியர் கூற்றுக்களாக இந்நூலுள் அங்கங்கே காணப்படுங் கவிகள் பல உள்ளன: அவை ஒருபகுதிப் பட்டனவல்ல ; அவை வருமாறு :—

க. உலகத்தாரை நோக்கிச் சிவபெருமானுடைய திருவருளின் பெருமையை இவர் கூறுதல் போலவும் பிறர் கூறுதல் போலவும் உள் ளன ; (திருநாட்டுச் சிறப்பு) கச, (உஎ) க, (நக) உஉ, (நஉ) உரு, (நச) கக, (நஅ) எக, (சச) ருஅ, (சரு) கஅ, (சகூ) நக, (ருச) ரு0, (கூந) உக.

உ. திருவிளையாடல்களைச் சொல்லிக் கொண்டு போகையில் அன்பின் மிகுதியால் இடையிடையே இவருடையமனம் உருகிய தென்பதைப் புலப்படுத்துவன: (ந0) நகூ, (சஅ) நஎ.

---

* இவற்றிற்கும், பின்னேயுள்ள பொருளணிகள் முதலியவற்றிற்கும் உரிய பக்க எண்களையும் விவரணங்களையும் அரும்பத முதலியவற்றின் அகராதி யென்னும் பகுதியிற்கண்டு கொள்க.

௩. ஒவ்வொருபகுதியின் இறுதியிலே சரித்திரத்தின் அருமையை நினைந்து மனமுருகிச் செய்துள்ள சிலஸ்துதிபாகவுள்ளன: (௫) எ, (எ) கக, (௯0) ௫௯, (௩௨) உ௫, (௪அ) ௪க, (௫0) கஅ.

௪. படிப்பவர்களும் கேட்பவர்களும் அடையும்பயனைப் புலப்படுத்துவனவாய்ச் சில பாடல்கள் சில திருவிளையாடல்களின் இறுதியிலுள்ளன: (௩அ) எ௨, (௫௯) ௯௯.

௫. பாவத்தால் ஒருவர் வருந்துவதைக்குறித்து வருந்துதலையும், புண்ணியத்தால் ஒருவர் மகிழ்தலைக்குறித்து மகிழ்தலையும் புலப்படுத்துவன:(௩௪)௨, ௪, (௩அ) ௫க, (௯௩) ௨௩.

௬. திருவிளையாடற் சம்பந்தத்தாற் பெருமையடைந்த சில சாதியாரின் விசேடத்தைக்கூறுவன:(௨௩) ௨௫, (௫௯) கஅ.

இங்ஙனம் வருவன இன்னும்பல.

[பொருளணிகள்]

இவருடைய வாக்கிற் பலவகைப் பொருளணிகள் அங்கங்கே வந்துள்ளன வெனினும் மிகுதியாகக் காணப்படுவன, கருத்துடையடையணியும், கருத்துடையடைகொளியணியுமே.

[சொல்லணிகள்]

சொல்லணியைச் சார்ந்த மடக்கணிகளை இந்நூலிற் பரக்கக் காணலாம்; அவை வருமாறு.

அத்தியிலத்தி சொரிந்ததால்-யானையானது இலத்தியைச் சொரிந்தது;

அருகாருகாரக்கண்டேம் - சைனர் பாண்டியனைச் சமீபித்தவராகப் பார்த்தேம்;

ஆவிசேர் தண்ணீர் வேட்டங் காவிசோர்ந்து; ஆவி-தடாகம், உயிர்;

இடையிடையும்படி: இடையும்படி-வருந்தும்படி;

உக்கிரமாய் வரக்கண் டுக்கிரவேல் விறற் செழியன்;

கடல்வலிய சத்திவிடச் சத்திவிட்டகாவலன்: சத்தி-வலி,வேல்;

கரிகரியாக-யானைகரியாக;

கனகமே கனகவாவி-பொற்றாமரைவாவி;

கூடமதாகக் கற்பித்தருளினன் கூடமில்லான்: கூடம்-மாளிகை விசேடம், வஞ்சனை;

கைதவகேள் கைதவமாகாது - பாண்டியனே கேட்பாயாக; உனக்கு வஞ்சனையாகாது;

கைதவமோவில்லை கைதவ;

கோதைதன் பரிசனத்தால்....பரிசனங்களோடும்;

கோலக் கோலம்-பன்றித்திருவுருவம்;

சந்திரமாவளித்தான் சந்திரமாகுலத்தான்: சந்திரமா - பொற்குதிரை;

சம்புமா சமாதியாலே சம்புமாத்தாழ்க்க: சம்புமா - சிவபெருமானுடைய பெரிய, நரிகளாகிய குதிரைகள்; [தாள்;

சரங்கொடுஞ் சரம்போற் றைப்பச் சரங்கொண்டாள் சரமிலா

செட்டியாஞ்செட்டி - வைசியர்குலத்திற் பிறந்த உருத்திரசன்மராகிய முருகக் கடவுள்;

செட்டியுஞ்செட்டியா யுதித்தான்; [குற்றி;

தாணு தாணுவேயெனவிருந்தான்: தாணு - சிவபெருமான்,

துதிக்கையின்றித் துதிக்கையால் வளைத்தெடுத்து: துதிக்கை-துதிசெய்தல், தும்பிக்கை;

நரிகாணரியாது;

நாமளித்த வேலையற நாமளித்த வேலையெறி: நாமளித்த வேலை-அச்சத்தை உண்டுபண்ணிய கடல், யாம்கொடுத்த வேற்படையை;

பத்திரங் கொடுத்தொதுங்கிப் பத்திரன் பணிந்து நின்றான்: பத்திரம்-திருமுகம்; பத்திரன்-பாணபத்திரர்;

பயங்கொண்டு வந்ததேவரும் பயம் கொள்ள: பயம்-நீர், அச்சம்;

புயலகத்துப் பெரும்புயல்: புயல்-மேகம், நீர்; [னை;

பைங்கண் வேழத்தை....செங்கண் வேழம்: வேழம்-கரும்பு, யா

மாலையங்குழல்சேர் பாணர்மாலையர் மாலையெய்தி: பாணர் மாலையர்-பாணர்மகளிர், விறலியர்; மாலை-மயக்கத்தை;

மாலையைக் கழுத்திலிட்டோர் மாலை நின்றுலாவ;

மாறன் மாறி: மாறன்-பாண்டியன்;

மாறனும்துயர் கெட மாறியாடினர்;

மாறான் மாறனென்றுங்கரும் பெயர் பெற்றோன்;

வளையினால் வளைத்தனன்;

வாசியை வாசியாக-குதிரையை விசேடமாக;

விடை விடைகொண்டு-இடபம் விடுத்தல்கொண்டு; "சொல்விடை கேட்டுச் செல்விடை வெற்பும்" என்பது மதுரைமும்மணிக்கோவை, உஅ;

வேடணிடு சூடினிய கேடிறசை காடுபவர் வேடனுடல் விடவடுவோர்;

**வேலையை வேலவேலை வேலைநல்வேலை யென்று: வேலை - கடல், காலம், தொழில்.**

**இந்நூலில், வேறுபொருளின்றி விரைவு முதலிய காரணங்களால், சொற்கள் அடுக்கிவருதலும் காணப்படும்; அவை வருமாறு:**

*அஞ்சேனஞ்சேன், அரகர, இடந்தருமிடந்தரும், உதவுவமுதவுவம், என்கையில் வளைநெரிந்ததென்கையில் வளைநெரிந்தது, என்னைவிடென்னைவிடு, எனக்கெனக்கு, ஒக்குமொக்கும், காத்தருள் காத்தருள், சிவசங்கர சிவசங்கர, தருமநெறி தருமநெறி, திருச்சிற்றம்பலந் திருச்சிற்றம்பலம், திருவம்பலந் திருவம்பலம், துயிலுணர்தி துயிலுணர்தி, நல்ல நல்ல, நில்லும் நில்லும், நிறைந்தன நிறைந்த, பொன்னம்பலம் பொன்னம்பலம், போனது போனது, வணங்குமினீர் வணங்குமினீர், வந்துபோம் வந்துபோம், வரும் வரும், வளர்ந்திட வளர்ந்திட, வளைத்திடும் வளைத்திடும், வளையல்கொள்ளும் வளையல்கொள்ளும், விடும் விடும், விடு விடு.*

இதில் அவ்வவ்விடத்து வந்துள்ள
ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளின் அருமைத்திருநாமங்கள் :

*அடிமைக்குநல்லவர், அடியவர்க் கெளியசுந்தரன், அடியவர்க்கெளியசொக்கன், அடியவர்க்கெளியவர், அடியவர்க்கெளியவெம் பெருமான், அடியவர்திறத்து நல்லவன், அடியவர் நன்மை தின்மையறிபவன், அடியார்க்கு இனியன கொடுக்கும் சொக்கன், அடியார்க்கு நல்லான், அடியார்குறைதீர்ப்பான், அடியார்தங்கட் கெளியவன், அணுக்கட்கு நல்லவர், அதிரவீசியாடுவான், அந்தநாயகன், அபிடேகச் சொக்கன், அருடேங்குநாதன், அருந்தவன், அருவமெய்யினன், அருளாகரன், அழகன், அழகார்மெய்யன், அழகியசொக்கன், அழகியபெருமான், அற்றவர்க்கற்றசிவன், அற்றவர்க்கற்றசெல்வன், அன்பர்க்கன்பன், அன்பர்சுமைபூண்டுகொண்டான், அன்பர்தம்பிழைபொறுப்பவன், அன்னையொப்ப அணுக்கட்கு நல்லவன், ஆதி, ஆதிநாதன், ஆதிநாயகன், ஆதிமுனி, ஆலவாய், ஆலவாய்த்தருமமூர்த்தி, ஆலவாய் மெய்யன், ஆலவாயமுதமன், ஆலவாயமுதவாக்கன், ஆலவாயமுதவாயான், ஆலவாயமுது, இசைக்குநல்லசங்கரன், இசைக்கு நல்லான், இசைச்சொக்கன், இயற்சொக்கன், உற்றவர்கட்குற்றவன், எளியசொக்கன், எளியவர்க்கெளியசொக்கநாதன், ஒப்பிலழகன், கருணைமெய்யன், கருணைமேனிப் புண்ணியன், காரணமுதல்வன்,*

காரணவான், குஞ்சரத்தாங்குங் கோயிற்குழகன், குஞ்சரந்தாங்குங் கோயிற்கூத்தன், குழகன், கூடலில்லான், கூத்தன், சாலநல்லவன், செந்தமிழ்க்கினிய சொக்கன், செந்தமிழ்ப்பயிலுஞ்சுந்தரன், செழியர் நாதர், சேட்டநாதன், சொக்கமூர்த்தி, சொக்கவேந்து, சொக்கன் (சொக்கர்), சொக்கு, தனக்கு நல்லவர்க்கு நல்லோன், தெய்வப்பாண்டியன், தெய்வவான்வழுதி, தென்னவர்கினக்கு நல்லசெல்வன், தொழுபவர்க்கெளியான், நயந்தனையானையும் நல்கவல்லவன், நல்லடியார்க்குநல்லான், நற்றமிழிறைவன், நற்றவன், நாயனார் (நாயன்), நேசர்கட்கென்றும்நேசன், பண்ணிசைச்சொக்கன், பத்தர்கள் பத்தன், பத்தர்பத்தன், பத்தர்வாழ்வு, பழிக்கஞ்சுஞ்சொக்கன், பழியஞ்சுஞ் சொக்கன், பாண்டிநன்னுடைன், பாவறிந்த நாவலவன், புகழ்க்கினியான், புகழ்க்குநல்லசொக்கன், புகழ்க்குநல்லோன், புகழ்கொண்டான், புழுகுநெய்ச்சொக்கர், முனிவன், மெய்யர்க்குமெய்யன், மெய்யன், யாவும்வல்லவன், வணங்குவோரிணங்கன், வாசிவாரியப் பெருமான்.

[ஊர்கள்]

ஆளுடையார்கோயில், இராமேச்சரம், இருஞ் சிறை, உத்தரகோசமங்கை, உப்பூர், ஏழூர்கள், ஏட்டுநல்லூர், கழுவர் படைவீடு, காசி, காவணநல்லூர், காவிரிப்பூம்பட்டினம், காளையார் கோயில், கொடுங்கோளூர், சிதம்பரம், சீகாழி, செல்விநகர், தனிச்சயம், திருநெல்வேலி, திருப்புத்தூர், திருப்புறம்பயம், திருப்பூவணம், திருமருகல், திருவாதவூர், திருவிடைமருதூர், திருவேடகம், நரிக்குடி, நாமுனூர், பட்டமங்கலம், பரசுராமசதுர்வேதிமங்கலம், பழமதுரை, பெருங்கிராமம், மணலூர், மாடக்குளக்கீழ்மதுரை, மானமங்கலம், வடதிருவாலவாய், வேதாரணியம்.

[குலங்கள்]

ஆதிமரபு, ஆமாத்தியர்குலம், உக்கிரகுலம், கொந்தகக்குலம், சந்திரகுலம், சூத்திரகுலம்.

[*சங்கப்புலவர்கள்]

இடைக்காடர், இறையனார், உருத்திரசன்மர், கபிலர், நக்கீரர், பரணர், மதுரைப்பேராலவாயார்.

---

* இவர்கள் ஆசிரியர், இயல்வாணர், கவிமன்னர், கவிவாணர், சான்றவர், தமிழ்வாணர், நன்புலோர், நாவலர், மாசிலாசிரியர், முத்தமிழ்வாணரென இந்நூலுள்ளே பாராட்டிக் கூறப்படுகின்றனர்.

**சங்கப்புலவர்களல்லாத தமிழ்ப்புலவர்கள் : காரியார், நாரியார்.**
**சாதிகள்: ஆதி, பன்றிக்குறும்பர் பன்னிருவர், வன்னியர்.**

[சிலபழையவழக்கங்கள்]

ஒருவர் ஒரு செய்தியைச் சொன்னவுடன் அதனை மறவாமலி ருத்தற்கு ஆடையின் தலைப்பை முடிந்து கொள்ளுதல், தும்மியவர் கள் சிவாயவென்றல், பரிகலசேடமுண்ணல்.

[தனிப்பாடல்கள்]

| பாடல்கள் | ஆக்கியோர் பெயர் |
|---|---|
| " அங்கங்குலுங்க " | சோமசுந்தரக்கடவுள் |
| " குன்ற மெறிந்தாய் " | நக்கீரர் |
| " கொங்கு தேர்வாழ்க்கை " | இறையனார் அல்லது மதுரைப் [பேராலவாயார் |
| " சங்கறுப்பது " | நக்கீரர் |
| " நெட்டிலை யிருப்பை " | கபிலர் |
| " மதிமலிபுரிசை " | சோமசுந்தரக்கடவுள். |

தாண்டவம் : சொக்கத்தாண்டவம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பதிகங்கள்: சடையாய்' செய்யனே, தளிரிளவளர், தேனுறவன்னி, நீலமாமிடற்று, பிரமனூர்' போகமார்த்த, மங்கையர்க்கரசி, மந்திரமாவது, மானினேர்விழி, வாழ்கவந்தணர், வானிற்பொலி, வேதவேள்வியை, வேயுறுதோளி.

[திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், அறங்கரை நாவினார், காழி நகர்ப் பெருமான், கொச்சை முனி, கொச்சைப்பாலர், கௌணியர் கோன், சிரபுரப்பாலர், சோழியவைதிகச் சிறுவர், ஞானபூரணர், ஞானமாமுனிவர், ஞானவேந்தர், நாலுகவிப் பெருமாள், பொய்யிலா யானை, மறைஞானி, வாது செய்த வாரணம், வைதிகவாரண மென இந்நூலுட் பாராட்டிக்கூறப் படுகின்றனர்.]

[திருவிளையாடல் சம்பந்தமான பழமொழிகள்]

அடியார்க்கு நல்லார் பத்திரம், அழகிய சொக்கனென்னும் தோலாக்கை, ஆபத்துக்குத் தெய்வமேதுணை, இலச்சினைவாயில், உடையவனறிந்திடாத சரக்கிலை, காமனுக்குக்கண்ணில்லை, கொல் லொணுப்படை எவர்க்கும் வெல்லொணாது, சடைகொடு வெருட்டல் வேண்டா, சொக்கன்றாசு, தன்னைக்கொல்ல வந்ததாயினும் பசு வைக் கொல்லலாகாது, நெற்றிக்கண் காட்டினாலும் குற்றம் குற்றமே, பட்டகுணம் சுட்டாலும் போகாது, பாணர்தம்மடியார் பரதேசம்

போனால் விறகையும் சுமந்துகொண்டு மீளவருவார், பார்ப்பான் முறையீடு பசுப்பாய்ச்சலோடு சரி அல்லது மூட்டிப்பார்ப்பான் முறையீடு மொட்டைப் பசுவின் பாய்ச்சலோடு விட்டுப்போனது, மன்னவனெப்படி மன்னுயிரப்படி, மின்னுமணிடிக்குமா.

[தீர்த்தங்கள்]

எழுகடல், கங்கை, கம்பளை, கல்லணை, கன்னியாகுமரி, காவணவாவி, காவிரி, கொண்டாழி, சரவணப்பொய்கை, பூதங்கண்டகுளம், பொற்றாமரைப் பொய்கை, மணிகர்ணிகைத்துறை, மாவலிகங்கை, மொய்யார் பொய்கை, வலவை, வையை.

[நாடுகள்]

கப்பிஞ்சிநாடு, கருநாடதேயம், களவேள்வி நாடு, காட்டுநாடு, கார்வளங் கொண்மண்டலம், சேரனாடு, சோழனாடு, துவரைநாடு, பாண்டிநாடு, மிழலைநாடு.

நியாயம்:—காகதாலியம்.

[நூல்கள் (வடமொழி, தென்மொழி)]

இறையனார் பொருள், உத்தரமாபுராணம், உத்தராகம கோசங்கள், கணிதநூல், கபிலரந்தாதி, கைலைபாதிகாளத்திபாதி அந்தாதி, திருமுருகாற்றுப்படை, நக்கீரரியற்றிய நாலினுள்ள ஐந்தாம்பனுவல், புரவிநூல், மடைநூல், மயனூல்.

மடங்கள்:—தில்லைமாளிகைமடம், வாகீசசுவாமி மடம்.

மந்திரங்கள்:—அகமருடணம், சடாக்கரம், பஞ்சாக்கரம், பிரணவம், மிருத்தியுஞ்சயம்.

[மலைகள்]

இடபகிரி, இலத்திமலை, எண்கிரிகள், கைலை, கொடுங்குன்றம், சமனொளிமலை, திருக்கழுக்குன்று, திருப்பரங்குன்றம், நாகமலை, பசுமலை, பன்றிமலை, பொதியில், முதிய வெற்பு, மேருமலை, யானைமலை.

மரபு : மானமங்கலத்தார் மரபு.

வித்தைகள் : அக்கினித்தம்பம், இந்திரஞாலம், நோக்குவித்தை.

[அரிய மொழிகள்]

அகம், அங்கம், அங்கம்நூற்றெட்டு, அணரிட்டு, அதி, அவதானம், இராவுத்தராயன், இருப்புமுட்டு, உழப்பாது, உழப்பி, உழை, உளத்தடைத்து, ஊசும், ஒப்பார், கறம், கிஞ்சில், குதிரையிராவுத்

தன், குழப்பி, குழும்பல், கெருடி, கைந்தலை, கொச்சை, கொந்தக்குலம், கொற்று, சாக்கையர், சாத்தலோதல், சாளர சங்கீதம், சாறு, சிலும்பல், சிறுக்கன், சீர, சும்மாடு, சொட்டை, தப்பு, தவ்வும், திண்ணிமை, திருக்கைச் சிறப்பு, துவர்பிடித்து மறிப்ப, தொத்துவர், தொப்பாரம், நரியாது, நன்பு, நாயன், நையாண்டிபாடல், பருந்து, பணிக்கு, பரிச்சாத்து, பரிவேத்தா, பழுத்து நரைத்த, பாஞ்சாலிகம், பாராவளை, பிசகல், பிறிதுசாபம், புழது, பூணித்து, பேரிளமை, பொக்கணம், மகன்மை, மச்சம், மலர், மழுப்பவல்லான், மாமடி, மாலை, மாறு, முசி, மொக்கணி, மொஞ்சகக்கையர், மொத்தம், வருந்த, வணிக சூரியர், வரிசை, வழிசெய், வன்னியர், விலாவொடித்தல், வேணும், வைபாளி அல்லது வைகாளி.

திருவிளையாடல் முதலியவற்றாலும் கேள்வியாலும் அறிந்தவைகள்: அட்டாலைமண்டபம், அமணமலை, அன்னக்குழி மண்டபம், இந்திரேசுவரர், எழுகடற்றெரு, எழுநூற்றுமங்கலம், ஐராவதகணேசர், ஐராவததீர்த்தம், ஐராவதநல்லூர், ஐராவதேசுவரர், கஞ்சரீடபுரம், காஞ்சனமாலை கோயில், காராக்கிரகக்குகை, காவணநல்லூர், கிழியறுத்தல், குருவிருந்ததுறை, குலசேகரபாண்டியன் வடிவம், கூடைதட்டிப் பறம்பு, கொந்தகை, கோச்சடை, சங்கத்தார்களுடைய திருவுருவங்கள், சங்கத்தார் கோயில், சாம்பனத்தம், சுந்தரமாறன், செல்லூர், தத்தனேரி, தனஞ்சயன் வடிவம், திருப்பாச் சேத்தி (மதுரைக்குக் கிழக்கே வையைக் கரையிலுள்ளதோரூர்; சைனர்கள் இட்ட மந்திர ஏடுகள், திரும்பாமற் சென்று கரையிற் சேர்ந்த இடமென்பர்), திருவாலவாய் நல்லூர், திருவாலவாய்த் தம்பிரானார், திருவீதிகள் ஐந்து, தின்ஞநரி, தொடர்நரி, நக்கீரர் கோயில், நக்கீரர் திருவுருவம், நடுவூர், பதஞ்சலி முனிவர் ஸ்தோத்திரம், பரவர், பரிவீரமங்கலம், பாண்டிய மண்டலாதீசுவரர், பாண்டியன் படித்துறை, பாண்டியனகழ்வீதி, பாணர் (தையற்காரர்), பிட்டுத் தோப்பு, பிள்ளையார்பாளையம், பூதகுடி, பூதங் கண்டகுளம், பெருங்கருணை, மடைப்பள்ளிச் சாம்பல், மண்டியூர், மதிச்சயம், மாநகரி, முத்திரைகள் மூன்று, மேலைக்கடை, வளையற்காரமண்டபம், வாகீசசுவாமி மடம், விழுப்பாதராயர், வெள்ளியம்பலத்தெரு, வேப்பமாலை, வேறுநிலை.

# வேறுபாடுகள்.

பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடலிற் காணப்பெறாத அரிய விஷயங்கள் பல இத்திருவிளையாடலில் அவ்வவ்விடத்துக் காணப்படுகின்றன; அவற்றுட் சிற்சிலவருமாறு :

(காப்பு) கற்பகவிநாயகர் : இவர் சுந்தர பாண்டியத்திலும் திருவிளையாடற் பயகரமாலையிலும் துதிக்கப்பெற்றுள்ளார். இவர் கோயில் மதுரையில் இப்பொழுது காணப்பட்டிலது.

(கடவுள்வாழ்த்து) இதில், பெரும்பற்றப்புலியூர்த்துதி, பாண்டிநாட்டுத்துதி, இத்தலத்துத் திருநாமங்களுள் நான்கனதுதி, மதுரைத் திருச்சிற்றம்பலம், வெள்ளியம்பலம் ஆகிய இவற்றின் துதிகள், உக்கிரப்பெருவழுதியார் துதி, நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் துதி இவைகள் உள்ளன.

(பதிகம்) இதன் இறுதியில் முதற்குறிப்புச் செய்யுளொன்று உள்ளது; அச்செய்யுள், பழையகாலத்தில் இப்பதிகம் பாராயணம் செய்யப்பெற்று வந்ததென்பதைத் தெரிவிக்கின்றது.

(திருநகரச்சிறப்பு) மதுராநகரம் கன்னி, கரியமால், காளி, ஆலவாய்த் தருமமூர்த்தி என்பவர்களாற் பாதுகாக்கப்படுவது.

(க) விருத்திர ஹத்தியைப் போக்குதற்குத் தேவலோகத்திற் பலவிமானங்கள் இந்திரனாற் செய்விக்கப்பெற்றன. சிவலிங்கப் பெருமானுடைய அழகிய வடிவத்தைக் கண்டு, இந்திரன், சொக்கென்னும் திருநாமத்தைச் சாத்தினன். இத்தமிழ் நூலுக்கு முதனூல், உத்தர மகா புராணமென்னும் வடநூலிலுள்ள சாரசமுச்சய மென்னும் பகுதி. இச்சரிதத்தை முதலிற் கூறியவர்கள், வியாசர், வான்மீகி, எச்சரென்பவர்கள்; பின்பு கூறியவர் அகத்திய முனிவர்.

(௩) மலயத்துவசன் ஆதிமாலில் வந்த வடிவமங்கையை மணம்புரிந்தனன்.

(௪) மலயத்துவசன் மீனக்கொடி மன்னனென்றும் கூறப்படுவன். பங்குனி உத்தரத்தில் தடாதகைப்பிராட்டியார்க்குத் திருமணம் நிகழ்ந்தது; முருகக்கடவுள் பக்கத்திலிருந்து திருமணத்தைச் செய்வித்தனர். திருநந்திதேவரே குண்டோதரராகவந்தனர்.

(௫) இந்திர விமானத்திற்குத் தென்பாலுள்ளதாகிய வெள்ளியம்பலத்திற் பதஞ்சலி முனிவருக்காகச் சிவபெருமான திருநடனம் செய்தருளினர்; அது சொக்கத் தாண்டவமென்று பெயர்பெறும் [மதுரையில், திருக்கோயிலுக்குத் தெனபால் வெள்ளியம்பலமென்று பெயருள்ள ஒரு மண்டபமிருத்தலும், அதில் இக்காலத்துப் பங்குனித் திருவிழா நடைபெறுதலும், வெள்ளியம்பலம் தென்பாலுள்ள தென்றதற்கும் பங்குனி உத்தரத்தில் திருமணமுதலியன நடைபெற்றதற்கும் சான்றாகவுள்ளன.]

(௬) தடாதகைப் பிராட்டியார் பச்சைத்தேவி (மரகதவல்லி) யென்று வழங்கப்பெறுவர்.

(௭) சிவபெருமானது கட்டளைப்படி குண்டோதரனார் பல குளங்களை உண்டாக்கினர். அக்குளங்களுட் காவணமுள்ளவாவியைத் தன்பாற்பெற்ற

வர் காவணமல்லூரென்று கூறப்படும். ஒரு வாவிக்கரையில், சடங்குக் கந்தர் எழுந்தருளியிருக்கின்றனர். இங்கே சடங்குக் கந்தரென்றது, திருப்பரங் குன்றத்துக் கோயில் கொண்டெழுந் தருளிய ஸ்ரீ கல்யாண ஸுப்ரமணியக் கடவுளையென்றுசொல்லுகின்றனர்.

(௮) அக்கினிமூலையிலுள்ள தடாக மொன்றில் எழுகடல்களும் அடங் கின.

(௧௦) உக்கிரனார் சடையுடன்பிறந் தார்; அதனால், கோச்சடிலவருமரொ ன்பது அவர்க்கு உபநயனத்திருநாம மாயிற்று. சுந்தரமாறருக்கு விதுகுடு மிப்பெருவழுதி யென்பதும் திரு நாமம் [மதுரைக்கு மேற்கேயுள்ள, 'கோச்சடை' என்னுமூர், கோச்சடி லவருமரால் அந்தணர்களுக்கு முற் றூட்டாகக் கொடுக்கப்பெற்ற அகர மென்று திருவிளையாடற் பயகரமாலை யுரை தெரிவிக்கின்றது.]

(௧௧) உக்கிரனார், ஆதிமாபிலவதரி த்த வடிவணங்கை மணம்புரிந்தனர். சுந்தரமாறர் பதினாறு தெய்வவருடம் அரசாண்டார்; கிரீடமணிந்து அரச போகத்தை அனுபவித்துக் கொண்டி ருந்ததுபற்றி, சொக்கநாதர், அபிடேக ச்சொக்க ரென்றும் புழுகுநெய்ச்சொ க்கரென்றும் திருநாமம் பெற்றனர்.

(௧௨) வருணன விட்டகடல், புட்க லாவருத்தமுதலிய நான்கு மேகவேந் தர்களாற் குடித்துக் குறைக்கப்பட் டது; அப்பால் வருணன கட்டளைப் படி மேகங்கள் பெய்த பெருமழையை மேற்கூறிய நான்கு மேகவேந்தர்கள் நான்கு மாடங்களாகித் தடுத்தனர். அதனால், அவ்விடம் மாடக்குளக்கீழ் மதுரையென்று பெயர்பெறும்.

(௧௩) எல்லாம் வல்ல சித்தருக்கு ஆக்கினைச் சித்தரென்பது திருநாமம்.

(௧௫) சோமசுந்தரக்கடவுள் சங்கப் புலவராக எழுந்தருளியிருந்த பொழு து அவருக்கு மதுரைப் பேராலவாயா ரென்பதும் இறையனா ரெனபதும் திருநாமம். அவராலியற்றப் பெற்றது இறையனார் பொருளிலக்கணம். சங் கப்புலவர்கள் தாமியற்றிய பாடல்கள் அப்பொருளிலக்கணத்தின்படி அமை க்கப்பெற்றிருத்தலைக் கண்டு மகிழ்ந் தார்கள்; அவர்களுள், நக்கீரனார்மட்டும் அழுக்காற்றால், 'யானியற்றியநூலில் ஐந்தாம்பனுவலுக்கு ஒப்பில்லை' என் று கூறினர்.

(௧௬) தருமியின்தந்தையார் பெயர் சிவமுனியென்பது.

(௧௮) சிவபெருமான் தமிழ்நூற்கரு த்தை அகத்தியருக்கு நோக்கால் உப தேசித்தனர்.

(௧௯) இறையனாரகப்பொருளுக்குப் பலரியற்றிய உரைகளுள் உப்பூரி குடிகிழார் மகனார் உருத்திரசன்மர்மெய்யு ரைகளைக்கண்டனர்.

(௨௧) பழமதுரையை அழிக்கவந்த கடல்சுவறும்படி பாண்டியன் வேலை யெறிந்தான்; அப்பொழுது அக்கடல் வடிந்து அவன் காலைக்கழுவியது; அதுபற்றி அப்பாண்டியற்கு வேலை வடிம்பலம்பநின்றானென்பது பெய ராயிற்று. அவ்வரசனுக்குச் சங்கமண் டபம் அமைக்கப்பெற்றது.

(௨௨) வலையரசனுக்கு அதியரைய னென்பதுபெயர். உத்தரகோசமங் கையில் அறுபத்துநால்வர் சிவபெரு மான்பால் ஞானோபதேசம்பெற்றனர். அவர்கள்பால் உத்தராகம கோசங் களைச் சிவபெருமான் வைத்தருளின மையின, அத்தலம் அப்பெயர் பெற் றது; இதனை உத்தரகோசமங்கைப் புராணம் வலியுறுத்தும்.

(௨௪) காடுவெட்டியென்னும் சோ ழன் பொருட்டு மூடிக்கப்பெற்ற வடக் குமதில்வாயிலுக்கு இலச்சினைவாயி லெனபது பெயர்.

(௨௫) மாணிக்கம் பிறத்தற்கு இலங் கைத்தீவிலுள்ள சமனொளிமலையைச் சூழ்ந்த வலவை, மாவலிகங்கை, கம் பளை, கல்லணையெனனும் நதிகள் நான கும் இடங்களாகும். இதில், நவமணி யின இலக்கணங்கள் விளங்கவிரித்துக் கூறப்பெற்றுள்ளன.

(௨௬) கீழைமதிற்பால் அட்டாலை மண்டபம் தெய்வக்கம்மியாரற் கட்டப் பெற்றது; வில்வீரவடிவங்கொண்டு அதில் எழுந்தருளி யானையை எய்த

சிவபெருமானுக்கு அட்டாலைச் சேவகரென்பது திருநாமம்; யானை செரித்த இலத்தி இலத்திமலையென்று பெயர்பெற்றது. யானைமலையிற்பாண்டியன் நரசிங்கமூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தனன்.

(உஎ) திருவாதவூர், காளையார்கோயில், திருப்பெருந்துறை என்கிற இத்தலங்களாறுகள் விரித்துக்கூறப்பெற்றுள்ளன. இந்தத்திருவிளையாடல்முதலியவற்றால், திருவாசகத்துள்ளபகுதிகளுள் இன்னது இன்னது இன்ன இன்ன அமயத்து ஸ்ரீமாணிக்கவாசகஸ்வாமிகளால் அருளிச்செய்யப்பெற்றதென்பது வெளியாகின்றது.

(உஅ) நரிகளைக் குதிரைகளாக்கிய இடம் மிழலைநாட்டில்நரிக்குடியென்று வழங்கப்படும். திருவாதவூரிற் சிவபெருமானுடைய பாதச்சிலம்பொலி கேட்கப்பெற்றது [குதிரை இலக்கணங்கள் இதில் மிகுதியாகக் கூறப்பெற்றுள்ளன.]

(௩0) சிவபெருமான் கூலியாளாகி வந்தபொழுது, வேலைசெய்யாதது கண்டு பாண்டியனுடைய வேலைக்காரர்கள் அடித்தார்கள்.

(௩உ) இந்திரனுக்குமுன்னம்ஆடிய ஈசானகோணத்தில், சிவபெருமானை பாண்டியனுக்காக மாறியாடி, திருவடியின்மேற்கொடிகட்டினர். அதனால், அதிரவீசியாடுவார், மாறியாடிக்கொடியிட்டபெருமானென்னும் திருநாமங்கள் அவருக்கு உண்டாயின.

(௩௩) யமதூதர்கள் சில பழங்கதைகளைத் தம்முட்பேசிக்கொண்டார்கள்.

(௩௪) இக்காலத்துவழங்காதனவாகிய யுத்தவிசேஷங்களும் அவற்றிற்குரியபரிபாஷைகளும் இதிற்கூறப்பெற்றுள்ளன.

(௩௬) தத்தனென்னும் பாண்டியன் அரசாளுகையில் சமணராலனுப்பிய நாகமுமிழ்ந்த விடவாற்றின்கொடுமை சிவபெருமானுடைய சடையிலிருந்த சந்திரனிடத்துள்ள அமுதத் துளியால் சமனமுற்று, மதுரமாயிற்று. அதனால், இந்நகர்க்கு மதுரையென்பது பெயராயிற்று. பின்பு அவர்களனுப்பிய மாயப்பசு வதைக்கப்பெற்றது.

(௩எ) திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், இன்னஇன்ன அமயத்தில் இன்ன இன்னபதிகம் பாடியருளினரென்பது இதனால் விளங்குகின்றது.

(௩அ) சைனர்களைவாதுசெய்துவென்றதுபற்றித் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்க்கு வாதுசெய்தவாரணமென்னும் திருநாமமுண்டாயிற்று; சைனர்களை ஏற்றிய கழுக்களின் வரிசைமுடிந்தவிடம், கழுவர்படை வீடென்று வழங்கும்; சைனர்களோடு பேசியதோஷம் தீர்தற்பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவேடகத்திற் பிரதிஷ்டை செய்து பூசித்தசிவலிங்கப்பெருமானுக்குச்சிறுமையிற்றெள்ளியாரென்பது திருநாமம். அத்தலத்தில், வையையாற்றின் தென்கரையில், பாண்டியன் படைவீடுசெய்து அதிற் சிலகாலமிருந்து வழிபாடு செய்துவந்தான்.

(௩௯) சுந்தரசாமந்தரென்னும் சேனாபதி, கொந்தகக்குலத்துப்பிறந்தவர்.

(௪௧) மாமனாகவந்தவர்கூறும் வார்த்தைகளில் சிலவர்த்தகபரிபாஷைகள் வந்துள்ளன.

(௪உ) சிவபெருமான் பட்டமங்கலத்தில் அட்டமாசித்தி உபதேசித்தருளினார்.

(௪௩) உண்ணுதற்குரியநீரிற்சேர்த்தற்குத் தக்க வாசனைப்பொருள்கள் இவையென்பது தெரிகின்றது.

(௪௪) உக்கிரகுலத்துப் பிறந்தபாண்டியன், இந்திரன்பூட்டிய ஆரத்தைத் திருப்பரங்குன்றத்தில் வைத்தனன். திருப்பரங்குன்றம் முருகக்கடவுள்முதலியோராற் பூசிக்கப்பெற்றது. நக்கீரர் பிரமராக்கதத்தால், அங்குள்ளகுகையில் அடைக்கப்பட்டுத் திருமுருகாற்றுப்படையைப்பாட, அதைக்கேட்ட முருகக்கடவுள், அவரை விடுவித்து, 'நம்மைக் கிழவ னென்றனையே' என்ன, நக்கீரர், "குன்றமெறிந்தாய்" என்னும் வெண்பாவால்துதிப்ப, அதிலுள்ள, 'என்றுமிளையாய்' என்பதைக் கேட்டு, மகிழ்ந்து, திருமுருகாற்றுப்

படையைப் படிப்பவர்கள் வேண்டிய வரத்தைக்கொடுப்போம் ; நீ மதுரைக்குச்செல்வாயாக' என்றருளிச்செய்தனர். பாண்டியன் மேகங்களைப்பிடித்துக்கட்டியஇடம் கட்டுநெல்லூரென்றும், அவற்றைச் சிறைப்படுத்தியஇடம், இருஞ்சிறையென்றும், அவன் தனித்துநின்று போர்செய்து இந்திரனை வென்றஇடம் தனிச்சய மென்றும் வழங்கப்படும். மேகத்துக்குப் பிணை கொடுத்தவன் களவேள்விநாட்டிலுள்ள ஏழுனாயுடையஒருவன். அவன் பிணைகொடுத்தற்கு 'நாம் முன்' என்று சொல்லிக் கொண்டு வந்தமையால், அவனூர் நாமுனூரென்று பெயர்பெற்றது. மேகங்கள், தமக்குப்பிணைகொடுத்தற்கு முதலில்எழுந்தவர்களுடைய இடமாகிய துவரைநாட்டில் முதலில் மழைபெய்தற்குத்தோன்றி, பிணை கொடுத்தவனுடைய இடமாகிய களவேள்விநாட்டிற் பின்பு பெய்யாநிற்கும்.

(சகூ) சோழனைஉட்கொண்டு ஆழ்த்தியமடு கோண்டாழ் யெனப்பெயர் பெற்றது; அது மதுரைக்கு மேற்கே யுள்ளதோரோடை.

(சஎ) மதுரை, நடுவூர், வாலவாய், ஆலவாய், திருமுடங்கலெனப் பெயர் பெற்றது ; இத்தலம் சிவபெருமானுடைய படைவீடு.

(சஅ) திருவிடைமருதூரில் வரகுணபாண்டியர் சிலகாலமிருந்து பக்திபரவசராய்ப் பலவகையானவழிபாடுகள் செய்துவந்தனர் [திருவிடைமருதூர்த் திருகோயிலிலுள்ளபாண்டியனதோரணமெனறவாயிலின் வலப்பக்கத்தே வரகுணபாண்டியருடையதிருவுருவம் அமைக்கப்பெற்றுள்ளது.]

(சகூ) வரகுண பாண்டியருடைய குமாரர் அட்டாலைவீரரைப்பிரார்த்திக்க, அவர் வில்வீராகத்தோன்றிச் சோழன் முதலியபகைவர்மீது விடைக்குறியம்பைபெய்தனர்.

(டுக) சிவபெருமான் மூர்த்தியார்க்கு அரசளித்தனர்.

(டுஉ) காரியார் காரியாரென்னும் புலவர்களுடைய பாக்களைச் சிவபெருமான் பகுத்துக் கொண்டருளினர்.

(டுஈ) புலியின் முலைப்பாலைச் சிவபெருமான் புல்வாய்க்கன்றுக்கு அளித்தருளினர். மணவூரிலிருந்துவந்தஒரு வணிகனும் இத்தலம்காணப்பெற்றது [மதுரைப்புதுமண்டபத்திற் கீழைக்கோடியிலுள்ள பெரிய கருங்கற்றூணென்றிலும் திருப்பரங்குன்றத்தில் துவஜஸ்தம்பமண்டபத்தில் வடபாலுள்ள பெரியகருங்கற்றூண்களுள் ஆறுவதிலும் சிவபெருமானுடையதிருவுருவம் புலியைக்கொண்டு புல்வாய்க்கன்றிற்குப் பாலருத்திய வண்ணமாகப் பெரியோர்கள்அமைத்திருத்தல், பண்டைக்காலத்தில் இத்திருவிளையாடல் நிகழ்ந்ததென்பதை நன்குவிளக்குகின்றது.]

(டுச) இதில் இசையிலக்கணங்கள் பலவந்துள்ளன.

(டுஅ) காட்டுநாட்டுள்ள வன்னியர் தலைவன,கஉ-பிள்ளைகளைப்பெற்றான்; அவர்கள் தீச்செய்கையால், முதியவேடம்பில், ஒரு பன்றியினிடத்தில் கஉ - குட்டிகளாகப்பிறந்தார்கள் [சோமசுந்தரக்கடவுள் பனறிக்குட்டிகளுக்குத் தாயாகிப் பாலளித்ததிருவுருவம், மதுரைப்புதுமண்டபத்திலும் திருப்பரங்குன்றத்துத் துவஜஸ்தம்பமண்டபத்திலுமுள்ள ஸ்தம்பங்களில் அமைக்கப்பெற்றுள்ளது.]

(டுகூ) அப்பனறிக்குட்டிகள் பன்னிரண்டும் வன்னியர்களாயின. அவைகள் வளர்ந்தமலை பன்றிமலையென்று பெயர்பெற்றது ; அவர்கள் பன்றிக்குறும்பர்பன்னிருவரென வழங்கப்பெற்றார்கள்.

(௬௦) கரிக்குருவிச்சாதிகள் மிருத்தியுஞ்சயமந்திரம் ஜபித்தலை இன்றும் அறியலாகும். அம்மந்திரம் விரைவிற் பலனை அளிக்கும் [காஞ்சிப்புராணம்,பன்னிருநாமப்படலம்,௬௦௪-ஆம் செய்யுளைப்பார்க்க.]

(௬க) உக்கிரகுலத்துப்பிறந்த பாண்டியனொருவன மேருமலையிற் கயலையும் செண்டையும் பொறித்தனன்.

(௧௨) விடவைத்தியர் இத்தனை வகையினரென்பது இதிற்கூறப்பெற்றுள்ளது. திருஞானசம்பந்தர் ஒருவனுக்குத் திருமருகலில், "சடையாய்" என்னும்பதிகத்தாலும், ஒருவனுக்குத் திருப்புறம்பயத்தில் திருநோக்காலும் விடநோயைத் தீர்த்தருளினர்.

(௧௪) வேதங்களையும் வேதாங்கங்களையும் முனிவர்களுக்குச் சிவபெருமான் உபதேசித்தருளினர்.

பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடலிற்கூறப்பட்டது போல இன்னபாண்டியன்காலத்து இன்ன திருவிளையாடல் நடந்ததென்பதும் இன்ன பாண்டியன்மகன் இன்னானென்று இடைவிடாமற் பாண்டிய பரம்பரையைச் சொல்லிக்கொண்டு போதலும் இதிலில்லை. பின்னுள்ள பாண்டியர்களின் பெயர்கள் மட்டுமே இந்நூலிற் காணப்படுகின்றன:

(௧) உக்கிரனார் ; (௨) சுந்தரமாறர் ; (௩) தத்தன் ; (௪) மலயத்துவசன் ; (௫) வரகுணர் ; (௬) வரகுணருடைய மைந்தர் ; (௭) வீரமாறன்.

## ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள்

## திருநாவுக்கரசுநாயனாருக்குக் காலத்தால் முற்பட்டவரென்பது.

### திருநாவுக்கரசு நாயனார் தேவாரங்கள்.

### திருவாரூர்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

உ. நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல்லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
வரவரைச் சாத்திநின் றானு மாரூ ரமர்ந்தவம் மானே.

### தனித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கக. குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழாந் தீசனைவா சகனுக் கொண்டார்
கிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றலைநெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
யிராவணனென் றவனைப்பே ரியம்பக் கொண்டா
ரிடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே.

மேற்கூறிய இரண்டு பாடல்களுள், முதலாவதிலுள்ள, 'நரியைக் குதிரை செய்வானும்' என்பதற்குப் பொருளும் சரித்திரமும் வெளிப்படை.

இரண்டாவதிலுள்ள, 'குடமுழாந் தீசனைவா சகனுக் கொண்டார்' என்பதற்குப்பொருளும் அதிலுள்ள சரித்திரமும் இங்கே ஆராய்தற்பாலன: இந்த வாக்கியத்திற்கு, (சிவபெருமான்) குடமுழாவைவாசிக்கும் திருநந்தி தேவரை ஸ்ரீ மாணிக்கவாசகராக அவதரிக்கும்படி திருவுளத்திற் கொண்டருளினரென்பது பொருள்; குடமுழா - ஒருவகைவாத்தியம்; வாசகன் - ஸ்ரீ மாணிக்க வாசகர்.

பண்டைக்காலத்திற் பூமியிற் பௌத்தமதம் அதிகரித்த பொழுது வேதாகம ஒழுக்கம் குன்ற, அக்குறையை அகற்றக்கருதிய

தேவர்களுடைய பிரார்த்தனைப்படி, சிவாஞ்ஞையால் திருநந்திதேவர் ஸ்ரீ வாதபுரத்தில் ஸ்ரீ சம்புபாதாசிருதரென்னும் பிராஹ்மணோத்தமருக்கும் அவர் பத்தினியார் சிவஞானவதியார்க்கும் புத்திரராக அவதரித்தருளினரென்பது, திருப்பெருந்துறையின் வடமொழிப் புராணமாகிய ஸ்ரீ ஆதிகைலாஸமாஹாத்மியம், ௩௩ - ஆம் அத்தியாயத்திலும் ஸ்ரீமாணிக்கவாசகருடைய வடமொழிச் சரித்திரமாகிய ஸ்ரீமணிவாக்கிய சரித்திரம், ௬ - ஆம் அத்தியாயத்திலும் விரித்துக் கூறப்பெற்றிருத்தலின், இதற்கு இதுவே பொருளென்று தெரிகின்றது.

இதனால், ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள், திருநாவுக்கரசு நாயனார்க்குக் காலத்தால் முந்தியவரென்று நன்கு புலப்படுதல் காண்க.

மேற்கூறிய வடநூல்களிரண்டினையும் ஆராய்ந்து தெளியும்வண்ணம் நல்ல சமயத்தில் அனுப்பிய திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த ஸ்ரீ ஆளுடையார்கோயில் டிரஸ்டி ஸ்தானிகத்திலிருந்த ஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரானவர்களுடைய பேருதவி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# [1]திருவாலவாயுடையார்

# திருவிளையாடற்புராணம்.

## காப்பு.

சுருதிநான் மறைதொழுஞ் சொக்க நாயகன்
றிருவிளை யாடலெட் டெட்டுஞ் செப்பிட
முருகலர் சடைமுடி முக்கண் மும்மதக்
கரிமுக னிணையடிக் கமலம் வாழ்த்துவாம். (க)

## கற்பகவிநாயகர்.

சொற்பக வினையக னலன் றாய்மையோ
ரற்பக வினையக னறுமு கேசன்முன்

---

## குறிப்புரை.

### காப்பு.

க. சொக்கநாயகன் - சுந்தரேசர்; க: உகூ; சொக்கு - பேரழகு; "சொக்கனைத்த சுடரொளி வண்ணனை", "எக்க ராமமண் கையருக் கெளியே னலேன் றிரு வாலவாய்ச் - சொக்க னென்னு ளிருக்கவே", "தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச் - சொக்கனே யருள்" (தேவாரம்); "மொக்கணி யதனின் முழுத் தழல்மேனி, சொக்க தாகக் காட்டிய தொன்மையும்" (திருவாசகம்); "முழுகு கெய்ச் சொக்க ரபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்க - ரழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்க ரங்கயற்கண் - டழுவிய சங்கத் தமிழ்ச்சொக்க ரென்றென்று சந் ததம் - பழகிய சொற்குப் பயன்றேர்ந்து வாவிங்கென் பைங்கிளியே", "கடற்றீ விடங்கொண்ட சொக்கருக்கே" (மதுரைக்கலம்பகம்: ருக, கூரு) திருவிளை யாட லெட்டெட்டு: திருநாட்டுச். க; திருநகரச். கஅ; க: ௩ரு; "எட்டெட் டியற்றிய கட்டமர் சடையோன்" (கல்: கக); "பண்ணிய கலைகள் போலப் பக ரறு பத்துநான்கு புண்ணிய வாடல்செய்து பொலிதரு நகருமுண்டால்" (திரு நாகைக்காரோண. தலவிசேட. சக.)

உ. சொல் பக வினை. அன்பு அகம் இல நாயகன். முன் - தமையனார். பொற்பு அகம்வில் - அழகிய மலையாகியவில; அகம்: வடமொழி. நாயகனாகிய முனிவன் - சிவபெருமான்; "முன்பே யென்னை யாண்டுகொண்ட முனிவா

(பிரதிபேதம்.) 1 திருவாலவாயுடைய நாயனார் திருவிளையாடல்', 'திருவா லவாயுடைய நயினார் திருவிளையாடல்'

பொற்பக விநாயகன் முனிவன் புத்திரன்
கற்பக விநாயகன் கழல்க ளேத்துவாம். (உ)

**சித்திவிநாயகர். வேறு.**

வானெழுகு முகின்மேனி வேதன் றேட மதுரைநா யகனடியார் வினைக டீர்ப்பா, னானெழுகு புரம்[1]படைத்த மக்கள் போல்வந் தலாவுதிரு விளையாடற் [2]பனுவல் சொல்லக், கூனெழுகு பிறைக் கோட்டுப் பனைக்கை நால்வாய்க் குடவுதரச் செழும்பவளக் குன்றம் போலத், தேனெழுகு மலர்க்கடம்ப வனத்துலாவு சித்திவிநா யகனி ருதாள் சென்னி சேர்ப்பாம். (௩)

**வாழ்த்து. வேறு.**

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக [3]காதலாற்
சால வீச னடியார் தழைகவே. (௪)

---

# கடவுள் வாழ்த்து.

## பெரும்பற்றப்புலியூர்.

நிறங்கட்கப் [4]புறநாத னினைந்துட்சிற் கனனாகிச்
செறிந்தச்சித் திரகாயந் திருந்தக்கட் செவிகாண
வறங்கட்குப் [5]புகலாகு மகண்டப்பொற் பொதுநாளும்
பிறங்கப்பொற் புடனாடும் பெரும்பற்றப் புலியூரே. (க)

---

முனிவர் முழுமுதலே" (திருவா. எண்ணப்: ௩.) சிவபெருமானை அருந்தவன், நற்றவனென்பர் பி ிறும்; உ: க௩; க௫: ௫; "தாழ்சடைப் பொலிந்த வருந்த வத் தோற்கே" (புறநா. க௨.) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க.

௩. முகின்மேனி - திருமால். புரம் - உடம்பு. பனுவல்-நூல்,செய்யுள்.

கடவுள் வாழ்த்து.

க. நிறங்கட்கு அப்புறநாதன்: நிறம் - வர்ணம்; உருவம். உள்நினைந்து. சித்கனன் - ஞானப்பிழம்பாக உள்ளார். சித்திரகாயம் - புலி; "கடும்புலிக ளயர்ந்துசித்ர காயமெனும் பெயர் விளக்க" (அழகர்கலம்பகம், க); இங்கே வியாக்கிரபாதர்; அ: உலகறிசுட்டு; அழகுமாம். கட்செவி - பாம்பு; பதஞ்சலி முனிவர். செறிந்து திருந்தக் காண. 'போற்றி' என்று ஒருசொல வருவித்து முடிக்க. பின் வேண்டுமிடத்தும் இப்படியேகொள்க.

(பி - ம்.) [1]'படைத்தான் மாக்கள்போல்' [2]'பாடல்' [3]'காதலாஞ் சாலும்' [4]'புறனாகநினைந்துட் சிற்குணனாகி' [5]'புலனாகும்'

திருச்சிற்றம்பலம். வேறு.

பொருப்பைப் பண்பொடுங் குனித்துச் சண்டவெம் புரத்தைப் பொன்றமுன் சிரித்துக் கண்டவன், கரப்பொற் குன்றடுங் திறத்துச் சிங்கமென் கருத்துட் டங்குமஞ் செழுத்துச் [1]சம்புவண், டாக்குக் கொண்பதஞ் சனிக்குத் தென்றலங் தழைப்பத் தொங்தொமென் றிசைத்துச் சந்ததங், திருத்தச் செம்பதம் புரிப்பித் தன்புறுங் திருச் சிற் றம்பலங் திருச்சிற் றம்பலம். (௨)

திருவம்பலம். வேறு.

அருளுந்தொகும் பொருளுந்திருந் தழகுந்தொழுங் குலமுந்தரும்
பரிவொன்றுசந் ததியும்புகும் பழியஞ்சுமொண் டொடியும்பொருந்
தருவுந்திறம் பிறவுந்துளங் கொளியும்பிறங் கறிவுஞ்செழுந்
திருவும்பெரும் புகழுந்தருந் திருவம்பலந் திருவம்பலம். (௩)

பொன்னம்பலம். வேறு.

முன்னங்கருங் கண்ணன்கிடந் திம்மண்குடைந் துன்னைந்துறுந்
தன்னண்டமென் றன்னம்பறந் தின்னம்பெருங் கின்னம்படும்
பன்னும்பழஞ் சொன்மந்திரம் பன்னுங்களென் றுன்னும்பதம்
பொன்னஞ்சிலம் பின்னந்தரும் பொன்னம்பலம் பொன்னம்பலம். ()

சபாபதி. வேறு.

திருமேவுஞ் [2]சதுவேதச் சிரமேவும் பரஞ்சோதி
யருமேவுந் திருவுருக்கொண் டம்மையுடன் செம்மைபெற
மருமேவும் பெரும்பற்றப் புலியூர்மா மணிமன்றுட்
குருமேவும் [3]படிமேவிக் கூத்தாடுங் கழல்போற்றி. (௫)

---

௨. பொன்றக்கண்டவன் - அழியச்செய்தவர். கரப்பொற்குன்று - யானை; கயாசுரன். தாக்குக்கு - வியாக்கிரபாதருக்கு; தாக்கு - புலி. தென்தலம் - தென்னுடு. புரிப்பித்து - குஞ்சிப்பித்து; வளையச்செய்து. 'திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்' என்பது அடுக்கு; பின்னுள்ளவைகளுமிப்படியே. இங்ஙனம் அன்பின் மிகுதியால் அடுக்கிக்கூறல் ஒருசாராசிரியர் கொள்கை; "அதிரும்படி நடனம்புரி யதிருங்கழ லதிருங்கழல்" (அருணசலபுராணம், கடவுள வாழ்த்து, ௨) என்பதனுலும் விளங்கும்.

௩. திருவம்பலம் அருள் முதலியவற்றைத்தரும்; சந்ததிமுதலியவற்றைத்தரும்.

௪. கைந்துறும் - கைந்துறுவார். தன் அண்டம் - பிரமாண்டம். அன்னமென்றது பிரமதேவரை. கின்னம்படும்-துன்பமுறுவார். பழஞ்சொல்லாகிய மந்திரம் - பஞ்சாக்கரம். பன்னுங்கள்: முன்னிலைப்பன்மையேவல. பதம் - திருவடி. கண்ணன் இம்மண் குடைந்து உள்ளைந்துறும்; அன்னம் பறந்து கின்னம்படும்; ஆதலால் மந்திரத்தைப் பன்னுங்களென்று கூறி, சிலம்பு பதத்தைத்தருதற்கு இடமாகிய பொன்னம்பலமென்க.

௫. அரு - அருமை. மரு - மருவுதல்; அர்த்தயாமகாலத்தே ஏனைத் தலமூர்த்திகள் அங்கே மருவுவார்களென்பது புராணவரலாறு. போற்றி - பாது காத்தருள்க; வியங்கோள்.

(பி - ம்.) [1]'சம்புவொண்டாக்குக்கு' [2]'சதுர்வேத' [3]'படிமேவுங்கூத்து'

சோக்கநாதர். வேறு.

அரியசடை முடிபோற்றி யருள்பொழிசெம் முகம்போற்றி
விரையிதழி மலரணிநூல் விளங்கியமார் பகம்போற்றி
மருவுமுயர் பேரழகு வளருதர நிலைபோற்றி
திருவளர்சேர் தமிழ்ச்சொக்கன் திருவடித்தா மரைபோற்றி. ()

அங்கயற்கண்ணம்மை. வேறு.

பொங்குருச் செல்வங் கல்வி பொருவிலா வாய்மை தூய்மை
யிங்கெமக் கருள வல்ல வினையிலா வெம்பி ராட்டி
பங்கயத் தடஞ்சூழ் கூடற் பவழமால் வரையை நீங்கா
வங்கயற் கண்ணி மங்கை யடிக்கம லங்கள் போற்றி. (எ)

பாண்டிநாடு.

ஆவியந் தென்றல் வெற்பி னகத்தியன் விரும்புந் தென்பா
லுவலந் தீவம் போற்றி நாவலந் [1]தீவந் தன்னுண்
மூவர்கட் கரியா னிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநன் னாடு போற்றி. (அ)

மதுரை. வேறு.

தேனிமிருந் தொடைவாகைச் செழியர்திருக் குலம் விளங்க
வீனமில்பல் லுகங்கடொறு மி நநிலத்தியா வருமுய்ய
வானபெரு நான்மறைக்கு மரியயறகுந் தெரியாதார்
மானிடராய் விளையாடும் [2]மாமதுரை நகர்போற்றி. (கூ)

கடம்பவனம். வேறு.

தலம்புகழ்தரும்பொரு வரும்பரம[3]சம்புவ ருணம்பனெழி லம்பொனொளியார், சிலம்படி[4]யலம்பொலி பரம்பிரசதம்படர் சிதம்பர நிரம்பு மருளா, லலம்பெறநிலம்பெறு நமம்பிகையுமிம்பரு மரம்பைய ருமும்ப ருமெலா, நலம்பெருகிடும்படி விரும்பிசைநயம்பட நடம்புரி கடம்ப வனமே. (௧0)

---

சு. இதழி மலர் - கொன்றைமலர். இதில, கேசாதிபாதாந்தம் முறையே கூறப்பெற்றுள்ளன.

எ. பவழமால்வரை - சிவபெருமான்.

அ. ஆவியந்தென்றல் - உயிர்போன்ற அழகியதென்றல்; தென்றல்வெற்பு-பொதியின்மலை. நாவலந்தீவம் - சம்புத்தீவு. மூவர்கட்கரியான் - சோமசுந்தரக் கடவுள்; சோமசுந்தரக்கடவுள்நிற்பச் சங்கப்புலவர்கள் இருந்தது, "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் செய்யுளைக் குற்றங்கூறியவர் யாவரென்றபொழுது; திருநாட்டுச். ரு; கக: உ0; கஎ: எ.

கூ. "பல்லுகம்" என்றது நான்கு யுகங்களையும்; திருநகரச். கஅ.

௧0. இரசதம்படர் சிதம்பரம் - வெள்ளியம்பலம். அலம் - நிறைவு.

(பி - ம்.) 1'தீபந்தன்னின்' 2'மதுரைமாநகர்' 3'சம்புவெழி றங்குமொழி கம்பனொளி' 4'அலம்பவொளி பம்பிரசதம்'

கூடல். வேறு.

ஆடுபவர் பாடுமறை யேடெதிர்செ லூடுவகை யாடவிளை யாடு பெரியோர், வேடனிடு சூடினிய கேடிறசை நாடுபவர் வேடனுடல் வீட வடுவோர், சேடன்மதி யோடுநதி யோடுதலை யோடுவிதி தேடுமுடி சூடு முரவோர், கூடுமிட நீடுசது மாடமென மூடிமுகில் கூடுமுயர் கூட னகரே. (கக)

மதுரை. வேறு.

விதுவரவ மிதழிதிரி பதகைதலை பொதிசடையர் விதமருவு கதிய தருள்வோர், சதுமறைவி புதர்முனிவர் திதிபுதல்வர் துதிசெயிர சத சகழ்தோல் பொதுவில் வருவோ, ரதிகாள நதியையதி மதுரமுறு ரதிசெய்திற லதுலருயர் சதுர ரிடம்வான், மதிதவழு சுதையிலகு நிமைதரு நிதிநிகழு மதிறழுவு மதுரை நகரே. (கஉ)

திருவாலவாய். வேறு.

உருகாத நீச ராயினு முணராத மூட ராயினுங
கருதாத சீல ராயினுங் கசியாத நேச ராயினும்
வரையாத யாவ ராயினும் வலமாக நாக ராயர்சூழ்
திருவால வாயுண் மேவுவார் [1]சிவமாவ ராணை யாணையால. (கங)

மதுரைத்திருச்சிற்றம்பலம். வேறு.

[2]முன்மலர்நான் முகன்திருமான் முனிவர்புரந் தரன்மீறவர்
நன்மறைகண் டடிபரவ நலமலிகா லங்கடொறுந்
தொன்மடமா துடனயந்து சுந்தரனன் னடமாடுந்
தென்மதுரை மாநகர்சேர் திருச்சிற்றம் பலம்போற்றி. (கச)

---

கக. மலநூறடு - தமிழ்வேதமாகிய திருமுகப்பாசுரமெழுதிய ஏடு. வேடன் - கண்ணப்பர், வேடன் உடல - மன்மதனுடைய உடம்பு. சேடன் - பாம்பு. சேடனையும் மதியையும் ஓடுகின்ற நதியோடு தலையோடு விதியையும் முடியிற்சூடும் உரவோன். கூடும் இடம் கூடல நகர்.

கஉ. விது - சந்திரன். திரிபதகை - கங்கை; ஆகாயம், பூமி, பாதாள மென்னும் மூன்றுவழியாற் செல்லுபவள். விதம் - சாலோக முதலிய நான்கு வகை. திதிபுதலவர் - அசுரர். காளநதி - விடநதி; அந்நதியை மதுரநதியாகச் செய்த வரலாற்றை, நக-ஆம் திருவிளையாடலாலுணர்க.

கங. கருதாத சீலர் - நினையாத இயல்புடையவர். வரையாத - கொள்ளப்படாத. நாகராயர் - பாம்பின்அரசர்; என்றது மதுரையின் எல்லை காட்டிய பாம்பை; தேவராசருமாம்.

கo-கங. இச்செய்யுட்களில, இத்தலத்தின் காரணப்பெயர்களாகிய கடம்வனம், கூடல, மதுரை, திருவாலவாயென்பவை முறையே பாராட்டப்பட்டுள்ளன; திருநகரச். அ - கக.

கச. சுந்தரன் - சொக்கநாயகர்; எழுவாய். நன்னடம் - சொக்கத்தாண்டவம்; 'சுந்தர நன்னடம்' என்று பாடங்கொண்டு, சொக்கத்தாண்டவமெனினுமாம்; ரு: ரு - ஆம் பாடல்பார்க்க. இத்தலத்தில, சிவபெருமான், திருமால் முதலியவர்கள் பொருட்டுப் பண்டைக்காலத்தில் கடம்புரிந்தருளினரென்பது,

(பி - ம்.) [1]'சிவமாவராவராணையால்' [2]'முன்வழி'

**வெள்ளியம்பலம். வேறு.**

மருமலர யன்மா லேத்த மதுரைமா தேவி வாழ்த்தப்
பரவரு முனிவர் [1]போற்றப் பதஞ்சலி முனிவன் காணப்
[2]பொருவருங் கடவுண் முன்னம் பொன்னினம் பலத்து ளாடு
மரு[3]நடம் புரிந்த வெள்ளி யம்பலம் போற்றி போற்றி. (கரு)

**கான்மாறியாடியவர்.**

கதிதரு மறைகள் பாடக் கருணைமெய் காட்டித் தென்னன்
துதிசெய [4]வாருங் காணச் சோதிநின் றதிர வீசித்
திதமுறு மதுரை யந்தண் [5]சிற்பர வெளியாந் தொல்லைப்
பொதுவினுண் மாறியாடும் பூங்கழல் போற்றி போற்றி. (கசு)

**விநாயகர்.**

குறைவற வடசொற் சொல்லுங் கதைதமிழ்க் கொத்தி னாலே
நிறைவுற நடத்து தற்கு நீள்பனைத் தடக்கை வெற்றிச்
சிறுபதப் பெருவயிற்றுச் செக்கர்முக் கட்க ளிற்றை
யுறவுற விதயகூடத் துரியபா சத்தாற் சேர்ப்பாம். (கஎ)

**முருகக்கடவுள்.**

விடங்கரு மடங்க லென்ன விண்ணவ ரெண்ண நந்தத்
தொடர்ந்தமர் கடந்த சீற்றச் சூருடல் பிளந்த வேந்த

---

கடம்பவனபுராணமுதலிய நூல்களிற் கண்டவரலாறு; இஃது இந்நூலிற் பரக்கக்காணப்படும்; "நாடிரு முனிவர்க்கு ஆடிய பெருமான்", "கூடன்மா நகராடிய வமுதை", "பூதந்துள்ளப் பேய்கள் மறிப்ப, வெங்குளவுயிரு மின்பநிறைத் தாட, நாடகவிதியோ டாடிய பெருமான்" (கல். கக, உ0, உரு) என்பவற்றாலுமுணர்க.

கரு. மதுரைமாதேவி - தடாதகைப்பிராட்டியார்; மதுராபதித்தெய்வமுமாம். பதஞ்சலிமுனிவர்க்காக நடம்புரிந்ததை, "வந்தபதஞ் சலிக்குநடஞ் செய்தவாறும்" (பதி. க.) என்பதனாலும், ரு-ஆம் திருவிளையாடலாலுமுணர்க; "பதஞ்சலிக் கருளிய பரமநாடக" (திருவா. கீர்த்தி. கங அ.)

கசு. மறைகள் பாட: "அருமறைநாதம்பாட" (ரு௨: கசு.) சோதி - சிவபெருமான்; எழுவாய். திதம் - நிலை. அதிரவீசி ஆடுமென்க; ரு௨: க௨, உரு; "அதிரவீசி யாடுவாய்" (தே.)

கஎ. வடசொலென்றது, உத்தரமா புராணத்துள்ள சாரசமுச்சயமென்னும் பகுதியை; க: ருரு. தமிழ்க்கொத்து - தமிழ்ச்செய்யுட்களின் தொகுதி; தமிழ்நூல்களின் தொகுதியுமாம்; "செழுந்தமிழ்க்கொத்தறிவிக்க வல்லாரில்லை" (கஅ: எ); "கோக்குந தமிழ்க்கொத் தனைத்தும்வாழ்க" (தக்கயாக. இறுதித் தாழிசை.) பாசம் - அன்பு, கயிறு.

கஅ. மடங்கல் - யமன். என்னத்தொடர்ந்து. சூர் - சூரபன்மன்; கடம்பமர் கந்தனென இயைக்க சிவலிங்கப்பெருமானுக்குரிய ஸ்தலவிருக்ஷத்தை அத்தலத்துள்ள முருகக்கடவுளுக்கும் உரியதாகக் கூறுதல் மரபாதலின், 'கடம்பமர்...கந்தனை' என்றார்; ஸ்ரீஏகாம்பரமூர்த்திக்குரிய மாமரத்தை, "மாவடி வைகுஞ் செவ்வேள்" என முருகப்பிரானுக்கும் கூறியிருத்தல் காண்க; அன்றி,

(பி - ம்.) 1 'போற்றும்பதஞ்' 2 'பொருவரு மமரர் சூழப் பொன்னின்' 3 'நடம்புரியும்' 4 'யாருங்காணச்' 5 'சிற்பரவொளி'

வுடம்பிடிப் படைத்த டக்கை யுத்தம மயூர வூர்திக்
கடம்பமர் மன்றற் றெரங்கற் கந்தனைச் சிந்தை செய்வாம். (கஅ)

## உக்கிரப்பெருவழுதியார். வேறு.

தாரார் நிம்பத் தொடையிலங்கச் சசிமா மரபு தனில்வந்து
பாரார் பெருவாழ் வுறத்தெய்வப் பாண்டிய னென்று முடிசூடிப்
பேரா தரவா லரசாளும் [1]பெருமான் றிருமா மகவாய்முச்
சீரார் சங்கத் தமிழாய்ந்த தென்னன் பொன்னங் கழல்போற்றி. (கக)

## கலைமகள். வேறு.

புத்தக மக்க மாலை வராபயம் பொருந்து கையாண்
முத்தணி யணிவாள் வெள்ளை முளரியா சனத்தாண் மண்ணிற்
சத்தமோ டத்தங் கண்ட தவளமெய் வாணி வேதா
வுத்தம மனைவி வெண்டோ சுடையடா ளிணைகள் போற்றி. (உ௦)

## சைவசமயாசாரியர் முதலியோர்.

படிபுகழ் சண்பை வேந்தர் மலரடி போற்றி பத்தி
வடிவுடை யியறோர் நாவுக் கரசடி போற்றி மாலை
முடிகொள்சுந் தரர்தாள் போற்றி மூதுரை வாத வூர
ரடியிணை போற்றி [2]மறறோங் கடியவ ரடிகள் போற்றி. (உக)

## நாற்பத்தெண்ணாயிரமுனிவர்.

பலந்தரு தவத்தான் மிக்கோர் பத்திவை ராக்கி யத்தோர்
புலங்களுங் கடந்தோ ரீசன் றனையலாற் [3]போற்ற லில்லோர்

---

"கடம்பமர் செல்வன்" (பரி. அ: கஉ௬) எனத் திருப்பரங்குன்றத்துச் செவ்வேள் கூறப்பட்டிருத்தலால், இத்துதி அவரைச்சார்ந்ததென்றலுமாம்; இயல்பாகவே கடம்பின் அடியில அவர் எழுந்தருளியிருப்பதாகக் கூறுதல் மரபாதலின், பொதுமைபற்றிக் கூறிருரனலுமாம்; "சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்" (முருகு. உஉ௬), "கடம்பமர் நெடுவேள்" (பெரும்பாண். எரு) என்பவற்றாலுணர்க.

கக. பாரார் - பூமியிலுள்ளார். இங்கே, 'தெய்வப்பாண்டியன்' என்றது போல, "தெய்வவான்வழுதி" என்பர் பின்னும் (௬: ௪.)

உ௦. அக்கமாலை - உருத்திராக்கமாலை; "அக்கமாலை கொடங்கையிலெண்ணுவார்" (தேவாரம்.) வராபயம்-வரமும் அபயமும். கண்ட-செய்த, அறிந்த.

உஉ. சரியையாதி நான்குமார்க்கம் - சரியை, கிரியை, யோகம், ஞானம். நாற்பத்தெண்ணாயிரவரென்னும் பெயர், தில்லைமூவாயிரவர், திருப்பெருந்துறை முந்நூற்றுவர், திருவீழிமிழலை ஐஞ்ஞூற்றுவரென்பதுபோன்ற குழூஉப்பெயரென்றும், இவர்கள் இத்தலத்திலும் சிதம்பரம், காஞ்சிபுரம், திருக்காளத்தி, திருப்பூவணமுதலிய தலங்களிலும் திருத்தொண்டுபுரிந்து எழுந்தருளியிருந்த சைவசேசச் செல்வர்களென்றும் தெரிகின்றன; "எதிரின்றிய நாற்பத்தெண்ணாயிரரும்" (திருவானைக்காவுலா, கருக); "எப்பற்றுந் தீர்நாற்பத் தெண்ணாயிரவரெனும், ஒப்பற்ற வேடத் துயர்ந்தோரும்" (திருப்பூவணநாதருலா,

(பி - ம்.) [1]'பெருமாடருமா' [2]'மற்றுங்கடியவர்' [3]'போற்றலில்லோர்'

நலந்திகழ் சரியை யாதி நான்குமார்க் கத்தோர் நீற்று
விலங்கிய நாற்பத் தெண்ணு யிரவர்தாள் போற்றி போற்றி. (உஉ)

**ஆசிரியர்.**

வாந்தருந் தொல்லைத் தில்லை மாளிகை மடத்து மன்னு
[1] மருந்தவ முனிவெண் காட னருள்விநா யகன்ம னத்தாற்
பரிந்தெனை யாண்டு கொண்ட படர்சடைக் கடவு ணீதி
திருந்திய பரம ஞான சிவனடி சென்னி சேர்ப்பாம். (உ௩)

## அவையடக்கம்.

அளந்தபே ரறிவி னோங்கு மாசிலா சிரியர் முன்னந்
தளர்ந்தசிற் றறிவே னின்று தமிழ்க்கவி சாற்று மாறு
வளர்ந்தநீள் புவன முற்றும் வந்தபே ரிருளை யோட்டி
விளங்கிய பருதி முன்னர் மின்மினி விளங்கல் போலும். (க)

அவைநடு வோங்குந் தெய்வ வகத்தியன் முன்னஞ் சொன்ன
கவிபொதி கதையை யானுந் தமிழ்செய்வே னென்கை காணிற்
புவிமிசை விசும்பி னீடும் பொருப்பிடை முடவ னேறிச்
சுவைதரு தேனை யுண்ண வெண்ணுவான் றுணிதல் போலும். (உ)

வேறு.

ஏய [2]பத்தி முனிவ னியம்பிய
சேய சொக்கன் றிருவிளை யாடலைக்
காய்ப சிக்குக் கடலைக் குடிக்குமோர்
நாயை யொக்குந் தமியே னவிலுதல். (௩)

ஓது பாலர் மழலை யுரையையுந்
தாதை தாயர் [3]தயாவுறக் கேட்டெனப்
பேதை யேன்புன் மொழிபெரு மான்புக
ழாத லானல் லறிஞர் வியப்பரே. (௪)

ஆகத்திருவிருத்தம் - ௩௧.

---

௬0) என்பவற்றாலு முணர்க; இவர் நாற்பத்தெண்ணாயிர மாகேசரென்றும் கூறப்பெறுவர்.

உ௩. கடவுள் - முனிவன்.

**அவையடக்கம்.**

உ. தெய்வஅகத்தியன் - தெய்வமுனிவராகிய அகத்தியர்; "அமர முனிவ னகத்தியன்" (மணி: பதிகம், கக; உஉ: ௩௫.)

௩. முனிவன் - அகத்தியர். தமியேன் நவிலுதல் கடல்குடிக்கும் ஒரு நாயை யொக்குமென்க: "ஒருசுணங்கனை யொக்குந் தகைமையேன்" (பெரிய. அவை.) என்றார்.

(பி - ம்.) [1]'அருந்தமிழ்முனி' [2]'புத்திமுனிவர்' [3]'தயாவுறக்கண்டனம்'

# [1]பதிகம்.

இந்திரன்வெம் பழிவிடப்பூ சித்த வாறு மிறைஞ்சமிரா வதசாபந் தீர்ந்த வாறு, மூந்துலகாண் மும்முலையாள் பிறந்த வாறு முடிசூடி மணந்துபா ராண்ட வாறும், வந்தபதஞ் சலிக்குநடஞ் செய்த வாறும் வயப்பூதஞ் சொன்றிமலை தொலைத்த வாறு, முந்தியுறு பசிக்கன்னக் குழிகள் காட்டி யுதகத்துக் கியல்வைகை யழைத்த வாறும். (௧)

உன்னருமேழ் கடலழைத்த வாறு மாமி யுடனுடை மாமனைமண்ணழைத்த வாறு,மன்னுசடை யுக்கிரனார் பிறந்த வாறும் [2]வளையொடுவேல் செண்டளித்து மறைந்த வாறுந், தென்னன்மா டக்கூட லான வாறுஞ் சிலமலி சித்தரா யுலாவு மாறு, [3]முன்னோர்கல் லிபங்கரும்பு வாங்கு மாறு [4]மொழியறிசங் கப்பலகை கொடுத்த வாறும். (௨)

மறுவறுபொற் கிழியறுத்த வாறுங் கீரன் வருந்தாமல் வந்து கரை யேற்று மாறுங், குறுமுனிக்குத் [5]தமிழ்நோக்கா லுரைத்த வாறுங் கூறுபொரு ளுரை[6]யூம னுணர்ந்த வாறுங், கறுவியிடைக் காடன்பின் போன வாறுங் கடல்சுவற வுக்கிரன்வே லெறிந்த வாறு, மெறிகடல்வாய் வலைவீசி மணந்த வாறு மியல்வணிக னுய்வளையல் விற்ற வாறும். (௩)

---

௧. பூதம்-குண்டோதரன். உந்தி-வயிறு. அன்னக்குழிகள் நான்கு: எ; ௩.

௨. சடைஉக்கிரனார் - சடையையுடைய உக்கிரப்பெருவழுதியார்; ௧௦: ௩; "நெடுஞ்சடை யுக்கிரற் பயந்தருணிமலன்" (கல். எ௮.) செண்டு- ஒருவகை ஆயுதம்; இஃது ஐயனார் திருக்கரத்திலுள்ளது; "செம்பொற்கிரிதிரித்தசெண்டு" (சிலப். ௫: ௧௫-௮, மேற்.) "செண்டு கொண்டுகரி காலனொரு காலிலிமையச், சிமைய மால்வரை திரித்தருளி" (கலிங்க.இராச.௧),"மால்வரையைப் பண்டொருகாற் செண்டாற் றிரித்தகோ லிங்கிருந்தச்சய்" (நள.சுயம். ௧௩௫),"செண்டு தரித்தோன் திருப்பவளத் தாரமுதம்" (வி. பாரதம், இராச. ௮௦.) "செண்டா லவள்பைங் குழல்பற்றி" (ஷை-சூத. ௨௧௧) என்பவற்றாலுணர்க; இதனைத் திருக்கரத்திற் கொண்டிருத்தல்பற்றி இராசமன்னார்கோயிற் பெருமானது திருநாமம் செண்டலங்காரரென வழங்குகின்றது. கல்லிபம் - கல்லானை. மொழியறிசங்கப்பலகை; "பாவறிசங்கப்பலகை" என்பர் பின்னும்; ௧௫: ௨.

௩. கீரன் - நக்கீரர். நோக்கா லுரைத்தல் - பார்வையால் உபதேசித்தல்; "திருநோக்கா லுபதேசித்து", "பார்வையினா லுபதேசஞ் செய்தபின்னர்" ௧௮: எ, ௯. ஊமன் - உருத்திரசன்மனார்.

(பி - ம்.) [1]'திருவிளையாடற்றொகை' [2]'வளைசெண்டு வேல்கொடுத்துமறைந்தவாறும்' [3]'முன்னர்க்கல்லிபங்' [4]'மொழிந்தறிசங்கப்பலகை' [5]'தமிழ்வர்க்கு முரைத்த' [5]'ஊமனுரைத்த'

திருக்கடையை விடைக்குறியிட் டடைத்த வாறுஞ் செட்டி யாய் மாணிக்கம் விற்ற வாறும், [1]வருத்தவரும் வாரணத்தை யெய்த வாறும் வாதவூ ரர்க்குபதே சித்த வாறுங், கரக்குமின நரியைமா வாக்கு மாறுங் காவலுறு பரியைநரி யாக்கு மாறும், விருப்பினடி [2]யுண்டுயர்மண் சுமந்த வாறும் விருத்தனிளை யோன்பால னான வாறும்.

தார்வேந்தன் றொழுமாறி யாடு மாறுஞ் [3]சார்ந்தபடு பழியஞ்சி யாய்ந்த வாறுந், தீராவன் பாதகங்க டீர்த்த வாறுந் திறலுடையோ னுடனங்கம் வெட்டு மாறுங், காராரு [4]நாகமலை செய்து விட்ட கடு மதுர மாக்கிநகர் மதுரையாக்கிப், போரேற்றைப் பசுவைமலை செய்த வாறும் [5]பூழியனு ருடல்வெப்பந் தீர்த்த வாறும். (௫)

பாலகனால் வலியசமண் குண்டர் மாளப் பாண்டியன்மு னீண்ட கழு வேற்று மாறுஞ், சிலமுறு படைமெய்க்காட் டிட்ட வாறுஞ் சேர் ந்துலவாக் கிழிவேந்தற் கீந்த வாறு, மேல்வணிகன் மாமனாய் வந்த வாறும் வியந்தட்ட மாசித்தி பகர்ந்த வாறுஞ், சாலுறுதண் ணீர்ப் பந்தர் சமர்க்க ளத்துத் தற்பணிந்த கொற்றவற்கு வைத்த வாறும். ()

மின்னணி[6]யா ரம்பூண விந்திரன்றன் மேன்முடிமேல் வளைசா ட மிக்க மேக,மன்னவரைப் பிடித்துவிலங் கிடச்சிறந்த மாறனுக்கே சார்வாகி நின்ற வாறும், பொன்னனையா டனக்கருளு மாறுஞ் சோழன் பொன்றக்கொண் டாழிக்கட் டாழ்த்த வாறு, மன்னுநகர் திருநடுவூர் திருமு டங்கல் வாலவா யாலவா யான வாறும். (எ)

வரகுணற்குப் பிரமகத்தி யொழித்து மண்மேல் வரவழைத்துச் சிவலோகங் காட்டு மாறும், பொருபடையுள் விடைக்குறியம் பெய்த வாறும் புக்கிலுல வாக்கோட்டை வைத்த வாறு,மரசுரிமை மூர்த்திக்கு

---

௪. விடைகுறி - ரிஷபமுத்திரை. வாரணம் - யானை.

௫. நாகம் மலைசெய்து-பாம்பை மலையாகச்செய்து; ௩௬: ௧௬. கடு-விடம்.

௬. பாலகன் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். மேல் - அதன்பின். சால் - பாண்டவிசேடம்; மிகுதியுமாம். தற்பணிந்த - தன்னைப்பணிந்த.

எ. மேகமன்னவர்நால்வர்: ௧உ: ௪; ௪௪: ௩௬, ௩௧. கொண்டாழி - மதுரையின் மேற்கேயுள்ளதோர் ஓடை; கொண்டு ஆழ்த்தியதென்பது பொருள்; ௪௬: உ௫, உஎ; "மண்டிருவேட்டுப் பஞ்சவற் பொருத, கிள்ளியுங் கிளையுங் கிளர்படை நான்குந், திண்மையுஞ் செருக்குந் தேற்றமும் பொன்றிட, வெரிவா யுரக சிருணட் டுருவக், குலைக்கொண் டாழி குறியுடன் படைத்து, மதியப்புதைத்த ம,லக்கெழு பெருமான்" (கல். அ௩.) நகர்-மதுரை; எழுவாய். திருநடுவூர்: ௪எ: ௩. திருமுடங்கல்: ஷை ௧௪. வாலவாய், ஆலவாய்: ஷை ௧௧.

அ. புக்கில் - வீடு. மூர்த்தி-மூர்த்திநாயனார். புலவர் - நாரியார், நாரியார். பகுத்துகொள்ளல் - பங்கிட்டுக்கொள்ளல்; ௩0: ௩0; ௫உ: ௧உ. புல்வாய்-மான்; "புல்வாய் புலியின் முலையுண்ணும்" (திருநாட்டுச். ௩.) இவ்வருமைச்

(பி - ம்.) [1]'வருத்திவரும்' [2]'உண்டுமண்' [3]'சார்ந்தபழியஞ்சியாய்வந்த' [4]'நாகமலையெய்து', 'நாகமலையேவி' [5]'பூழியன்றன்' [6]'ஆரம்பூணு விந்திரன்றன் வின்முடி'

நல்கு மாறு மரும்புலவர் பாப்பகுந்து கொண்ட வாறும், வெருவுபுலி முலைபுல்வாய்க் கீந்த வாறும் விறகாளாய்ச் சாதாரி பாடு மாறும். (அ)

பரிந்துதிரு முகஞ்சேரற் கீந்த வாறும் பாணனார்க் குயர்பலகை யிட்ட வாறுங், [1]காந்திருந்தே யிசைவாது வென்ற வாறுங் [2]கருணை யுற்றுப் பன்றித்தா யான வாறுந், [3]திருந்துமரிக் குருளைகளி ராறு மோங்கத் திறலுடைய வன்னியர்க ளாக்கு மாறும், பொருந்துவலி [4]கரிக்குருவிக் கீந்த வாறும் பொன்வரையிற் கயல்செண்டு பொறித்த வாறும். (௯)

சிவனடியேன் னியுங்கிணறும் [5]வணிகன் முல்லைத் தேவிக்குச் சான்றழைத்துக் காட்டு மாறு, [6]நவமுறமீ னயிலாம லேத்தும் பத்தி நாரைக்குச் சிவலோகங் கொடுத்த வாறுந், [7]தவமுறுகண் ணுவன்முதலா முனிவர் வேண்டச் சார்ந்தகலி யுகத்திறந்த வேத முற்று, மூவகையுற வரு [8]கிருத யுகத்தா திக்க னுணர்த்தியவா றுஞ் சிறியே னுரைக்க லுற்றேன். (௰)

### பதிகமுத னினைப்புச்செய்யுள். வேறு.

இந்திர னுன்ன ரும்பி னியைமறு திருதார் பால
வந்தமின் னணியா ரம்பூ வரபரி சிவனெ டென்றே
சுந்தரன் விளையா டற்குச் சொல்லிய தமிழ்ப்பொ ழிப்பா
முந்திய கவிபத் திற்கு முதனினைப் புணர்த்தி னேனால். (கக)

ஆகத்திருவிருத்தம் - சஉ.

---

சரிதம், "புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி" (திருவா. போற்றி.) என்பதனாலும், "தழல்விழிப் பேழ்வாய்த் தரக்கின் றுளிமுலை, பைங்கட் புல்வாய் பாலுணக் கண்ட, வருணிறை பெருமான்" (கல். சஉ) என்பதனாலும், "பொன் னெயிற் கடம்ப வனத்தபுல் வாய்க்குப் புலிமுலை யளித்தபுண் ணியம்போல்" (திருக்காளத்தி.பரத்து. ௫௯) என்பதனாலும்பாராட்டப்பெற்றிருத்தல்காண்க.

௯. சேரன் - சேரமான் பெருமாள் நாயனார். பாணனார் - பாணபத்திரர். பன்றித்தாய் - பன்றிக்குட்டிகளுக்குத் தாய். வன்னியர்கள் - சேனைத்தலைவர் கள்; மந்திரிகள்; சிற்றரசர்களென்னும் பொருளிலும் வழங்கும் (ஞான. அயி சத. எ); "கருமுகிற் கனிநிறத் தழற்கட் பிறையெயிற், றரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச், செங்கோன் முளையிட் டருணீர் தேக்கிக், கொலை களவென்னும் படர்களை கட்டுத், தீப்பட ராணை வேலி கோலித், தருமப் பெரும்பயி ருலகுபெற விளைக்கு, காற்படை வன்னிய ராக்கிய பெருமான்" (கல். ச௦.) பொறித்தல்- எழுதுதல்; "கயலொடு செண்டுங் தீட்டி" என்பர்பின்னும்; சுக: கஎ.

க௦. முல்லை-கற்பு; "தானுடை முல்லை யெல்லாந் தாதுகப் பறித்திட் டானே" (சீவக. சுஅசு.)

கக. பொழிப்பெனினும் பதிகமெனினும் தொகையெனினுமொக்கும்.

(பி - ம்.) [1]'காந்திருந்தேழிசை' [2]'கருணையுறுபன்றித்' [3]'திருத்தேனக்கு ருளை' [4]'கருக்குருவிக்கு' [5]'வணிகர்முல்லை' [6]'நவமுறுமீன்' [7]'தவமுதல்' [8]'இரே தாயுகத்தாதிக்கணுயர்த்திய'

# நூல்வரலாறு.

கருத்தினை முடிக்குங் கங்கைத் துறை[1]மணி கன்னி கைக்கண்
மருத்திகழ் மலர்த்த டஞ்சூழ் வளமைசேர் வார ணாசிப்
புரத்தம ரகில நாதன் புண்ணிய மூர்த்தி யென்றன்
சிரத்தினிற் கரம்வைத் தாண்ட சேவகன் றிருமுன் முன்னம். (க)

மேதகு சமதக் கியன் பராசரன் விசுவா மித்ரன்
சாதுநா ரதன்றுர் வாசன் சனகாதி பிருகு வத்ரி
கோதமன் பரத்து வாசன் கோசிகன் காசி பன்கோ
மூதுரை வசிட்டன் முன்னா முனிவர்யா வருந்தி ரண்டார். (உ)

பூமிதெற் குயரா வண்ணம் பொதியிலி லிருக்க வல்லான்
பாமுழு துணர்ந்தோ னேழு பரவையைக் குறிய கையா
[2]லோமுறை யிருக்கா லள்ளி யொருக்காலா சமித்தோ னங்க
ணாமதி வல்லோன் றொல்லை யகத்திய னென்பான் வந்தான். (ங)

ஆங்கவன் றன்னைமிக்க வருந்தவ முனிவர் யாரு
மோங்குமா சனத்தி ருத்தி யுயருப சார நல்கித்
தேங்கமழ் தாமஞ் சூட்டிச் சிறந்தபூ சனைகள் செய்து
தாங்கரு முவகை யோடுந் துதி செய்து தாழ்ந்து சொல்வார். (ச)

---

க. மணி கன்னிகை - கங்காநதியிலுள்ள கட்டங்களுள் ஒன்று; இது மணிகன்றிகை யெனவும் வழங்கும் (கந்த. மார்க்கண்டே. உ௬0, பார்க்க.) வாரணாசிப்புரம் - காசி; காரணப்பெயர். அகிலநாதன் - விசுவநாதர். ஆசிரியரைச் சிவமாகப்பாவிக்க வேண்டுவது மரபாதலின், 'என்றன் சிரத்தினிற் கரம்வைத் தாண்ட சேவகன்' என்றார். முன்னம் - முற்காலத்தில்.

உ. சனகாதி - சனகர்முதலியோர். கோ - தலைமை.

ங. ஒருக்கால் - ஒருமுறை; "படுவழி நினைக்கொ ருக்காற் பலித்தது கொண்டு" (ஙஅ: கஉ); சிதம்பரபுராணம். தன்மத. கஎ, பார்க்க.

உ - ங. 'முனிவர் யாவருந் திரண்டார்' எனவே அகத்தியருடைய வரவும் அடங்குமாயினும் தலைமைதோன்ற வேறுகூறினார்; இங்ஙனங்கூறுதல் மரபு; 'முனிவர் வந்தார் அகத்தியனும் வந்தான்' (தொல். பா. விரு.) என்பதனாலு முணர்க.

(பி - ம்) 1 'மணிக்கன்னிகை' 2 'ஓமுற'

[1] முன்புயிர்த் துன்பந் தீர முதல்வனை மலயக் குன்றி
லன்புற விருத்தி நாளு மருச்சனை புரியப் பெற்றாய்
தென்புவி விசேட மின்போற் [2]றெரிதர வல்லா ரில்லை
[3]நன்புற வறிவா யாங்க ளவில்வதொன் றுண்டு கேண்மோ. (ரு)

நலந்தருங் கங்கை முன்னா நதிகளின் கரைக்கண் மிக்க
பலந்தரும் [4]பெரியதான வைபவம் பலவுஞ் சொற்றாய்
வலந்தருந் தென்னா னாட்டு வைகைமா நதியின் பாங்கர்த்
[5] தலந்தரும் புகழ்வி ளக்கந் தரு[6]சிவ தலங்க டம்முள். (சு)

சுந்தர மாக வாங்குச் சொல்லுமொண் டானத் திங்க
ணந்தமில் புகழான் மிக்க வருள்வடி விறைவன் செய்த
[7] சிந்தைகூ ரவதா னத்தின் றிறங்களைப் பிறங்க வின்று
[8] முந்தைமா மலய மன்னு முனிவநீ நவிற்றி யென்ன. (எ)

வேறு.

ஆங்கினிய மந்திரத்துக் காருயிராம் பிரண வம்போ
லோங்கவனி மாமடந்தைக் குயிரதுதென் னவனாடு
வாங்கருஞ்[9]சீ ரந்நாட்டு வளஞ் சிறிது கேண்மின்கள்
பாங்குடையீர் வினவியவா றழகிதென [10]முனிபகர்வான். (அ)

ஆகத்திருவிருத்தம் - ருo.

---

ரு. முதல்வன் - சிவபெருமான். மலயகுன்று - பொதியில்மலை; இது வைப்புத்தலங்களுள் ஒன்று; "கயிலையும் பொதியிலு மிடமென வுடையார்", "பொதியிலானே பூவணத்தாய்" (தே.) நன்பு-நன்மை; க௱: கஉ; ௬எ: க; "நன்புற கல்லூர்ப் பெருமணம்" (தே.); "நன்புருகி ஞானச் சுடர்விளக் கேற்றினேன்" (திவ்.)

சு. தானவைபவம் - தலவிசேடம்; தானம் - ஸ்தானம். வைகை - வேகவதி யென்பதன் மரூஉ; வையை யெனவும் வழங்கும்.

எ. சுந்தரமாக ஆங்குச் சொலலும் ஒண்தானம் - ஸுந்தரக்ஷேத்திரம். அவதானம்=அடதானம் - திருவிளையாடல்; வடமொழி; "சுந்தர னவதா னங்கள்" என்பர்பின்னும்; ௬o: ருசு.

(பி - ம்.) 1 'முன்புவித்துயரக' 2 'தெரிதரவறிவாரில்லை' 3 'நன்குற' 4'பெரியதானம்' 5'தலம்புகழ்தரவிளக்கர்' 6 'சிவன்றலங்கள்' 7 'சிந்தைகூர்தருதானத்தின்', 'சிந்தைகூரபதானத்தின்' 8 'முந்திமா' 9 'சீர்நன்னாட்டுவளஞ்' 10 'முனிபகர்ந்தான்'

# திருநாட்டுச்சிறப்பு.

ஒருவிளை யாட்டி னுண்மை யொருவரா லுணரா ரேனும்
பெருவிளை யாட்டைந் தாடும் பிஞ்ஞகன் மதுரை மன்ன
னருள்விளை யாட்டி னோங்கி யமையறு பத்து நான்கு
திருவிளை யாட்டு நாட்டைச் செப்புவ லொப்பக் கேண்மின். (௧)

வேறு.

அடிக்குரிய தமிழ்த்தொடைக ளலர்க்குரிய கடிப்பொழில்க
ணடுக்குறுவ துகிற்கொடிக ணஞ்சுறுவ வஞ்சியர்கண்
குடிப்பமது மதுகரங்கள் கோடுவன நீடுசிலை
வடுப்படுவ வுடுப்படுமா வளைப்புறுவ நதிப்புதுநீர். (௨)

வேறு.

முருகன் சங்கத் திருப்பவனம் முக்கட் கடவு ணிற்பவன்வா
ளரசன் புயலை விலங்கிட்டோ னனலும் புனலு மியலறியும்
புரமு மதுர மானபுரம் புல்வாய் புலியின் முலையுண்ணு
நரியும் பரியா நதியிதழி மணக்குங் கன்னி நன்னாடு. (௩)

---

௧. மதுரைமன்னன் - சோமசுந்தரக்கடவுள்; ௪: ௫; ௬: ௭. விளையாட்டு ஐந்து - படைப்பு முதலிய ஐந்தொழில்கள். திருவிளையாட்டுநாட்டை - பாண்டி நாட்டின்வளத்தை ஒப்பச்செப்புவல்.

௨. அடி - அடிபடுதல், பாதம். அலர் - பழிமொழி, பூ. நடுக்கு - அஞ்சி நடுக்குதல், அசைதல். நஞ்சுறுவ - நைந்துறுவன, விடம்போல்வன. மது - கள், தேன். கோடுவன - நல்வழிதப்பிச்செல்வன, வளைவன. வடு - குற்றம், மாவடு. உடு - நக்ஷத்திரம். வளைப்புறுவ - தடுக்கப்படுவன, சூழ்வன. அடி முதலியவற்றை இந்த நாட்டுமனிதர்களினின்றும் நீக்கித்தமிழ்ச்செய்யுட்கள் முதலியவற்றிற் காட்டலால், இச்செய்யுள் ஒழித்துக்காட்டணி.

௩. முருகனென்றது உருத்திரசன்மரை. நம் முக்கட்கடவுள்; அவர் நின்றமை, "மூவர்கட் கரியா னிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப், பாவலர் வீற் றிருக்கும் பாண்டிநன் னாடு"(கடவுள். ௮) என்பதனாலும் அறியலாகும். வாளரசன் - உக்கிரகுலத்திற்பிறந்த பாண்டியன். நெருப்பும் நீரும் தமிழின் இயல றியுமென்பதை, "யாரறிவார் தமிழருமை யென்கின் றேனென் னறிவின மன்றேவுன் மதுரை மூதூர், நீரறியு நெருப்பறியும்" (மதுரைப்பதிற். ௪௫) என்பதனாலுமுணர்க; தேவாரம்வரைந்த ஏடுகள் முறையே நெருப்பில் வேவாததும் வையைநதியில் எதிர்த்தேறியதும் இங்கே அறியற்பாலன. புரமும் மதுரமானபுரம்: ௩௬: ௧௫. மான் புலியின் முலைப்பாலுண்ணுமென்றதை ௫௩-ஆம் திருவிளையாடலாலும், இந்நூற்பதிகம் ௮ - ஆம்பாடலின் குறிப்புரையாலு முணர்க. வையை, கங்கையாதலின், 'நதியிதழிமணக்கும்' என்றார்.

வேறு.

நலமுறு மொழிசேர் நல்ல பெருங்கிளை யென்று நாடித்
தலமிசை யுயர்கு லத்துச் சார்ந்துகண் காண மிக்க
குலவரை யிடத்துத் தோன்றிக் குவலய முழுதும் பெற்ற
நிலவிய மரக தஞ்சேர் நித்திலம் [1]பிறந்த நாடு. (ச)

தாரணி மவுலிக் கொற்றத் தசரதன் மகனார் வந்து
கூருகி ரெண்கு முன்னாக் குரக்கின வெள்ளங் கொண்டு
வாரிநீள் குலேப்ப டுத்தி வலியவா ளரக்கற் காய்ந்து
காரண வானை [2]யேத்தி யரும்பழி கழுவு நாடு. (ரு)

பரிபடுந் துறைநெ ருங்குங் குடிபடும் பதிமென் றென்றல்
வரைபடுங் கரும்பு சாலி வயல்படு மணியும் பொன்னுந்
நுரைபடுந் துங்கச் சங்கந் தமிழ்படுஞ் சார்ந்த செங்கட்
கரிபடுங் காடு வங்கக் கடல்படும் பவள முத்தம். (சு)

வேறு.

நாளும் புதுநீர்த் தமிழ்நதிப்பா னரந்த மஞ்ச ணெருங்கிஞ்சி
நீளுங் கருணை [3]தாண்முரியக் கதலி புதைய நெடுங்கமுகின்
பாளை பலவின் கனிதெங்கம் பழம்போய்ச் [4]சாடி வீழ்த்திளைய
வாளை யாளை விழப்பாயும் [5]வளைவெண் டாள வயலெங்கும். (எ)

வேறு.

நஞ்சளையஞ் சனச்செங்கட் கருங்குழல்வெண் ணகைமடவார்
பஞ்சளையுஞ் சீறடியிற் பண்ணளைநூ புரமேங்க
நெஞ்சளைபொற் பந்தளைகைச் சங்களைகம் பலைநீடு
மஞ்சளையிஞ் சியையளையும் வண்டலை [6]தண் டலையெங்கும். (அ)

---

ச. மொழி - சொல், கணு; "மொழியுமிளிர்" (அழகர்கலம்பகம், சுஎ.) கிளை - குலம், மூங்கில்; "பிறந்தே னலல கிளையிலே யெனம றைந்தான்" (உ:கக) கண்காணம்-மேல்விசாரிப்பு; "கண்காணியி னெடுத்து" என்பர்பின்; உஎ: உ0. குலவரை - இமயம். மரகதம் - உமாதேவியார். நித்திலம் - சிவபெருமான். நாடிப் பிறந்த வன்க. 'மரகதஞ்சேர்' என்றது, நித்திலத்திற்கு அடை; திருநெல்வேலியில இறைவன் மூங்கிலடியில் முளைத்ததுபற்றி அவர் திருநாமம் வேய்முத்தெனவழங்கும். இச்செய்யுள் சிலேடையணி.

ரு. குரங்கு இனம். குலே - கரை; சேது. வாள் - சந்திரவாள். அரக்கன் - இராவணன். காரணவானை - சிவபெருமானை; ச: உ0.

சு. துறை - கடற்றுறைகள். நெருங்குங்குடிப்பம்பதி: "அயலிடைவேறடி நெருங்கக் குடிநெருங்கி யுளதவ்வூர்" (பெரிய. திருநாளைப். ரு.) கடல்படும் பவளமுத்தம்: க.

எ. தமிழ்நதி - வையைநதி; "தமிழ்வையைத் தண்ணம்புனல்" (பரி. சு: சு0); "தமிழறிக்துவை திகமுடன் சைவமு நிறுத்தும், அமிழ்த வெண்டிரை வையை" (திருவிளை. நகரப். கஎ.) நரந்தம் - நரந்தப்புல். வளை - சங்கம்.

அ. பஞ்சு - செம்பஞ்சு. சங்கு - வளையல். வண்டு அலைகின்ற.

(பி - ம்.) 1 'பெற்ற' 2 'ஏத்தவரும்' 3 'தாண்முரித்து', 'தாண்முரிந்து' 4 'சாடிவீழ்ந்து' 5 'வளைவண்டானவயல்' 6 'தண்டலையளையும்'

வேறு.

அன்னந் திகழும் வயற்களத்து மலைநீர்ப் பொருனை நதிமுகத்தும்
பொன்னஞ் சங்கந் துகிர்முத்தம் படுவ தல்லாற் பொலிவோங்க
மின்னு நுசுப்புப் பாரவட மேரு முலைமங் கையர்களத்துந்
துன்னுங் கிரண மதிமுகத்தும் படுமொண் சங்கந் துகிர்முத்தம். (கூ)

வேறு.

ஏந்துதண் செழுநீர் வாவி யெழுந்தசெங் கழுநீர் விண்டு
[1]வார்ந்தகண் ணீராற் சேறு படும்பழ னங்கண் மாதர்
[2]சேந்தகுங் குமத்தின் விட்ட தெளிதரு பனிநீர் வெள்ளம்
பாய்ந்த[3]சந் தனத்தாற் சேறு படுந்தன மலைத்த டங்கள். (கO)

மொழிதருங் குயில்கள் சாய றருமட மயில்கண் மொய்க்கும்
பொழிறருங் கரைக்கண் டெண்ணீர்ப் பொய்கையுண் மாலைப் போது
முழுகுவான் செல்லு மாதர் முகத்தையுந் தனத்தை யுங்கண்
டழகுதோய் பதும நாணி யலர்வுறா குவிவு றுவால். (கக)

வேறு.

கானெருங்கும் வரை[4]வளங்க டருமென்றுங் கடிக்குறிஞ்சி
யானெருங்கு மினியவளந் தருமென்று மணிமுல்லை
வானெருங்கும் பொழில்வளங்க டருமென்றும் வயன்மருத
மீனெருங்குங் கடல்வளங்க டருமென்றும் வியனெய்தல். (கஉ)

அடுகுறவர் திறம்பெருகு மலர்குறிஞ்சி யானுயர்
குடிநெருங்கும் படர்முல்லை கொழுமள்ளர் குழுத்துவன்றுங்
கடிமருதம் விளையளவர் கணநிறையுங் கழிநெய்தல்
படைமறவர் [5]நிரம்புநெறி பரன்முரம்பு தரும்பாலை. (கங)

வேறு.

பண்டைநான் மறைக்கு மெட்டாப் பராபரன் மனிதர் போல
மண்டலத் திழிந்து வேந்தர் வல்லியை [6]மணந்து கோலி
னெண்டரும் புவன மூன்று மிருந்தர சாளக் கண்டூர்
தண்டமிழ்ப் பாண்டி நாட்டின் றகவுண்டோ மற்றோர் நாடு. (கச)

ஆகத்திருவிருத்தம் - கூச.

---

கூ. அன்னம் - அன்னப்பறவை. பொருனைநதி முகம் - கொற்கைத்துறை. பொன் - அழகு. களத்துச் சங்கமும் முகத்துத் துகிர்முத்தமும் படுமென இயைக்க; களம் - கழுத்து.

கO. கண்ணீர் - கள் நீர்.

கக. பொழில் தரும் - பொழிலைவளரச்செய்கின்ற. கரைக்கண செல்லு [மாதர்.

கங. ஆன் ஆயர். விளை அளவர் - முத்து விளைகின்ற அளத்தையுடையவர். பரல் முரம்பு - பருக்கைக்கல்லாலாகிய மேடு.

கச. வேந்தர்வல்லி - தடாதகைப்பிராட்டியார். ஆள - ஆளுதலால்.

(பி - ம்.) 1 'வாய்ந்தகண்ணீராற்' 2 'சேர்ந்த' 3 'சந்தனத்தண்சேறு' 4 'வளன்க டருவதென்றும்' 5 'நிரம்புநெறிப்பரன்' 6 'மணந்துகாணவெண்'

# திருநகரச்சிறப்பு.

மலரு மித்திரு நாட்டியல் வாணர்சொற் கோலா
[1]லுலக னைத்தையு நிறுப்பமுன் வாடிடா தோங்கு
மலகில் வண்புக ழுடையது மதுரையாங் கதனை
யிலக யான்சிறி தறிந்தவா றியம்புவல் கேண்மின். (க)

ஊர்தொ றும்பெருங் கம்பலை [2]யோங்கநீர் பரந்து
பார மீனுடு மீன்விழப் பாய்தரப் போதா
வாரம் வேங்கைகோங் ககிலெடுத் தினமணி கொழித்து
வாரி யெற்றிமுன் [3]மதிட்படை பொருவது வைகை. (உ)

வேறு.

புகறற் கரிய வேதத்தின் பொருள்கட் கெல்லாம் பயனுய
[4]பகர்தற் கினிய வெந்தைபிரான் பஞ்சாக் கரம்போற் றனையொவ்வா
மகரத் தமரப் பெருங்கடல்சூழ் வையத் தைந்து நிலத்தோங்கு
நகர்கட் கெல்லாம் பயனுய நகர்பஞ் சவன்றன் மதுரைநகர். (ங)

நீள வளர்பொற் கோபுரம்வா னிலவும் வெள்ளி யொளிமன்ற
நாளு மமரர் வாழுமுயர் மேரு வரையை நலத்தோங்குங்
காள நிலவு [5]மணிகண்டன் கயிலை மலையை நிகர்ப்பதலால்
வாள கிரியைப் புறக்கடலை நிகர்க்கு மெயிலும் வளைகிடங்கும். (ச)

---

க. நாட்டு - நாட்டில். இயலவாணர் - புலவர். வாடிடாது-குறையாமல்; "வாடாதவென்றி" (சீவக.பதி.உ.) நிறுத்ததை, "கைத்தல நான்கு" (திருவிளை. தலவி. உ0) என்பதனுலுமுணர்க. "உலக மொருநிறையாத் தானோர்நிறையாப், புலவர் புலக்கோலாற் றூக்க-உலகனைத்துக், தான்வாட வாடாத் தகைமைத்தே தென்னவ, னுன்மாடக் கூட னகர்" (பரி. பக். 174) என்பதன் பொருளை இச் செய்யுள் தழுவிவந்தது.

உ. பரந்து - பரக்கப்பெற்று. உடுமீன் - நக்ஷத்திரம். பாரமீன்பாயதர. போதா - போய். படை - சுவரும் மதிலும் சமைக்கப்படும்பொழுது அடியிலிருந்துமுறையாக இயற்றப்பெறும் ஒவ்வொருபகுதியின்பெயர்;"பல்படைப் புரிசை" (புறநா. 224); "படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே" (தே.),"வையைதன் னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார், போர் முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்" (கலி. கூஎ) என்பதனுலும் மதுரைமதில் வையையாற் பொரப்படுதல் உணரற்பாலது.

ங. ஒவ்வா - ஒத்து. ஐந்துநிலம் - குறிஞ்சிமுதலியன. ஐந்துநிலத்தையுமுடைய நாட்டிற்குத் தலைவனென்னும் பொருளதாகிய 'பஞ்சவன்' என்பதை இங்கேகூறியது ஆராய்தற்பாலது.

ச. வெள்ளி ஒளி மன்றம்-வெள்ளியம்பலம்; "கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில் வெள்ளியம்பலம்" (சிலப். பதி. ச0 - சக.)

(பி - ம்.) 1 'உலகனைத்தினுநிறுப்ப' 2 'ஓங்குநீர்' 3 'மதிற்படை' 4 'பகர்தற்கரிய' 5 'மணிக்கண்டன்'

சேமப் படுபொன் னகரென்னத் தெருவின் மடவார் விளையாடு
மேமச் சுண்ண நுண்டுகளா லிலங்கு நலங்கொ ணிலமெங்குந்
தாமப் புயலை மாறாடத் [1]தருமச் சுருதிப் பெருவேள்வி
யோமப் புகையு மகிற்புகையு மொழியா[2]வகல்வா னுழையெங்கும். (௫)

சுருதி யோசை முழவோசை சுகங்கள் பூவைக் கரும்பொருள்க
ளுரைசெ யோசை யியலிசைநா டோசை புழவ ருழவோசை
பொருவி லாலை பாயோசை பொழில்வா யலர்பாய் திமிரோசை
வரிசை மாதர் சிலம்போசை வளைநீ ரோசை தனின்மிகுமால். (௬)

வேறு.

தோரணவா யில்கள்விளங் குந்தொழுமன்ன ரிடுதிறைக
டோரணிவீ திகள்விளங்குந் திருமலிபல் விழாவளங்கள்
பூரணமா ளிகைவிளங்கும் பொலன்கொடிதோய் மணிக்குடங்க
டாரணிமே தலைவிளங்குந் தருமநெறி தருமநெறி. (௭)

ஊர்மடக்கு. கடம்பவனம்.

வாவிமருப் பங்கயமா மறுகுமருப் பங்கய மாந்
[3]தாவிவருங் கொண்டலையுந் தண்டலையுங் கொண்டலையும்
பூவையர்பொற் படமலையும் புணரிளைஞர் படமலையும்
பாவறிமாக் கடம்பவனம் படிபுகழ்மாக் கடம்பவனம். (௮)

கூடல் வேறு.

வயங்கொள்வார் சாலிச் சூடும் வளர்ந்துபோய் வானைச் சூடு
மியைந்த[4]மீ னாகத் தென்று மிலங்குமீ னாகத் தென்றும்

---

௫. மெச்சுண்ணம் - பொற்பொடி. சுண்ணமாகிய துகள். தாமம்-ஒழுங்கு. பொற்பொடியால, நலமிகும் பொன்னகரென்ன இலங்கும்; வானிடமெங்கும் புகைகள ஒழியா.

௬. அரும்பொருள்கள் - அரியநூற்பொருள்கள். வரிசை மாதர் - விறலியர் (பதிற். ௧௮-உரை.) வளைநீர் - கடல்.

௭. பொலன்கொடி - திருமகள்; பொற்கொடியுமாம். தருமநெறியானது தரும் அந்நெறியை; உலகினுக்கென ஒருசொல் வருவிக்க.

௮. வாவி மருப் பங்கயம் ஆம்-தடாகங்களில் மணத்தையுடைய தாமரைகள் உளவாகாநிற்கும்; மறுகு மருப்பு அம் கயம் ஆம் - வீதிகளில் தந்தங்களையுடைய அழகிய யானைகள உலாவாநிற்கும். கொண்டலை - மேகத்தை. தண்டலை - சோலை. கொண்டு அலையும். பொற்படத்தையுடைய மலை - கொங்கை; எழுவாய். படமலையும் - படுமடி பொராநிற்கும். பா அறி மாக்கள் தம் பவனம் - பாக்களை அறிகின்றபுலவர்களுடைய வீடாகவுள்ளது. உம்மைகள்: அசைநிலைப்பொருளன; வரும் செய்யுட்களிலுள்ளவற்றையும் இப்படியேகொள்க.

௯. சாலிச்சூடு - செந்நெலரி; "சூடுகோடாகப் பிறக்கி" (பொருந. ௨௪௩); "பீலிகழனியுழவர் சூட்டொடு தாகுக்கும்" (புறநா. ௬௧.) வான் - மேகம். மீனாகத்து என்றும் - மேலிடமாகிய ஆகாயத்திலுள்ள சூரியனும்; மீன் ஆக

(பி - ம்.) 1 'தருமச்சுருதி' 2 'அகலவானுலகெங்கும்' 3 'தாவிவருங்' 4 'மீனகத்தோன்றும்'

பயங்கொளா காயச் செல்லும் பாந்துகா வேறச் செல்லும்
வியந்தநான் மேகக் கூடல் விளங்குநான் மாடக் கூடல். (கூ)

மதுரை. வேறு.

தும்பைமலர்த் தொடைமுடிக்குஞ் சூரன்[1]வினைப் பகைமுடிக்கும்
வம்பலர்மட் டளையவிழும் [2]வண்டிறவுட் டளையவிழு
மம்புனற்கே கயமாடு மணிபொழிற்கே கயமாடு
[3]மெம்பெருமக் கடமதுரை யிலங்குமலர்க் கடமதுரை. (க0)

ஆலவாய். வேறு.

பாக மங்கய ளேக்கியார் [4]பரிவு மங்கய ளேக்கியார்
மோக நந்துற வன்பினன் முனிவர் நந்துற வன்பினன்
மாக மொன்றிய வாய்மையால் வந்தி லங்கிய வாய்மையா
லாக மம்பக ராலவா யமுத மன்திரு வாலவாய். (கக)

---

த்து என்றும் இலங்கும் - நக்ஷத்திரங்களினுடைய உருவத்தைப்போலவே எக்காலத்திலும் தோன்றா நிற்கும்; இந்நகரத்தின் ஒளிமிகுதிகூறியபடி. செல் - மேகம்; எழுவாய். காயநா செல்லும் - சோலையில் ஏறுதற்குப் போகாநிற்கும். நான்குமேகங்களின் கூடுதல் விளங்கப்பெற்ற நான்கு மாடங்களையுடைய கூடனகரத்தில்; "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" (மதுரை. சஉக.)

க0. சூரன்: சாதியொருமை; வினை பகை முடிக்கும்-போரையுடைய பகையைத் தொலைப்பான். வம்பு - புதுமை; மணமுமாம். மட்டு - தேன். தளை - கட்டு; மட்டை அளைதற்கு விரும்பவண்டுகள் உள்ளேயுற மலர்கள் தளையவிழும். புனற்கு கயம் ஆடும் - நீரி கண் யானைகள் முழுகி விளையாடாநிற்கும். கேகயம் - மயில். எம் பெருமக்கள் தமது - எம்முடைய பெரியோர்களது; உரை இலங்கும் மலர் கடம் மதுரை - உரைகள் விளங்குதற்கு இடமாகிய பூக்களையுடைய சோலைகள் சூழ்ந்தமதுரையில. பெருமக்கள் - சங்கப்புலவர்கள்; கூ: அ, கூ. உரை - செய்யுட்களுமாம்; ஆகுபெயர்.

கக. அயல் நோக்கி ஆர் மோகம் நந்துற - புறத்தேயுள்ள விடயங்களை நோக்குதலால் நிறைந்துள்ள ஆசையானதுகெட, அன்பின் நால் முனிவர் நந்துற - அன்பினையுடைய நான்கு முனிவர்கள் பெருக்கமுற, வன்பினனை - வன்பினொடு, மாகம் ஒன்றிய ஆயமையால்-பெருமைபொருந்திய நுண்ணிய பொருள்களாலும், வாய்மையால்- உண்மைப்பொருள்களாலும், இலங்கிய—, ஆகமம்-ஆகம நூற்பொருள்களை, வந்து பகர் - வந்து உபதேசித்த, ஆலம் வாய் அமுதம் மன்- வடவாலமரத்தின் கீழே எழுந்தருளிய சிவபெருமானது, திரு - செலவம், ஆலவாய் - ஆலவாயென்னும் திருப்படைவீடு; பாகம் அம் கயல் நோக்கியார்- அவருடைய பாகத்திலுள்ள அங்கயற்கண்ணம்மையினது, பரிவும் அங்கு-விருப்பமும் அத்தலத்தேதான். நான்முனிவர்-சனகர்முதலியோர். அமுதமன் - அமிர்தேசர்; மதுரேசர்; அமுதம் - முத்தி, அமிர்தம்; 'ஆலவாயமுதவாக்கன்', 'ஆலவாயமுதவாயான்' (கக:க; உஎ:க.) பரிவும்: உம்மைஇறந்தது தழுவியது. 'கயனேக்கியார் பரிவும்அங்கு' என்றது, இத்தலம் சத்திபீடமென்பதைப்புலப் படுத்தியது.

அ - கக: கடவுள். க0-கக.

(பி - ம்.) 1'வினைப்பயமுடிக்கும்' 2'வண்டுறவிட்டளையவிழும்' 3'எம்பெரு மாக்கடமதுரை' 4'பரிவினங்கயனேக்கியார்'

### கன்னி. வேறு.

ஈசனூர் மகிழ்ந்த தான மென[1]வினை யிருள்வா ராம
லாசினந் தாவி ளக்கிட் டந்தகன் றிசைநின் றேத்தித்
தேசுடைக் கருங்கண் முத்த வெண்ணகைச் செவ்வாய்ப் பச்சைக்
காய்சின மயிடற் காய்ந்த கன்னிமுன் காக்கு மூதூர். (கஉ)

### கரியமால்.

வினையவெம் [2]பாவ நீக்கும் பதியென நிலத்து ழிந்தாங்
கினமலி யரக்கற காய்ந்து குடதிசை யேத்தி நின்று
மணமுடை [3]வியாழத் தோடு மறைவழக் கன்று வென்ற
கனகவெண் சங்கச் செங்கைக் கரியமால் காக்கு மூதூர். (கங)

### காளி.

காரிய வுலகுக் கெல்லாங் காரண நகரென் றெண்ணிப்
பேரியல் வடபா லெல்லைப் பிறங்கவந் திருந்து போற்றித்
தாருகற் காய்ந்த சீர்த்தித் தலம்புகழ் வெற்றிக் கொற்றச்
சீருடைக் காளி நாமச் செல்விமுன் காக்கு மூதூர். (கச)

### * ஆலவாய்.

தொன்னில மாம டந்தை தோன்றுமு னெவர்க்கு முன்னந்
தன்னுறு திசைக்கட் டோன்று மாலவாய்த் தரும மூர்த்தி
யெந்நிலத் தினுமு யர்ந்த திந்நில மென்று தோன்ற
மன்னுமைக் குறைத்து மற்றை [4]மாதிரங் காக்கு மூதூர். (கரு)

---

கஉ. அந்தகன்றிசை - தென்றிசை. மயிடன் - மகிஷாசுரன்.

கங. குடதிசை-மேற்றிசை. கரியமால் - கரியமாணிக்கப் பெருமாள்.

கஉ - கங. "கன்னிசெங் கோட்டங் கரியோன் றிருவுறை,.........சூழ் கொள விருந்தகூடலெம் பெருமான்" (கல். கக.)

கச. செல்வியென்னும் பெயர் இக்காலத்துச் செல்லி, செல்லத்தம்மை யென்று வழங்கும்.

கரு. க-உ: "மேதினி தோன்று முன்னருஞ், செவ்வியின் முளைத்தெழுந்த திப்பிய விலிங்கம்" (க:கஅ); "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தே. திருநா.) தருமமூர்த்தி: "தருமநாயகன்" (அ: ரு.) தன்னுறுதிசை-ஈசானதிசை. மற்றைமாதிரம் - கிழக்குத்திசை.

கஉ-ரு. கன்னிமுதலியோர் இந்நகரத்தைக் காக்குந்தெய்வமென்பர்; "கன்னிமால் காளியீசன் காக்குமா நகர்" (ருங:கஅ); "கன்னி திருமால்காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" (பயன் முதலியன, ரு.) 'நான்மாடங்களாவன: கன்னி, கரியமால, காளி, ஆலவாய் என்பனவாம்' (கலி. கூஉ, ந. உரை.)

* 'ஆலவாய்' என்றது சிவபெருமானை.

(பி - ம்.) 1 'வினையிருள்' 2 'பாவநீக்கும்பதியென நினைத்திழிந்தாங்கு' 3 'வியாழத்தோடுமறைவழக்கன்று' 4 'மந்திரம்'

வேறு.

பூழி யகழ்ந்த குழி[1]கிரப்பும் புலவ ரமல னுடைமலேவோ
ராழி யேழு மொருதடத்தி லமரு மதுவோ [2]வுலகேழுஞ்
சூழு மூன்று மூலேயிருமை யொருபெண் பிறந்து சோதியுடன்
வாழு மதுரை வளங்கூற யாமார் மறந்து மாநிலத்தே. (கசு)

வேறு.

முன்னேயெண் டிசைக்க யங்க டாங்கிடு முதுபே ரண்ட
மன்னுமிந் திரனுர் சாத்தும் வானிழி விமான மாகுந்
தென்னவன் சிவனே யாகுஞ் சிவலோக மதுரை யாகு
முன்னரு [3]மனிதர் முற்றுங் கணங்களா [4]மோருங் காலே. (கஎ)

வேறு.

ஈனமிலா விங்கரி தன்னு ளெங்தை யிலங்குபுக ழறுபத்து நான்
குண் டோதின், மீனவர்கோன் [5]குலஞ்செய்த தவத்தி னுறு மேதினி
மான் முயன்றவருந் தவத்தி னுறு, ஞானமுனி வர்கள்கேண்மி னுக
மொன் றிற்கு நானுன்கு நானுன்கா நான்கு கத்து, மானவவை தமை
யுரைப்ப லநாதி மும்மை யகலாத வல்[6]வினைக ளகல வென்றே.(கஅ)

ஆகத்திருவிருத்தம் - அஉ.

---

# நூற்பயன்.

இனிமைசேர் பயன்வி ளம்பி னிவ்வவ னிக்கண் மிக்க
புனிதபங் கயமி ரண்டிற் புரிவுள மாந்த ருள்ளப்
பனிகொள்பங் கயத்தை மற்றைப் பங்கய மலர்த்து கின்ற
தினகரன் போல லர்த்துந் திருவிளை யாடற் பானு. (க)

---

கசு. பூழி - புழுதி; திருநீறு; ஒருதடம் - சிவதீர்த்தம். சிவதீர்த்தத்தில் எழுகடலடங்கியமை, "இததீர்த்த மாதடததி லிறையருளா னெழுகடலு மியைந்த" (கடம்பவன. ச: ருப) என்பதனாலுமுணர்க. அதுவோ - அம்மட்டோ. இருமை - பெருமை; "இருமைமும்மூலையிலொன்று" (ச: கஉ.) யாம் ஆர் - யாம் எத்தன்மையையுடையேம்; கூறுதற்கு வன்மையிலலேமென்றபடி.

கஎ. இச்செய்யுளின் முதலிரண்டடியின்கருத்து, "மணிகொண்ட" (மீனுட்சி.காப்பு,க) என்பதனாலும் விளங்கும். "திகழ்பூவுலகிற் சிவலோக மென்னப், பகர்கூட லாலவாய்" (பூவணவுலா, உகூஅ) என்பர்.

கஅ. புகழ் - திருவிளையாடல். 'மேதினி......தவத்தினுனும்': "என்ன புண்ணியஞ்செய்ததிம்மண்" (க: கக.) அகலாத மும்மைவினை - சஞ்சிதம், பிராரத்துவம் ஆகாமியம். ஆன: முற்று.

நூற்பயன்.

க. திருவிளையாடற் பானு - திருவிளையாடலாகிய சூரியன்.

(பி - ம்.) 1 'கிரம்பப்புலவர்' 2 'உலகெங்குஞ்' 3 'மனிதர்தாமுன்' 4 'ஒருங்குங்காலே' 5 'குலமுன்செய் தவத்தினுனும்' 6 'வினைகளகலுமாதோ'

### வேறு.

தருமம் வாய்மை தவங்குலங் கல்விசேர்
பெருமை செல்வந் திறம்பிற வாநெறி
யரிய புத்தி யருள்சிவ பத்திமற்
றுரிய யாவையு மெய்துவ ருண்மையால். (உ)

கருதா காதல ரெய்துவர் கன்னியர்
சுருதி மைந்தர்ப் பெறுவர்கள் சூலியர்
வருபி றப்பி [1]னமங்கல மங்கைய
ரருள்ப டைத்த சுமங்கலை யாவர்கள். (ஙூ)

காரி ருட்டிடி துங்கிமித் தங்கடல்
வாரி வெய்ய கலுழ்வழுன் [2]மாமருத்
தோரை நாட்டிறி வார [3]முடறகுறை
[4]சோரர் வஞ்சனை நஞ்சல கைச்சுழல். (ச)

உழுவை வேழ மரியுர காதிகள்
வழியின் வெவ்விடை யூறுமற் றென்செயுஞ்
செழியர் நாதர் திருவிளை யாடலை
யெழுதக் கேட்க நினைக்க வியம்பவே. (ரு)

வாத பித்தங் கவமுதல் வல்வினை
வேத னைக்குள் விழார்நம னூர்புகார்
நீத கரறர் திருவிளை யாடலை
யோதி யத்த முணர்ந்த பெருந்தவர். (சு)

ஊட்டு நாளிற் றொடங்கி யொழிவற
வீட்டும் வெய்ய வினைகளி யாவையுஞ்
சேட்ட நாதன் றிருவிளை யாடலைக்
கேட்ட காலையி னீங்கும் இளரவே. (எ)

[5]தாங்க ருஞ்சம ரத்திர சத்திர
நீங்கு நீங்கருஞ் செல்வ நிரந்தர
மோங்கு மோங்கலின் வந்துல கீன்றவள்
பாங்க னார்விளை யாடல் பகரவே. (அ)

---

உ. புத்தி - அருள், போகம். ங. சூலியர் - கருப்பமுடையோர்.

ச. உடற்குறை - குட்டநோய்; கவந்தமுமாம். அலகைச்சுழல் - பேய்க் ற்றின் சுழற்சியில் அகப்படல.

சு. அத்தம் - பொருள்.

எ. ஊட்டுநாள் - அறுபவிப்பிக்கும் நாள். சேட்டநாதன் - மகாதேவர்.

அ. சமர் அத்திரம் சத்திரம்.

(பி - ம்.) 1‘அமங்கலிமங்லகயர்’ 2‘மாமிருத்து’ 3‘உடற்குறி’ 4‘சோரவஞ் ர’ 5‘தாங்கருஞ் சமுசார சமுத்திர, நீங்கும்’

பாத கங்க ளொழியும் [1]பகையுகு
மேத நீங்கு மினிமை தரும்புகழ்
மாது சேருமற் றேதினி வேண்டுமென்
றோதி மாமுனி தோன்ற [2]வுரைசெய்வான். (கூ)

ஆகத்திருவிருத்தம் - கக.

## க.—இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்.

*பொருந்திய வொழுக்கத் தானும் பொய்யிலா வாய்மை யானுந்
திருந்திய கல்வி யானுந் தீதறு புகழி னானும்
பெருந்திறல் வலியி னானும் பேரரு ளானு மிக்க
வருந்தவ முனிவர் கேட்ப வகத்திய னருளிச் செய்வான். (க)

ஆகிநான் மருப்பி யானை யமரர்கோன் முன்னோர் கால
மேதகு வீர மிக்க விருத்திரா சுரனைக் கொன்ற
வோதரும் பழியா லஞ்சி யொழிக்குமா றெங்ங னென்றென்
றேதமின் முனிவர் வானோர் [3]குருவா னிடத்து ரைத்தான். (உ)

மெய்ப்படத் தேர்ந்தி யாரும் விளம்பிய வாறு கேட்டு
வைப்புறு நான்கு கூறு வரைந்தெமக் களிமி னென்ற
வொப்பரு நீரின் மண்ணின் மரத்தினி னுவமை யிலலாச்
செப்பிளங் கொங்கை மாதர் திறத்தினி னீக்க வாங்கு. (ங)

நீரிடை நுரைய தாயு நிலத்திடை யுவர தாயும்
[4]பாரிய மரங்க டம்மூட் பாய்தரு பிசின தாயும்
வாரணி முலையார் தேத்து மலரொறுங் குருதி யாயும்
பேர்பட [5]நீங்கக் கண்டு பெருநல மவருக் கீந்தார். (ச)

---

நூற்பயன்.

கூ. ஏதம் - துன்பம். இனிமை - இன்பம்.

(க)

உ. யானை - ஐராவதம். பழி - வீரகத்தி ; "விருத்திராசுரனைக்கொன்ற, வெம்பழி", "வீர மிக்க விருத்திரா சுரனை யன்று கொன்றவெம் பாவம்" என்பர் பின்னும்; க: உச. உஎ.

ச. மலர் - பூப்பு.

* இச்செய்யுள் கையெழுத்துப் பிரதிகளிலெல்லாம் ஒவ்வொரு திருவிளையாடலின் முதலிலும் எழுதப்பெற்றுள்ளது.

(பி - ம்.) [1]'பகையுறுது' [2]'உரைசெய்தான்' [3]'குருவரிடத்து' [4]'பாரிடை மரங்கள்' [5]'நீக்க'

மருவலிந் தனுதா னீர்க்குக் கழுவிய மலஞ்சா ரானை
விரிதரு நிலத்திற் கங்க மேவிய [1]வடுவுமெத்த
லூரனமர் மாத்திற் றென்றுங் குறைத்திடக் கிளைத்த வோங்கும்
[2]கருவினு மடமா தர்க்குத் தணிவிலாக் காம வேட்கை. (௫)

சமையமா முனிவர் போற்றத் தானவர் வழுத்த மாத
ரிமையவர் [3]சுரவி சிந்தா மணிதொழ விரும ருங்குங்
கமலமுஞ் சங்கும் வாழ்த்தக் கற்பகச் சோலை நீழ
லமரர்கோ னிருந்தான் வந்தாங் கரிகொளா சனத்தி லங்க. (௬)

கூறரும் பேர வைக்க [4]ணரியபல் கோலங் கொண்டு
தேறுத லுடன யந்து தேவகன் னியர்கள் பாடிப்
[5]பேறுடை நிருத்தஞ் செய்யச் சிலரதைப் பெரிதும் போற்றி
வேறிலை [6]கூத்துப் போல மெய்யுளங் கவர்வ தென்றார். (௭)

மன்றுறு மவையின் மற்று நின்றவர் வணங்கி வாழ்த்தி
யின்றிது போலொன் றில்லை யென்றுமுன் னவில்வ தென்னை
யொன்றிய மனமுங் கண்ணுங் களிதர வுவமை யில்லா
வென்றிகொ ணலம்ப யப்ப திலங்குமா வேட்டை யென்றார். (௮)

ஆங்கது கேட்டு வேட்ட வமரர்கோன் விரைவி னந்தப்
[7] பாங்குடை வேட்டைக் கான காட்டினைப் பகரு மென்ன
வோங்கிய வவையின் மிக்க வுத்தமர் கற்ப கப்பூந்
தேங்கமழ் தொடையாய் மண்ணிற் சிறந்தபல் வனங்க டம்முள். (௯)

நீண்ட [8]நன் னலங்க ணல்கு நீக்கரும் பாவ நீக்கு
[9] மேண்டரு மவனிக் கெல்லா முயர்புள தியானை கேழல்
காண்டகு மடங்க லெண்கு கலையுழை யுழுவை மற்று
மீண்டிய வனங்க டம்ப வனமலா தில்லை யென்றார். (௧௦)

வே று.

ஆன செய்தி சொல்லு முன்ன திர்ந்தெ ழுந்து [10]வாசவ
னீன மின்றி வில்லெ டுத்தி லங்கு கச்ச ணிந்துவெஞ்
சேனை சூழ வாழி சூழ்சி றந்த மண்ணி ழிந்துகா
வானெ ருங்கு நீள்க டம்ப மாவ னத்து வந்தனன். (௧௧)

---

௫. மெத்தல - நிரம்பல்.

௬. சுரவி - காமதேனு. கமலம் - பதுமநிதி, சங்கு - சங்கநிதி.

௮. மன்று - பொதுமை. மாவேட்டை - மிருகவேட்டை.

௧௦. ஏண் - வலிமை. 'கடம்பவனம்' என்றது, இத்தலத்தை.

௧௧. காவால் நெருக்கும்.

(பி - ம்.) 1 'வடுமிதத்த, லுறனெழு' 2 'கருவினுன்' 3 'சுரபி' 4 'ணனி யபல்' 5 'பேறாற்' 6 'கூத்துப்போலும்' 7 'பாங்குறும்' 8 'நன்னயங்கள்' 9 'ஊண்டருமவனி' 10 'வானவன்'

காடுகாவல் செய்துவாரொ ழுக்கியெங்க ணுங்கலந்
தோடுகாய்வி டுத்தடிச்சு வட்டிநெற்றி யொல்லையெண்
மாடுகண்வ லைத்தொடக்கி னல்வளைத்தொ லிப்பமுன்
கூடி[1]வேறு வேறுநேர்கு தித்தெழுந்த கோடிமா. (௧௨)

ஏனமெய்தி யானையெய்தி ரும்புலிக்கு ழாமெய்தொண்
கானமேதி யெய்துவெங்க லைக்கணங்க [2]ளெய்துமற்
றூனமாம டங்கலெய்த டர்ந்துமேலெ ழுந்துபாய்
மானினங்க ளெய்துவாச வன்மனங்க ளித்தனன். (௧௩)

வேறு.

நெறிவசத் தானு முன்னை நிறைதவத் தானும் வென்றிக்
கறைகெழு குலிச மன்னுங் கையிலா கவத்தி னோடுந்
திறமொடு வடபால் விட்டுத் தென்றிசை நோக்கிச் செல்ல
மறுவறு பரம ஞான மனத்தகத் துதித்த தன்றே. (௧௪)

இன்றிதற் கேது வேதோ [3]விவ்வனத் தணையா முன்னங்
கொன்றிடக் கூடா துள்ளங் [4]கொடியபல் விலங்குநிற்ப
வென்றிகொள் வேட்டைக் காட்டில் விசேடமுண் டறிதல் வேண்டு
மொன்றிய செயல்வே றான துரைசெயு [5]மும்ப ரென்றான். (௧௫)

அவ்வுரை கேட்ட தேவ ரறிகுவ மென்னப் போந்து
வெவ்வன மெங்குந் தேடி மேதினி தோன்று முன்னஞ்
[6]செவ்வியின் முளைத்தெ ழுந்த திப்பிய விலிங்கங் கண்டு
மெய்விதிர்ப் போடுஞ் சென்று விளம்புவார் துளங்க வாங்கு. (௧௬)

கண்டனம் பெரிதா [7]யாழ்ந்து தெளிபுன லுடைத்தாய்க் [8]கான
வண்டணை பொழில்சூழ் வாவி [9]யதன்வட குடதீ ரத்து
முண்டக வயன்மால் காணு முளைத்தெழு சிவலிங் கத்தைப்
பண்டைமா தவத்தா லென்று பரிவொடும் பணிந்து சொன்னார். (௧௭)

---

௧௨. ஒற்றி - உணாநது. எணமாடு - எட்டுத்திசைப்பக்கம். கண்வலை - கண்களையுடையவலை; "விரலாழிக்கண், பலவிதக்கண்கள்" (உஉ: ௧௩.)

௧௪. கறை - இரத்தம். இலாகவம் - இலகுத்தன்மை; "மிகலாகவம்புரிந்து" (திருமயிலை. ௬௪.)ஞானம் உதித்தது.

௧௫. நிற்பவும், கொனறிட உள்ளம் கூடாது-கொல்லுதற்கு மனம் துணியவில்லை. வேறான இடம் வேறாகியவென்று இக்காலத்து வழங்கும் (திருவிளை. இந்திரன். ௭௧.) உம்பர்: அண்மைவிளி.

௧௬. "மேதினி....இலிங்கம்": "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" (தே. திருநா.) விதிர்ப்பு - நடுக்கம்.

௧௭. கானம் - இசை. வடகுட தீரம் - வடமேற்குக்கரை. காணுச்சிவலிங்கத்தைத் தவத்தாற் கண்டனம்.

(பி - ம்.) [1]'வேறுகொண்டுடன்குதித்து' [2]'எய்துமா, றூனமா' [3]'இவ்வனத்தலையாமுன்னம்' [4]'கோடிபல்' [5]'அமரர்' [6]'செவ்வயின்' [7]'ஆழ்ந்ததெளி' [8]'கன்னவண்டணி' [9]'மற்றதன்வடதீரத்து'

இந்திரன் கேளா முன்ன ரினிமைகூர்ந் தவர்முன் னாக
வந்துசந் நாகம் வாங்கி வாவிகண் டதிச யித்துச்
சுந்தமார் நன்னி ராடிச் சடங்குகண் முடித்துப் பாங்க
ரந்தநா யகனைக் கண்டா னலித்தான் மாலுற் றுடி. (கஅ)

அடைந்தவர் பாவ நீக்கு மையனே காணப் பெற்றேன்
மடங்கலென் குழலை கேழன் மாமத மாக்கண் மற்று
மிடைந்திடுங் [1]கொடிய காட்டின் மெல்லிய லொடுந்த னித்திவ்
விடந்தனி லிருந்தா யென்ன புண்ணியஞ் செய்த திம்மண். (கக)

அன்புற விறைஞ்சி நின்னை யருச்சிப்பான் விரும்பா நின்றே
னன்புனற் கியைந்த செவ்வி [2]நறுமலர் காட்டு கென்றாய்ந்
தின்பமே தருங்கா னத்தி லெங்கணு நேடிக் காணான்
றுன்பமுற் றாசே யானென் செய்குவ லெனச்[3]சோ கித்தான். (உ0)

ஆசிலான் கண்டு நீண்ட வாவியெங் கணுமி லங்கப்
பேசரும் வேட்டை யாட்டிற் பெருவிருப் பொழிந்து நம்மைப்
பூசைசெய் வதற்கே நொந்தா னென்றருள் புரிந்து சீத
வாசமா ரீழக் கஞ்சம் வருவித்தா னலர்வித் தாங்கு. (உக)

காவலன் வியந்து பல்காற் கண்டுகண் டதிச யித்துப்
பூவினை யடைவிற் கொய்து புளகிதத் தோடுங் கண்ணீர்
மேவமெய் கம்பித் தன்பின் வெள்ளத்து மூழ்கி மிக்க
தேவதே வனைப்பூ சித்தான் விதிப்படி [4]சிறந்த நல்கி. (உஉ)

தேசுடை மடவாள் கொங்கை தீண்டிடச் சிவக்கு மேனி
வீசிய காற்றால் வெய்ய வெயிலினா னோவ தேயென்
றூசிலா வுயர்வி மானஞ் சாத்துவா னாசை [5]கூர்ந்து
மாசிலான் வருந்தக் கண்டு வணங்கினே தெய்வத் தச்சன். (உங)

---

கஅ. இனிமை - மகிழ்ச்சி. சக்காகம் வாங்கி - கவசத்தைக்கழற்றி. அந்த நாயகன் - சுந்தரேசர்; அநதம் - அழகு. சடங்குகள் - நித்தியகன்மங்கள்; "பொற்கமல வாவிமினீராடி இனியதஞ் சடங்கு செய்தே" (கு:உ.) ஆலித்தான் - முழங்கினான்.

கக. என்கு உழுவை. "என்னபுண்ணியஞ்செய்தனை நெஞ்சமே" (தே.)

உ0. அருச்சிப்பான் - அருச்சிக்க. காட்டுக என்று. என்செய்குவல் - யாதுசெய்வேன்.

உக. ஆவி - தடாகம். ஈழக்கஞ்சம் - பொற்றாமரை. இலங்க அலர்வித்து வருவித்தான்; ஈழம் - பொன்.

உஉ. தேவதேவன் - மகாதேவர். உங. நோவதே - நோகின்றதே.

(பி - ம்.) [1] 'கடிய' [2] 'நறுமலரெங்குண்டென்றாய்ந்து' [3] 'சோதித்தான்' [4] 'சிறந்து' [5] 'கூர்ந்த, மாசிலான்வருத்தல்'

விருத்திரா சுரனைக் கொன்ற வெம்பழி தவிர்ப்பா னெண்ணித்
திருத்துபல் விமானந் தம்முட் டெளிதரு சிற்ப நன்னூற்
பொருத்தமுற் றனவி றெய்வப் பொலிவொடுங் கூடி நீடி
யிருப்பதோர் விமான முண்டாண் டிறைவவென் றிலங்கச் சொன்னான்.

மெய்ப்படு சிற்பம் வல்ல வுத்தம விரைந்து நீபோ
யொப்பில்காஞ் சனவி மான[1]மும்பலிற் கொணர்தி யென்ன
வப்பொழு தவன்போ யாசை [2]யானையிற் கொணர்ந்து காட்டத்
தப்பிலா விதியி னோங்கச் [3]சாத்தினான் குளிர்வி மானம். (௨௫)

சிந்தைவாழ்ந் திறைஞ்சி யேத்திச் சிறந்தசெய் தியாரும் போற்ற
[4]வந்தநீ டால யத்துக் கணியுற வியைந்தி ருந்த
சுந்தர வடிவங் கண்டே சொக்கெனு நாம மிக்க
வெந்தையே நினைக்கல் லாதோர் தேவர்க்கு மியையா தென்றான். (௨௬)

என்றுமென் பதிக்கோர் குற்ற மெய்திடா வண்ணங் [5]காத்தி
வென்றிகொள் வீர மிக்க விருத்திரா சுரனை யன்று
கொன்றவெம் பாவ நான்கு கூறுசெய் தொழித்தேன் சேட
நின்றன வுண்டே னீக்கி [6]யருளுதி நிமல வென்ன. (௨௭)

இறையவன் முறுவல் [7]கூரா வறிவுடை யிமையோர் கோவே
செறிதரு புவியின் மாந்தர் செய்ததீ வினைகள் காணு
[8]ரறியினுஞ் சிறிதே யாக [9]வறைகுவ ரதுப கர்ந்தாய்
திறலுடை யவனைக் கொன்ற பாவமார் தீர்க்க வல்லார். (௨௮)

---

௨௫. உம்பல - யானை. ஆசை யானை - திக்கஜம். குளிர்விமானம்: "சீதளவிமானமீதால்" (௫ : ௪.)

௨௬. சிந்தைவாழ்ந்து - மனமகிழ்ந்து; "சேனையுந்தானும் வாழ்ந்து" (௩௦.) அணியுற - அழகுமிக. சொக்கு - அழகையுடையவர். 'சுந்தரேசர்' என்பது வடமொழியாதலின், 'சொக்கன்' என்னும் இத்திருநாமத்தையே பண்டைக்காலந் தொட்டுச்சான்றோர் பாராட்டிவந்தனர்; இத்திருநாமம், தேவாரங்களிலும், ஸ்ரீ குமரகுருபரமுனிவர் பிரபந்தங்களிலும், கடம்பவனபுராண முதலியவற்றிலும் பரக்கக் காணப்படும்; "திருவாலவாய்ச், சொக்கன்", "தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச், சொக்கனே" (தே. திருஞா.) "ஐந்தருநாட் டண்ண லரும்பழிக்க வன்றுதனக், கிவ்விரவி மான மினிதமைத்து - வைகித், தழுவிய சொக்கனெ னானதிருநாமம், குழைவுதரு நேசமுடன் கொண்டோன்" (சொக்கநாதருலா.)

௨௫-௬. "வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெறுவதோர் திருவுருத் தான்பெரிது சிறந்தி, யமுதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிழிச்சிய, மதமலை யிருநான்கு பிடர்சுமந் தோங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோயிலு, ளமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த, வாலவா யுறைதரு மூல காரணன்" (கல். ௩௨.)

௨௮. திறலுடையவனைக்கொன்ற பாவம் - வீரகத்தி; "மேதகு வீரமிக்க விருத்திரா சுரனைக்கொன்ற, யோதரும் பழியால்" (௨.) காணார் - விளங்க அறியார்.

(பி - ம்.) [1]'இல்லையிற்' [2]'யானையாற்' [3]'சார்த்தினான்' [4]'அந்தவாலயத் தக்கேற்கவணி', 'அந்தரவாலயத்துக்கணி' [5]'காத்து' [6]'ஆளுதி' [7]'கூர' [8]'அறையினுஞ்' [9]'அறிகுவர்'

ஆயினும் வேட்டை யாட்டி [1]விளைத்தவி ஞறு மாறா
[2]நேயமுற் றஞசி நம்மை [3]நெறிப்படி வழுத்த லானுங்
காய்வெயிற் குயர்வி மானங் கற்பித்த லானுந் தீராத்
தீயவெம் பாவந் தீர்ந்த தூர்க்குமோர் தீங்கு மின்றே. (உகூ)

என்றருள் செய்யக் [4]கேட்ட விந்திரன் வீழ்ந்து வறைஞ்சி
நின்றடி பல்காற் போற்றி நீக்கரும் பழியை நீங்கி
யொன்றிய தூய்மை பெற்றே [5]னுய்ந்தன னென்றென் றூர்த்துச்
சென்றனன் றன்றே யத்துச் சேனையுந் தானும் வாழ்ந்து. (௩௦)

வேறு.

ஆழ்ந்த[6]செழுந் தடம்பொற்றா மரைமலர வவனியிசை
வாய்ந்தவுயர் பெயர்பொற்றா மரையென்ன மருவியதாற்
சேர்ந்ததொரு வாரத்துச் [7]சென்றெவரா யினுமின்றுந்
தோய்ந்து [8]திளைத் தாபெவர் பலஞ்சொலவிற் றொலைவின்றே. (௩௧)

வேறு.

கடம்பமா வனத்தி லங்குங் கனககோ கனக வாவி
யடைந்தவர் யாவ ரேனு மாதரத் தநாத ரத்துத்
தடம்படி கங்கை நீரிற் புனிதமாந் தடப நீருந்
தொடுங்கையோர் பவந்தீ யென்னச் சுடுமெனச் சுருதிசொல்லும். ()

வேறு.

இப்பொழுது மமரேச [9]னினிமையின்வர் தமரரொடிஞ்
செப்பருந்தன் மாதரொடிஞ் சித்திரைச்சித திரைத்தினத்துத்
தப்பறவேவண் டியவரங்க டருந்தடத்துக் குடைநதாடி
யொப்பிலழ கனைப்பணிவ னனவுமைப்ப ருயர்ந்தோர்கள். (௩௩)

---

உகூ. ஆரா - தணியாத. கற்பித்தல - செய்தல.

உகூ-௩௦. "காருடற் பிறையெயிற் றக்கனைக் கொன்று,வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமக்த, பழவுடற் காட்டிக தீராப் பெரும்பழி, பனிமலை பயந்த மாதுடன் தீர்த்தருள், பெம்மான்" (கல். க.)

௩௧. வாரம் - கிழமை.

௩௨. திருவிளை. தீர்த்த. கக. கனக கோகன கவாவி - பொற்றாமரைவாவி. கனகம் - பொன்; கோகனகம் - தாமரை. இது மடக்கணி.

௩௩. சித்திரைச் சித்திரைத்தினத்து-சித்திரைமாதத்தில் சித்திரைநட்சத்திரத்தில்; "சித்திரைச் சித்திரைத்திங்கள்" (சிலப். ரு: சு௪.) ஒப்பிலழகன் - சுந்தரேசர்.

(பி - ம்.) 1 'இளைத்தலுமன்றி' 2 'நேயமுற்றிறைஞ்சி' 3 'நெறிப்பட' 4 'தண்ட' 5 'உயர்ந்தனனென்று' 6 'செழும்புனல்' 7 'சென்றவராயினுமின்னுந்' 8 'திளைத்தாமெவர்' 9 'னிம்மையின்'

வேறு.

*காவமர் கற்ப கஞ்சேர் கடிமலர் மழைபொ ழிந்து
தாவி[1]றுந் துபிக ளார்த்துத் தத்தமங் கையர்க ளோடு
[2]மூவரும் விசும்பி னுள்ள முப்பத்து மூன்று கோடி
தேவருந் துதித்தா ரீசன் றிருவிளை யாடல் கண்டு. (கச)

வேறு.

ஓதரிய [3]வுத்தரமா புராணந் தன்னு ளுண்மைதரு சார[4]ச முச்சயத்து முன்ன, மேதகுநன் கதை[5]விரிவிற கண்டெ ணக்கு வியாத வான் மீகியெச்சன் சொன்ன வெண்ணெண், டதில்விளை யாடலக ளிற் பிறங்கு மிந்தத் திருவிளையா டலின்பரப்பைச் சுருக்கி யின்று, போதமுற நமக்குரைத்தேன் யானுஞ் சொக்கன் புகழினையார் கதை கண்டு புகலு வாரே. (கரு)

வேறு.

நெறியுளீ ரென்னக் [6]கேட்ட முனிவர்க ணிறைவு கூர்ந்திங்
குறுமதி சயமுடைத்தா முயர்கதை விளங்கக் கேட்டே
மறுவிலா வறிவான் மிக்க மலயமா முனிவ நீதி
யிறைவிளை யாட றம்மு ளின்னுமொன் றுரைத்தி யென்றார். (கசு)

ஆகத் திருவிருத்தம் - கஉஎ.

## உ.—†வெள்ளானைக்குச்சாபந்தீர்த்த திருவிளையாடல்.

முன்[7]னொருகா லழகனையிந் திரன்றன் பாவமுழுதும்விட வருச்சித்த விசேடஞ் சொல்ல, மன்னயிரா [8]வதநீகேட்டுக் காண்பான் வேட்டு மலர்க்கடம்ப வனத்தருளால் வந்துபுக்குப், [9]பொன்[10]னிதழ்ச்

கச. தாஇல துந்துபிகள்.

கரு. சாரசமுச்சயம் - உத்தரமாபுராணத்துள் ஒரு பகுதி.

கசு. நிறைவு - மகிழ்ச்சி (உ : உ.)

(உ)

க. அழகன்-சோமசுந்தரக்கடவுள்; "அழகரீ புயங்கனீ" "முப்புரஞ்செற்றவழக", "அழகனே யாலவாயி லப்பனே" (தே.) இனைகள் - யானைகள்.

* கையெழுத்துப்பிரதிகளிலெல்லாம், இதை, "காவமர்" என்னும் செய்யுள் முதலியமூன்றும் ஒவ்வொருதிருவிளையாடலின் இறுதியிலும் எழுதப்பெற்றுள்ளன.

† "அத்திக்கருளி" (திருவா. திருத்தெள்ளேணம், கஉ).

(பி - ம்.) 1'தந்துமிகளார்ப்பத்' 2'மூவர்கள் முதலாவுள்ளமுப்' 3'உத்தமமாபுராணத்' 4'சாமுச' 5'விரையிற' 6'கேட்டே' 7'ஒருகாலிந்திரன்றன் பாவமெல்லாம்' 8'பதங்' 9'பொன்னிசர்' 10'இதட்செங்கமலம்'

செங் கமலமலர்த் தடத்தை யுந்தன் பொருவிலருங் கிளைகளினாற்
பரிக்கப் பட்ட, மின்னுயர்பே ராலயத்து விரும்பி வாழு மெய்யனையும்
பொய்யறக்கண் டிறைஞ்சிற் றன்றே. (க)

குறுகுமுனர் தானவிசே டத்தா னெஞ்சிற் கொளுவுமுயர் ஞா
னங்கண் டதிச யித்து, நிறைவினொடு தன்[1]சாப நினைந்து சொல்லு
நீடியவெண் டிசையுறுமென் கிளையி லுள்ளோர், குறவுதா வருமுன்
னைத் தவத்தி னாலே யுயர்புடைநின் றிருக்கோயி றன்னை நீங்கா, திறை
யவனே பரித்தருகு சிறகப் பெற்றார் யான்பெறுமா றெவ்வாறென்
றியம்பக் கேட்டு. (உ)

கொந்தவிழுந் தும்பையிபக் கடவு ளேநின் கோச்சிலம் போன்
றிருந்த துன்றன் சில, மிந்திரனே நமக்குரிய பத்தன் [2]புத்தி யினி
மையுட னவன்றன்னை நீங்கா தென்றுங், [3]கந்தமுறப் பரிப்பதே நன்
மை [4]யெம்பாற் காமுறமேவண் டியவரங்கள் வாங்கிக் கொள்ளென்,
றெந்தைபிரா னுரைப்பநனி விருப்பமெய்தி யெள்ளலற வெள்ளை
[5]யிப மியம்பு மன்றே. (௩)

கேட்டருளாய் பசுபதியே தேவர் தேவே கிளரொளியே வளர்
கருணைக் குன்றே யென்றன், மாட்டகலா திருப்பதொரு கதையியம்ப
வானவர்கோன் மனமகிழ்ந்து முன்ன மேமா, வேட்டையினு லவனி
மிசை யிழிந்து [6]மீண்டு மேலுலகிற செலுங்காலை மிக்க வான,
நாட்டவரு முனிவர்களும் போற்றிசெய்து நயந்தனிய [7]வுபகார
நல்கி னார்கள். (௪)

வேறு.

மூன்றுற வவற்றை யுற்ற முறைமையின் வாங்கி யாங்கு
கிந்தியா தடைவிற் சூடக் கண்டுள நேசங் கூர்ந்து
சுந்தர [8]வடிவ மிக்க துருவாச [9]முனிவ னுள்ளு
சிந்தைசெய் திறைஞ்சுந் தெய்வநு சூடிய சேடமென்று. (௫)

---

உயர்பேராலயம்: "உயராலயத்துளணைந்து" என்பர்பின்; ௪0: ரு. 'மெய்யனை
யும் பொய்யறக் கண்டு': இது முரண். 'அழகார்மெய்யன்', 'மெய்யர்க்கு மெய்
யன்' (கஉ: க; ௪ரு : கசு.)

உ. கொளுவுதல - பொருத்துதல.

௩. தும்பை இபக் கடவுளே - தும்பைமலர்போன்ற வெண்மைநிறம்
பொருந்திய தெய்வயானையே. கோ - அரசன்; இந்திரன். புத்தியினிமை - மன
மகிழ்ச்சி. கந்தம் - கழுத்து.

௪. இயம்பக் கேட்டருளாய். உபகாரம் - கையுறை; காணிக்கை; "முனி
வர் வானோர்கதிர் முபகாரம்" என்பர்பின்; அ.

ரு. சுந்தரவடிவ: விளி; 'சுந்தரா'(ரு: ௩.)

(பி - ம்.) [1]'பாபம்' [2]'பத்தி' [3]'கந்தரத்துத்தரிப்பதே' [4]'என்பாற்' [5]'இப
மெண்ணியம்பும்' [6]'காண' [7]'உபசாரம்' [8]'வடிவான்மிக்காய்' [9]'முனிவனுருங்'

பங்கய கறும்பூ வொன்றும் பசுந்துள வக்தா ரொன்றுஞ்
செங்கையி னல்க வாங்கிச் செழும்பொழிற் கற்ப கப்பூந்
தொங்கல்சேர் முடியிற் சூடா திகழ்ந்தமன் றோன்றி நின்ற
மங்கலம் பொலியு மென்றன் மத்தக மீதெ றிந்தான். (சு)

யானுமுன் செய்த பொல்லா விருங்கொடு [1]வினையி னாலு
மானவெம் [2]மதத்தி னாலு மடியினிற் றுகைத்தேன் வாங்கிப்
பான்மைசேர் முனிவன் கண்டு பயத்தொடுங் கோபத் தோடுந்
தானவை கடிதெ டுத்துத் தன்றனி முடியிற் சூடி. (எ)

இன்றுமா முனிவர் வாளை ரீங்கிடு முபகா ரத்தை
நன்றென விரும்பி யான்மு னல்கிய வுபகா ரத்தை
யொன்றிய முடியிற் சூடா தொள்ளிய வல்ல வென்று
வென்றியி னெவருங் காண விலக்கிய வாற [3]தென்னை. (அ)

ஆவியிற் சிறந்த வற்றை யவமதி செய்த தாலிப்
பூவல யத்துட் டோன்றும் பூழியன் றடக்கை தன்னின்
மேவிய வளையி னாலே மேன்முடி பிளக்க மிக்க
தேவர்கோ னெற்று ணென்று செப்பின னவற்குச் சாபம். (கூ)

பொன்னகர் மன்னி வாழும் புரந்தரன் றன்னைத் தாங்கு
நின்னுயர் பெருமை விட்டு நிலத்திழிந் துழல்வா யாக
துன்னிய வனங்க டோறுஞ் சுழன்று[4]காட் டியானை யாகி
யுன்னவ மதியி னாலென் றுரைத்தன னெனக்குச் சாபம். (க௦)

இப்படிச் சபிக்கக் கண்ட விருடிக ளிமையோர் நொந்தாங்
கொப்பிலா முனியைப் போற்றி யுயர்தரு தேவர் கோமான்
செப்பருந் தெய்வ யானை செய்பிழை பொறுத்தின் றிட்ட
தப்பறு பெருஞ்சா பதனைத் தணியெனத் தணிந்து சிற்றம். (கக)

மண்டனிற் சுந்த ரேசன் பத்தரு மாற னாலே
யொண்டொடை மவுலி பேத மொருகாலத் துண்டாய் மீண்டு
விண்டலத் துயர்வு பெற்று மேலர சாடி யென்று
கொண்டலவா கனனுக் கன்பிற் கொடுத்தனன் [5]பிறிது சாபம். (கஉ)

---

சு. தோன்றி நின்ற மத்தகம்.

எ. வாங்கித் துகைத்தேன்.

கூ. பூழியன் - பாண்டியன். வளை - ஒருவகை ஆயுதம். தேவர் கோன்: வினி. எற்றுண் - அடிக்கப்படுவாய் (கடம்ப. இலீலா. உ.)

க௦. அவமதியினாற் காட்டுயானையாகி உழல்வாயாக.

கஉ. பிறிது சாபம் - சாபத்தின்பரிகாரம்; கரு; இது, மறுசாபமெனவும் வழங்கும்; "மறுபெருஞ்சாபமுங் கொடுத்தான்" (ருஅ:அ.)

(பி - ம்.) 1'வினையினாலே' 2 'மதத்தினாலே' 3'தென்னோ' 4 'காட்டானை யாகி' 5 'பிரதி'

பொருந்தவோர் காலத் தோர்பாற் புனிற்காட் டியானை யாகி
வருந்தரும் பெருங்க டம்ப வனத்துறை யிறையைக் கண்டவ்
வருந்தவ னருளி னாலே [1]யலைவற நீயு மொன்றன்
றாரம்பெறக் கடவை யென்று தந்தனன் [2]பிறிது சாபம். (௧௩)

வேறு.

பேறுறவிங் கெறிசபித்துப் போய பின்னர்ப் பிழையாம லன்றிட்ட சாபந் தன்னா, லூழுமத விகாரத்தான் மயங்கி யானு மும்பர்கோ னையுமுயர்ந்த வுறங்கத தோங்குங், கூறருகற் பகப்பொழில்க டமையும்விட்டுக் குவலயத்தி [3]லிழிந்துதர நெருப்பா னொந்து, தூறுபடு காடுகளு நாடுங் குன்றுஞ் சுழன்று ழன்று திரிந்தனன்வெந் துயரங் கூர்ந்தே. (௧௪)

வேறு.

வந்துனை வணங்கப் பெற்றேன் மண்மிசை யிழிந்த தாலென்
வெந்துயர்ச் சாபந் தன்னை விடுவித்து விடாது நானு
மிந்திர விமானந் தாங்கு மியானைகண் மீது வைத்த
சிந்தைகூர் தருபே ரன்பை [4]நல்குக சிறியேற் கென்ன. (௧௫)

ஒன்றிய சாப நீக்கி யுயர்புதந் தோமு னங்கே
யின்றுநன் குண்டா நம்மை யினிமையிற் பூசை செய்து
சென்றுவா னகத்தெ மக்குச் சிறப்புடை விமானந் தாங்கு
வென்றிகொ ளமரர் கோவை விடாதுவா ழெனநவின் றான். (௧௬)

அங்கருள் புரியக் கண்டே யகமகிழ்ந் தடியே னுய்ந்தேன்
சங்கர வென்று வாழ்த்தித் தடத்துநீ ராட்டிச் செம்பொற்
பங்கயப் போது சூட்டிப் பூசித்துப் பழுது நீங்கி
யெங்கணும் பரவச் சென்ற திந்திர வுலகத் தியானை. (௧௭)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௪.

---

௧௩. அருந்தவன் - சிவபெருமான் (௫௯ : ௨௧; ௬௦ : ௬); "தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" (புறநா. ௧.) தாரம் - தகுதி.

௧௪. கூறு அரு - சொல்லுதற்கு அரிய. உதரநெருப்பு - வயிற்றுத்தீ; ஜாடராக்கினி.

௧௭. பழுது - சாபம்.

(பி - ம்.) [1]'அலைவறவெனக்கும்' [2]'பிரதி' [3]'இழிந்தாகம்' [4]'நல்கே'

## ௩.—[1]தடாதகையாரவதரித்த திருவிளையாடல்

மாசின் மதுரைப் பெரும்பதியின் மலயத் துவச னெனுமாறன்
றேச முழுது மனுவென்னச் செங்கோல் செலுத்துங் காலத்துங்
காசின் மனிதர் முன்புலகா ளரசர் தொகுதி மரந்த றன்சேர்
நேச முடைய [2]போராசி னிழலே நிழலென் றினிதிருந்தார். (௧)

மாலைக் குமர வேளென்ன வயங்கு மிளமைப் பருவத்தா
னேலத் திமிரக் குழற்காவி லிலங்கு மடவார் சுனைவைத்துக்
கோலக் களபத் தனதடத்துட் குளித்துச் செவ்வா யமுதுண்டு
சாலப் பரிந்தா னருட்சொக்கன் றனையே சாலுந் தகைமையினான். ()

ஏத மகல [3]வித்தகயி னிருக்கு நாளி னங்குலத்தோர்
நீதி மாதைக் கொள்வலென நினைந்தி ரைந்து பொருத்தமுற
வாதி மரபின் வரும்பெரிய வரசர் குலத்தி லவதரித்த
சோதி [4]வடிவ மங்கைதனைச் சுருதி விதியின் மணம்புணர்ந்தான். ()

மற்ற மடவார் தமைவிட்டு மன்னர் குடியிற் பிறந்தாண்மே
[5]லுற்ற வவர்பா லன்பெல்லா மொருங்கே வைத்து நனிவாழ்வோன்
சுற்றும் பெரிய விதிவசத்தா றுணைசேர் புதல்வ னிலாமையினான்
முற்றுஞ் சடையான் றனைநினைந்து முயன்றான் றவங்க ணெடுங்காலம்.

ஆன்ற வரிய பேரறங்க ளிவை யுடனே செயக்கண்டான்
மீன்ற வினையா டலைவிரும்பி [6]யெழிலார் சொக்க னருள்கூர்ந்து
மூன்று முலையா [7]லொருமகவை யளிப்ப முதிரு மதியென்னத்
தோன்றி யுலகு பதினாலுந் துதிப்ப வளர்ந்து [8]துலங்கியதால். (௫)

---

௧. மலயத்துவசன் - பொதியின்மலையின் உருவமெழுதிய கொடியை யுடையவன்; ௪: ௧. இப்பாண்டியன் அகத்தியமுனிவர் அருளாற்பிறந்தவனாதலின், அவருக்கு இருப்பிடமாகவுள்ளதும் துவசம்போலே உயர்ந்து தோன்றுவதுமாகிய பொதியின்மலையின் சம்பந்தமான பெயரை இவனுக்கு இட்டனரென்று அஷ்டமிப் பிரதட்சிணமான்மியம் தெரிவிக்கின்றது; ௪: ௧-இன் குறிப்புரையையும் பார்க்க.

௨. ஏலம் - மயிர்ச்சாந்து. குழற்கா - கூந்தலாகியசோலை. பரிந்தான் - அன்புற்றான்.

௩. ஆதிமரபு: இம்மரபு சூரிய வம்சமென்று கருதுவதற்கும் இடமுண்டு. வடிவமங்கையென்பது அப்பெண்ணின் பெயர்; இப்பெயரைக் காந்திமதியென்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பென்பர்; ௧௧: ௩.

௪. அவ்வெல்லா மொருங்கேவைத்து கனிவாழ்தல், "ஒன்று காதலன்", "காதல்கூர்ந்தகணவன்" (௯: ௪, ௮) என்பவற்றாலும் விளங்கும். முற்றுதல் - வளைதல்.

௫. ஆல்: ஒடு.

(பி - ம்.) 1'மும்முலைத்தடாதகையார் பிறந்த' 2'போரச' 3'இத்தகவன்' 4 'வடிவின்' 5'உற்றவர்பா லின்பமெலாம்' 6 'எழில்சேர்' 7'மகவை' 8'துளங்கியதால்'

**வேறு.**

[1]சிதைவிலா விருப்ப மிக்க தேவியோ டினிய தென்ன
னதிசய முற்று மற்றை யதிகமா முலையி னோக்கண்
டிதுதரு வதுவோ விந்த வடிவினுக் கெந்தா யந்தி
மதிபொதி சடையா வென்று மலரணைத் துயிலுங் காலை. (௬)

இணையிலான் கனவிற் சென்றோர் மாதிவ ளெனக்கொள் ளாது
[2]தணிதிநீ யேத மந்தத் தனமுமோர் வழியி னீங்கித்
துணையுல காளுமென்னத் துயிலுணர்ந் ததிச யித்து
மணிமுடி யரசன் செய்தி மந்திரி கட்குச் சொன்னான். (௭)

ஐயமில் கணிதம் வல்லா னவரிலோ ரமைச்சன் போற்றிப்
பொய்யல வுதித்த கால பலததிறை புவியை யாளுந்
தையலுக் [3]கியைந்த நாமந் தடாதகை மற்றொப் பில்லா
மெய்யுறு [4]கணவற் கண்டான் மிகைமுலை மறையு மென்றான். (௮)

இந்நல் லுரைபொய் யாதென் றியைந்தவ ரியம்ப மன்னன்
[5]செந்தமிழ் முக்கட் சொக்கன் செயலெனத் தெளிந்து தொல்லைத்
தந்திர நெறியி னாமந் தடாதகை யென்று [6]சாத்திச்
சிந்தையா குலங்க டீர்ந்து செலுத்தினான் செங்கோ லோங்க. (௯)

மையமர் விழிவா ளென்ன மதிமுகம் வனச மென்ன
வையநுண் ணிடைபொய் யென்ன வணிமுலை மலைய மென்னச்
செய்யவாய்க் கரிய கூந்தற் சிற்றடிப் பெரிய வல்குற்
றையலாள் வளர்ந்தாள் வாரித் தலமெலாம் வளர வாங்கு. (௧௦)

பரிவினென் னிறந்த கோடிப் பாங்கியர் சூழச் செம்பொ
னரியகந் துகங்க ழங்கோ டம்மனை யூசன் மற்று
முரியன பயின்று கன்னி யோங்குமா டத்தி ருந்து
கரிபரி யேறி முற்றக் கற்றனள் [7]கலைகண் முற்றும். (௧௧)

---

௭. இணையிலான் - சிவபெருமான். ஏதம்-துன்பம். ஆளும்-ஆளுவாள்.

௮. மிகை - அதிகம்.

௯. அவர் இயைந்து. 'செந்தமிழ்முக்கட்சொக்கன்'; 'செந்தமிழ்க்கினிய சொக்கன்' என்பர்பின்னும்; ௫௨ : ௨. தொல்லைத்தந்திரம்- பழமையாகிய நூல்; வேதாகமங்கள்.

௧௦. வாரித்தலம் - பூமி. இச்செய்யுள், "செய்யவாய்ப் பசும்பொன் றோலை" (சூளா. சீய. ௧௦௬) என்பதிலுள்ள சொற்றொடர்களைப் பெற்று வந்துள்ளது.

(பி - ம்.) 1 'அதிபய' 2'தணிபுநீரேதம் வந்ததனமும்' 3'இயைபு' 4'கணவர்' 5'செந்தமிழ்க்குரவன்' 6'சாற்றிச்' 7'கல்வி'

ஒன்றிய வடிவி னானு முதித்தகன் [1]முகுத்தத் தானும்
வன்றிறல் வலியி னானு மகவுவே றிலாமை யானு
மன்றினர் சிங்கஞ் சிங்கா தனத்திடை யிருத்தி யன்னா
டன்றனி முடியிற் செம்பொற் றனிமணி முடிக வித்தான். (௬௨)

[2]பொருந்துபே றறங்கள் செய்து போற்றரு மரசர் போற்ற
விருந்தா சுரிமை யெல்லா [3]மிவள்வயிற் கொடுத்திங் கென்ன
வருந்தவஞ் செய்தே னிந்த வணங்கினைப் பெறுதற் கென்று
பரிந்துயர் வான நாடு சேர்ந்தனன் பாதக [4]நீங்கி. (௬௩)

ஆகத்திருவிருத்தம் - ௩௱௪.

## ச.—*மணஞ்செய்த திருவிளையாடல்.

மன்னு மாதவம் பெருகிய மலைக்கொடி மன்னன்
[5]பொன்னி னாட்டிடைப் போயினி தமர்ந்துவீற் றிருப்பப்
பின்னர் வேறொரு புதல்வ னிலாமையிற் பிறங்கக்
கன்னி தாயுயர் பிதாவினுக் [6]குறுகடன் கழித்தாள். (௧)

தந்தை யில்லதுஞ் சாற்றருந் தனதெழி லுருவ
[7]மூந்தை மும்மூலை யாயதுங் கொண்டிவண் முடியச்
சிந்தை யாகுலந் தீர்விலா திருந்தா சாண்டாளா
வந்த தெவ்வர்கள் யாரையும் வாளினான் மாற்றி. (௨)

௬௨. முகுத்தம் - முகூர்த்தம். அன்றினர் - விரோதித்தவர்கள்; அன்றினர் சிங்கம் - மலயத்துவசன். முடி - தலை, கிரீடம்.

(ச)

௧. மலைக்கொடிமன்னன் - மலயத்துவச பாண்டியன்; "எருதோடு கலையோடு சிலையோடு மயிலோடு கயலோடு சேர், விருதோடு பொருதேறு புலி கேமி கிரிசூழ விளையாடவே" என்னும் தக்கயாகப்பரணியும், 'பருவதத்தைக் கொடிக்கணெழுதும் பாண்டியன் குலபதி இலாஞ்சனையும்' என்னும் அதன் உரைப்பகுதியும் இங்கே அறியற்பாலன. பொன்னின் நாடு - சுவர்க்கம். வீற்றிருப்ப - கவலையின்றியிருக்க.

*"தென்னாடுடைய சிவனே போற்றி" (திருவா. போற்றி. ௧௬௪), "தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை" (ஷை. திருவம்.௧௦),"மருவித்திகழ் தென்னன்" (ஷை திருச்சதை.௪௩)"என்னையாண்டுகொண்ட பாண்டிப்பிரான்" (ஷை திருப்பூவல்லி.௨), "வானகதொழுதென்னவன்" (ஷை. தோணோக்கம்,௮), "பாண்டிநன் னாடா ளவனே யஞ்சும்" (ஷை. அன்னை. ௫), என்பவற்றிற் சிவபெருமான் சுந்தரபாண்டியராக வீற்றிருந்தமைகூறப்பட்டிருத்தல்காண்க; திருவாசகத்துள்ள பாண்டிப்பதிகமுதலியன இங்கே ஆராய்தற்பாலன.

(பி - ம்.) 1 'முகிழ்த்தத்' 2 'பொருந்தவேதவங்கள்', 'பொருந்துபோதங்கள்' 3'இவ்வயிற்' 4'நீக்கி' 5'பொன்னிறையர் காட்டிடைப்போயினி திருப்ப', 'பொன்னினுமுயர்' 6'அருங்கடன்' 7'முந்து'

மன்னு முத்தமத் [1]துணைவனை வரத்தொடு பெறுதற்
[2]கன்னி லத்திடை யிலாதது [3]கண்டடல் வேந்தர்
வென்னி டத்திசை விசயஞ்செய் துவ மென்றே
யென்னி லத்திரு முலாவின ளெல்லையில் படையாள். (௩)

வேறு.

திசைவிச யஞ்செய் காலைத் திசைசரி லுருவ மிக்க
நசையுறு [4]மன்னர்க் கன்னா ளனிகயத் தெதிர்சென் றங்க
ணசைவற [5]நிற்பாண் மறாமிரு ரதங்கள்வெள் விகாரங் காணும்
வசையறு [6]முனையி லேறும் போர்குலாவன் மதியா ளாகி. (௪)

இருங்குண திசைமுன் னெட்டு மொருநாளு முலாவி யுள்ளம்
வருந்துவா டன்னைக் [7]கொள்வா முறைசையாய் மதுரை மன்னன்
திருந்துபே ரருளிற் போந்து சீயமா தம்ப மற்றும்
பொருந்திய கயிலை யந்தண் [8]டாள்வரைப் புறத்தி ருந்தான். (௫)

வெம்முனை யரசர்க் காய்ந்து வெல்லரு நிலங்கள் கொண்டு
கொம்மைவெம் முலையார் சூழக் கோடிமா மன்னர் போற்றச்
செம்மலே [9]றென்னத் தோன்றித் திறையிடா னியாவ னென்று
மம்மர்தீர்த் தாளும் வள்ளல் வாழ்பெருங் கயிலை சேர்ந்தாள். (௬)

கண்டபோ ரிடங்கள் சித்தர் சாரணர் கணப்பி சாசர்
மண்டிய வியக்கர் வானோர் தானவர் [10]மற்றுந் தாற்று
மிண்டுகள் பேசிச் செல்ல விசயமா மகுட வல்லி
சண்டவெங் கோபத் தோடுந் தழல்விழித் தெதிர்ந டந்தாள். (௭)

வெந்திறன் [11]ஞாட்பி லேன்ற வீரர்க ளாரரு ராகி
முந்திய திறங்கள் விட்டு முரசு [12]மாயுதங்கள் விட்டுப்
பந்திவா கனங்கள் விட்டுப் பட்டன பட்டுப் போந்து
சுந்தரன் கழலில் வீழ்ந்து துதித்துநீ டியாதுச் சொல்வார். (௮)

௩. வெந்நிட - புறங்கொடுக்க; வென்றி: விகாரம். ௪. திசைவிசயம்-திக்கு விசயம்.

௫. மதுரைமன்னன் - சோமசுந்தரக்கடவுள்; ௬: ௭. தாள் வரை - மலையின் அடி; 'பாதசயிலம்' என்பர் வடநூலார். மதுரைமன்னன் இருந்தான்.

௬. கொம்மை - வட்டம்.

௭. திற்று - செருக்கு. மிண்டுகள் - தருக்காற் சொல்லும் சொற்கள். சண்டவெங்கோபம் - மிக்க கோபம்.

௮. ஞாட்பு - போர்க்களம்.

(பி - ம்.) 1'தலைவனை' 2'இக்கிலத்திடை' 3'கொண்டல' 4'மன்னர்கண்டா' 5 'நிற்பார்' 6 'முறைய' 7 'கொள்ளவாருசையாய்' 8'தாழ்வரை' 9 'செம்மலே யென்ன' 10'மற்றுமுற்று' 11'ஞாட்பினியற' 12'ஆயுதகைமற்று'

### வேறு.

தீர மிக்கமும் முலைசி றக்குமோர் தெய்வ மாதராள் சிறி¹வந் தெதிர்த் தார்விலத்தில்லே றெதிரெ ணக்கெனு வரியவத்திரங் களை²வி டுத்திடும், போர்மு கத்துமென் முறுவல கூருமுன் பொலிவ ழிந்துநம் படைமு றிந்தவா, றோரி டத்திலுங் கண்ட தில்லரா வுலகின் மண்ணிலவான் மிசையி லென்றனர். (கூ)

அன்றி னர்புரங் குன்ற வென்றவில் லரிய சேவகன் முறுவல் செய்திடா, நன்று நன்றுசொல் கின்ற தின்றுபோய் நாடு காண³வந் நாரி யாரையாம், வென்று மேவுவ மஞ்ச லஞ்சலீர் வெய்து றாதிரு மென்று ⁴தான்றிமுன், னின்ற சேனையைத் தள்ளி ⁵யெய்தினு னீடு மன்மதன் சேனை யன்னவை. (கO)

### வேறு.

அரிவையைக் கைப்பி டிப்பா னாசையி னீறு சாத்து
வரையிலார் காதது மேவிேனர் ⁶வன்னவெஞ் சிலையும் வாங்கிப்
பொருபடை நடுவு செல்லப் புரிகுழ லொருவ னம்மேல்
வருவதென் மதியா தென்று வாதவள பூசல் வேட்டு. (கக)

இறைவனைக் காணு முன்ன மிருமைடமும் முலையி லொன்று
மறைதல்கண் டஞ்ச மித்து மானம்வந் தொலகி நிறபத்
துறைபட முன்னஞ் சொன்ன மந்திரி யிவனே தோலா
மறமலி மாமீத யுன்றன் மாமண வாள னென்றான். (கஉ)

அப்பொழு திகலசெய் யாத வாங்கவே ⁷யிகலக் கண்டே
யொப்பிலாள் வருத்தங் கூர முறுவல்செய் துலமை யில்லீர்
கைப்பிடிப் பதறமீக வந்தேன் கருத்தறி கிலலே ⁸னின்று
தப்பிலவேவள் பொல்லான் வெறமேபா தனாநடி விலேயோ ⁹வன்றே. ()

கொங்கவி ழலங்கற கூந்தற் கொடியிடை யிரு மங்குப்
பங்கய ¹⁰முகுளந் தன்னைக் கொங்கையாப் படைத்த ¹¹வேதா
வங்கது கண்டு கண்ட தலருமென் றச்சங் கூர்ந்தோ
திங்களை வதன மாகப் படைத்தனன் செப்பீ ரென்றான். (கச)

---

கூ. கண்டது இல் - பார்த்ததில்லை.

கO. அன்றினர் - பகைவர். அஞ்ச - அஞ்சற்க

கக. வரை வில - மலையாகிய வில. புரிகுழல்: எழுவாய்.

கஉ. இருமை - பெருமை, (திருக்க. கஎ.) மந்திரி: எழுவாய்; அவன் சொல்லியதை, கூ: அ - ஆம் செய்யுளாலுணர்க.

கங. முறுவல செய்தவர், சிவபெருமான.

கச. முகுளம் - அரும்பு.

(பி - ம்.) ¹'வந்தெதிர' ²'விடுத்திடும்' ³'வன்னரியாரை' ⁴'தன்றியே' ⁵'யினன்' ⁶'வன்ன' ⁷'இகல செயக்கண் டொப்பிலா வருத்தங்கூர்ந்து' ⁸'னன்று' ⁹'வின்றே' ¹⁰'முகிளக' ¹¹'வேதன்'

பொருவருந் திறங்கள் வல்லாள் புகழினு ணிறைந்தாள் போதிற்
றிருவினு முருவ மிக்காள் சிறிதுமென் முறுவல் கூர்ந்து
[1] மருமணி யிதழி யந்தார் வள்ளன்மேற் கடைக்கண் வைத்தாங்
கிருவிலை நோக்கி மெல்ல வியம்புவா ணயங்கள் கூர. (கரு)

வேறு.

மன்னியதென் புலத்திலங்கும் பாண்டிநாட்டு வளமைதரு மாம
துரை நகரென் பேரூர், தன்னிலைசேர் தந்தையர சுரிமை தந்து நனு
கிறைன் [2]வானாட்டென் னலவ யாயுங், கன்னிதனக் கானமண வாளன்
றன்னைக் [3]காணுமா றென்றென்று கலங்கு கின்றூ, ளின்னல்கெட
மீனமதி யுத்த ரத்தங் கெழுந்தருளி மணந்தருளு மென்றாள் போற்றி.

வென்றிதரு புகழுடையா யநங்க வாழ்வே விளம்பியதே செய்
வலினி மெலியே யுள்ள, மென்றுவாங் கொடுத்தருளி யிறைவன்
போக வின்பமுறு தடாதகைதன் பெரிய நாட்டுச், சென்றுவளந் தரு
மதுரை நகருட் புகுந்து செய்திபயந் தவட்குநயம் பயக்கச் செப்பி,
யொன்றியநன் னலங்கடரும் பெருங்கல் யாணமுறச் செய்வாரொருப்
பட்டா ணலப்பட் டாங்கு. (கஎ)

வேறு.

காசில்வா னகல முட்டக் கனகக்காற் பந்த ரிட்டுத்
தூசுபட் டாடை யான்மேல விதானித்துத் தூபந் தீபந்
தேசொளி விளங்கு பாலை செறிநிறை கரகம் வைத்து
மாசில்வெண் டாள மாலை மாணிக்க மாலை நாற்றி. (கஅ)

நிறைபனி நீரொ டுத்து நிலந்தொறுந் தெளித்து வாச
நறுமலர் சுண்ணம் பொற்பூ நவமணி கலந்து சிந்தி
மறுவறு சமிதை நெய்பால பாலிகை பரப்பி மாசி
லறுகொடு தருப்பை சூட்டி யட்டமங் கலங்கள் வைத்தார். (கசு)

தோரண நாட்டி யெட்டுத் திசைகளுந் தொழில்சேர் செம்பொற்
பூரண குடநி ரைத்துப் பூகநீள் [4]கதலி நாட்டி
வாரண நெருங்கும் வீதி மதுரையிற் சிறக்க மிக்க
காரண முதல்வன் காணக் காவண மலங்க ரித்தார். (உ0)

---

கஎ. பயநதவட்கு - தாய்க்கு.

கஅ. சுபகாலங்களிற் பூரணகும்பத்தின்மீது கமுகம்பாளைகளைச் செருகி வைத்தல் மரபு; "கீழ்பாற் றிசையின் மிசைவைத்த, வெள்ளிக் கும்பத் திளங் கமுகின் பாளை போன்று விரிகதுளதால" (கம்ப. மிதிலை. எஉ.)

கசு. அறுகு - மங்கலதிரவியங்களில் ஒன்று.

உ0. காரணமுதல்வன் - பரமசிவன்; "காரணவாளை பேத்தி" என்றார் முன்னும்; திருநாட்டு. ரு.

(பி - ம்.) [1] 'மருமலரிதழி' [2] 'வானகாட்டென்னல்யாயுங்' [3] 'காணுமா றெங்கென்று' [4] 'கதலிகட்டு'

பல்லியங் கறங்க வெண்ணில் பார்த்திபர் வழுத்த முத்தச்
சொல்லரு மால வட்டந் தோகையர் வீசச் செம்பொ
னல்லசா மரையி ரட்ட நாயகன் வரவு பார்த்து
வல்லிநல் லணியாற் பொங்கி மாசிலா சனத்தி ருந்தாள். (உ௧)

நந்திமா முனிவன் றண்டோ தரனென நாமம் [1]பூண்டோர்
வெந்திறற் பூத மாகி வெண்மதிக் குடைநி ழற்ற
வந்தணர் குணலை கொள்ள வரிவையர் வளைகள் சிந்தச்
சுந்தரன் வந்தான் முன்னஞ் சொன்னநா டன்னி லாங்கு. (உ௨)

வேறு.

நயந்தரு[2]தாண் மிசைவீரக் கழல்புனைந்து நன்கரத்துக் கடகங் கணஞ்செறித்து, வியந்ததிரு [3]மார்பில்விடு நாண்முத் தாரம் வெண்புரிநூ லணிந்தணிகுங் குமந்தோய் தோளிற, நயங்கியசண் பகமாலை கழுநீர் மாலை சாத்திமருங் கார்த்தகுகி றசைழவார் காதுற, புயங்க வொளி மாணிக்கக் குழையிலங்கப் புதுமலர்வா சிகைமுடியிற பொலிய வந்தான். (உ௩)

வேறு.

மதிநெறி மாதை வேட்பான் மாமணக் கோலங் கொண்டு
கதிதர வந்தோன் மிக்க கடிமணங் காண்பா னெண்ணி
யிதமுறு தேவர் முன்னா விருங்கண நாதர் முற்றும்
புதுமையின் வந்தார் சூழ்ந்து சயசய வென்று போற்றி. (உ௪)

ஆதிநான் முகன்மா லேத்த வரம்பையர் வாழ்த்தெ டுப்பச்
சோதிசேர் கானம் பாடத் தும்புரு நார தாதி
தீதறு சடங்கு மைந்தன் [4]செலுத்தநன் முகுத்தத் தேற்ப
மேதகு மாதை வேத விதிப்படி மன்றல் செய்தான். (உ௫)

---

உ௧. ஆலவட்டம் - விசிறி; இது தாலவிர்த்தமென்னும் வடமொழிச் சிதைவு. இரட்ட - மாறியசைய.

உ௨. குணலை - ஒருவகைக்கூத்து; அது பல்வரிக் கூத்தைச்சார்ந்தது: சொன்னநாள, பங்குனி உத்தரம்.

உ௩. தகிறும் குழையும் இலங்க. வாசிகை - கோத்தமாலை.

உ௪. மதிநெறி - சந்திரகுலம். சயசய-சயமுண்டாகுக, சயமுண்டாகுக.

உ௫. நாரதாதிகள் கானத்தைப்பாட. மைந்தன் - முருகக்கடவுள்; இவர் திருமணச்சடங்கு நடத்தியதை, "மருளாரும் பலத்தொடரா மாற்றியதென் னன்மகளாய் மவுலிசூடிப், பொருளாரும் புனிவிசயஞ் செய்தாசு ெசலுத்திய மும் முலைப்பூந் தேனைத், தெருளாருந் தமிழ்மதுரை நாதன்மணஞ் செயவிதி நாற் சடங்கு செய்தே, யருளாருங் கடம்பவனத் துறைகுமர குருபரனை யகத் துள் வைப்பாம்" (கடம்ப. பாயிரம், ௫) என்னும் திருவிருத்தத்தாலு

(பி - ம்.) [1]'பூண்டோரு' [2]'தாள்மிசை' [3]'மார்பில்விடும்' [4]'செலுத்தினன் முகூர்த்தத்தொப்ப'

சேர்ந்தவொண் பாண்டி நாடு செய்தமா தவத்தி னானும்
[1] வாய்ந்தமா மாதைப் பெற்ற மாதுறு தவத்தி னானு
[2] மார்ந்ததொன் முறைமை யிற்பெண் ணாயக மாகா தென்று
[3] வேய்ந்தபொன் முடிக வித்தான் விசயமண் டபத்தி ருந்து. (உசு)

பெருமை[4]யே தருங்கோ வென்னும் பெயர்தனை தாத லாலே
குறைகட லுலகின் மிக்க [5]கோமாற வருமை னானென்
சுருதிமூ வுலகுங் காக்குஞ் சுந்தர மாற னென்றே
மருவிய வெழுத்து மிட்டான் வாய்மனத் துக்கு மெட்டான். (உஎ)

அருட்புனை நீதி யோங்க வருச்சனை புரிதல் வென்றி
[6]யுருத்தகு மரசர்க் கென்று முரித்தென வுவமை யில்லா
[7] விருக்கறை சிவலிங் கத்தை யிம்மையே தருவா னென்றே
புரைத்தவா கமத்திற் பூசித் தருளினா னுலகங் காண. (உஅ)

ஆகத்திருவிருத்தம் - கஉரு.

---

முணர்க. இதுபற்றியே, 'சடங்குக்கத்தன்' என்பர்பின்னும்; எ-:-. "நான் கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை, யறுகால் குளிக்கு மதுத்தொடை யேந்த, முட்டாட் செம்மலர் நான்முகத் தொருவ, னெண்ணிநெய் யிறைத்து மணவழ லோம்பப், புவியளந் துண்ட திருநெடு மாலோ, னிருகர மடுக்கிப் பெருநீர் வார்ப்ப, வொற்றை யாழியன் முயலுடற் றண்சுடராண்டம் விளர்ப்பப் பெருவிளக் கெடுப்ப, வளையாப் புலன்கொள் விருசைய ரெண்மரும், வளையிற் கருவியிற் பெரும்புகழ் விளைப்ப, முனிவர் செககரஞ் சென்னியாக, வுருப்பசி முதலோர் முன்வாழ்த் தெடுப்ப, மும்முலை யொருத்தியை மணத்தல காணட, கூடற் கிறைவன்" (கல். ௩௪.)

உசு. "பெருநீர் வையை வனிநீர்க் கூட, லுடலுயி ரென்ன வறைதரு நாயகன், கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி, மைவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து, விரிசடை மறைத்து மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி யெடுத்து, வழுதி யாகி முழுதுல களிக்கும், பேரரு ளாளன்", "மதுரை மாநகர்ப் பூழியனாக்க, கதிர்முடி கவித்த விறைவன்" (கல். உ,உரு.)

உஎ. முடிமன்னர்களின் பெயர்களில் 'கோ' என்பதைச் சார்த்திக் கோச் சேரன், கோச்சோழன், கோப்பாண்டியனென வழங்குதல் மரபு. எழுத்து - கையொப்பம். சோமசுந்தரக்கடவுள், பாண்டியராசராக வீற்றிருந்தபொழுது, 'சுந்தரமாறன்' என்று கைச்சாத்திட்டருளினர்.

உஅ. இருக்கு - வேதம். "மதிகுலம் வாய்த்த மன்னவனாகி, மேதினி புரக்கும் விதியுடை நன்று, ணடுநூர் நகர்செய் தம்பவக துடைக்கு, மருட்குறி நிறுவி யருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை" (கல். கசு.)

(பி-ம்.) [1]'வாழ்ந்த' [2]'ஆய்ந்த' [3]'வேந்தர்' [4]'ஏர்தரும்' [5]'கோமாறன்மருக னான்' [6]'உருத்தரு' [7]'இருக்கினற்சிவ'

# ரு.—பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடல்.*

பாதிமா துடையான் வேந்தர் பாவையை மணந்த [1]பின்றை
யாதர வயன்மா லாகண் டலன்முத னிறைவு செய்து
நீதியின் விடுத்து மற்று நின்றவர் தம்மை நோக்கிச்
சோதிசேர் நன்னீ ராடு மென்றலுந் தொழுதெ ழுந்தார். (க)

முனிவர்[2]கந் தருவர் நாகர் சாரணர் சித்தர் முன்னாக்
கனலெழு பசியாற் [3]போய்ப்பொற் கமலவா வியினீ ராடி
இனியதஞ் சடங்கு செய்தே யேத்தரு நீறு சாத்தி
யனைவரும் வரமுன் வந்த வநந்தமா முனிவன் சொல்வான். (உ)

வந்துமா மறைகள் பாட மகிழ்வுட னுமிழ் தில்லை
யெந்தைபொன் னம்ப லத்தி னேத்தருங் கூத்தை யேத்திப்
புந்தியா லிறைஞ்சி னல்லாற் [4]புசிப்பதோர் நாளு மில்லை
சுந்தரா போவ லங்க னென்றடி துதிப்பக் கண்டு. (ங)

நீங்கரும் வெயிலா னோந்து நீபமா வனத்தில் வாவிப்
பாங்கர்யா னளவில் கால [5]முண்டிருந் ததுப ணிந்தீங்
கோங்கிய மகவான் வேட்டை யாடுவா னொருகால் வந்து
தீங்கற வளித்த செம்பொற் சிதள விமான மீதால். (ச)

---

க. ஆகண்டலன் - இந்திரன். நிறைவு - மகிழ்ச்சி.

உ. சடங்கு - நித்தியகன்மம். அநந்தமாமுனிவன் - பதஞ்சலிமுனிவர்.

ங. ஏத்தரும் - மேன்மையைத்தரும்; துதித்தற்கரியவென்றுமாம்.

ச. நீபமாவனம் - கடம்பவனம். இருந்தது, அளவில்கால முண்டு. பணிந்து அளித்த.

* "கொட்டிசைசுத வாடலாய்", "புன்சடை, பின்றயங்க வாடுவாய்" (திருஞா. தே.திருவாலவாய்), "குழகனே கோலக்கூடல் கூத்தனே" (தே.திருநா. "பதஞ்சலிக்கருளிய பரமநாடக", (திருவா. கீர்த்தி: கஙஅ), "காடிருமுனி வர்க் காடியபெருமான்", "ஒருபாற் பசுங்கொடி ......கூடன் மாநக ராடியவமு த", "முனிவ ரேமுற வெள்ளியம் பொதுவின், மனமுங் கண்ணுங் களி யக் குனிக்கும், புதிய நாயகன்" "எங்குள வுயிரு மின்ப நிறைந்தாட, நாடக விதியோ டாடிய பெருமான்", "கூடல், வெள்ளியம் பொதுவிற் கள்ளவிழ் குழலொடு, மின்பநடம், புரியுந் தேவ நாயகன்", "வெள்ளியம் பலத்துட் டுள் ளிய பெருமான்", "இருந்தமிழ்க் கூடற் பொருந்தவர் காண, வெள்ளியம் பலத் துட் டுள்ளிய ஞான்று" (கல். கக, உ0, உஉ, உரு, ங0, ஙசு, எக.)

(பி - ம்.) 1'பின்னர்' 2'கந்திருவர்' 3'பொங்கி', 'போகிக்' 4'பொசிப்பது' 5 'உண்டிருப்பது'

திக்குறுந் தலங்க டம்முட் சிந்தையித் தலத்தே செல்லு
மைக்குழன் மடவா ளோடும் [1]வளம்பட விதன்கண் டென்பான்
மிக்கநீ காண்டி யென்று வெள்ளியம் பலத்துக் காணத்
தக்க[2]நற் சொக்கன் சொக்கத் தாண்டவம் புரிந்தா னன்றே. (௫)

பா[3]முனி வரருண் மிக்க பதஞ்சலி முனிகண் ணுா
வாமுறக் கண்டா னந்த மகிழ்ச்சிமாக் கடலுண் மூழ்கி
யுரைகெழு துதியா லேத்தி யுண்டிநல் விடையிற் போகப்
புரையற யாரு முண்டு போயினு ரருளை வாழ்த்தி. (௬)

வேறு.

மதஞ்சொரிகொல் குஞ்சரவி ருஞ்சரும [4]கஞ்சுகவ ரன்சயில வஞ்சி கொழுநன், விதஞ்செறிபு ரஞ்சுடநெ டுஞ்சரம்வி டுஞ்சதுரன் விஞ்சையர்வி ரிஞ்சரிறைவ, னிதஞ்செய்கொடு நஞ்சவுர கஞ்[5]சசிமி லேஞ்சசடை யெஞ்சலில சஞ்ச லனுளம், [6]பதஞ்சலிநி றைஞ்சடிமி றைஞ்சிடந டஞ்செய்தப ரஞ்சுடர்த ருஞ்சொ ருபமே. (௭)

தலம்புகழ் தரும்............................கடம்பவனமே.*

ஆகத்திருவிருத்தம் - ௧௧௨.

---

௫. வெள்ளியம்பலம்: "கொன்றையஞ் சடைமுடி மன்றப்பொதியிலில், வெள்ளியம் பலத்து" (சிலப். பதி. ௪௦-௪௧.) சொக்கன்: "ஆலவாய்ச் சொக்கன்", "ஆலவாய்ச் சொக்கனே" (தே. திருஞா.) சொக்கத் தாண்டவமென்பது, சாத்திக்கூத்தின் வகையினுள் ஒன்றான சுத்தநிருத்தம்; சுத்ததாண்டவமென்றும் கூறப்படும். இது, நாற்றெட்டுக் கரணமுடைத்தென்பர்; (சிலப். பக். ௮௦.)

௬. பதஞ்சலி முனிவர் செய்ததுதி, சுலோகரூபமாக வழங்குவதுடன் அன்பர்களாற் பாராயணஞ் செய்யப்பெற்றும் வருகிறது.

௭. கஞ்சுகம் - சட்டை. இதஞ்செய் அசஞ்சலன். உளம் நிறைஞ்ச - மனமகிழ்ந்து.

* இச்செய்யுளின் முழுப்பாகத்தை இப்புத்தகத்தில் ௪ - ஆம் பக்கத்திற் பார்த்துக்கொள்க.

(பி - ம்.) 1 'வளன்' 2 'நஞ்சொக்கன்' 3 'முனிவரினுமிக்க' 4 'கஞ்சுகன் வருஞ்சயில' 5 'சசிமலேந்த' 6 'பதஞ்சலனிறைஞ்சடி'

## ௯.—பூதமுண்ட திருவிளையாடல்.

பொலிவின் வந்தவர் யாவரு நிறைவுறப் [1]புசித்தே
யலகி னன்கொடு [2]போயின ரரும்பெரு விழாவின்
றலைவில் பல்வளத் தொகுதிகண் டுறத்தனை மதித்துத்
தலைமை சேரெழின் மடவர றலைவனுக் குரைப்பாள். (௧)

பொருவி லாதவெஞ் சோற்றுயர் பொருப்பினைக் காட்டி
யிரவி தீமதி யுடுகுல மிராசிக டிதிக
ளரிய தேவர்கண் முனிவர்க ளிராக்கத ரசுரர்
பெரிய மானிட ரியக்கர்விச் சாதரர் பிசாசர். (௨)

உரக நாயக ராதியர் யாவரு முண்டுஞ்
சொரியு மிவ்வரை யின்னமுந் தொலைந்ததோ வில்லை
யருளி னுனிது தொலைந்திட வயில்பவ ரொருவர்
வரவு காண்கிலே னுண்பவர் [3]யாரினி மண்ணில். (௩)

[4]தேசி லங்குநின் றொடுபெருந் திரள்வரு மென்றே
யாசை கூரயான் [5]மடைமுது நூல்வழி யமைத்த
மாசி லோதனந் தெய்வவான் வழுதிகேள் கிடப்பி
னாசு மேலினி யென்செய்வ துரைத்தரு ளென்ன. (௪)

வேறு.

மங்கையங் கயற்கண் ணிக்கு வாய்த்தவன் முறுவல் கூரா
விங்கி[6]யா வரும ருந்தி யேகின ருயர்வான் முட்டப்
பொங்கிய [7]செங்கெ லன்னப் பொருப்பையார் தொலைப்பார் துங்கச்
செங்கயற் கருங்கட் பச்சைத் தேவிசொல் லென்று முன்னம். (௫)

---

க. நன்கு - இன்பம். உறத்தனை மதித்தென்று இங்கே கூறியதுபோல, "தன்னிக ரில்லை யென்னுந் தடாதகைவலி" என்பர் பின்னும்; எ.

உ. உடு - நட்சத்திரம்.

௩. இவ்வரையென்றது, சோற்று மலையை.

௪. முதுமடைநூல்-முதிய பாகசாஸ்திரம். தெய்வவான் வழுதி: விளி; 'தெய்வப்பாண்டியன்' (கட. க.)

௫. தேவி: விளி.

(பி - ம்.) 1 'பொசித்தே' 2 'போயபின்' 3 'யாவரிம்' 4 'தேசிலங்க' 5 'மடைமுதனூல்','மறைமுதனூல்' 6'யாவருந்திரண்டே' 7'செல்வச்சொன்றிப் பொருப்பை'

சார்ந்தவெம் பசியுந் தண்ணீர்த் தாகமு மலைப்ப னொந்து
காய்ந்தபே ருதரக் குண்டோ தரனெனுங் கடிய பூதம்
வாய்ந்தநீள் கவிகை கொண்டு வருதலா விளைத்தே [1]னிந்த
வார்ந்தவெண் சொன்றிக் குன்றை யருளென வணைந்த தாங்கு. (௬)

இன்னல்கூர் பசியி னானென் றிடருறு [2]மெண்மை யும்பின்
[3]றன்னிக ரில்லை யென்னுந் தடாதகை வலியும் போக்கத்
தென்னவன் மதுரை மன்னன் சிறிதுளே [4]முறுவல் கூரா
வுன்னுடைப் பசிதான் தீர வுண்ணென வருள்சு ரந்தான். (௭)

வெள்ளிமால் [5]வரையே போலும் [6]வெண்மையு மிமவான் போலுந்
தெள்ளிய வுயர்வு முள்ள சோறதினைச் சிறிது போழ்தி
னுள்ளதே னெய்பால வாவி யுடைத்துவிட் டிருகை யாலு
மள்ளியுண் டதும டந்தை யதிசயித் [7]தச்சங் கூர. (௮)

விண்ணுயர் பூத முண்ணு [8]மிதவையு மிகவு மாழ்ந்த
தண்ணிய வயிறுங் கண்டு சங்கர னேவ லாலிம்
மண்ணிலோர் பூத முண்டல் கண்டன மற்று மொன்று
நண்ணுமே னூழும் போதே முண்ணவென நயந்தார் யாரும். (௯)

ஆகத்திருவிருத்தம் - ௨௦௧.

---

## ௭.—அறமழைத்த திருவிளையாடல்.

சொன்றிமலை [9]துய்த்துமுத ரத்தெழுசு டர்த்தீ
யன்றைவட வைக்கனலெ னப்பெரித லைப்பக்
[10]குன்றினைநி கர்த்திடு[11]கு றட்டனுவ ருந்தா
நின்றுசிவ னைப்பரவி நேர்படவு ரைக்கும். (௧)

தேவர்தொழு தேவவருள் சேரிறைவ முன்னா
ளோவிறிரை[12]வாரியிய டுக்கலையு வந்தா
யாவியுறு சிற்றுணவி னாலறவி ளைத்தேன்
மேவுபசி யின்னுமெனை விட்டதிலை யின்றே. (௨)

---

௬. சொன்றி - சோறு. பூதம் அலைத்தது.
௭. எண்மை - எளிமை. ௯. மிதவை - சோறு.

(௭)

௧. துய்த்தும் - உண்டும். குறள் - பூதம்; தனு - உடம்பு.
௨. அடுக்கலை-மடைப்பள்ளி. இறைவனுக்கு உணவாக விடத்தைக்கொடுத் தமையாற் கடல் அவருடைய அடுக்கலையெனப்பட்டது. ஆவி-புகை. அற-மிக.

(பி - ம்.) 1 'முற்றவார்த்தனன்' 2 'மென்மை' 3 'தன்னிகரிலாதவந்தத்' 4 'முறுவல்கூர்த்தான் குன்னிடைத்தாகக்' 5 'மலையே' 6 'வெள்ளையும்' 7 'அகமுட் கூர' 8 'முனைவயு' 9 'துற்றும்' 10 'குன்றினம்' 11 'குறட்டனும்' 12 'வாரிதிகடுத் ததனை'

என்றுமுறை யிட்டலற விறுளள வுந்தாழ்
சொன்றிகழ் நான்குகுழி தோன்றியிட [1]முன்னஞ்
சென்றுகயி லைக்குவடெ னத்தனிதி ரட்டா
வென்றியின்வி ழுங்கியது மேதினிவி யப்ப. (ங)

ஆங்கதுவி ழுங்கியபி னவியெழு தண்ணீர்த்
தாங்கரிய தாகமுற லாலுட[2]ற ளர்ந்தூர்ப்
பாங்குள[3]ம டுக்கிணறு வாவிகள்ப ரந்தே
தேங்குபுன லுள்ளனகு டித்ததுநி கைப்ப. (ச)

இப்படிகு டிப்பவுமெ ழுந்தபரி தாப
வெப்பமம ராமலிறை வாவினையி னோறுக்
கப்பினைய ளித்தருள கத்தடிமை யென்றே
செப்புமுன ழைத்தனர்செ ழும்புனசி யாறு. (ரு)

கோகனக வாவிகள்[4]கு லைத்தணைமு றித்தே
யோகையுற வீசுதிரை யோடுநுரை [5]சிந்தி
மாகமுற நீரிரும ருங்கினுமெ ருங்கா
வேகமொடு வந்ததெழ வேகவதி யாறு. (சு)

வேறு.

கண்டனன் காட்டக் குண்டோ தரன் [6]கேடி இயாற்றுட் புக்குத்
நின்டிறற் பேழ்வா யங்காந் துறிஞ்சினன் சென்ற நீரு
[7] மண்டுறு நீருஞ் சென்று மணலெழக் கண்ட மண்ணோர்
பண்டையின் வியந்தார் பாவை பழிச்சிகள் பொறுத்தி யென்று. (எ)

---

ங. ஈறு - பூமியின்கீழெல்லை. அன்னக் குழிமண்டபமென்று ஒருமண்டபம் மதுரையில மேலைச் சித்திர வீதியிலுள்ளது; பூதமுண்டதிருவிளையாடல் விழாநடைபெறுதற்கு இடமாகவுள்ளது; இதிற்பலதெய்வவடிவங்கள் உண்டு; இதிலிருந்த குண்டோதரவடிவம் இக்காலத்தில், திருக்கல்யாண மண்டபத்தில வைக்கப்பெற்றுள்ளது.

ச. மடு - மாணிடராக்காத நீர்நிலை.

ரு. பரிதாப வெப்பம் - மிக்கவெப்பம். அமராமல் - அடங்காமல். இறைவனைப் பூசிப்போர் முதலியவர் அகத்தடிமை யெனப்படுவர்; "அகத்தடிமை செய்யு மந்தணன்றா னரிசிற் புனல்கொண்டுவந் தாட்டுகின்றான்" (தே.சுந்தர. அரிசிற்கரைப்புத்தூர்.) அடியேன் அகத்தடிமையென ஒருசொல் வருவிக்க.

சு. எழ - மிக; "கருணைகூர்ந் தெழமுழங்கி" (சச: ருரு.) வேகவதியாறு - வையைநதி.

எ. சென்றநீர் - கிழக்கேசென்ற வெள்ளம். மண்டுறு நீர் - மிக்குவரும் வெள்ளம்; மண்தறுநீர், மணணிலே ஊறுகின்ற நீருமாம்.

(பி - ம்.) 1'ஒன்கு' 2'தளர்ந்தெம்' 3'மடுக்கள்கிணறுவிகள்' 4'குலைத்தலை', 'குலைத்தணி' 5'சிந்த' 6'கடியாற்றுட்' 7'மண்டுநீருஞ் சென்றங்கண்'

ஆரவுந் தொலையா வாழ்ந்த குழியுழை யயினி முற்றும்
வாரிதி யுருவா யாற்றின் வரும்பெருஞ் சலில முற்றுஞ்
சேரவுண் டுறிஞ்சி யொல்லைத் தேக்கிடு மவன்ப ணிந்தான்
[1] சாரரு மன்றல் செய்து சகநெறி யாள்வோன் றுளில். (அ)

கைத்தொழிற் பூதங் கண்ட குளமெனக் [2]கண்டெய் தென்று
வித்தகன் பணிப்ப வெங்குங் [3]கண்டது வியப்பப் பூதம்
பத்திசேர் மணற்ப ரப்பும் பந்தர்நீ ராவி வாவித்
தத்துதெண் டிரைக்க ரைக்க ணிருந்தனன் சடங்குக் கந்தன். (கூ)

வாவியின் பெருமைக் கேற்ப வளமலி [4]கழனி கண்டு
தாவில்பல் [5]பதியுங் கண்டு தலந்தொறு நாட தாக்கி
யோவற [6]விளக்க விப்பா லுயர்ந்ததோர் பந்தரை யங்கட்
காவண வாவிப் பேராற் காவண நல்லூ ரென்றார். (கo)

நாவிருங் குழியி லன்ன நாற்பெருந் திரளை யாக
மேலெழ விழுங்கித் தண்ணீர்த் தாகத்தான் மெலிந்து பூத
மோலிடக் கண்டு வேக வதியினை யொல்லை யங்கட்
சாலமுன் னழைத்தா னியாவ னவனடி சரண மன்றே. (கக)

ஆகத்திருவிருத்தம் - உகஉ.

---

அ. ஆரவும் - உண்ணவும். அயினி - சோறு. வாரிதியுருவாய்: "தெண்டி வருநதி" என்பர்; ஙஅ: ருங.

கூ. பூதங்கண்டகுளம்: இது திருப்பரங்குன்றத்துக்கு வடக்கேயுள்ள தோ ரேரி; 'தென்காற்கம்வாய்' எனவழங்கும். குண்டோதரனுகிய பூதத்தால் வெட்டப்பட்டது; 'இதன்கரை பூதங்கண்டகரை' என இக்காலத்து வழங்கும். இதன் சமீபத்தில் 'கூடைதட்டிப்பறம்பு' எனச் சிறியமலையொன்றுண்டு. வெட்டிய மண்ணை யெடுத்துக் கரையிற் கொட்டியகூடையைக் குண்டோதரனுகிய பூதம் இதில் தட்டியதென்பர். கண்டது - செய்தது. பந்தரையும் நீராவியை யுமுடைய வாவி. சடங்குக் கந்தன் - திருமணச்சடங்கை நடத்திய முருகக் கடவுள்; ச: உறு - ஆம் செய்யுளின் குறிப்பைப்பார்க்க.

கo. காவணம் - பந்தர்.

கக. ஓலிட - முழங்க. "பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு மணவை பொருந்திய வக்காட், சொன்றிப் பெருமலை நின்றனி தொலைத்த, காருடற் சிறுகையைக் குறைந்தாட் பாரிட, மாற்றா தலந்த நீர்வகை படக்க, மதிநிரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப் பெருங் கடவுள்" (கல். கசு.)

(பி - ம்.) 1 'சார்வரு', 'சார்வுற' 2 'கண்டிடென்று' 3 'கண்டுமீண்டது வெம்பூதம்' 4 'கழனிநாடுக்' 5 'பதிகண்டிப்பால்' 6 'விளக்குவித்தான்'

## அ.—கடலழைத்த திருவிளையாடல்.

வயமுறு மன்னவ ளுகும் வன்னல்பின்
னயஞெடென் செய்தன னெனா வின்றனிர்
பயனுறு முனிவிர்காள் பரவ சத்தைவிட்
டுயரதி சயமுன [1]துரைப்பல் கேண்மினோ. (க)

கனவரை வில்லினன் கதம்பக் [2]கானினன்
றனதுயர் மனத்தினை நாளிற் றாழ்குழல்
புனைவழி பாட்டினாற் புவியில் வேறொரு
நினைவறத் தன்னுடை நினைவி னாக்கினாள். (உ)

சதமுறை துதித்தொரு நாட்ட னித்துநின்
[3]னதர்படு மடியனேன் றாய மங்கலி
யுததியின் மூழ்குவா னுவகை கூர்ந்தன
ளிதுதிரு வுளத்தடைத் திரங்கி டென்றனள். (௩)

[4]நயந்தவை யாவையு நல்க வல்லவன்
பயந்தரு காரியம் பகரக் கேட்டுள
மியைந்துகே ளாதுபோ லிருப்ப நாயகி
வயங்கொளி [5]மதிமுகஞ் சால வாடினாள். (ச)

மற்றவண் மதிமுக வாட்டங் காண்டலுஞ்
சற்றுளே நகைசெய்து தரும நாயகன்
முற்றுநா மிருந்தது [6]மோன மாகவுஞ்
சொற்றருந் திருமுகச் சோகங் காணவே. (ரு)

---

க. பூதத்திற்கு அன்னகுழியும் வையையும் அழைத்தளித்ததுபற்றியும், மாமிக்கு எழுகடலழைப்பது பற்றியும் இறைவனை வள்ளலென்றார். பரவசத்தைவிட்டுக் கேண்மின்.

உ. கதம்பக்கான் - கடம்பவனம். நாளில - காலக்கிரமத்தில்; கஉ: கக. மனத்தினைத் தன்னுடை நினைவின் ஆக்கினாள்.

௩. சதமுறை - பலமுறை; ௩௦: ௩க. அதர்படும்-வழிப்படுகின்ற. தாய் அமங்கலி. உததி-கடல். திருவுளத்தடைத்து - அங்கீகரித்து; திருவுளம்பற்றி.

ச. பயம் - பிரயோசனம்.

ரு. மோனமாக இருந்தது. முகச்சோகம் - முகவாட்டம்.

(பி - ம்.) [1]'உரைப்பக்' [2]'கானவன்', 'காவினன்' [3]'அதர்வுறு' [4]'நயந்தன', 'நயந்தரு' [5]'தருமுகஞ்' [6]'மோனமாகியுன்'

மாதர்க டிலகமே மாசில் கற்புடைக்
கோதையே யென துளங் கொண்ட தெய்வமே
யேதநீ யொழி[1]யொழி யேழு வாரியு
மாதரத் தழைப்பல்கா ணெனவ ழைத்தனன். (௬)

தகநுரை சிதறிவெஞ் சண்ட வெண்டிரை
மிகலிவா னெடுபொரக் கலித்தி லங்குசெந்
தொகுமணி யொளியினாற் சிவந்து துண்ணென
மகர[2]மீ னெழவெழ வந்த வாழ்கடல். (௭)

பாங்குடை மதுரையம் பதியு ளோரெலா
[3]மாங்கவை வருதல்கண் டதிச யத்தொடுந்
தாங்கரும் பயத்தொடுஞ் சார்ந்து தாணுவே
யாங்களென் [4]செய்குவ மெனத்து தித்தனர். (௮)

[5]உற்றெருங் குறவரு முததி யாவையு
மற்புத னாணையா லங்கி மூலையில்
விற்பொலி கடலென விளங்கி முற்றிகழ்
பொற்புறு தடத்திடைப் புகுந்த மர்ந்தவால். (௯)

ஓதரு [6]மனோகர முடைத்த டாதகை
யாதரத் தடிபணிந் தருளை வாழ்த்தின
டீதிலேழ் கடல்களுஞ் சேர்த லாற்றடம்
பூதலத் [7]தெழுகட லெனப்பொ லிந்ததே. (௧௦)

ஆகத்திருவிருத்தம் - ௨௨௨.

---

௬. ஏதம் - துன்பம்.

௭. சண்டம் - வேகம்.

௯. அங்கிமூலை - அக்கினிமூலை. தடம் - சிவதீர்த்தம். "மாமி யாடப் புணரி யழைத்த, காமர் கூடற் கிறைவன்" (கல். ௨௯.)

௧௦. மனோகரம் - மகிழ்ச்சி. காஞ்சனமாலைக்காகவருவித்த ஏழுகடல்களும் தன்பால்வந்து அடங்கப் பெற்றமையின், சிவதீர்த்தம் இப்பெயர் பெற்றது; இதன் நிருதிமூலையில் மிகப்பழையதாகக் காஞ்சனமாலை கோயிலொன்று உள்ளது.

(பி - ம்.) 1'பொழிலேழு' 2'நீரெழ' 3'ஆங்கதுகண்டேண்டு' 4'செய்குவே மென' 5'உற்றெழுங்குற' 6'மனோரதம்' 7'எண்கட'

## ௬.—மலயத்துவசனையழைத்த திருவிளையாடல்.

மாண்டகு கடல்கள் கண்டு வழுத்திமுன் றுதிக்கு மாதை
யீண்டுநீ போயுன் மாதா வியைந்தபே ராசை தீரப்
பூண்டநல் வரங்க ணல்கும் புணரியின் மூழ்கு வித்து
மீண்டுவா வென்றான் மீளா வழிதா வல்லான் மெல்ல. (௧)

ஆங்கது கேளா முன்ன ரக[1]மகிழ்ந் தியாயின் பாற்சார்ந்
தீங்கொரு கடலா டற்கென் றெண்ணினை யீதொ ழிந்தின்
றோங்குமேழ் கடலும் வந்த வொருகணத் தெனது கேள்வன்
பாங்குறும் பெருமை யாலிப் பரவையு ளாடு கென்ன. (௨)

பரிவுகூர்ந் தருட்பெம் மானைக் கணவனா வுடைய பாவாய்
பொருவில்கா தலனோ டாதல் புதல்வனோ டாத லீறும்
வரிசையான் கன்றோ டாத லாடுத லன்றி வங்க
நரலையுட் டனிபுக் காடார் மடந்தைய ரென்ப ரென்றாள். (௩)

என்றியாய் மொழிந்த மாற்ற மிறைக்குவந் துரைத்தா டற்கு
[2]மன்றன்மா கணவ னில்லை மகவில்லை யென்ற ழுங்க
லொன்றுகா தலனோ டாடு முத்தம தீர்த்த மாக
வென்றியுன் றந்தை தன்னை யழைக்கின்றே மெலியே லுள்ளம். (௪)

அவையுறு துறக்க நீங்கி யவனிமீ திழிந்த வாறே
தவமுறு நம்ம மாமி [3]தணிவிலா [4]தரங்கெ டாமற்
புவிபுகழ் பெருங்கல் லோலப் புணரியின் மூழ்கச் சொல்லென்
றுவகைமா மடிக டம்மை யழைத்தன னுலகங் காண. (௫)

---

௧. வழுத்தி - சொல்லி; "வழுத்தீர் மதிச் செங்கண்மால்" (அழகர்கல. ௭௭). மாதா - தாய். புணரி - கடல்.

௨. பெருமையால் வந்த.

௩. காதலன் - கணவன். நரலை - கடல். மடந்தையர் ஆடாரென்பர்.

௪. யாய் - தாய். மன்றல - கலியாணம்.

௫. அவை - சபை. நம்ம - நம்முடைய; தனித்தன்மைப்பன்மை. கல்லோலம் - அலை. மாமடிகளென்பது மாமனாரென்னும் பொருளைத் தருவதொரு சொல்; "நின்பால் வந்தனன் மாமடி" (௨௨: ௧௨); "ஊத்தைத் தலைநீத் துயக்தொழிந்த வொருமா மடிக ளொருமுருட்டு, மோத்தைத் தலைபெற் றனைமயாட மூரிக் கபாடந் திறமினோ" (தக்க. ௪௧); "மாமடிகளிடு சாபமும்" (மீனாட்சி. அம்புலி. ௬.)

(பி - ம்.) [1]'மகிழ்த்தாயின்' [2]'மன்றமர்' [3]'தனிவிரதம்' [4]'அகங்கோடாமற்'

வேறு.

மண்டு செல்வ மலயத் துவசனைக்
கண்ட மானிட ரன்றிக் கணங்களுங்
கொண்டல் வண்ணனுங் கோகன கத்தனு
மண்டர் கோனு மதிசய முற்றனர். (௬)

வந்து போற்றுதல் கண்டு மகிழ்ந்துபோற்
[1] றந்த மாமகட் கன்புறக் காட்டியே
யுந்தை யோடுமுன் றனை [2]யுவப்புற
மூந்தை யாழ்கடன் மூழ்குவி யென்றனன். (௭)

ஏத நீங்கு தடாதகை யின்றுநீ
காதல் கூர்ந்த [3]கணவனொ டாடென
வாத ரித்த கணவனோ டாங்கவ
ளோத வேழ்கட லாடி யுவந்தனள். (௮)

மன்று ளுயக வாழ்ந்தனம் வாழ்ந்தன
மென்று [4]வாழ்த்தி யிறைஞ்சல்கண் டுத்தம
னன்று தன்னுல கீந்திட வாங்கவர்
சென்ற டைந்தனர் தெய்வத் தனுக்கொடு. (௯)

ஆகத் திருவிருத்தம் - ௨௩௧.

---

## ௧௦.—உக்கிரன்பிறந்த திருவிளையாடல்.

மன்னர்க் கரசன் மலயத் துவசன்
றன்னற் புதமண் முழுதுந் தனியே
பொன்னிற் [5]றிகழும் புரமீ தெனவே
[6]யன்னப் பெடையோ டரசாண் டனனே. (௧)

---

௭. உந்தை - உன்தந்தை.

௮. தடாதகை: எழுவாய்.

௯. தன்னுலகு - சிவலோகம். தெய்வத்தனு - திவ்யசரீரம்.

(௧௦)

௧. "ஈடோர் நகரென" என்பர் பின்; ௧௧:௫; "பூமியு மயோத்திமா நகரம் போதுமே" (கம்ப. அரசியற். ௭.)

(பி - ம்.) 1 'அந்தையாம்மகட்கு' 2 'உறப்புற' 3 'கடலிடையாடென' 4 'பாதத்திறைஞ்சல்' 5 'திகழோர்' 6 'அன்னப்புடையோன்'

அணியார் தமிழும் மருகான் மறையும்
பணிவே திபரும் பசவுந் திசையான்
குணமே வியதென் னவர்தங் குலமுந்
தணியா வறமுந் [1]தழைவெய் திடவே. (௨)

தாரார் குழன்மங் கைதடா தகைபா
லாரா வமுதா னவனின் னருளாற்
போர்வே ளெனவே பொருவில் புதல்வன்
[2]போரார் சடையோ டுபிறந் தனனே. (௩)

மெய்யார் சுரரும் விதமா நரரு
முய்வான் முழவெங் குமொலித் தினிதா
நெய்யா டல்புரிந் துகிலங் கடொறும்
பொய்யா மலர்மா ரிபொழிந் தனரே. (௪)

[3]உறவுக் கிரமா னதுகொண் [4]டுருவ
மிறைபொற் பமர்கை யிலெடுத் தணையா
மறையுற் ற[5]நெறிக் கண்வரும் பெயர்பே
ரறிவுக் கிரனென் னவறைந் தனனே. (௫)

உளமா ரையுநா ளுமுருக் கியுவந்
தளவார் கலையா வுமுணர்ந் தழகா
விளமா தர்மயங் கவிருந் துலவா
வளர்சீ திவிளங் கவளர்ந் தனனே. (௬)

அறிவால் விறலா லருளா லுயர்பா
னிறைவா லிவனுக் கிவனே நிகரென்
றுறநீ டுவிழா விதிசெய் துலகாண்
முறைசேர் மணிமா [6]முடிசூட் டினனே. (௭)

---

௩. உக்கிரப்பெருவழுதியார் சடையோடு பிறந்தனரென்பதை, "பஃறலைப்பாந்தட் சுமைதிருத் தோளிற், றரித்துல களிக்குந் திருத்தகு காளி,னெடுமோட் டிருவயிற் றருளு டிருந்த, நெடுஞ்சடை யுக்கிரம் பயந்தரு ணிமலன்" (கல். எஅ) என்பதனாலும், "வேலோன் விமலைதடா தகைவயினுக் கிரனென்றோர், சன்மகவாய்ச் சடையொடுமுற் பவிக்க" (கடம்ப. இலீலா. ௬௦) என்பதனாலும் உணர்க.

௪. ஒலித்து - ஒலிப்பித்து. நெய்யாடல் - நெய்விழவு.

௫. உருவம் உக்கிரமானதுகொண்டு, எடுத்தபொழுது தின்னென்றிருந்தது பற்றிக்கண்ணப்பருக்குத் திண்ணனாரெனப் பிள்ளைத் திருநாமமிடப்பட்டதென்பது இங்கே அறியற்பாலது.

௭. முடிசூட்டியவர் சுந்தரமாறர்.

(பி - ம்.) [1]'தழைசெய்திட' [2]'பேரோர்சடை' [3]'அறவுக்கிரம்' [4]'உருவை, மிறை' [5]'நெறிக்கணவற்பெயர்' [6]'முடிமுன்னினனே', 'முடிசூடினனே'

வேறு.

எண்பயிலு நெடுஞ்சடிலம் பிறங்குதலா லிலங்கிவனுக்
கொண்புவியோர் கொண்டாடு மூபாயனத் திருநாம
மண்பரவு கோச்சடிலை வருமனென லியையுமென
விண்பரவ விளங்குவித்தான் [1]விறகுடுமிப் பெருவழுதி. (௮)

ஆகத்திருவிருத்தம் - ௨௩௫.

---

## ௧௧.—வளைவேல் செண்டுகொடுத்த திருவிளையாடல்.

[2]முன்ன மிந்திரன் கடல்வட மேரு மூந்துதம் வல்வினை வசத் தான், மன்னு நம்முய ராணையைக் [3]கடப்பர் மதித்தொவ்வொர் கால த்தி லென்று, பின்னர் யாவையு முணர்பவ னதனைப் போருட் டிரு வுளத் துணர்ந்து, சொன்ன மூவர்தம் பெருவலி தொலைப்பான் சோர் வறச் சிறிதுளே முனிந்து. (௧)

வேறு.

அறமலி தனது புதல்வனுக் கிறைக் கருள்சுரந் தரும்புக ழோங்க, மறுவிலோர் வளையை யிந்திரன் பெரிய மவுலியி லறையென வளித் துச், செறிகடல் வலியை யறவெறி யென்று சிறந்ததோர் வேலினை நல்கி, யறிவட கிரியைப் [4]பந்துபோற் சுழல வடியெனச் செண்டை யுங் கொடுத்தான். (௨)

ஆதிமா மரபின் வருவடி வணங்கை யறநெறி மணம்புணர் வித் துக், காதல்கூர் தறத்தின் றகுநிசேர் புவனக் கணமெலா மவன்றலை வைத்து, நீதிமூ வுலகு மதிசயித் திரங்க நிறைமலி தடாதகை யோடு, மாதரா முறுங்க ணுதப ரோடு மறைந்தனன் பிறங்கவா லயத்து. (௩)

---

அ. சடிலம் - சடை. கோச்சடிலவருமனென்னும்பெயர் சிலாசாசனத்திற் பரக்கக்காணப்படுகின்றது. விறகுடுமிப் பெருவழுதி - சுந்தரமாறர்.

(௧௪)

க. காலத்திற் கடப்பர். மூவர் - இந்திரன், கடல், மேரு. இச்செய்யுள் கருத்துடை யடைகொளணி.

உ. வளை, செண்டு என்பன ஆயுத விசேடங்கள். அறி வடகிரி - எல்லா ராலும் அறியப்படும் மேரு.

ங. 'வடிவணங்கு' என்பது பெயர்; கணநிபர் - கணங்களின் தலைவர்.

(பி - ம்.) [1]'விறக்குடுமி' [2]'முன்னு மிந்திரன்' [3]'கடப்பர்கண்' [4]'கந்துகம் போலவடியென'

வேறு.

ஆண்டகை தெய்வ விரெட் டாண்டணி மவுலி சூடித்
தூண்டுமா வரசர் போகந் துய்த்துல காள லாலே
பூண்[1]டபி டேகச் சொக்கன் புழுகுநெய்ச் சொக்க னென்னு
மீண்டுயர் நன்னு மங்க ளெங்கணும் [2]பிறங்கு மாலோ. (ச)

மன்னவர் முடிக வித்து மருவிய கணங்க ளோடு
நன்னெறி யோங்க நாடோர் நகரென ஞாலங் காண
வின்னர சாள லாலே யமன்றிசை யாய வெய்ய
தென்னவன் பாண்டி நாடு சிவலோக மான தன்றே. (ரு)

ஆகத்திருவிருத்தம் - உசச.

---

## கஉ.—நான்மாடக்கூடலான திருவிளையாடல்.*

சிலமார் வருண ராசன் றிறத்தினுன் முன்னோர் கால
மாலவா [3]யழகார் மெய்யன் பெருமையை யறிவா னெண்ணி
ஞாலநீ கைக்கொ ளென்று நளிபுனற் பெருந்த ரங்க
[4]வேலையை யேவ வேலை வேலைநல் வேலை யென்று. (க)

உரனொடுங் [5]கணைத்துப் போரி னொலித்துல கனைத்துங் கொள்ள
வரனுறு தேவர் சித்தர் மானிடர் நாகர் முற்றும்
வெருவரு முள்ளத் தோடு மாலவாய் மெய்யன் செய்ய
திருவடி சரண மென்று ருய்யலா மென்று சேர்ந்தார். (உ)

காலமல் லாத காலத் துதநிவா னுறக்க லித்து
மேலெழ வாரா நின்ற தென்செய்கோம் விண்ணோர் கோவே

---

ச. அபிடேகச்சொக்கன் - கிரீடத்தையணிந்த சொக்கநாயகர்; அபிடேகம் - கிரீடம்; வைஷ்ணவஸம்பிரதாயத்திலும் இப்பெயர் இப்பொருளில் வழங்குகின்றது. 'அபிடேகச் சொக்கர்' (மதுரைக்கலம். சச, ருரு); 'புழுகு நெய்ச் சொக்கர்' (மதுரைக்கல. ருஉ, ருரு; மீனாட்சி. பிள்ளை. ஊசல், க - கO).

ரு. இச்செய்யுள், "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" (திருவா. திருவம்மானை, கக) என்னும் திருவாக்கின் பொருளைத் தழுவியது.

(கஉ)

க. 'வேலையையேவ...வேலை' மடக்கணி; வேலை-கடல், காலம், தொழில்.

உ. கொள்ள - கடல்கொள்ள.

*"உம்பரு லாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோருமம்புதாலகளா னீடுங் கூட லாலவா யின்க ணமர்ந்த வாறே" (தே).

(பி - ம்.) 1'அபிடேக' 2'பிறங்கிற்றன்றே' 3'அழகார்சொக்கன்' 4'வேலையையேயவேலை' 5'கணத்தினொலித்துலகனைத்தினையுங்கொள்ள'

மேலவே யருள்செய் யாயே லிறப்பமிங் கெவரு ஞாலஞ்
[1]சாலமுற் றுங்கா லத்து நீயலா துண்டோ தம்பம். (௩)

என்றடி தொழுது வீழ்ந்து முறையிட விரங்கி யென்று
மொன்றிய வடியார் தங்க[2]ளுறுகுறை தீர்ப்பான் கண்டு
பொன்றுமுன் காப்ப லென்றே புட்கலா வருத்த முன்னு
வென்றிகொ ணான்கு மேக வேந்தரை வரவ ழைத்தான். (௪)

தக்கபே [3]ரணுக்க ளுய்யத் தாங்கவெங் கடனீர் முற்றும்
புக்குநீர் மாந்து மென்று புகலுமுன் போற்றி செய்து
சொக்கனா ணையைநி னைந்தே சுவறிடக் குடிப்பக் கண்டு
மிக்கவிண் ணோர்கண் முன்னு வியந்தனர் பயந்த ணிந்து. (௫)

அப்பொழு ததிச யித்தல் வருணன்மீண் டாங்கா ரித்துத்
தப்பருந் தன்கொண் மூக்க டமையெலாம் வரவ ழைத்து
மைப்பனை யனைய நீர்தம் வள்[4]ளுறை சிதறி யந்தச்
செப்பரு முயிரை யெல்லாம் வருத்திடு மெனச்சி வந்தான். (௬)

பீடுசேர் முகில்கள் சாய்க்கும் பெரு[5]மழைத் துளியால் யாரும்
வாடுதல் கண்டு தொல்லைப் புட்கலா வருத்த முன்னு
நாடருங் காம ரூபப் புயல்களை நான்கு மாடக்
கூடம தாகக் கற்பித் தருளினன் [6]கூடமில்லான். (௭)

சோதிசேர் [7]பாதா ளத்தர் துறக்கரந் [8]தரத்தோர் பாரோ
ரேதநீ ருறுதி யாரு மியைந்தகான் மாடத் தும்போய்
விதியி னெருக்க மின்றி மேதகு புதல்வ ரோடு
மாதர மாத ரோடு மிருமென வருள்சு ரந்தான். (௮)

---

௩. எவரும் இறப்பம். தம்பம் - பற்றுக்கோடு; "தம்பத்தனை நிறுத் தொரு வேள்விதொடங்குக், தக்கன்" (தத்துவ. பிரவே. சிற்றில். ௫).

௪. மேகங்கள் நான்குவகை; "மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழ" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. ௧௪௧)

௫. அணுக்கள் - உயிர்கள்; "சிவனலால், அன்னை யொப்ப வணுக்கட்கு நல்லவர், பின்னருஞ் சிலருண்டோ" ௩௪: ௧௧.

௬. கொண்மூக்கள் - மேகங்கள். மைப்பனை - கரியபனை. வள்ளுறை - பெரியதுளிகள்; "வள்ளுறை சிதறி" ௰௩. ௮.

௭. 'கூடம...கூடமில்லா' மடக்கணி. கூடம் - மாடத்தின் மேற்பாகம்; வஞ்சனை; "அம்புத நால்களா னிடுங்கூட, லாலவாயின் கண மர்ந்தவாறே" (தே. திருஞா.)

௮. நீர், முன்னிலைப்பன்மை. ஆதரம் - அன்பு. இரும் - இருங்கோள்.

(பி - ம்) [1]'சாலமுமுற்றுங்காலத்து' [2]'உறுதுயர்' [3]'மனுக்களுய்ய' [4]'உறை சிந்தி' [5]'மழைத்துளியால்' [6]'கூடமில்லான்' [7]'பாதலத்தர்' [8]'அந்தரத்தர்'

அப்பொழு தெவரும் போற்றி யனுமொ நகரின் பாங்க
ரொப்பிலா [1]வடைவிற் பொங்கு முயர்ந்தமா டங்க டம்முன்
மெய்ப்பட நயந்தி ருப்ப மின்னிடி முழக்க மிக்க
மைப்படு கருவி வான மழைவலி தொலைந்த தன்றே. (௯)

[2]பேசரும் புயல கத்துப் [3]பெரும்புயல் சுவறக் கண்ட
வாசைசேர் வானோர் முன்னு வதிசயித் தச்ச நீங்கித்
[4]தேசிருங் கங்கை யாற்றைத் திருச்சடைப் [5]புரையுட் டேக்கு
மீசனுக் கிதுவு மொன்றே யெனத்துதித் திறைஞ்சி னார்கள். (௧௦)

அருளினை யவரைத் தத்தம் பதியகத் தணைய வேவி
யணிசெயி னிருப்பக் கண்ட வருணன்வெந் திறம்விட் டஞ்சிப்
பெரியவ சிறியேன் செய்த பிழைபொறுத் தருளென் றன்பிற்
றிருவடி பரவி நாளிற் றிகழுளம் வாழ்ந்துபோனான். (௧௧)

வாழ்வோர் [6]தம்மைப் போற்ற வயங்கொளி மாநகர்க்கட்
கூடுரு மேக நான்கு மாடமாக் கூட லாலே
நாடவ ரதிச யிப்ப நான்மாடக் கூடலென்று
பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற் றன்றே. (௧௨)

வேறு.

கொண்மூ மாடங்கள் [7]கூடலின் மீறியு
நண்ணி நீர்கடல் கொள்ளா [8]நகரிதான்
மண்ணின் [9]மாடக் குளக்கீழ் மதுரையென்
றெண்ணில் காலத் [10]திலங்கிய தெங்கணும். (௧௩)

"ஆடுபெயர்......கூடனகரே" (ரு-ஆம் பக்கத்திற் பார்க்க.)

ஆகத்திருவிருத்தம் - ௨௫௪.

---

௯. கருவி - நீர், மின்னல் முதலியவற்றின் தொகுதி.

௧௦. முதலடி மடக்கணி. புயல - மேகம், நீர். ஆசை - திசை, சடைப்புரை - சடையினுள்வெளி.

௧௧. "பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை போற்றி" (திருவா. திருச்சத. ௬௬), "பொறுப்பரன்றே பெரியோர் சிறியோர் கடம்பொய்யினையே (நீத்தல். ௬)

௧௨. போற்ற - பாதுகாத்தற்கு.

௧௩. கொண்மூ: விகாரம். மாடக்குளக்கீழ்மதுரை: மாடக்குளமென்பது மதுரைக்கு மேற்கேயுள்ளதோரிடம்; அவ்விடத்தில் ஒருகுளமுண்டு; 'மாடக்குளம் பெருகினால் மதுரைபாழ்' என்று ஒருபழமொழி வழங்கிவருகிறது.

(பி - ம்.) [1]'இடையிற்பொங்கும்' [2]'பேசரும்புயலகத்துப்பெரும்பெயல்' [3]'பெருமழை' [4]'தேசுறுங்கங்கை' [5]'புரைக்கட்டேக்கும்' [6]'தம்மைப்போற்றி' [7]'கூடலினிரிலும்' [8]'நகரினை' [9]'மாடக்குழற்கீழ்' [10]'இயங்கியது'

## ௧௧.—சித்தரான திருவிளையாடல்.

[1] அருவ மெய்யின னாலவாய் நாயகன்
கருதி முன்னமோர் காலங் கருணையின்
மருவி யாவருங் கண்டு மகிழ்வுறப்
பொருவில் [2]சித்த வுருவம் புனைந்தனன். (௧)

விண்வி ரும்ப மறலியை [3]வென்றுநீள்
கண்ணு மன்பரை யாளுங் கழன்மிசை
வண்ண நண்ணி [4]மனோகர மாகிய
பண்ண மைந்த பரிபுரஞ் சாத்தினான். (௨)

கற்ப வெங்கனற் கண்ணுடை நெற்றிமே
னிற்ப விட்ட [5]திலக நிலாவிடச்
சற்ப மாலை தயங்க மணங்கவர்
பொற்பு யத்துறு பொக்கணந் தூக்கினான். (௩)

மெய்யிற் பூசிய நீறும் விளங்குசெங்
கையின் மாத்திரைக் கோலுமென் காதின்மேற்
செய்ய முத்திரை யுஞ்[6]திரு வானவொண்
டெய்ய குஞ்சிச் சடையுந் துளங்கவே. (௪)

யோக பட்டம் விளங்க வுளங்கவ
ராக முற்று மழகு பொழிந்திடப்
பாக முற்ற பரிவுடை யானையுட்
போக விட்டு நடந்தனன் பூமிசை. (௫)

ஆழி மண்கட வாம னிறுத்திய
தாழ்வில் சித்தன் றமனிய வெற்பின
னாழி யுள்ளவ னோர்[7]குலோ சங்களை
யீழ மாக்குவன் [8]யாருணர் காணவே. (௬)

---

௨. வென்று நீள்கழல், ஆளும் கழலென்க. மனோகரம் - மகிழ்ச்சி.

௩. சற்பம் = சர்ப்பம் - பாம்பு. பொக்கணம் - ஒருவகைப்பை; "சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்" (திருச்சிற். உ௪உ) எனவும், "சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்" (திருவிளை. எல்லாம். ௯) எனவும் வரும்; "பொக்கணச் சித்தன்" என்பர்; பின், ௧௧.

௪. முத்திரை - அடையாளம்; சித்தவேடத்திற்குரிய குண்டலம். குஞ்சிச்சடை - சிறுசடை.

௬. ஆழிமண்கடவாமல்-கடலானது மண்ணைக்கடவாமல். ஈழம் - பொன்.

(பி - ம்.) [1]'அரவமெய்யினன்' [2]'சித்தருருவம்' [3]'வென்றநீள்' [4]'மனோரதம்' [5]'திலதம்' [6]'திருவானவெண் டுப்பமுண்டச்சிரமும்' [7]'உலகங்களை' [8]'யாவருங்காணவே'

ஆதி நாத னறிவ னெனச் சொலீஇத்
தோத கம்பல காட்டித் தொகுபுகழ்
மாது மேவு மதுரைத் திருநகர்
வீதி தோறும் வெளிப்பட் டுலாவினன். (௭)

வேறு.

விருத்தரை மைந்த ராக்கி மைந்தரை விருத்த ராக்கிக்
காப்பெருங் குன்றை யைய கடுகினு ளடக்கிக் காட்டி
யருத்திக ழம்ப லத்தை விழுங்கிடா வுமிழ்ந்து காட்டி
ரித்தெழுந் திருந்து காட்டி மற்றும்வல் லபங்கள் காட்டி. (௮)

மன்னிய சிறுவர் சூழ்ந்து வரவிளை யாடி யாரு
[1]மின்னருள் சேர்ந்த காந்தன் யாவனென் றதிச யிப்பக்
கன்னிமா தரைம யக்கிக் கடிமனை தொறுங்கு ழப்பித்
தென்னனை மதியா னாகி நடித்தனன் றெய்வச் சித்தன். (௯)

பொற்பமர் தரங்க வாரிப் புடவியை யடைவிற் காக்கும்
விறற்பொலி தடக்கை வேந்தன் வெய்யதன் மனித ராலே
மறவன் சரிதை முற்று நாடொறு முரைப்பக் கேட்டு
[2]முற்றிய சீற்றங் கூர்ந்து விட்டனன் முறைசெய் வோரை. (௧௦)

பொக்கணச் சித்தன் றன்னைப் பொய்செய்து போகா வண்ண
மிக்கணம் பிடித்து வாரு [3]மென்றுமுன் னேவப் போனோ
ரக்கணத் தின்கட் கண்டு பிடித்தலு மகப்ப டாமற்
றக்கர மொக்கச் செப்பித் தப்பினன் வெற்றிச் சித்தன். (௧௧)

தப்பினன் மற்றோர் ஞான்று சங்கரன் விரும்பி வாழு
மப்பெருங் கோயி றுங்கி யனிலமார் மூலை மன்னு
மொப்பருஞ் சிறப்பின் மிக்க வுத்தமக் களிற்றின் முன்னர்
மெய்ப்பட விருந்தான் வந்து வியன்றிரு நோக்கா னோக்கி. (௧௨)

---

௭. ஆதிநாதன - நவசித்தர்களில் ஒருவர்; சிவபெருமானென்பது மற்றொருபொருள். 'ஆதிநாதர்' (சூ:௪௮.) தோதகம் - தம்பம்.

௮. காப்பெருங்குன்று - யானை. ஐய - சிறிய. அம்பலம், சிலேடை.

௯. காந்தன் - தலைவன். குழப்பி - குழம்பச்செய்து.

௧௦. முறைசெய்வோர் - ஏவலாளர்.

௧௧. பொக்கணம்: ௩-ஆம்பாட்டின் குறிப்பைப்பார்க்க. தக்காம்=தஸ்கரம் - கள்ளத்தன்மை.

௧௨. அனிலமார்மூலை - வாயுமூலை.

(பி - ம்.) [1]'இன்னருட் சார்ந்த காந்தன்' [2]'முற்செற்சீற்றம்' [3]'என்றுழேவ'

தக்கபே ரால யத்துச் சதுமறை முனிவர் வாழ்த்தச்
சொக்கநா யகனைச் சூழ்ந்து துதிசெய்து தொழுவான் போந்த
திக்கெலாம் புகழு மன்னன் சேருங்கால் முன்னர்க் கண்ட
மிக்கவேத் திரக்க ரத்து வெய்ய [1]கஞ்சுகியர் சீறி. (௧௩)

பாண்டிய னிறைவன் றன்னைப் பணிகுவா னடைந்தா னிற்றுப்
பூண்டகு முண்டி யேடா போய்விடு போய்வி டென்ன
வாண்டகை கேளான் [2]போல வசைவிலா திருப்ப வங்கண்
மண்டரூர் தூய மேனிப் பாண்டிய வேந்தன் சேர்ந்தான். (௧௪)

இனியதாண் மலரே திட்டு முறுவல்கொண் டிருப்பக் கண்ட
வநுபமன் [3]செழியன் மாற னணைந்தபே ரிளமை யாலே
தனைநனி மதித்து நீயார் [4]தரித்தெழா திருந்த தேது
நினைவுதா னேதூ ரேது வல்லதே தென்று நித்து. (௧௫)

ஆங்கது பகர வேடா வணைந்தகா ரியத்தி னேகா
[5] தீங்கிவை யுரைத்த தென்சொல் யானெலாம் வல்ல சித்த
னோங்கிய வுலக மெல்லா மதித்தவ னூன்ற னக்கென்
பாங்குகா ரியமோ வில்லை யென்றுபற் றற்றி ருந்தான். (௧௬)

திறமுறு [6]முனிவீ ரென்னத் திருவிளை யாட றன்னைக்
குறுமறை முனிவ வின்று கூறிய வாறு கேட்டே
மறமலி திறத்து மன்னன் வரமதி யாதி ருந்த
வறமலி சித்தன் பின்னென் செய்தன னறைதி யென்றார். (௧௭)

ஆகத் திருவிருத்தம் - உ௭௪.

---

௧௩. வேத்திரம் - பிரம்பு. கஞ்சுகியர் - சட்டையிட்ட பிரதானிகள்.

௧௪. பூண்தகும் நீற்று முண்டி - அணியத்தக்க திருநீற்றாலாகிய திரிபுண்டரத்தையுடையாய். ஏடாவென்பது ஆண்பால் முன்னிலைப்பெயர்; இழித்தோரை விளித்தற் கண்ணும்வரும்; "ஏடவேடா வென்னேழை, தன்னை வளைத்தாய் நீயேயென்று" (திருவிளை. பழியஞ்சின. ௧௪.)

௧௫. அநுபமன் - ஒப்பில்லாதவன். செழியன்மாறன் என்னும் பெயரைச் சிலசாசனத்திற் பார்க்கலாம். நித்து - வெறுத்து.

௧௬. சித்தர் அரசனை நோக்கி ஏடாவென்றார், அவன் தம்மை ஏடாவென்றது பற்றி. மதித்தவன் - மதிக்கப்பெற்றவன். என்பாங்கு - என்னிடம்.

௧௭. என்ன - என்று அகத்தியமுனிவர் சொல்ல.

(பி - ம்.) [1]'காஞ்சுகியர்' [2]'போதுமனை' [3]'செழிய மாறன்' [4]'தனித்தெதிருந்த' [5]'நீங்கெலாம்' [6]'இறையவத்திருவிளை'

## கச.—கல்லானை கரும்புவாங்கின திருவிளையாடல்.

மன்று நீள்புகழ் வழுதிகண் டென்மைமதி யாமன்
முன்னர் யாவையும் வல்லவன் யானென மொழிந்தான்
பின்னொ ராசையற் றிவன்றிறம் பெரிதறி வோமென்
றுன்னி யொப்பல [1]ரில்லையோ வுயர்ந்தவ ருலகில். (௧)

இத்த லத்துய [2]ராக்கினைச் சித்தனு மிருப்பின்
வித்தை தோன்றவிக் கோயிலின் வெஞ்சிலைக் களிற்றாற்
சித்த நன்குறச் செப்பிய வாறுபோ லெனது
கைத்த லத்தமர் கன்னலை வாங்குவி காண்பேம். (௨)

இன்று தாவிது நின்றிட வேவினை யாகி
னென்று தாழ்வற வுனக்கியாம் வேண்டிய வளிப்ப
மன்று ளாடிய மாசிலா நாயக னறிய
வென்றி நாதனீ யெமக்கென விளம்பினன் விளங்க. (௩)

வேறு.

தென்னன் வார்த்தையைச் சித்தனுங் கேட்டதூர்
தன்று ளோகை செய்து சடக்கென
முன்னர் நின்ற [3]முதியகல் லானையைக்
கன்ன லின்னென வேவினன் கண்கொடு. (௪)

அங்க ணேவ வழல்விழித் தஞ்சமன்
டங்கு கீழலைச் சாடிமுன் காட்டுகைப்
பைங்கண் வேழத்தைக் [4]காணுமுன் பாய்மதச்
செங்கண் வேழ [5]மடர்ந்து செறுத்ததால். (௫)

பத்தி மன்னவன் பாணிக் கரும்பினைப்
புத்தி யாரு நயந்து புகழ்ந்திடச்
சித்த னேவிய தெய்வப் பெருந்திற
லத்தி வாங்கி விரைவி னயின்றதால். (௬)

---

௧. ஆசைபற்றமொழிந்தான். அறிவோமென்று அரசன்கருதி.

௨. ஆக்கினைச்சித்தர் - ஏவினவை எல்லாம் செய்விப்பவர்; இஃது, எல்லாம்வல்ல சித்தமூர்த்தியின் திருநாமமாகவழங்குகின்றது. நன்குற - தெளிய. களிற்றால் வாங்குவி.

௪. சடக்கென: ஒலிக்குறிப்பு; சடக்கெனத் தின்னென இயைக்க; "சடக்கென வாங்கவின்று" (அ.) விரைவாகவென்றுமாம். கண்கொடு ஏவினன்.

௫. அழல் விழித்து - தீப்புறப்பட விழித்து. கண் - கணு, விழி. வேழம் - கரும்பு, யானை.

௬. "நிமிதம் நறுகண் புகர்கோல மறந்த, கல்லிய மதமாக் கரும்பு கொள வைத்த, வாலவா யமர்ந்த நீலமிறை கண்டன்" (கல். ௬௬)

(பி - ம்.) 1 'இல்லையோவுயர்ந்தவருலகில்' 2 'அருச்சனைச்' 3 'முதுகல் யானை' 4 'கண்டுமுன்' 5 'தொடர்ந்து செறுத்ததால்'

தந்து மேவிய தாமரை நாளமென்
றிந்து மன்னவ னேகா [1]வலியையும்
வந்து வாங்க மறம்படக் கொல்வமென்
றுந்து வீரர்க [2]ளோவெனச் சென்றனர். (௭)

வாங்கு முன்னர் மணிமுத்த மாலையை
யோங்கு மும்மத நால்வா [3]யுவாமலை
தாங்க ருஞ்சினத் தோடு சடக்கென
வாங்க யின்றிடி யென்ன வதிர்ந்ததால். (௮)

மன்ற லந்தொடை மன்ன னழன்றுளம்
வென்றி சித்தர்க் கழகிது மேம்பட
நன்று நன்றென நாணினன் பேணிமுன்
சென்ற வீரரு நின்று செறுத்தனர். (௯)

அங்க டர்ந்தவர் தம்மை யடர்ந்துமெய்
தங்கு நீற்றினன் சற்று நகைத்துமன்
னெங்கு மோங்க விமைப்பி னொளித்தனன்
பைங்கண் வேழமும் பண்டைமெய் கொண்டதால். (௧௦)

அரச னஞ்சி யதிசயித் தன்புடைப்
பெரிய கோயிற் பெருமான் பணியென
மருவு கோபந் தணிந்து வரையறப்
பரசி வான்மிசைப் பன்முறை பார்த்தனன். (௧௧)

ஆல யத்து ளணைந்து வணங்கிமுன்
சால வேண்டுப நல்கித் தலத்துநின்
போல யாவர்வல் லாரெனப் போற்றினன்
ஞால மெங்கு நயந்து வியந்ததால். (௧௨)

ஆகத்திருவிருத்தம்-௨௮௬

---

௭. தந்து - நூல். நாளம் - தண்டு. ஏகாவலி - ஒற்றைவடமாகிய முத்த மாலை.

௯. உளமழன்று. சித்தர்க்கு வென்றி.

௧௧. சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்தை யாண்டும் பெரியகோயிலென் பர். பணி - திருவிளையாடல், ஆணையுமாம்.

(பி - ம்.) [1]'வடத்தையும்' [2]'ஒல்லெனா' [3]'உயர்மலை'

## ௧௫.—சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.*

முன்னமோர் காலஞ் சங்கமண் டபத்து முறைமையி னிருப்ப தற் [1]கிசைந்தே, பின்னிய பனுவற் [2]காரண மாகி விளங்குபே ராசனம் விரும்பிப், பன்னியல் வாணர் கபிலர்நக் கீரர் பரணர்முன் னாகவா லயத்துத், தொன்னெறி யடியார்க் கினியன கொடுக்குஞ் சொக்கனுக் குரைப்பமென் றடைந்தார். (௧)

தேவர்க டேவே நின்னரு ளிருக்குஞ் செந்தமி ழோர்களுக் கின்றி, யாவரு மிருக்கச் சிறக்குமோர் தவிசை யீந்தரு ளெனத்தொழு தேத்த, மூவர்க டலைவன் கோணமொத் திலங்கோர் முழத்தனி யொருவரே யிருக்கும், பாவறி ஞானப் பலகையொன் றளிப்ப வாங்கிய பாவலர் பகர்வார். (௨)

அருளுடை யாமே யாவரு மிருந்துங் காயநீ டாசனம் விரும்ப, வொருவரே [3]யிருக்கு மாசனந் தந்த தென்னையென் றுளந்தளர் காலை, யிருமையி னிலங்கும் புலவரை யறிந்தே [4]யிடந்தரு மிடந்தரு மென்றார், பரிவுடை வாக்கு விசும்பிடைத் தோன்றப் பணிந்தது சயத் தாபிம் போந்தார். (௩)

௧. இயலவாணர் - புலவர்கள்.

௨. தவிசு - ஆசனம். கோணம் - சதுரம். பாவறி ஞானப்பலகை: டூ: உ; கசு: ௩.

௩. ஆய - ஆராய. நீடு ஆசனம் - பெரிய ஆசனம். 'இடந்தரும் இடந்தரும்': அடுக்கு. பரிவு - அன்பு.

* "ஞானசம்பந்த னுரை செய் சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்", "பட்டிமன் றேறினவே", "மதுரைத் தொகை யாக்கினானும்" (தொகை-சங்கம்), "தண்டமிழ்நூற் புலவாணர்க்கோ ரம்மானை" (தே); "சாலவாய மும்மைத் தமிழ் தங்கிய அங்கண் மூதூர், ஆலவாயிடத்தும் பூ... செய்யுள் மிக்கேறு சங்கம்", "சங்கத் தமிழ் மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்து, ளன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்", "திருவாலவா யமர்ந்த செந்நுடரைச் செழும்பொருள்நூல் தருவானை", "நூலின்கட் பொருளுடைய நூலறிவார்க் கீந்தானை" (பெரிய. மூர்த்தி. ரு; திருநா. ௪0௫, ௪0௬; திருஞான. ௮௬௩.) "இவை, தெற்கிலவாயில் இறைவர் பட்டிமண்டபத்தோர் பொருட்டு கசுப்பர் ஒருவன் வாழ்வும் ஒருவன் சாவும் பாடி இன்னவாறாகவெனச் சபித்தற்பொருட்டாய்வதமந்திரம் பாட்டாய் உருதலின் அங்கதமாயிற்று" (தொல். செய். சூ. ௧௭௬. உரை.) [பட்டிமண்டபம் - சங்கமண்டபம்.]

(பி - ம்.) 1'இயைந்த' 2'காரணமான' 3'இருக்குமாசனம்' 4'இடந்தரு மோர்ந்து போமென்றோர்'

வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க மண்டபத் திடைநடு விட்டான், கோங்கமுன் [1]கீர ரிருந்தனர் பின்ன ருயர்புலோ ரொருவ ருக் கிருப்ப, வாங்கது வளர்தல் கண்டுநன் கபில ரிருந்தன ரன்பொடு முன்போற், [2]றூங்குதல் கொடாது வளர்ந்திட விருந்தார் பரணருந் தலமெலா மதிப்ப. (௪)

முற்றிய பயன்க ணான்கினுலை விளங்கு முத்தமிழ்க் கொத்தியல் வலல, மற்றுள சங்கத் தவருயல் வடைவின் வளர்ந்திட வளர்ந்திட நயந்து, நற்றவ னருளின் பெருமையை வாழ்த்தி யிருந்திட ஞானிலத் தோர்கள், செற்றம தகல வறந்திடங் கொடுத்த [3]சித்திரப் பலகையைத் துதித்தார். (௫)

சான்றவர் தேர்ந்து தம்முடைத் தெளிவாற் சயமுறக் கோத்த செந் தமிழைத், தோன்றிய சங்க மண்டபத் தின்கட் சேர்வுற வைத் துவைத் தேக, வான்றவச் செய்யுள் காலநீ ளத்தா லளவில வாய்த் தலை [4]மயங்கி, வான்றொட வுயர்ந்த வாங்கவர் திரண்டு வந்தனர் மற் றொரு காலம். (௬)

சொல்லருஞ் சொல்லின் றகுதியாற் றம்மிற் றொடர்விடா வழக் கினுண் மலைந்து, வெல்லருந் திறத்தைக் கண்டுநந் தமிழுள் விளக்க மில் லாதனவிட்டு, நல்லன கொள்ளக் [5]கடவமென் றியைந்து நயந் தரு பனுவலா ராய்வா, னெல்லையி லழகார் சங்கமண் டபத்து ளேறிநூ றுறத்தமை மதித்து. (௭)

வந்தவர் குலைந்து முன்னமே [6]கலைந்து வரையறக் கிடந்தவை யெடுத்து, முந்தவா ராயு [7]மளவிலப் பனுவன் முறைதலை மயங்கலா லழிந்து, சிந்தையா குலத்தோ டென் [8]செய்கே மெனத்தஞ் செழுமு கம் வாடலுங் கருணை, யெந்தைநா யகனும் வந்தனன் றூழா தின்றமி ழ்ப் புலவனு யிரங்கி. (௮)

---

௪. மண்டபத்திடை நடு - மண்டபத்தில் நடுவே; இடை: ஏழாம் வேற்றுமையுருபு; இடைநடு - ஒருபொருட்பன்மொழியுமாம். தாங்குதல் கொடாது - தாமதியாது; கஎ : ௫.

௫. பயன்கள் நான்கு - அறமுதலியன. முத்தமிழ்க்கொத்து - முத்தமிழ்நூல்களின் தொகுதி; க, க0; கஅ: எ. நற்றவன் - சிவபெருமான். செற்றம் - தணியாக்கோபம். சித்திரம் - வியப்பு.

௬. செந்தமிழை - செந்தமிழ்ச்செய்யுட்களை; எ. உயர்ந்த: முற்று.

௭. தொடர் - கட்டு. மலைந்து - மாறுபட்டு.

௮. இரங்கி வந்தனன்.

(பி - ம்.) 1'கீரரிருந்திட' 2'தாங்குதலாகவளர்ந்திட' 3'சித்திரம்பலகை' 4'மயங்க' 5'கடவதென்றெண்ணி யயன்றரு' 6'கலைந்து' 7'அளவிலிற' 8'செய்தோமென'

இத்தல மதிக்கக் குற்றமி லெழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரக், கொத்துறு பனுவல் வல்லவர் நீங்கள் குறைவற [1]விருந்திர் செங் கமல, மொத்தலும் முகங்கள் வாடிய தென்னை யுற்றது போக் கலா விருப்பிற், புத்தியா லனைத்து போக்குவம் புகுந்த காரியம் புக லுமி னென்ன. (௯)

முதுகவிப் [2]புலவ மயங்கிய தெமக்கிம் முத்தமிழ்க் [3]கொத்துநீ கோத்து, விதியினி லளிக்க வல்லையே யென்றப்பத் தெட்டெனல் விட்டு னைக் கூட்டி, யதர்பட நாற்பத் தொன்பது பேரொன் றறைந்திடக் கடவமென் றியம்ப, மதியுளான் விரும்பி யினமைப்பினி துவப்ப [4]வகைப்பட விதிப்படி கோத்தான். (௧௦)

யாவையுங் கூட்டுங் கடவுளுக் கியம்பி னிதுவுமோர் புதுமையோ மற்றப், பாவலர் நயந்து சொக்கனே போலும் பழுதற நிறைந்தவா சிரியன், கேவல னல்ல னம்பி னுயர்ந்தோ னென்றுமுன் னிளர் வுறத் துதித்து, மேவிய வானைத் தம்மொடுங் [5]கூட்டக் கூடினன் மேதினி வியப்ப. (௧௧)

ஆங்கிடங் கொடுப்ப விருந்திருந் தமிழ்க னாய்ந்திடுங் காலையி லொருகால், பாங்குறு பொருளின் றகவறி யாமற் பாவலர் [6]மயங்கி டக் கண்டாண், டோங்கிய பொருணூ லன்பினைந் திணையென் றெடுத்தவ ருவப்புறக் காட்டி, வாங்கரு [7]வினைவிற் பிரித்தன னுரைத்த வண்பொருட் கியைந்த [8]வொண்டமிழ்கள். (௧௨)

---

௯. இருந்திர் - இருந்தனிர். போக்கலாவிருப்பின் - நீக்குதற்குரியதாக இருத்தல்.

௧௦. அதர்பட - வழிப்பட.

௧௧. கேவலனலலன் - சாதாரணனல்லன்.

௧௨. பொருள் - அகப்பொருளிலக்கணம்; பொருணூல் - அப்பொருளிலக்கண நூல். "அன்பினைந்திணை" என்பது, இறையனாரகப்பொருளின் முதற் சூத்திரத்தின் முதற்குறிப்பு; "உலகிய னிறந்தும் பொருண்மை பொருக்க, யாவரும் புலவர் மயங்குறு காலை, நத்துறம் பெருமறை முதற்றருள் வாக்கு, அன்பினைந் திணையென நறுபது சூத்திரம், கடலமு தெடுத்துக் கரையில் வைத்ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்கு, தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்", "அருமறை விதிப் முலங்கல வழக்கும், நூற்றுறை பொருளும் விதிப்பட நினைந்து, வடசொல் மயக்கமும் வருவன வகுத்து, மைந்நிலை வழுவா தகப்பொரு ளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க, ளேழுபெயரும் கேதறப் பருகவும், புலநெறி வழக்கிற் புணருல கவர்க்கு, முற்றகம் பருக்கு முதற்றுப தற்கு, நின்றறிக் துணைத் தமிழ்ப்பெயர் நிறுத்தி, யெடுத்துப் பரப்பிய விமையவர் நாயகன்" (கல்.௩,௬௬.)

(பி - ம்.) 1 'இருந்த' 2 'புலவர்மயக்கியது' 3 'கொத்தநீதேர்ந்துவிதி' 4 'வகைப்படி' 5 'கூடக்கூட்டினர்' 6 'மயக்குறக்கண்டு' 7 'வினைவிலவிரித்தனன்', 'வினைவின்விரித்தனன்' 8 'வண்டமிழ்க்கள'

நயமுறு பொருட்குப் பொருந்திய தத்த நலந்தரு மிருந்தமிழ் கண்டே, [1]யியலுணர் வாணர் மகிழ்ந்தனி சயத்தோ [2]டிவையிவை யொள்ளிய வென்னச், சயமுறு கீரன் பொறாமையா லங்கண் சாற் றுவா னென்[3]றனித் தமிழிற், செயிரறு [4]மைந்தாம் புனைவலுக் கொப் புச் செப்புதற் கரிதெனச் செப்ப. (கங)

## வேறு.

நண்ணியவை யிடையிருந்து நவிலுவதே யொருவனெனக்
கண்ணி[5]வியன் றரும்பொருளாற் கனத்ததொரு கவிதை [6]தொடா
வுண்ணிறைந்த புலவீர்கா ளிதன்பொருள்கண் டுரைமினெனப்
பண்ணினொடு முறைசெய்தான் பாவறிந்த நாவலவன். (கச)

ஏயவழு வின்றியிலங் கிருங்கவிதை கேட்டலுமே
நேயமொடு நிறைந்திருந்தார் நேர்கொடுப்ப வுரையின்றி
யாயுமிய னக்கீர னருஞானத் தாலதனைத்
தீயதென வுரைசெய்யத் தமிழ்ச்சொக்கன் சிரித்தருளி. (கரு)

என்றுமிவன் பொறாமையுள னென்னுமதுங் கியாரறியார்
வென்றியுளீ ரவன்றனக்கு மேவன்மென விளம்பிடுக
வொன்றியநங் [7]கவிதைக்கிங் கிவனுழைய வுங்களிலோர்
நன்றியுளார் குற்றமெனிற் குற்றமது நனியென்றான். (கசு)

இத்தகைமை யியம்பக்[8]கேட் டினிமையினு லேனோரு
மூத்தரமொன் றுரையாம லிருக்குங்கா லுயர்விசும்பில
வித்தகரே நும்வழக்கு [9]விடுவிப்பான் காரணமா
வத்தநும்வர் தானுமைப்போல் விடும்விடுநு மறிவின்மை. (கஎ)

வணங்குமினீர் வணங்குமினீ ரெனமயக்க நீக்கிடுவா
னிணைந்தருள்சேர் திருவாக்குத் தோன்றியிட வதிசயித்துக்
குணம்பயில்வோர் பயமெய்துக் குய்பிடுமு [10]வரியநீரன்
பணிந்தடியேன் செய்தபிழை பொறுத்தியெனப் பழிச்சினனால். (கஅ)

---

கச. ஒருகவிதைதொடா - ஒருசெய்யுள் தொடுத்து; தொடுத்தவர், சிவ பெருமான்.

கரு. நிறைந்திருந்தார் - மகிழ்ந்திருந்தார்.

கஎ. விடுவிப்பான் காரணமா - விடுவித்தற்பொருட்டு. 'விடும் விடும்' அடுக்கு.

கஅ. 'வணங்கு மினீர் வணங்கு மினீர்': அடுக்கு.

(பி-ம்.) 1'இயலுறுவாணர்' 2'இஃதிஃதொள்ளிதென்றேத்தச்' 3'தனித் தமிழில்' 4 'அஞ்சாம்' 5 'வியக்தரும்' 6 'கொணர்ந்து' 7 'நன்கவிதைபதிக்கு' 8 'கேட்டிருமையினால்' 9 'வீடறுப்பான்' 'உயர்கீரன்'

பெருமைதரும் பெயர்மதுரைப் போரால வாயனென
வுரைசெய்தே யவைகேட்க விருந்தவனவ் வயினொளிப்ப
வருளுடையார் சொக்கனைப்போ லாருளரிங் கெனத்துதித்தார்
[1] பொருளதிகா ரம்பிறக்கிற் றிறையனார் பொருளெனவே. (௧௯)

ஆகத் திருவிருத்தம் - ௩௦௫.

---

## ௧௬.—கிழியறுத்த திருவிளையாடல்.

பன்னரு முன்னோர் கால மோங்கலங் காரத் தோங்கி
மன்னுமா மதுரை தன்னுள் வாழுமோர் வழுதி வான்றோய்
[2]மின்னுமா மதிற்றன் கோயின் மீமிசை விமித லத்துத்
தங்கிக [3]ரில்லா மாதர் தம்மொடு முலாவுங் காலை. (௧)

பேசருந் தகவு டைத்தாய்ப் பேருளங் கவர்வ தாய
[4]நேசமா தேவி வாய்ந்த கூந்தலே நீங்கா தோங்கும்
வாசமா ருதவ சத்தால் வரமண மதிச யித்தில்
வாசிலா வாசம் பூவோ டியைந்ததோ வன்றோ வென்றான். (௨)

கூறிய வுளத்துட் டேர்ந்து குறிப்பரும் பொருள்பொ றித்து
நேர்சிறப் புடைத்தாய் நக்க னென்கிளுக் கியைய வின்றோர்
சீருடைக் கவிதை செய்து வருவரேற் செழும்பு விக்குள்
யாரென [5]வேண்டா விப்பொ னீகுவ லவர்கட் கென்று. (௩)

ஆயிரம் பசும்பொன் கூட்டி யடக்கவோர் கிழியாய்க் கட்டி
மாயிரு ஞாலங் காண மாசிலா சிரியர் [6]வாழுஞ்
சீயவெண் டரளச் செம்பொற் சித்திரத் தூணப் பத்தித்
தூயமண் டபத்து முன்னர்த் தூக்கினன் சிறக்க வாங்கு. (௪)

---

௧௯. சோமசுந்தரக்கடவுள் புலவர்வடிவங்கொண்டு சங்கப்புலவருக்கு இடையே சென்று எழுந்தருளியிருந்தபொழுது, அவர்கொண்டருளிய திருநாமம், மதுரைப்பேராலவாயரென்பது (௧௬: ௮.) இது சங்கப் புலவருள் ஒருவர் பெயராகவும் காணப்படுகின்றது.

(௧௬)

௧. விமிதலம் - மேன்முற்றம்.

௨. மாதேவி - பாண்டியன்மனைவி. மாருதவசத்தால் - காற்றுவழியால்.

௪. கிழி - நிதிப்பொதி; ஆகுபெயர். ஆசிரியர் - சங்கப்புலவர். சீயம் - சிக்கம். தூக்கினன் - தொங்கக்கட்டினன்.

(பி - ம்.) [1] 'பொருளலங்காரம் விளக்கிற்றிறையனார் பொருளெனவே' [2] 'மின்னமர்மதில்' [3] 'இளமாதர்' [4] 'சேமமார்தேவி' [5] 'வேண்டாவிப்பொனிகுவன்' [6] 'வைகுஞ்'

பீடுடை யுணர்வான் மிக்கோர் பிஞ்ஞகன் சமாதி யாலே
நாடிய பொருடே றாம னல்லன தமக்கி யைந்த
பாடிய கவிதை கொண்டு பார்த்திவன் றிருமுன் னேகிக்
கூடிய மகிழ்ச்சி யோடிங் கூறினர் தேறி யாங்கு. (௫)

காவலன் றனக்கி யைந்த கவியதிற் காணா னாகி
யாவிநன் குருதி ருப்ப வருங்கிழி கருதி வந்த
நாவலர் சோக மெய்திப் போயினர் நானி லத்துள்
யாவருங் காண முன்போற் றூங்கிய திவைந்த பொன்னும். (௬)

ஆங்கது தூங்க வப்பா லருள்புனை சிவனை நாளு
நீங்கலி லாமல் [1]வாழுஞ் சிவமுனி புதல்வ னீதி
யோங்கிய தூய்மை வாய்மை யொழுக்கநல் விழுப்ப மிக்கோன்
றாங்கரும் பத்தி யுள்ளோ னாமூர் தருமி யென்போன். (௭)

தந்தைவா னுலகத் சேகத் தளர்ந்துநல் குரவா னைந்து
சுந்தரன் கோயில் புக்குச் சொல்லுவான் மெல்ல நல்ல
வெந்தையே [2]கந்தர் தந்தா யிளைத்தனன் [3]பொருளோ வில்லை
மைந்தனுண் டாக வென்னை மன்றல்செய் வித்தல் வேண்டும். (௮)

தாதையுந் தாயு முற்ற சுற்றமுந் தனமு மற்றும்
வேதனை [4]யினையி னேற்கு நீயலால் வேறு முண்டோ
கோதிலா மரபின் வந்த குலந்தலை [5]யழியு மோவென்
றோதினா யகன்றன் பாதத் தழுதுவீழ்ந் தினைய சொன்னான். (௯)

வழுத்திய மறையோன் றன்மை கண்டவன் மனக்கி னைசை
யொழித்திடு வான்வி ரும்பி யுரகமா ணிக்கச் செம்பொற்
குழைக்கிழை காத னங்கட் கொங்குதேர் வாழ்க்கை யென்றோர்
கிழிக்கிசை கவிதை பாடிக் கொடுத்தனன் கீர்த்தி வேட்டு. (௧0)

---

௫. சமாதி - சங்கற்பம்; ௨௯: ௪; ௨௮: ௨௧; ௪௭: ௨.

௬. அதில் - அக்கவிகளில்; சாதியொருமை. ஆவிநன்கு - மனமகிழ்ச்சி; "என்னுவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்" (சீவக. ௧௫௮௮.)

௭. நீங்கலிலாமல் - நீங்காமல்.

௮. தந்தை - சிவமுனி. மெல்லச் சொல்லுவான். இச்செய்யுள் கருத்துடையடையணி.

௧0. 'கொங்குதேர் வாழ்க்கை' என்னுங்கவிதை வருமாறு: "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலி

(பி - ம்.) [1]'வாழ்வோன்' [2]'கந்தர்கோவே' [3]'பொருள்வேறில்லை' [4]'விதியி னேற்கு', 'வினையனேற்கு' [5]'அழியவோ'

பொருவருங் கவிதை யேட்டைப் போற்றிமுன் கொடுபோய் வாய்
புரியவ [1]ரவைமுன் காட்டி யோங்கிய [2]கிழி கைக்கொ [மை
டருமிகேள் பொருது மற்றுச் சாற்றிய மாற்ற முண்டேல்
விரைவின்வந் துரைமின் மெச்ச வெல்வதற் கைய மின்றே. (கக)

துன்புற லென்று வெய்ய துயரொழித் தினைய சொல்லி
யன்பொடும் விடைகொ டுப்ப வாங்கவ னிங்கி நீங்கா
வின்புறு மனத்தி னோடு மெய்ந்நிறீ டவைபி ற நாட்ட
நன்புளோர் வியந்தாரில்லை தம்முளே நனிந யந்தார். (கஉ)

தெரியவோ ருரைகொ டாமற் செழுங்கவி கொடுப்ப வாங்கி
யரசன்முன் செல்வ லென்றே செலலுங்கா லறிஞர் கண்டு
விரைவொடுஞ் சென்றார் சென்ற வேதியன் காட்டக் கண்டு
பரவிய மன்ன னுள்ளப் பான்மையார் பகர வல்லார். (கங)

வேறு.

நவையின் றியுயர்ந் த[3]பொருட் கியையச்
சுவைதந் திடுமெல் லியசொற் கணினேந்
தெவர்சொன் னவரிக் கவியின் றினிதா
வவர்[4]கொள் ளுகவக் கனகக் கிழியால. (கச)

பரிவொன் றியவென் றிகொள்பா வலர்நீ
ரிரு[5]வொன் றியதுங் களிடத் தடைவே
[6]விரைவின் கணடந் திடுமென் றுவிடுத்
தரவந் தருங்கோ யிலடைந் தனனே. (கரு)

மிகவின் புறுமெய்ந் நசைடயே தியனுந்
தருசங் கமடைந் துதனக் கிழியைப்
பகைவென் றனமென் றுபகர்ந் [7]தொழியா
நகைகொண் டுகவர்ந் திடுவா னுறுக. (கசு)

யது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறுந். உ); "பொதியப் பொருப்பன் மதியக் கருத் திளைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக் கற் புடனுதவி, யென்னுளங் குடிகொண் டிருப்ப வளிகரும், காளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்" (கல். க.)

கக. கவிதை ஏடு-செய்யுள் எழுதப்பெற்ற ஏடு. வாய்மைபுரியவர்-சங்கப் புலவர்; பொய்படுமையிலாப் புலவரென்றபடி. கிழி - இழி. கொள் : ஏவல்.

கஉ. நன்பு - நன்மை. புலவர்கள் வெளிப்படையாகப் புகழவில்லை.

கங. வேதியன் - தருமி. கரு. அரவம் - முழக்கம்.

(பி - ம்.) [1]'அவர்முன' [2]'கனக த' [3]'பொருட்கவியைச்' [4]'கொள்ளுவரக் கனகக்கிழிதான்' [5]'இன்றியதுங்களிடத்து' [6]'விரைவின்றி டைந்திடும்' [7]'தளியா'

### வேறு.

பொற்புறு மவனைக் கண்டு பொறாமையா லிருந்த கீரன்
சொற்பொரு ளறியாப் பார்ப்பா னியிதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் றன்னைக் கொணர்கவா னாடியுன்றன்
முற்கவி தைக்குக் குற்ற மொன்றுமே போ வெனமு னிந்தான். (கஎ)

ஊழுடை முனிவன் வாடி யொலலையா லயத்து நண்ணி
யாழி[1]நஞ் சுண்ண வல்லீ ரறிஞர்க ளுவப்ப [2]சல்ல
குழிசைக் கவிக்குக் குற்ற முண்டென்றார் சொலவல் லீரேற்
றூழ்வறச் சொல்லி யன்றே வென்னையிற் றருவீ ரென்றான். (கஅ)

ஈசனுங் கற்றுச் சொல்வோர் பின்வர விரைவிற் கூடித்
தேசுடைச் சட்டை சாத்தித் திருமுடிச் சாத்துஞ் சாத்தி
யாசிலா மலர்க்க ரத்தி லாழிகள் செறித்துத் தங்க
மாசிலாப் புலவர் தேத்து வந்தனன் புலவ னாகி. (க௯)

வருந்தினான் முகன்மா றேட வளர்ந்தழ லாயெழும்பாய் நின்று
[3]னொருங்கினீர் மண்ணும் விண்ணு மெங்கணு நிரம்பி நின்று
னரும்பொரு டரும்பே ரண்டத் தப்புறத் தப்பா னின்று
னிருந்தமிழ்ச் சங்கத் தின்கீழ் [4]நின்றன னவருங் காண. (௨௦)

மன்னுமிச் சங்கத் தேறி யிருந்தவர் தம்முன் வாளா
வென்னுடைக் கவிக்குக் குற்றஞ் சொன்னவன் யாவ னேடா
முன்னுறச் சொன்மி னென்ன முத்தமிழ்க் கீரன் கண்டு
நன்னெறிப் புலவ குற்றஞ் சொன்னவ னானா னென்றான். (௨௧)

### வேறு.

அங்கங் குலுங்க வரிவாளி னெய்யென்றோர்
பங்கக் கவிதை பரமன் [5]சொலவிளித்து
சங்கறுப்ப தெங்கள் குலந் தம்பிரான் கேதென்றோர்
துங்க முழுங்கவிதை சொன்னா னெதிர்துணிந்து. (௨௨)

---

கஎ. பார்ப்பான்: விளி. இதை - இக்கவியை. நீ கொணர்வோ.

கக. கற்றுச்சொல்வோர் - கற்றுச்சொல்லிகள். திருமுடிச்சாத்து - தலைக்கட்டு; "தனிமுடிச்சாத்துஞ் சாத்தி" (உ.க: க.) ஆழிகள் - மோதிரங்கள். தேத்து - இடத்து.

௨௦. பிழம்பு - திரட்சி. இச்செய்யுள், இறைவனுடைய அருமையையும் எளிமையையும் புலப்படுத்திக் காட்டி விளக்குகின்றது. "மூவர்கட் கரியா னிற்ப முத்தமிழ்த் தெய்வச்சங்கப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி நன்னாடு" (கடவுள். அ) என்றார் முன்.

௨௧. வாளா - சும்மா.

௨௨. கவிதைகளிரண்டும் வருமாறு:—வெண்பா: "அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப், பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக், கீர்த்

(பி - ம்.) [1]'நஞ்சுணவோவல்லீர்' [2]'நல்ல' [3]'நெருங்கினீர்' [4]'நின்றனன் புலவர்காண', 'அவருங்காண' [5]'சொலவிழித்து'

அன்னிய ரொருவர்க் கஞ்சே [1]னஞ்சுவ னினக்கே யென்று
பின்னரு முரைப்ப வெந்தை நினைத்தவன் பேச்சைக் கண்டு
நன்னெறி [2]வழக்கே காணாய் நன்கிலா விகலை விட்டிக்
குன்னருங் கவுரி கூந்தற கொக்குமே மற்றோர் கூந்தல். (உஅ)

வளர்தரு மடநாண் முன்றா வருங்குண நித்த மாபோ
லுளங்கவ ரிருள்வா சந்தே சுரியன நித்த மாதர்
தெளிந்ததிந் நலையோ பேதாய் [3]சிற்புட்ப கேசி யென்று
குளிர்ந்தமா மறைக ளோன் துங் கூப்பிடு மின்ற வாறு. (உ௯)

[4]இன்னபூ வாச கேசி தன்னையா ரறியா ரென்னப்
பின்னொருத் தாமு மொன்றிப் போமுற கண்ணால் வெந்து
தன்னுளே பரித வித்துத் [5]தண்ணினீர் மேவட்டுக் கூப்பிட்
டன்னமார் வாவி யிறம்பாய் வீழ்ந்தன னாற்று ளாகி. (௩0)

காமனைக் [6]காய்ந்த கண்ணன் காலனைப் [7]பாய்ந்த காலன்
பாமறைக் கெய்தா மெய்யன் பாவலர் காண நின்று
நாமறச் சொன்ன செற்ற நற்றமிழ்ப் புலவ னைப்பொற
றாமரைத் தடத்துட் போகக் கண்டனன் றமிழ்க்கி ரங்கி. (௩௧)

பார்தளஞ் சடில முக்கட பாவல [8]னொளிப்பக் கண்டு
சூழ்ந்தவர் சொக்கன் றன்முன் சொல்லியார் வெல்வா ரென்றே
யேந்தஞ் சயதமோ டுருசி யெத்தினர் குணலை கொள்ளா
வாழ்ந்தவன் முனிவன் றாங்கும் பூங்கழி வாய்த்த தென்றே. (௩௨)

விரைவொடு சென்றி யாரும் வியப்பநன் கிழிய றுத்துப்
பரமனை யடைந்து வாழ்த்தப போந்துதன் [9]பண்பிற கொத்த
திருவினு முருவ மிக்க தேவியை மணந்து ஞாலம்
பரவவாழ்ந் திருந்தா னாழி [10]பழுதறு சிறுவர்ப் பெறவே. (௩௩)

---

உஅ. பேச்சைக்கண்டு - சொல்லை யறிந்து: 'சொல்லக்கண்ட' (குறள்: ௪௫.) இகலைவிட்டு வழக்கைக் காணுவெனக.

உ௯. சிற்புட்பகேசி - ஞானப்பூங்கோதை; இது, சோணாட்டிலுள்ள அம்பிகையின் திருநாமம்; "இன்னபூவாசகேசி" என்பர்பின்; ௩0. கூப்பிடுமின்ற வாறு தெளிந்ததிலையோ.

௩௧. காமற - அச்சமற.

௩௨. குணலை - மகிழ்ச்சி மிகுதிக்கண் ஆடும் ஒருவகைக்கூத்து. வாய்த்த தென்று வாழ்த்தினன்; "கூ பாட்டுப் புலவனுக்கு சங்கமேற்றக்கனகக் கிழிதரு மிக் கருளினானென்கான்" (திருநா. தே. திருப்புத்தூர்.)

௩௩. மிக்க தேவியை. ஊழி - பலநாள்.

(பி - ம்.) 1 'அஞ்சினேனினக்கே' 2 'விளக்கே' 3 'சிறப்புறகேசியென்ற, குளிர்ந்த' 4 'இன்னுமாமஞ்சகேச' 5 'தண்ணீர' 6 'கண்ட' 7 'காய்ந்த' 8 'ஒளிப்புக் கண்டு' 9 'பணியிற்கொத்த' 10 'பழுதறசிறுவர்'

ககன மீதுதோய் கொடுமுடிக் கயிலைகா ளத்தி
யமல மீதுபே ரன்புடைப் பதியென வறிந்தே
முகைகொ டாமரைத் தடத்திடை மொய்ம்புறக் கிடந்து
சகமெ லாம்புகழ் தருமொரந் தாதியு முரைத்தான். (௩)

ஓங்கு பேரரு ளங்கயற் கண்ணிதன் னுடனே
யாங்கு சென்றடைந் தருந்தமிழ்ப் பெருந்துதி கேட்டுத்
தீங்கி லாத[1]நின் செழுமலர்த் திருக்கரங் கொடுத்தே
[2]பாங்கர் நீள்கரை யேற்றெனப் பகர்ந்தனர் பழிச்சி. (௪)

வேறு.

ஆங்கவர் பணியத் திருவுளத் திரங்கி யங்கணை யொடுமிட வன்னர், தூங்கலர் வாவிக் கரையடைந் திருந்து சொல்லெனுஞ் செழுந் தமிழ்கேட்டுப், பாங்குடை யுளஞ்சேர் சிறையொடு நீங்காப் பரிவொடு முறுவல்கூர்ந் திமைப்பிற், றூங்குதல் [3]கொடாது மலர்க்கரங் கொடுத்துத் [4]தடத்தினின் றடுத்தினி தெடுத்தான். (௫)

மாலய னறியா வடிவமுங் காட்டி வன்னிவெந் துயரமு மொழித்து
ஞாலமேம் புகழுஞ் சான்றவ ருடனே நணுகுதி நாவலர் தம்முட்
சாலவு நல்லே மசைவிலா மனஞ்சேர் தண்டமிழ்ப் பாவல வென்றுங்
கேலவார் குழலி தன்னொடு மறைந்தா னடியவர்க் கெளியவெம் பெருமான்.

சேணுளார் போற்றப் பெற்றநக் கீரன் றிருவருட் பெருமைகண் [5]டன்பிற், பூணவா லயத்துச் சென்றடி பரவிப் [6]போவதங் கில்லென நிற்ப, நீணெறி யறிஞ ரரியதாள் வருந்த [7]நிற்பதே யிருப்பாய்க் கடையேன், றாணுவே யென்று பன்முறை பணிந்து போயினர் சங்கமண் டபத்து. (௭)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௪.

---

௧. ஓர் அந்தாதி - கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி. "அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல் வாவியிற் கேட்ட காவியங் களத்தினன்" (கல். ௫௨) என்பதனாலும் நக்கீரர் வாவியிற் கிடந்தபடியே அந்தாதிபாடினமை விளங்கும்.

௪. பழிச்சி - துதித்து.

௫. மேற்கூறிய அந்தாதியின் முதல்வெண்பாவின் முதல், "சொல்லும் பொருளுமே" என்பதாதலின், 'சொல்லெனுமருந்தமிழ்' என்றார். தூங்குதல் கொடாது - தாமதியாமல். அடுத்து நின்று தடத்தினின்று இனிதெடுத்தானென்க.

௬. வன்னியென்றது நெற்றிவிழித்தீயை. சான்றவர் - சங்கப்புலவர். 'அடியவர்க்கெளிய வெம்பெருமான்' இங்ஙனமே சோமசுந்தரக்கடவுளின் திருநாமம் 'அடியவர்க்கெளியசுந்தரன்', 'அடியவர்க்கெளியசொக்கன்', 'அடியவர்க்கெளியவர்' என்று இந்நூலில் பலவாறு காணப்படுகின்றது. [சங்கப்புலவர்.

௭. பூண - தொண்டுபூண. 'அங்கு' என்றது சங்கமண்டபத்தை. அறிஞர் -

(பி - ம்.) [1]'நன்செழுமலர்த்' [2]'பாங்குசேர்' [3]'விடாது' [4]'தடத்தினிவிடத்தினின்று' [5]'அற்பிற்' [6]'போவதெங்கேயென' [7]'நிற்பதென்'

## க அ.—குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளையாடல்.

சோதிசேர் கடவு ளாணைத் தொண்டுசெய் தேற்ற கண்டாண்
டோதுசொல் லிலக்க ணங்கள் குறையுமொண் கவியுங் குன்று
மாதலா லாங்கா ரித்தே யறிஞரை யிகழா நின்றான்
போதமார் செய்ய வல்லா ரென்றலும் பொருப்பின் பாவை. (௧)

அண்ணலே யடியேன் முன்ன மறிந்ததோர் கதையுண் டன்பிற்
கண்ணுறு செவியு நெஞ்சுங் களிதரு வதுகே ளெண்ணில்
ண்ணுறு மின்ன ராதி [1]பாவயாம் பரிந்து வெள்ளி
விண்ணுறு கயிலை யந்தண் வெற்பகந் திருக்கு நாளில். (௨)

வேறு.

வாய்ந்தபுவி வடகிழக்குத் தாழ்ந்து தென்றல் வரைபயிறென் மேற்குயர வானோர் மண்ணோர், தேர்ந்தவிரு டிகளியக்கர் சித்தர் நாகர் சேர்ந்தபய மென்றுபய மெய்திப் போற்றிக், தாழ்ந்தகல மொத் திருப்பா ரின்போ லாங்கிச் சங்கரா வொருவரையங் கேவி டென்ன, வாய்ந்தவர்கள் பயங்கண்டு கருணை கூர்ந்து னருட்கமல மலர்க்கரத்தா லஞ்ச லென்றே. (௩)

எண்ணரிய தொகுதியெலா நிற்ப நின்போ லிய[2]லொப்ப வகத்தி யனைத் திருக்கண் சாத்திப், புண்ணியமா முனிவ[3]நம் போல நீயப் பொதிமலை யுயராமற் போமக தென்றல், [4]விண்ணிவரு மலயத்தி லிருத்தி யென்று விளம்புங்கா லுளங்[5]குளிர்ந்து விண்ணோர் முன்னாக், கண்ணுதலே யருட்கடலே யருள்பா ரிந்த காரியநன் றென்றுகழல் வணங்கி னால். (௪)

ஆதரஞ்சேர் குறுமுனியு மெனையொன் றாக்கி யருள்செய்தா [6]யருள்செய்த படியே செய்வ, லோதருந்தென் பூமிதமிழ்ப் பூமி யென்பா ரொண்டமிழிற் குரியவெலா மடிமைக் கிங்கே, போதமுற வறிவித்தல் வேண்டு மென்று போற்றுங்கா லெழுத்துச்சொற் பொருண்முன் னனை, நீதியுடைச் சூத்திரங்க ளறியும் வண்ண நெறியின்க ணறிவித்தாய் [7]நேசங் கூர்ந்தே. (௫)

நற்[8]றமிழ்நூற் கருத்தனைநாம் விரும்பி வாழு நன்கடம்ப வனத் துனக்கு நவில்கின் றேமென், றற்ற[9]முனிக் கினையதனித் தருளிச்

---

௧. போதம் - போந்தநச்.

௩. தென்றல்வரை - பொதியமலை. சோகது அபயமென்று.

௫. "ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய, மாதொரு பாகனை வணங்குதும்" (தனிச்செய்யுள்), "தழற் புரைசுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்" (கம்ப. அகத்திய.) என்பவை இங்கே அறியற்பாலன.

(பி - ம்.) 1 'பாவையர்பரிய' 2 'குடபாமகத்தியனைத்' 3 'நம்போதுநீயம்பு விமலை' 4 'விண்ணமரும்' 5 'குளுந்து' 6 'அடிசெய்த' 7 'நெஞ்சக' 8 'தமிழ்நூற்' 9 'முனிக்கதனைபணித்தருளிச்செய்து'

செய்தான் வேகையொடும் விடைகொடுத்தா யென்றி றைஞ்சப், பொற்றவது தனைக்கேட்ட பத்தர் பத்தன் புகழ்க்கினியா னயந்து வியந் தொக்கு மொக்கு, மற்றுமிக ரொவ்வாத மடமா தேயான் மறந் தனனீ யினேர்திருந்தாய் வழக்கு நன்றே. (௬)

தென்மலயக் குறுமுனியை யொழிய மண்ணிற் [1]செழுந்தமிழ்க் கொத் தறிவிக்க வல்லா ரில்லை, மன்னியகீ ரனுக்கவன்ற னாலே யின்று வண்டமிழ்[2]நூ னிறைவிக்கத் தகுவ தென்று, ஞான்றுமுணர் வுண் டாகத்தான் [3]மெய்ஞ் ஞான வுபதேசந் திருநோக்கா லுபதேசித்தான், டன்னவனை நயந்தழைப்பத் தாழா தெய்தி யருமறைநூல் விதியின் மல ரடியில் [4]வீழ்ந்தான். (௭)

வந்தனைசெய் தருந்தமிழ்ச்சூத் திரம்போ திதன் மனமயக்க முன்னவற்றை மாற்றி டென்ன, வெந்தைபிரான் மதுரைப்ப ரால வாயா னிரங்கியிரு செவிப்புலனு நிறையும் வண்ணம், புந்தியுள வகத் தியமா முனியே நல்ல போதமுறக் கீரனுக்கிவ் வுபதே சத்தைச், சிந் தையுற நாமுரைத்த படியே நீயுஞ் செப்புகெனத் திருநோக்கா லுப தே சித்தான். (௮)

[5] பார்வையினா லுபதேசஞ் செய்த பின்னர்ப் பண்டையினு மிக் கவறி வுடையோ னாகிப், [6]பூரணனு யடிதொழுது நின்று மிக்க போத முறக் கீரனுக்[7]கவ் வுபதே சத்தைச், சீர்மையொடு முபதேசஞ் செய் யக் கண்டு திருவுள்ள மிகமகிழ்ந்து [8]பரிசஞ் செயதே, யார்வமொடும் விடைதரமெய்க் குருவா மெந்தை யடிபரவி மலயகிரி யடைந்தா னன்றே. (௯)

வேறு.

மன்று மன்றுறை போய பின்னர் வணங்கி யாதர மாதரான்
முன்ன மேவிய கீர னுக்குப தேசி யேனென முதலவனீ
சொன்ன தென்னையெ னத்தி ருந்திய தூய்மை மேவிய வாய்மையா
னன்ன மேயது கேளெ னக்கடி தன்பி னோட[9]ருள் செய்குவான். ()

அரிய வொண்பொரு ளிப வர்க்கடி மைத்தி றம்புரி வோர்களுக்
குருகு நெஞ்சள வர்க்கி தந்தரு முட்பொ ருளைமயி லாதவர்க்

---

௬. பொற்ற-பொலிவுபெற்ற. 'பத்தர்பத்தன்' : உ௪: ௪; ௩௧: ௪௬; 'தொக்கு மொக்குப்': அ௩௬.

௯. பரிசஞ்செய்து - தீண்டி.

௧௦. அன்றுறை-அவ்விடம்; "அன்றுறை புமையவ ளகத்தனோர் செயன் முன்னி" (கந்த. டார்ப்பதி. ௧.) வாய்மையான் - சிவபெருமான்; எழுவாய்.

(பி - ம்.) [1]'செந்தமிழ்' [2]'நூலறிவிக்க' [3]'மெய்ஞான' [4]'வீழ்ந்தே' [5]'பார் வையால்' [6]'பூரணமாய்' [7]'இவ்வுபதேசத்தைச்' [8]'பரிவுஞ்செய்தே, யார்வமொ டும்' [9] 'அருளிச்செய்வான்'

ஆங்குய ராலயத் தூஞ்சலி செய்து சென்று
பூங்கம லத்தா ளேத்திப் புலவகே ளிவற்று ளாராய்ந்
தீங்குரை நல்ல தொன்றை யருளுதி யெமக்கென் றியாரு
மோங்கமுன் றுமு ரைத்த வுரையுரை யாலு ரைத்தார். (௩)

தென்றமிழ்ப் புலவ னாகிச் சேர்ந்தியல் வாணி ரின்று
நன்றுநீர் நவின்ற திவ்வூர் நம்முடைப் [1]பத்த னாகி
யொன்றிய [2]வணிக னுப்பூர் கிழார்மக னாமன் பாலன்
றன்றிற முரைப்பின் வென்றிச் சரவண குகனே யாகும். (௪)

உவமையின் ஞானி நாம முருத்திர [3]சன்ம னென்போ
னவையிலா வுரைய னைத்து மவன்றன்மு னவின்று ளொன்றை
யவையிடைக் கைக்கொண் டானே லஃதுரை யைய மில்லை
கவலுற வேண்டா வென்னக் கண்டவர் தொண்டிற் போற்றி. (௫)

தோன்றுநாட் டொடங்கி யூமன் சொற்றர [4]வலனே வென்ன
வேன்றசெந் தமிழ்தேர் [5]செட்டிக் கியாதொரு செய்யுள் கேட்டாற்
றோன்றிய [6]புளக மெய்யுந் துளிபடு கண்ணு முண்டோ
வான்றவச் செய்யுள் செய்யு ளல்லது செய்யு ளன்றே. (௬)

ஒருவரு மிகல வேண்டா வொத்துநம் மிடத்தி ருத்தி
[7]வரனுறக் கேண்மி னென்றே மறைந்திட [8]மலைதல் விட்டிங்
கிருவரு மறியா வெந்தை [9]யிலங்கிட நம்போல் வந்து
பரிவொடும் பகரப் பெற்றேம் பகர்ந்ததே செய்வ மென்றார். (௭)

பத்தியிற் [10]போந்து தெய்வப் பாவறி மண்ட பத்துச்
சித்திசேர் மூங்கை தன்னைச் சிறப்பொடு மழைத்துச் [11]சிங்கச்
சுத்தமார் தவிசி னேற்றித் தூபதீ பாதி நல்கி
யொத்துமுன் றுமு ரைத்த வுரையெலா முரைத்தா ரோங்க. (௮)

---

௪. இயல்வாணர்: விளி. உப்பூர்கிழாரென்பது உருத்திரசன்மனுடைய தந்தையார் பெயர். உப்பூர்: பரம்பக்குடிக்கு ஈசானத்திலுள்ளது.

௫. உருத்திரசன்மனென்பதற்கு, உருத்திரனாலடைந்த பிறப்பையுடையவனென்பது பொருள். இந்தவரலாறு உஉ - ஆம் திருவிளையாடலாலும், "திருத்தமிழ் மதுரைதன்னிற் சிவன்பொரு ணிறக்கு மாற்றால், உருத்திர சன்மனாகி யுற்றடு நிமலன்" (கந்த. சூரபன்மன்வதை, உசுக) என்பதாலும் இறையனாரகப்பொருளுரையாலும் நன்கு விளங்கும்.

௬. யாதொருசெய்யுள் - எந்த உரையை; உரையும் செய்யுளென்று வழங்கப்பெறும்; "இலக்கண மிலக்கிய முரையெனப் பெயர்பட், டிருக்குமென் றெண்ணுக செய்யுளி னியல்பே" (இ. கொ. ஒழி. சரு.) என்னும் சூத்திரத்தாலும் அதன் உரையாலும் உணர்க. உண்டோ - உண்டாமோ.

௮. பாவறி மண்டபம் - சங்கமண்டபம்.

(பி - ம்.) [1]'பத்தராகி' [2]'வணிகர்' [3]'சருமன்' [4]'வற்றோ' [5]'செட்டியாதொரு' [6]'புளகுமெய்யும்' [7]'வரனுறக்' [8]'மறைதல்விட்டு' [9]'இலங்கம்போலும் வந்து' [10]'பொருந்த' [11]'சங்கச்'

வேறு.

[1] வளமுறு கீரன் றனைபுகழ் கபிலன் மாசறு பரணனிம் மூவர், தளர்வறு முறையைக் கேட்டலு மூங்கை தணிவரு பெருவிருப் பெய்திப், புளகித மெய்யுந் துளிபடு கண்ணும் பொருந்தல்கண் [2]டதிசயித் தியாரு, முளம்வரும் பொருளிப் பொருள்கடா மென்றே யொப்பரு மப்பொருள் கொண்டார். (௬)

தலமிசை யெங்கும் விரித்தியற் சொக்கன் றகைமையை மிகமிக வாழ்த்தி, யலகிலா வூழி யிருந்தன ரிருந்த வருந்தமிழ்ச் செட்டியாஞ் செட்டி, யிலகிய மயின்மீ தறுமுகத் தோடு மினியபன் னிருகரத் தோடும், புலவர்கண் டிறைஞ்ச வருளினல் விளங்கிப் போயினன் [3]சாபமு நீங்கி. (௧௦)

ஆகத்திருவிருத்தம் - ௩௭௦.

---

## ௨௦.—இடைக்காடன்பின் போன திருவிளையாடல்.

முன்னமோர் நாளுன் மாட மதுரையின் முழுது ணர்ந்தோன்
பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போ
னின்னியல் வாணர்க் கெல்லா மிதவியோன் [4]கவியான் மிக்கோன்
றென்னனைக் கவிதை பாடிக் கண்டனன் சிறப்பி னெய்தி. (௧)

நன்கவி கேட்ட வேந்த னனைனு மதத்தாற் போவென்
றன்புசெய் யாமற் றள்ள வாங்கவன் கண்டு நாணி
முன்பொருத் தரமுஞ் சொல்லான் முற்றிய துயரிற் போந்தின்
றென்பொலா மணிக்குச் [5]சொல்வ லென்றிறை கோயில் புக்கான். ()

---

௧௦. செட்டி - வணிகன், முருகக்கடவுள்; "செட்டியுஞ் செட்டி யாயுதித் தான்" (௨௨: ௬).

(௨௦)

௧. "தோழனுங்கபிலன்" என்பர் பின்னும்; ௫. இதவியோன் - இன்பத்தைச்செய்பவன்; "இதவிய புல்லு மிட்டேம்" (௨௬: ௯.)

௨. பாண்டியன இடைக்காடரைத் தள்ளியது, "உன்னுடை மதத்தாற் றள்ளி யோட்டிய தென்னை" (௧௧) என்பதனாலும் துணியப்படும். பொலாமணி = பொல்லாமணி-துளையிடாதமணி; சிவபெருமான்; "புகவே தகேனுனக் கன்பருள் யானென்பொ லாமணியே" (திருவா. திருச்சத. ௧௦); "என்பொலாமணியைப் புணர்ந்தே" (திருவா. புணர்ச்சி. ௧); "என்பொலா மணியை யேத்தி" (திருவா. அச்ச. ௩); "என்பொலா மணிமன மிரங்கிற் றென்பவே" (பிரபு. முனிவர். ௬.)

(பி - ம்.) 1 'வளனுறு', 'வளர்வுறு' 2 'அதிசயித்தாரும்' 3 சாபமுநீக்கி' 4 'யார்க்குமிக்கோன்' 5'சொல்வனென்று'

மன்னிய சொல்லுன் மாது மாசறு பொருணீ யுண்மை
[1]யென்னநின் றாற்றும் வேத மாதலா லெனையோ வல்ல
வன்னமா ராய வொண்ணு வாலவா யமுதே தென்ன
னின்னையு நின்னை நீங்கா மின்னையு நிந்தை செய்தான். (௩)

தக்கதோ வெனத்து தித்துத் தனித்துரைத் தேகக் கண்ட
சொக்கநா யகன்மா தோடுந் துண்ணென நடுக்க முற்று
மிக்கமா நிலனுஞ் செம்பொன் மேருமால் வரையு [2]மற்றெண்
டிக்கும்வா னகமு நோவ நொந்திரு செவிபு தைத்தான். (௪)

தொழுதுபோ மிடைக்கா டற்குந் தோழனுங் கபில னுக்கு
மெழினலங் கூர யாமு மெய்துவ [3]மின்னே யென்று
செழுமதில் வடபால் வையைத் திருநதித் தென்பான் மேவப்
பழுதறு சங்கத் தாரு மேவினார் பாதம் போற்றி. (௫)

மறுவறு முனிவர் வானோர் வணங்கியின் னருளை வாழ்த்திக்
குறைவறு சங்கத் தோடுங் கூடியாங் கிருப்ப விப்பா
னெறிபட வணங்குந் தொண்டர் நேர்படப் புலரு முன்ன
மிறைவனைத் தொழுவான் வந்தார் கண்டிலர் திகைத்தா ரேங்கி. (௬)

மண்மிசைப் புரண்டார் வீழ்ந்தார் மயங்கினார் முகத்த றைந்தார்
கண்ணினீர் சோர வாய்விட் டலறினார் கைவி திர்த்தா
ரண்ணலே யெங்கொ ளித்தா யரசனீ தறிந்தா லென்னா
மெண்ணமொன் றிலாம லந்தோ விளைந்ததே யென்னோ குற்றம். (௭)

அவனிவேந் தற்குத் தாழா தறைகுவ மென்று சென்று
தவமுடை வேந்தே நந்த மாலவாய்த் தரும மூர்த்தி
புவிபுகழ் கோயில் விட்டுப் போய்நதிக் கரையி லேறிக்
கவிமன ரோடு மங்க ணிருக்கின்றான் கண்டா யென்றார். (௮)

செப்பிய மாற்றங் கேட்ட தென்னன் மெய்ந் நடுங்கி வீழா
மெய்ப்படு பயத்தி னோடு மேதகு மாதி னோடு
மொப்பரு மமைச்ச ரோடு மொல்லைகா னடையிற் [4]சென்றிங்
கிப்படி போதற் கென்னோ குற்றமென் றிறைஞ்சி வீழ்ந்தான். (௯)

---

௩. இதில், சொல் உமை, பொருள் சிவபெருமா னென்றதை, "என்னை யிகழ்ந் தனனோசொல் வடிவாய்நின் னிடம்பிரியா விமயப் பாவை, தன்னையுஞ் சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனன்" (திருவிளை. இடைக்காடன். ௧0) என்பதனாலுமுணர்க.

௫. மின - உமாதேவியார். மேவ - சிவபெருமான் எழுந்தருள; "முன் னிடைக்காடன் பின்னெழ நடந்து" (கல். எக.)

௭. எண்ணமொன்றிலாமல் - புத்தி பூர்வமின்றி.

௮. கவிமனர் - கவியரசர்; சங்கப்புலவர். ௯. கால் நடை.

(பி-ம்.) [1]'என்னுமதாற்றும்' [2]'எண்ணெண்டிக்கும்' [3]'நின்னோடென்று' [4]'சென்றங்கு'

நெஞ்சம்[1]வே றாகி மால்போ னின்றுகண் ணருவி சோர
வஞ்சியுந் தானும் வாழ்த்த [2]வானவர் துதிக்கு மேலோன்
பஞ்சவ னெனக்கு னைப்போற் பத்தர்க ளில்லை யிந்த
மிஞ்சிய தலமுங் கிஞ்சில் விருப்புடைத் தலமே யாகும். (௧௦)

நின்னொடு [3]செற்ற மில்லை நெறிதர வெனையந் தாதி
சொன்னவன் கபிலன் றோழன் சொல்லிய கவிதை [4]சற்று
மன்னிய பொருளாற் சொல்லால் வழுவிலா [5]திருப்ப வோரா
துன்னுடை மதத்தாற் றள்ளி [6]யோட்டிய தென்னை நென்னல். (௧௧)

கல்வியிற் சிறந்தி ருப்பக் காரண மின்றிக் குற்றம்
புல்லர்போ [7]லுரைத்தா யின்று போதுமோ வுனக்கெ மக்கு
நல்லவன் வந்து சொல்ல நமக்குநம் புடைமா துக்குஞ்
சொல்லிட வரிது [8]நோந்த தென்றலுஞ் சோர்ந்து வேந்தன். (௧௨)

என்னறி வின்மை தன்னை யெந்தையே பொறுத்தி யென்று
மின்னொடு [9]பின்னுந் தாளில் விழுப்பிழை [10]பொறுப்போ றறி
யின்னியல வாண ரோடு மின்றிடைக் காட னோடு
மன்னவ வருவல் போவென் றரசனை விடுத்தான் வாழ்த்தி. (௧௩)

சேர்ந்தநன் புலவ னோடுந் தென்திரு வால வாயிற்
சார்ந்தநா வலர்களோடுஞ் சார்ந்தனன் றலந்து திப்ப
வாய்ந்தவத் தலத்தி னுமம் வடதிரு வால வாயென்
றூர்ந்தது [11]கண்ட தொண்ட ராடினர் பாடி னாரால். (௧௪)

பொன்முடி மன்னன் வந்து பொருந்திடைக் காடற் போற்றி
யென்னையா ளுடை யா [12]னின்பி னெய்தினு னென்று முன்னர்ப்
பன்னிய தமிழ்கொண் டோடைப் பருப்பதத் தெருத்தத் தேற்றி
மன்னவ ரென்ன வாழ்வித் [13]தருளினன் வரிசை கூர. (௧௫)

ஆகத்திருவிருத்தம் - ௩அ௫.

---

௧௦. வஞ்சியும் தானும் - தேவியும் தானும்; "மின்னொடுபின்னுந்தாளில் விழ" (௧௩) கிஞ்சில் = கிஞ்சித் - சிறிது; இது, மலைநாட்டுவழக்கு.

௧௧. அந்தாதியென்றது, சிவபெருமான்திருவந்தாதியினை; இது, ௧௧-ஆம் திருமுறையிலுள்ளது. சொன்னவனுகிய கபிலன். என்னை - யாது.

௧௨. உனக்குப் போதுமோ - உனக்கு இத்தன்மை உண்டாதல் தகுமோ. நமக்கும் நம்புடை மாதுக்கும் நேர்ந்த துன்பம் சொல்லிட வரிது.

௧௪. நன்புலவன் - இடைக்காடர். வடதிருவாலவாய் - இஃது இடைக்காடருடைய பிணக்கைத் தீர்க்கும்பொருட்டுச் சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளியிருந்தவிடம்; இக்கோயில் இக்காலத்துப் பழையசொக்கநாதர் கோயிலென வழங்குகின்றது. [டல்கர். ஓடைப்பருப்பதத்து எருத்தம்-யானைப்பிடர்.

௧௫. முன்னர்ப் பன்னியதமிழ் - இடைக்காடர் முன்பு பாடியதமிழ்ப்பா

(பி - ம்.) [1]'வேறாய்மால்போல்' [2]'மன்னவர் துதிக்கு நல்லோன்' [3]'செற்றமுண்டோ நெறிதொட' [4]'மற்று' [5]'இருப்பதோராது' [6]'ஒட்டினையென்னை' [7]'உரைத்தலின்று' [8]'நொந்ததென்றலுஞ்' [9]'மின்னுந்தாளில்' [10]'பொறுப்போனெறி' [11]'கண்டுதொண்டர்' [12]'அன்பின்' [13]'அருளினனருளை வாழ்த்தி'

## உக.—கடல்சுவற வேலெறிந்த திருவிளையாடல்.*

பார்மிசையின் முன்னொருகாற் பழமதுரை தனைநாடி
[1] வாரிதிகொள் வானொலித்து வரைபுரையுந் திரையெடுத்துச்
சேர்வதுகண் டமரருமற் றேனோருந் தெருமராலுற்
றோரிடமுங் கிடையாதெங் கொளிப்பமெனத் துதித்தனரால். (௧)

விழுமியபே ரருட்சொக்கன் மெய்ஞ்ஞான விழியாற்கண்
டுழையின்மல ரணைத்துயிலு முலகாண்மன் னனைக்குறுகித்
தொழுகழலுக் கிரச்செழிய [2]துயிலுணர்தி துயிலுணர்தி
பழமதுரை தனைக்கொள்வா னெழுந்ததுநீர் பரந்தகடல். (௨)

தேமளித்த நாவல்பயி றென்புலத்தோர் தமக்கெல்லா
நாமளித்த வேலையற நாமளித்த வேலையெறி
நீமனத்துச் சலியாது நின்றெதிர்சென் றெனக்கனவிற
காமுறத்தான் மதியுரைத்துக் கங்குற்க ணொளித்தனனால். (௩)

இக்கனவு [3]காண்டலுமே யிரும்பரவை விடிவதன்முன்
னுக்கிரமாய் [4]நனிவரக்கண் டுக்கிரவேல் விறற்செழியன்
மிக்ககன வமைச்சருடன் விளம்புங்காற் சிவனேநின்
றக்கதிரு வுளத்திருந்து செலுத்துகின்றான் றவறறவே. (௪)

உந்தையருள் செய்ததுசெய் தருளுலக முடியாம
[5] லந்தமதின் றெனக்கேட்டுத் தாழாதஞ் சலித்தெழுந்து
சுந்தரனை நினைந்து[6]தனி வேல்வாங்கித் துணிவொடுசென்
றுந்திவரும் பெருங்கட[7]லு ணடுவெறிந்தா னுலகுய்ய. (௫)

---

௧. பழமதுரை: இது கடல்கொள்ளவந்த மதுரை; இப்போதுள்ள மதுரைக்குக் கிழக்கே இருந்ததாகத் தெரிகிறது. "தமிழொடுபிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி" (மீனாட்சி. சப்பாணி. ௧ - ௫) பழமதுரைமேடென்ற ஓரிடமும் பழமதுரைமுனியென்ற ஒரு முனியின்கோயிலும் அங்கேயுண்டு.

௨. உழை - வீடு.

௩. நாவல்பயில் தென்புலம் - நாவலந்தீவு. நாம் அளித்த வேலை அற - அச்சத்தைக்கொடுத்த கடல் வற்றும்படி. சென்று எறி.

௪. பரவைவரக் கண்டு.

*"முந்நீர்விழவி னெடியோன்" (புறநா. ௯); 'முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றானென்ற வியப்பால், நெடியோனென்றாரென்ப' (ஷை ஷை உரை);"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவேலெறிந்த வான்பகை பொறாது,...கொடுங்கடல் கொள்ள,...தென்றிசையாண்ட தென்னவன்" (சிலப். ௧௧: ௧௭-௨௨) "மற்றவன் றன்னால் வடவையின் கொழுந்துசுட், டாற்றா துடலமு மம்மைக்குறு முத்தமும், விளர்த்தநின் றணங்கி வளைக்குல முழங்கும், கருங்கடல் பொரிய வொருங்கு வேல்விடுத் தவற்கருள் கொடுத்த, முதுபெரு நாயகன்' (கல். ௭௮).

(பி - ம்.) [1]'வாருதி' [2]'துயிலுணர்தி யெனவெழுப்பிப்' [3]'கண்டலுமே' [4] 'நகர்வரக்கண்டு' [5] 'அந்தமதி னன்றெனக் கேட்டஞ்சலிசெய்தே யெழுந்து' [6] 'தனிவேல்' [7] 'உண்டுறவெறிந்தான்'

வென்றிபடச் சிவந்தெறியக் கருங்கடல்வெவ் வலிதொலைந்து
முன்றெறு[1]மம் புடைந்துபங்கப் பட்டலறி மோதிவிழா
நின்றவடி வடிம்பலம்ப நின்றதுகண் டேனேரு
மின்றிது[2]கண் டனம்புதுமை யெனப்பயம்விட் டெழுத்துதித்தார்.()

மாலைமுடி யோன்வேலை வடிம்பலம்ப நின்றதனல்
வேலைவடிம் பலம்பநின்ற னென்றெங்கும் விளங்கியதா
லாலவாய் நகரான்போ லருளுடைய கடவுளர்யார்
ஞாலமிசை வானமிசை யெனத்துதித்தார் நாவலர்கள். (எ)

கடலீவலிய சத்திவிடச் சத்திவிட்ட காவலற்குப்
புடவிபரி வுறவேண்டும் வரங்கொடுத்துப் புதுமைபட
வடைவுட[3]னேங் கியசங்க மண்டபமு மமைத்தாழி
தடமுடைநா வலர்[4]போற்றத் தமிழ்ச்சொக்க னினிதிருந்தான். (அ)

வேறு.

மனத்தின்பம் பயக்கும்பொன் மதிட்டங்குந் தமிழ்க்கூடற்
றனித்தென்றுஞ் சிறக்குந்தண் டமிழ்ச்சங்கந் தனைப்பண்டி
னினைக்குங்கண் முதற்சங்க மிடைச்சங்கந் [5]நிலைத்தாகு
மினிச்சங்கம் புனற்கங்கைக் கரைப்பங்கின் புறத்தென்ப. (கூ)

ஆகத்திருவிருத்தம் - ௩கூ௪.

---

௬. அடிவடிம்பு அலம்ப - அடியின் ஓரத்தைக்கழுவ.

௬-எ. இவ்விரண்டு செய்யுட்களாலும் கடல் வடிம்பலம்ப நின்றனென்ற பெயர்க்காரணம் விளக்கப்பட்டிருத்தல் காண்க. "ஆழி வடிம்பலம்ப நின்றா னும்" (நள. சுயம். கஎ௩), "கடல் வடிம்பலம்ப நின்ற கைதவன்" (வில்லி. பாரதம், கரு - ஆம் போர். கஅ.)

அ. சத்தி - வலி, வேல்.

௯. நினைக்குங்கண் - நினைக்குமிடத்து. தமிழ்ச்சங்கம், முதற்சங்கம் இடைச்சங்கம் இவற்றின் நிலையையுடையதாகும். கங்கைக்கரை - பொற்றாமரைக்கரை; கங்காநதியின்கரையுமாம்; ஸ்ரீஹாலாஸ்யமாஹாத்மியம், க௩-ஆவது லீலை, ௪௬-ஆம் சுலோகமுதலியவற்றைப்பார்க்க.

(பி - ம்.) 1'அப்புடைந்துபங்கப் பட்டலறி விழாமுன்னம்' 2'கண்டிலம்' 3 'ஓங்குயர்சங்க' 4 'துதிப்ப' 5 'நிலத்தாகும்'

## ௨௨.—வலைவீசின திருவிளையாடல்.*

அருளாருந் திருமதுரை யாலவா யியற்சொக்கன்
பரிவாக முன்னொருகாற் பரபோக முத்திதரும்
பொருளாரு மாகமங்கள் [1]பொருப்பரையன் றவப்பயனுந்
திருவான வுமைகேட்பச் செழுந்திருவாய் மலர்ந்தனனால். (௧)

கேட்டருளுங் காலையினக் கிளிமொழியாள் பெருவிருப்பு
வாட்டமுற வெகுண்டு[2]நனி கேட்டவரை மடமாதே
நாட்டமுற நினக்கிங்கு நாமுரைத்த வரும்பொருளை
மீட்டுரையாய் கேட்டபடி காண்பமென [3]விளம்பினனால். (௨)

பிடிநடையா ளுடனடுங்கிப் பெரிதஞ்சி யடியிறைஞ்சி
யடியவர்கட் கெளியானே யரியயர்கட் கரியானே
மடமகல விரித்துரைத்த மாசறுபே ரரும்பொருளின்
புடையைமறந் தனன்சிறியே னறிவின்மை பொறுத்தியென. (௩)

வேறு.

வெறிகமழ் சடிலச் சொக்கன் விடுவிடுன் றுங்கா ரத்தா
லறியாநா நவின்ற நூலை யவமதி செய்தாய் வேலைத்
துறைபயின் மீனம் வீசுந் தொழிலுடை வலைஞர் பொல்லா
[4] மறமலி யிழிகு லத்து வந்துதி யெனச்ச பித்தான். (௪)

மழைமதத் தொந்தித் தந்தி மத்தகப் பிள்ளை சீறித்
தொழுது[5]தான் றுதிக்கை யின்றித் துதிக்கையால் வளைத்தெ டுத்துப்
பழுதிலா கமங்க டம்மைப் பௌவமீ தெறியக் கண்ட
வழுவிலான் பெருவ யிற்றற் [6]கழகிதென் றென்று நக்கான். (௫)

---

௧. ஆகமங்களைத் திருவாய்மலர்ந்தனன். ௨. நனி வெகுண்டு.

௫. தந்திமத்தகப்பிள்ளை - விநாயகர்; மத்தகம் - தலை. துதிக்கை-துதித்தல், தும்பிக்கை. பௌவம் - கடல்.

* "அலைகடன் மீமிசை நடந்தாய்போற்றி" (திருவா. போற்றி. ௨௦அ); "ஆராவமுதா யலைகடல்வாய்...வாரியனை" (திருவா. திருவம். ௨); "மணிவலை கொண்டு...பிரானுவாரே" (திருவா. திருவார்த்தை. ௩); "ஏதில் பெரும்புக... பிரானுவாரே" (திருவா. திருவார்த்தை. அ); "மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே" (திருவா. திருப்படையாட்சி, ௧.)

(பி-ம்.) [1]'பொருப்பரசன்' [2]'தனிகேட்ட' [3]'விளம்பினன்' [4]'மறவலியிழி [5]'தாடுதிக்கையின்றி', 'அராடுதிக்கையின்றி' [6]'அழகிதிங்கென்று'

மறைப்பொருள் கொளுங்கா லியார்க்கு மனமயக் குண்டா மீது
பொறுப்பதல் லாலி யாயைச் சபித்தனை யெனப்பொ ருளுய்ச்
செறுத்துயர் திருக்கை மேவுந் தெய்வவா கமத்தை வந்து
[1] பறித்ததை யன்றிக் காணக் கிழித்தனன் பலகைக் கந்தன். (௬)

ஆங்கது கண்டு நீயு னறிவினை மதித்து வந்து
[2] காங்கெயா புத்த கத்தைக் கிழித்தனை கையில் வாங்கி
யோங்குநம் மதுரை மன்னு முயர்குல வணிக னுக்கோர்
மூங்கையம் புதல்வ னாகப் பிறத்திபோ வெனமு னிந்தான். (௭)

வேறு.

இத்தகைமை யிற்றிகழு மெல்லையினி லுட்புகவி லங்குகண நாத னொருவன், முத்தனது கண்டுகடை விட்ட திரு நந்தியையு னிந்[3]தி னிய சாப மிடுவோ, னத்தியுழை பிற்சுறவு ருக்கொடுபு குந்துலவி டாக மமெ டுத்தெ னுமுனம், புத்தியுடை நந்தியுமு நித்துலவி னன்பெரிய புத்தக[4]மெ டுத்து முடியில். (அ)

வேறு.

எழிலுமை கலங்கி யிறைஞ்சல்கண் டிரங்கி யிலங்கதி யரைய னம் மன்ப, னுழையிடை யினிய புதல்வியா யுதித்தா லுலகுளோர் காணவந் துனையா, மழகுற மணந்து காவனந் தியையு மாட்கொள்வ மஞ்சனீ யென்று, செழுமையின் விடுப்பத் தொழுதருள் பெற்றே செட்டியுஞ் செட்டியா யுதித்தான். (௯)

தடமலி செல்வத் தோங்கதி யரையன் றவப்பெரும் [5]பயத்தி னுற் போந்து, [6]புடையுமை யணங்கு தோன்றமுன் பெரிய [7]போற் றரு மவயவ நிரம்ப, நடமலி தந்தை தாயதி சயித்து நார்[8]வடி வன் றியே தெய்வ, வடிவொடும் விளங்கு [9]மிவடனக் கியைந்த மாமண வாளனா ரெனுங்கால். (௧௦)

---

௬. பல கை - பன்னிருகைகள்.

௭. மூங்கையம்புதல்வன் - ஊமைப்பிள்ளை.

அ. கணநாதனொருவன் உட்புக. அத்தி - கடல். ஆகமமெடுத்த உலவிடு. புத்தி - ஞானம்.

௯. அதியரையன் - வலைச்சாதிக்கு அரசன்; 'அதிபத்தர்' என்பதனுலு முணர்க; ௧௦, ௧அ. இவ்வரசனுடைய ஊரின் பெயர் விக்கிரமமென்று திருவுத் தரகோசமங்கைப்புராணம் தெரிவிக்கின்றது. காவல்கந்தி. செட்டி-முருகக் கடவுள்; "செட்டியப்பனை" தே.

(பி -ம்.) 1'பறித்தலுமன்றி' 2'காங்கையா' 3 'இனையசாபம்' 4'முடித்து' 5 'பலத்தினுற்' 6 'புடையுமை' 7 'போற்றரும் வைபவம்' 8 'வடிவின்றியே' 9 'இவடனுக்கியைந்த'

பிறிவிலா வரனும் பிறிவிலா மயிலைப் பிரிந்தினி திருக்கமாட் டாம, லெறிவலை வாணர் தம்முருக் [1]கொண்டாண் டெய்திவாழ் பர தனை நண்ணி, நெறியுடை யவனே யெனக்குநின் மகளை யளிப்பையே னினக்குநன் றென்ன, வறிவுளோன் விரும்பி வடிவனு மிருந்தா யார் கொனீ யறியவோ தென்றான். (கக)

துன்றெயின் மதுரை நகர்வரும் பெரிய தொல்லைமீன் வாணி கப் பிள்ளை, வன்றிறற் றொழிலா [2]லுயர்ந்தவ னின்பால் வந்தனன் மாமடி யென்ன, நின்றவ னையுற் றுரையினு லாகா நின்றொழில் காண மீன் விசு, முன்றிகழ் வலையை முடியென மறைநூன் முறைதரு கயி றுகைக் கொண்டான். (கஉ)

வேறு.

வெல்லவுட் கயிறு [3]வாங்கு கயிறிட்டு விரலா ழிக்கண்
பல்விதக் கண்கள் சேர்த்துப் பாரமீன் வளைக்க வல்ல
வெல்லைவிட் டிருப்புப் பார வினமணி விளிம்பு றக்கோத்
தொல்லைமீன் வலைமு டிந்தா னுற்றவ ரதிச யிப்ப. (கங)

ஏர்படப் பிடித்தற் காமீ னெங்குள தென்ன மாம
னூர்வரு மரக்க லங்க ளுலாவிடா வகையு டைத்துச்
சீர்மைமீ னனைத்துந் தின்று திசைதொறு நடுக்கஞ் செய்திவ்
வாரியுள் [4]வரைபோ லோங்கித் திரிவதோர் மகரமுண்டால். (கச)

[5] உற்றவ வதனுற் சால மிடித்தன முளமஞ் சாமன்
மற்றது தனைப்பி டிக்க வல்லையேல் வலைஞர்க் கெல்லாங்
கொற்றவ னீயே மற்றென் குலக்கொடி தனையு மின்றே
வெற்றியி னினக்க [6]ளிப்பன் வேண்டுவ சிறக்கச் செய்தே. (கரு)

என்றது சொலவி யைந்தார் கலியினுள் வங்கத் தேறிச்
சென்றணி வலைதோ ளேற்றிச் சிலைத்துமேல் வளைத்து வீசி

கக. பிறிவு - பிரிவு. வலைவாணர் - வலைஞா. பரதன் - வலைஞன்.

கஉ. மாமடி - மாமனூர்; விளி; கூ: ரு-ஆம் செய்யுட்குறிப்பைப் பார்க்க. மறைநூல் முறைதரு கயிறு - வேதமாகிய நூலால் முறையே உண்டாக்கப்பெ ற்ற கயிறு; வேதக்கயிறு.

கங. வாங்கு கயிறு - குறுக்கேமறித்து வாங்கும் கயிறு. கண்கள் - வலை யின் இடைவெளி. மணி - உருணடைகள். "ஒரு சிறுகுடிப் பரதவனுகிப், பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி, கெடுங்கடல் கலக்கு மொருமீன் படுத்த, நிறையரு ளுயகன்" (கல். கக.)

கரு. மிடித்தனம் - வறுமையுற்றேம்; "இடைமிடித் தார்தமைத்தேடி" (திருவெங்கைக்கோவை, நக.)

(பி - ம்.) 1 'கொண்டேயெய்தி' 2 'உயர்ந்தவன்கேட்டு' 3 'வாங்கிக்கயி றிட்டு விரலாளிக்கண்' 4 'மலைபோல்' 5 'உற்றதுவதனுல்', 'உற்றதாங்கதனுல்' 6 'அளிப்பல்வேண்டுப'

வென்றிகொண் மகரந் தன்னைப் பிடித்துமெய்ப் புத்த கங்க
[1] ளொன்றுமே காமற் கைக்கொண் [2]டேறினு னும்பர் போற்ற. (கசு)

நந்திதன் னுருவம் பெற்று நயந்தடி வணங்கி நிற்ப
வந்தடி தொழுதார் போற்றி வலைஞர்க ளதிச யித்துச்
செந்துவர் வாய்க்க ருங்கட் சிற்றிடைப் பெரிய வல்குற்
பைந்தொடி யணங்கைச் சாதிப் பண்பினின் மன்றல் செய்தான். ()

வேறு.

காதலியோ டதியரையன் கனகமழை பொழிந்திறைஞ்சி
யாதிகொளற் கென்னதவஞ் செய்தேனம் மணங்கையென
மாதினொடு நந்தியொடும் வந்துடனு கமமெடுத்துப்
போதுகண [3]நாதரொடும் போயினன்வான் மிசைகாண. (கஅ)

ஆங்கணைந்த பெருங்கிளைஞ ரருங்கனவோ மாயையோ
வீங்கிதுதா னறியகிலோ மிறைபணியே யெனத்துதித்து
நீங்கரிய நல்குரவு நீங்கியிருந் தனர் வருணன்
வாங்கருமன் பொடுதுதித்தா னனிபொழிந்து மலர்மாரி. (கசு)

சோதியுருப் பெற்றவுமை தொழுதியலா கமங்கடமை
யாதரவிற் கேட்பலினி யருட்கடலே குணக்குன்றே
யோதியருள் செயல்வேண்டு முத்தமனே முத்திதரு
மாதிமுனி வித்தகனே யெனவேத்த வருண்மூர்த்தி. (உ0)

வேறு.

உன்னரும் விசேட மிக்க வுத்தர கோச மங்கை
யென்னுமப் பெருந்தா னத்து ளெய்தியாங் கிறைவி யைப்பார்த்
தன்னமே விளம்பக் கேளென் றுசிலா முத்தி நல்குந்
தொன்னெறி யாக மங்கள் சுரிகுழற கருளிச்செய்தான். (உக)

அருந்தவம் புரியா முன்ன ரறுபத்து நால்வ ரங்கட்
பொருந்தல்கண் டெமக்கு ஞானம் புகன்றுருக் காட்டென் றேத்தத்
திருந்துப தேச நோக்காற் செய்துமா முனிவ ருய்யப்
பெரும்பொரு ளுரைத்தான் மன்றற் பேதையோ டுருவங் காட்டி. ()

கஅ. "அதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை" (திருநா. தே. திருவதிகை) என்ற திருவாக்கு, சிவபெருமான் அதியரையன் திருமகளைவிரும்பி மணஞ்செய்தருளிய இவ்வருமைத் திருவிளையாடலையும் புலப்படுத்தி விளங்குதல் காண்க. ஆதி: "ஆலவாயி லுறையுமெம் மாதியே" (திருஞா. தே. க-ச0.)

கசு. இறைபணியே - சிவபெருமான் திருவிளையாடலே.

உ0. ஆதிமுனி: விளி.

உஉ. புரியா - புரிந்து. "எண்ணெணுத்தமப்பத்தர்" என்பர் பின்னும்; உ௩. பெரும்பொருள் - மகாவாக்கியபொருள். மன்றற் பேதை - மங்களேசுவரி. திருவுத்தரகோசமங்கைப்புராணம், அத்தலத்தில் தவஞ்செய்த முனி

(பி - ம்.) [1]'ஒன்றுபோகாமற்' [2] 'ஏகினனும்பர்வாழ்த்த' [3] 'நாதனொடும்'

வித்தக வேடங் காட்டும் விமலனீள் புணரி சூழ்ந்த
வெத்தலத் தினுஞ்சி றந்த தித்தல மே[1]யென் றெண்ணெ
ணுத்தமப் பத்தர் தங்க ணுத்தரா கமகோ சங்கள்
வைத்துமா மதுரை நோக்கிப் போயினான் மாதி னோடும். (உகூ)

அன்றுமைக் கருளிச் செய்த வரியவுத் தரகோ சங்கண்
மன்றுற வைத்த லாலே வாதவூ ராளிபோற்று
மொன்றிய நகர்க்கு நாம முத்தர கோச மங்கை
[2]யென்றுமை மங்கை பேரால் வழங்கிய [3]திலங்க வெங்கும். (உச)

ஆகத்திருவிருத்தம் - சகஅ.

## உகூ.—வளையல்விற்ற திருவிளையாடல்

முக்கண னால வாயன் முன்னமோர் காலஞ் சென்று
தக்கமா முனிவர் வாழுந் தருமவாச் சிரமந் தன்னுட்
புக்குநற் பிச்சை கொள்ளுங் காலையிற் [4]புனித மாதர்
மிக்கபே ரெழில்கண் டியாரும் விரும்பியொள் வளையி ழந்தார். (க)

விரும்பிய மடவார் நெஞ்ச வேறுபா டறிந்து கேள்வர்
பொருந்தலின் றெமக்கிங் காகீர் பொழிறிகழ் மதுரை மன்னுந்
திருந்திய வணிகர் தூய்மை சேர்குலத் துதித்தங் கெல்லாந்
தரும்பரன் றன்னைச் சாரு மென்றவர் தமைச்ச பித்தார். (உ)

ஆங்கவர் முன்னர்ச் செய்த வருந்[5]தவப் பயத்தாற் போந்து
வாங்கருஞ் செல்வத் தோங்கும் வணிகர்தங் குலத்துட் டோன்றி
யோங்கிய வடிவத் தோடு மூலகுளோ ரதிச யிப்ப
வீங்கரு மொழுக்கத் தோடு மிரம்பினர் [6]பிறங்க வங்கண். (ங)

முன்னவ னியாவும் வல்ல முதியவன் சமாதி யாலே
பின்னரொண் புதல்வ ரின்றி யனைவரும் பெண்ணே யாக
மன்னிய வினிமை கூர்ந்த வணிகர்கண் டியார்க்க ளிப்பே
மன்னிய ரல்லா ரில்லை யென்றுளத் தழுங்கிப் புக்கார். (ச)

---

வர்கள் ஆயிரவரென்றும் அவர்களுக்குக் காட்சி காடுத்தருளியவருடைய திருநாமம் காட்சிகொடுத்த நாயகரென்றும் கூறுகின்றது; அப்புராணத்துள்ள பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயம் பார்க்க.

உகூ. பத்தர் தங்கண் - பத்தரிடத்து. உத்தர ஆகம கோசங்கள் - விடையாகிய ஆகம புத்தகங்கள்.

(உகூ)

ச. சமாதி - சங்கற்பம். [வாய்.)

* "வளைவிலியா யெல்லார்க்கு மருள்செய்தானை" (தே. திருநா. திருவால

(பி - ம்.) [1]'என்றெண்ணி' [2]'என்றெழின்மங்கை' [3]'இலங்கயாங்கும்' [4]'புனிதர்மாதர்' [5]'தவப்பலத்தாற்' [6]'பிறங்கவன்றே'

துப்பமர் மெய்யன் வையந் தொழுபவன் வணிக னாகி
யொப்பருங் கங்கை மாதை யுமைமாதை யொளித்துப் போந்தே
யப்பெருங் கன்னி மாரைப் [1]பரிசிப்பா னாசை கூர்ந்து
செப்பரு மதுரை தன்னுட் சேர்ந்தனன் வணிகர் வீதி. (ரு)

கழையதண் டேன்றி மூன்று விரல்படக் கடிநீ றிட்டுத்
தழையவொண் கலிங்கஞ் சுற்றித் தனிமுடிச் சாத்துஞ் சாத்திப்
பழையதோர் குடைக வித்துப் பசும்பைதோ ளேற்றிச் செங்கை
யழகெழ மோதி ரங்கா தணிகொள்கண் டிகைக டாழ. (சு)

வேறு.

இளமை மெய்வி டாதி லங்க விருமி யுள்வ ளைந்துசொற்
றளர வெள்ளை நரை[2]பு னைந்து சால வீழ்வி ருத்தனா
யளவில் வண்ண வளைகள் கொண்ட ரும்பெ ருந்தெ ருத்தொறும்
[3]வளையல் கொள்ளும் வளையல் கொள்ளு மென்று கூறி வந்தனன். ( )

வந்துகூறும் வணிக னல்ல [4]வடிவி னால நங்கனே
பிந்த மாய நரைப ரந்த தின்ன தென்ற றிந்திலோஞ்
சுந்த ரேசன் மாயை யோதெ ரிந்தி டாதெ னச்சொலிப்
[5]பந்த மாற யாவ ரும்ப ழிச்ச நின்று லாவினான். (அ)

இணையில் வண்ண வளையல் கண்டெ னக்கெ னக்கெ னப்பகர்ந்
தணிக லன்கள் பொலிய வும்ம நங்க னான்ம னங்குலைந்
துணர்வு மின்றி மடனு மின்றி யொல்லை வந்த முல்லைசேர்
வணிகர் தங்கண் மங்கை மாரை வளையி னால்வ ளைத்தனன். (கூ)

கருதி நின்று தொழுது செய்ய கைத்த லங்க ளைப்பிடித்
[6]துருவ மிஞ்சு மாதர்நீரு [7]மக்கு மிக்கி லங்கயாம்
வரிசி றந்த நல்ல நல்ல வளைக ளுண்டு பரிவொடுந்
தருது நில்லு நில்லு மென்று சாற்றி மாலை யேற்றினான். (க0)

வேறு.

மின்வளை தன்னையெ டுத்துவி ரித்துவி ரைந்திடு வார்போல
மன்னிய [8]கைகள்பி டித்துவி டாதுவ ணக்கிம யக்குதல்கண்

---

ரு. துப்பு - பவழம்; தூய்மையுமாம்.
சு. கழையதண்டு - மூங்கிற்றண்டு. கலிங்கம் - ஆடை. முடிச்சாத்து - தலைப்பாகை. காதணிகளும் கண்டிகைகளும் தாழ.
எ. 'வளையல்கொள்ளும் வளையல்கொள்ளும்': அடுக்கு.
கூ. முல்லை - கற்பு. வளைத்தனன் - அகப்படுத்திக்கொண்டார். வளையி னால் வளைத்தனன்: மடக்கு.
க0. 'நல்ல நல்ல', 'நில்லும் நில்லும்': அடுக்கு. மாலை - மயக்கத்தை.
(பி-ம்.) [1]'பரிசிப்பின்' [2]'புணர்ந்து','பார்த்து' [3]'வளைகள்கொள்ளுமென்று கூறிவளமையாகவந்தனன்' [4]'வடிவினானவங்கனே, பிந்தமாயை' [5]'பந்தமற்றி யாவரும்' [6]'உருவுமிஞ்ச' [7]'உமக்குமக்கு' [8]'கைகண்மடித்துவிடாதுவணங்கி'

டன்னைய ருக்கறி விப்பமெ மக்கித டாதென [1]வச்சமுறுத் [ரும்.
தென்னைவி டென்னைவி டென்பரு ளத்தெரு மின்பம றைத்தெவ
இப்படி சொல்லிய தேது[2]ப ழுத்துந ரைத்தவி ருத்தனியா
னொப்பமர் கைகள்பி டித்தத னூலும தற்றவர் தாமிகழார்
செப்பிணை யோமுலை மைப்புய லோகுழல் செங்கய லோவிழிவாய்
துப்புரு வோநுதல் விற்பிறை யோவிது வல்லியர் சொல்லுமென. ()

வேறு.

நன்குறு மொழியிற் பட்டு நாயகனைக் காண்பான் வேட்டின்
றென்கையில் வளைநெ ரிந்த தென்கையில் [3]வளைநெ ரிந்த
தன்புடை யவனே நல்ல வணிவளை யெமக்கி டென்று
முன்பிடும் வளைநெ ரித்துச் சொல்லுவார் முடுக வாங்கு. (கங)

[4]இனக்கன வளையி டாதிங் கேகுவா யாயி னெங்கண்
மனத்தமர் சொக்க னூர்த மாணையால் வளைப்பே மென்னத்
தனக்குநல் லவர்க்கு நல்லோன் றயாவொடு முறுவ லோடுங்
கனத்தபல் வளைக ணீட்டுங் கைத்தலத் திலங்க விட்டான். (கச)

புனையுமா யிரம்பொன் னிற்குப் புரிவளை யொன்றே யென்றென்
றனைவரும் விரும்பக் கூறி யரும்பெருந் தனத்தை வேட்டாண்
டினவளை விற்பான் வந்தோ னிலங்கிய தனங்கொ டுத்துக்
கனவளை கொள்வான் வந்த கன்னியர் வளையுங் கொண்டான். (கரு)

இந்திர னயன்மா லாதி யாவருந் தீண்டொ ணாத
சுந்தர வுருவந் [5]தீண்டத் தோன்றுபே ரின்பந் தன்னைச்
சிந்தையா லனுப விப்போர் செட்டியார் நாளு மிங்கே
வந்துபோம் வந்து போமென் [6]றவாவற வழுத்தக் கண்டு. (கசு)

[7]பழுதிலா மார வேளைப் பாலலோ சனத்தாற் காய்ந்தோ
னழகிய மடந்தை மீர்கா ளப்படிச் செய்வ லின்றிவ்
விழுமிய வொளிவ ளைக்கு விலைதர வேண்டா நாளை
யுழைதொறும் வந்தாற் றருக [8]மென்றனை னுவகை நீட. (கஎ)

---

கச. வளைப்பேம் - தடுப்போம்; "வள்ளனீங்கப்பெறாய்வளைத்தேனென" (சீவக. அஅ0.)

கரு. தனம் - கொங்கை, பொன். "இதழியுந் தும்பையு மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத் தருளி, முத்தமிழ் நான்மறை முளைத்தருள் வாக்கால், வீதிகூறி விதித்தமுன் வரத்தாற், கருமுகில விளர்ப்ப வறனீர் குளிப்பக், கண்புதை யாப்புத் திணியிருள் விடிய, வுடனுறும் பிணித்த பாவமும் புலரக், கண்டநீள் கதுப்பினர் கைகுவி பிடிதுக், குருகணி செறித்த தனிமுத னாயகன்" (கல். சசு.)

கசு. செட்டியார்: விளி.

கஎ. பாலலோசனம் - நெற்றிக்கண். உழைதொறும் - வீடுகள் தோறும்.

(பி - ம்.) [1]'அச்சமுறாது' [2]'பழுத்த' [3]'வளையகன்றது' [4]'இனக்கினவளை' [5]'தீண்டித்' [6]'அவரவர்' [7]'பழுதிலான்' [8]'என்பனீந்துவகைநீட'

இன்னன பகர்ந்து காவ விலங்குபே ரிடங்க டோறு
முன்னுற நடப்ப மேனி விதத்தையு மூதிரா மென்மைப்
புன்முறு வலையுங் கண்டு புதுமையீ தறிவ மென்றே
நன்னெறி [1]வணிக லூரே தார்கொனீ ரவிறி யென்றார். (கஅ)

அழகிய சொக்க ஞமை மறுமுகச் செட்டி மைந்தன்
பழவுற வளகைக் கோனு லறிகுவர் பதியு மீது
மழவுறக் கங்கை யாடி வந்தனன் குமரி யாடக்
கிழவனியான் பிறந்தே னல்ல கிளையிலே யெனமைறைந்தான். (கக)

ஆங்கவன் மறையா மூன்ன ரரன்பரி சனத்தா லாங்க
ணேங்குகன் னியர்சூல் கொண்டு வீங்கிய வுதரங் கண்டே
யேங்கிநங் குலமு டிந்த தின்றெனை வெருவி யாருந்
தாங்குதல் கொடாது தீயிற் [2]சார்வதற் கொருப்பட் டார்கள். (உ0)

அருளுடைச் சொக்க னஞ்சி யவ்வயின் விடையிற் றோன்றிப்
பொருவரு மிருடி மாதர் சாபத்தாற் [3]போந்தார் நும்பாற்
பரிவொடும் வளைய விட்டுப் பரிசித்தோ நாமே சாத
லொருவரும் வேண்டா மற்றெக் குலத்தினு முயர்ந்தீ ரென்ன. (உக)

நடமொடு துதித்தார் யாரு நானிலத் [4]துயர்ந்தோ நாமே
யுடையவ [5]னறிந்தி டாத சரக்கிலை யுரைக்கு மெட்டான்
[6]கடையரேம் பயந்த புன்மைக் கன்னிமங் கையரை வந்து
படிமிசை விரும்பற் கென்ன பாக்கியஞ் செய்தோ மென்றே. (உஉ)

ஆர்ந்தமங் கையர்கண் முற்று மரன்பரி சனத்தாற் பண்பு
சேர்ந்தநன் புதல்வர்ப் பெற்றுத் திருந்திய வொழுக்கத் தானும்
வாய்ந்தநல் வடிவி னானு மறுவற விளங்கி நாளுஞ்
சூழ்ந்ததஞ் சுற்றம் போற்றத் துயர்கெட விருந்தார் வாழ்ந்து. (உங)

அறமலி மதுரை மன்னும் வணிகர்க ளன்று முன்னு
வெறிகமழ் செச்சைக் கண்ணி வேளென விளங்கி னார்க

---

கக. 'அழகிய சொக்கன்': மதுரைக்கல. ச, நிஈ, கச; மீனாட்சி. காப்பு. ச. அளகைக்கோன் - குபேரன்; கோனென்னும்பெயர் வணிகருள்வழங்கும். மழவுற - இளமையுற. மழவுறுதற்குக் குமரியாடவந்தனன்; குமரி, சிலேடை. கிளை - நல்லகுலம், மூங்கில். இச்செய்யுள், "வந்தவாவென்னை" (சீவக. உ0உ0) என்னும் செய்யுளின் கருத்தைத் தழுவிவந்தது. அச்செய்யுளின் ஒற்றுமைப்பகுதியைப் பார்க்க.

உ0. பரிசனம் - ஸ்பரிசம். தாங்குதல் கொடாது - பொறுமல்; கள: நி.

உக. 'அஞ்சி' என்றார், பழியஞ்சியாதலின்.

உஉ. 'உடையவனறிந்திடாத சரக்கில்லை' என்பது ஒருபழமொழி.

உச. செச்சைக்கண்ணி - வெட்சிமாலை.

பி - ம்.) [1]'வணிகரூரேது' [2]'சாவதற்கு' [3]'போந்தாரும்போற்', 'போந்தாரீங்கே' [4]'உயர்ந்தோர்நாமே' [5]'அழித்திடாத' [6]'கடையரேம்பயந்தோர்தம்மைக் காணநங்குலம்போல்வந்து'

ணெறிதரு தூய்மை வாய்மை நீதிநல் லறிவு செல்வங்
குறைவற நிறைந்து மற்றெக் குலத்தினு நனிசி றந்தே. (உச)

கொள்ளவோர் [1]புதல்வ ரின்றிக் குலங்கெடு மென்று கண்டு
மெள்ளநுங் கிளையா னென்று [2]மெய்புனைந் தெய்தி யொப்பித்
தொள்வளை யிட்ட தன்றி யுமையொடும் [3]விடையிற் றோன்றித்
தெள்ளியீர் மணந்தே நாமென் றிறையருள் செயப்பெற் றார்கள். ()

ஆகத்திருவிருத்தம் - சசக.

## உச.—இலச்சினையிட்ட திருவிளையாடல்.

பாங்கடியார் பரவுபுக ழால வாயான் பதம்பணிவான் முன்னொரு காற் பத்தி மிக்கோ, னோங்குபுகழ்க் காடுவெட்டி யென்றோர் மிக்க வுயர்தலைவன் வைகை[4]வட தடத்தி னெய்த, வீங்கதனை யறிந்தனுகா வாறு கோயி லெயிற் கடைதன் னிலச்சினையிட் டழைத்து மாறன், றாங்கரிய படையெடுப்பான் முயன்றான் யாறுந் தனிப்பரவை யெனப் பெருகப் புகுந்த தன்றே. (க)

மண்முழுதும் பலதீர்த்தங் கண்டி றைஞ்சி மனமகிழ்ந்தேன் மற்றவற்றுள் வளமை கூர்ந்த, கண்ணிறைந்த பதியையுமப் பதியி லோங்குங் காரணமா நின்னையுநீ கருதி வாழு, மெண்ணிப[5]மெண் ணெண்ணமரர் மடங்க லெண்ணான் கேந்துயரா லயத்தினையு மிலி மை மிக்க, தண்ணமர்பொற் றாமரைவா வியையுங் காண்பான் றணி விலா விருப்பெய்திச் சார்ந்தே னிங்கே. (உ)

இன்னருள்சேர் தயாநிதியே யமர ரேறே யெந்தையே யென் செய்கேன் பகைவனுய, தென்னனொடு போராறும் வாராவாறு [6]தீங்கு செயக் கண்டனைமற் றியாவும் வல்ல, நின்னையலான் மனக்கருத்து முடிப்பா ருண்டோ நிசியிடையின் றென்கருத்து முடித்தி டாயேன், மன்னுயிரை முடிப்பதலால் வாழே னென்று மதுரைவளம் பதி நோக்கி வருந்த லுற்றான். (ந)

---

உ௫. இச்செய்யுள் கவிக்கூற்று.

(உச) [முத்திரை.

க. காடுவெட்டியென்பது, இவ்வரசன்பெயர். தன் இலச்சினை - மீன

உ. ஆலயம் - இந்திரவிமானம்; அஃது அ - யானை, கூச - கணநாதர், நஉ - சிங்கங்களால் தாங்கப்பெறுவது; "கரியெட்டுஞ் சினமடங்க லெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க" (திருவிளை. இந்திரன். அந.)

ந. 'தென்னனொடு' என்பது முதலியவற்றை, "வழுதி யன்றியும் வை வை யும்பகை யான தென்று வருந்தினன்" (திருவிளை. விடை. கக) என்பது தழுவிவந்திருத்தல் காண்க.

(பி - ம்.) [1]'புதல்வனில்லை' [2]'மெய்யுளைந்தெய்தி' [3]'விடைமேற்' [4]'வட திரத்து' [5]'எண்ணெண்கமரர்' [6]'தீங்குசெய்தல்'

மருவுபுக ழானருள்சேர் பத்தர் பத்தன் மற்றவன்றன் மனக் கருத்தை முடிப்பா னெண்ணிப், பொருவருந்தன் கோயிலெல்யில் வாயி லொன்கும் பூழியன்மீன் முத்திரைகண் டிடமுண் டாகப், பரவு[1]மதி லொடுவடவா யிலேமுரித்துப் பாதி[2]யிர விற்சென்றே ரியந்திரத்தாற், [3]கரிபரியோன் றனைநதித்தென் கரையி லேறறிக் கண்டவெயின் முரிவாயாற் கொண்டு புக்கான். (௪)

ஓங்கிருளை [4]யவனளவில் வெளிய தாக்கி யோதரிய சோதிவிமா னத்தை யும்பொற், பூங்கமல வாவியையுந் தனது நீங்காப் பொருவி லுரு வையுங்காட்டக் கண்டு போறறி, [5]யாங்கவனுட் கசிந்துதொழு தாடிப் பாடி யணைவதற்கிங் கென்னதவஞ் செய்தே னென்று, நீங்க ரிய மயிர்ப்புளகம் [6]பொடிப்பக் கண்க ணீர்ததும்ப மேல்[7]விதும்ப நிறைந்து நின்றான். ... (௫)

அரியயர்கட் கரியபிரான் காடு வெட்டி யன்புநயங் கண்டாரா வன்பு கூர்ந்து, பொருவருநல் வரங்கள் கொடுத் [8]தழைத்தாற் போலப் பொருபுனல்சேர் தடினிவட தடத்தி னேற்றிப், பரிவுடைய நம்பத்த செழிய னோடு படைபொருவான் படையிலலே விடியு முன்னம், விரைவொடும்போ வென்றுநிசி யாக்கிப் போக்க விரைந்தருள்கண் டதிசயித்து நயந்து போனான். (௬)

வேறு.

ஆங்கவன் போய [9]பின்ன ரல்லிடை மெல்ல மேவி
யோங்குபே ரானை யாலே யுயரெயின் முரிவாய் தன்னைத்
தீங்கறத் தீர்த்தோர் வாயில் சிறக்கவிட் டடைத்து முன்ன
ரீங்கி[10]யா வருங்கா ணத்த னேற்றிலச் சினையு மிட்டான். (௭)

சுரிகுழ லுமை மயிற்குச் சொல்லியா லயத்தி ருப்ப
விரிகடை காப்போ ரஞ்சி விடியுமு னரசற் கூடிப்
பொருவிலோர் வாயில் வேறாய்ப் பொறித்தமுத் திரையும் வேறாய்
மருவிய மதிலும் வேறா யிருந்தது வடபால் வாயில். (௮)

---

௪. 'பத்தர் பத்தன்': ௩௮: ௬, ௩௬: ௪௧. முரித்து - இடித்து. இயந்தி ரத்தால் ஏற்றி. எயில் முரிவாய் - மதிலை இடித்த வேறொரு வாயில்; "உயரெ யின் முரிவாய்" என்பர் பின்னும்; ௭; "ஈங்கொரு வாசல்விட் டேதொழு வித் திட" (புயகா. ௨௪.)

௫. மேல் விதும்ப - உடல்நடுங்க; "பொதும்பருள் விதும்பினாரே" (சீவக. ௨௭௪௮.)

௬. ஆரா அன்பு - தெவிட்டாத அன்பு. தடினி - ஆறு; "நஞ்சத்தடினி வெம்மையையுங்கண்டு" (௩௬: ௧௩); "உணர்வுடைத்தடினி" (௩௮: ௫௪.)

௭. ஏற்று இலச்சினை - இடபமுத்திரை.

(பி - ம்.) [1]'மதிலொரு' [2]'நிசியிற்' [3]'கரியபெரியோன்றனைத்' [4]'அவ்வள வில்' [5]'ஆக்கவனுமகிழ்ந்து' [6]'பொறிப்ப' [7]'வெதும்ப' [8]'அணைத்தாற்' [9]'பின்னு லவ்விடைமேவியெங்கும்' [10]'யாவருங்காணத்தனேற்றிலச்சினை

என்றது சொல்லச் சீறி யெய்திய வமைச்சர் தம்மைச்
சென்றறி மின்க ளென்னச் சென்றவர் வந்து சொல்வார்
வன்றிறன் மன்ன கேண்மோ மாயையோ புகுந்த வாறின்
றொன்றுமிங் கறிந்தோ மில்லை யுரைத்தவா றொக்கு மென்றார். (௯)

இருந்திறல் வழுதி மற்றிங் கியார்செய வல்லா ரீது
பொருந்திய தறிவான் யாவும் வல்லவ னென்று போத
வருந்தியூ ணொழிந்து செய்ய மலரணைத் துயிலுங் காலைத்
திருந்திய கனவின் மாயை வல்லவன் சென்று சொல்வான். (௧௦)

ஞாயில்வாய் மதின்மு ரித்து நள்ளிரு ளெல்ல தாக்கி
நேயமுள் ளவனை யிங்கே வரவிட்டு நீங்க விட்டுச்
சேயதோர் வாயில் விட்டுச் சேவுறு குறியு மிட்டே
மேயவின் றியாங்கா ணென்ன வதிசயித் தெழுந்தான் போற்றி. (௧௧)

வந்தெயி லிடப மிட்ட வாயில்கண் டதிச யித்துச்
சுந்தர னல்லா லுண்டோ தொழுபவர்க் கெளியா னென்று
முந்தையி னன்பு செய்தான மன்னவன் முறைமை வாயி
லிந்தமா நிலத்து நின்ற திலச்சினை வாயி லென்றே. (௧௨)

ஆகத்திருவிருத்தம் - ௬௫௫.

## ௨௫.—மாணிக்கம்விற்ற திருவிளையாடல்.*

முன்னமோர் தென்னர் கோமான் முறைமையி னவனி காத்து
மின்னெயின் மதுரை தன்னு ளிருக்குநாள் விதிவ சத்தான்
மன்னுநன் குலமா தர்க்கோர் மகவின்றிக் [1]காதன் மாதர்க்
கின்னெறி யில்லா மைந்த ரெண்ணில ராவு ரன்றே. (௧)

மற்றது கண்டு சால [2]வாடிய மன்ன னோர்நா
ளற்புத சொக்க மூர்த்திக் கறைகுவ மென்று சென்றே
முற்றுமிங் களிக்க வலல முதல்வனே புதல்வ னில்லை
யிற்றது குலமென் றேத்த வீந்தன மென்னப் போந்தான். (௨)

---

௧௦. போத - மிக.

௧௧. வாய்மதில்: வினைத்தொகை. சேவுறுகுறி - இடபமுத்திரை.

௧௨. முறைமை வாயில் - இந்த வரலாற்றை யுடையவாயில்; இலச்சினை வாயிலென்று ஒருவாயில் பண்டைக்காலத்து இருந்தது போலும்.

(௨௫)

௧. இன்னெறி - இனியநெறி; நல்லநடை.

*"கதிர்நிரை பரப்பு மணிமுடித் தேவர்கள், கனவிலுங் காணாப் புனைவருந் திருவடி, மாநிலத் தோய்ந்தோர் வணிக னாகி,......இவையெனக் கூறிய நிறை ருட் கடவுள்" (கல். ௭௭.)

(பி - ம்.) 1 'காவன்' 2 'மயங்கியே'

[1] இறையவ னருளா னல்ல விலக்கணத் துடனோர் மைந்தன்
மறுவறு குலமா மங்கை வயிற்றகத் துதித்தை [2]யாண்டு
குறைவற [3]வளர்நா ளந்தக் கொற்றவன் வேட்டை போகித்
திறமுறு முழுவை கையிற் சேர்ந்துயர் துறக்கம் புக்கான். (ங)

வேறு.

அவமுறு புதல்வ ரிகல்செய்து [4]காவ லறையழித் தரும்பொருள் கவர்ந்தே, புவிமிசைத் தூரந் தங்குறை யறிந்து போயினர் யாரையு மறைத்துக், கவினுறு குலக்கோ மைந்தனைக் காத்த வமைச்சர்கள் கரிபரி முதலா, நவையறு படையை வெருவுறு குடியை [5]யடைவுற நயமொடு கூட்டி. (ச)

வரந்தரு [6]மரசன் குமாரனுக் கடைவின் மணிமுடி சூட்டுவா னெண்ணி, யிரும்பொரு டேடிக் கண்டிடா தறையி னியைந்தசாம் பூனத மான, வருஞ்செழுங் கனகந் தேடினுஞ் சிறந்த வணிமுடிக் காநவ மணிக, டெரிந்தன வெங்ஙன் றேடுவஞ் சொக்கன் றிருவுள மறியகி லேமால். (ரு)

விதுமா பிலங்க விவற்[7]கபி டேகம் விரைவுடன் செய்திடா தொழியி, னதிர்வுறு முலக மென்செய்கே மென்றெனை றழுங்குதல் கண்டருள் சுரந்து, திதமுறு சொக்கன் பலசிறப் போடுஞ் செட்டியாய் மணிவிலை கூறிப், பதியுயர் பெரிய [8]பட்டின நீங்கள் பார்ப்பதிங் கென்னென வடைந்தான். (சு)

[9] வருந்துபே ரமைச்சர் நயந்துசென் றுளத்து மருவுகா ரிய முரைத் துன்னைப், பொருந்துமுன் றுன்பம் போனது சொக்கப் புனிதனே வறிகிலே மென்ன, வரும்புரை யிரேகை களங்கம்விந் துக்க ளற்றவை குற்றமொன் றிலலே, யொருங்கமுன் பார்த்துக் கொள்ளுமின் முடிக்கா மொன்பது மணியுமுண் டென்றான். (எ)

போதுகாய் வெயிலின் வாடிய பயிர்க்குப் பொழிபுன லுதவிய புயல்போற், றீதிலா வடிவின் வந்தமா ணிக்கச் செட்டிகேள் யாங்க ளீங் கறியக், கோதிலா மவுலிக் கானவை தெரிந்து குணங்குறை

---

ச. காவலறை - காக்கப்படுதலையுடையபொன்னறை. யாரையுமறைத்து மைந்தனைக்காத்த அமைச்சர்களென்க; "முடிசூடுவான் மறைத்துக்காத்தவமைச்சர்" (கடம்ப. இலீலா. உரு.)

ரு. சூட்டுவான் - சூட்ட.

சு. உலகம் அதிர்வுறும் - உலகம் நடுக்கும். பட்டினம் - காவிரிப்பூம் படினம்.

எ. புரை - காகபாதம். இச்செய்யுளால், இரத்தினத்தின் குற்றங்கள் இன்னவையென விளங்கும்.

(பி - ம்.) 1'இறைவனதருளால' 2'ஐந்தியாண்டு' 3'வளரவாழ்ந்த' 4'காவலறை' 5'அறிவுற' 6'அரசகுமாரனுக்கு' 7'அபிடேகம்விரைவொடு' 8'பட்டணம்' 9 'வருந்துமோரமைச்சர்'

பிறங்கிலக் கணங்க, ளோதியா தரத்திற் றூவெனக் கேட்ப வுத்தம னத்திற னுரைப்பான். (௮)

வாசவன் வேள்விக் கிரங்கியோர் பசுவாய் வந்திடும் வலவனைச் சிரத்தா, லாசற வரிந்த வுறுப்பினை வானோ ரருந்தமண் விழுந்தன தப்பிக், காசறு வித்தாய் மலையினுஞ் சிறந்த [1]கடலினுந் தீவினும் புது மை, பேசரும் பெரிய [2]நாட்டினும் பிறந்து விளைந்தன பிறங்கிட வன்றே. (௯)

பரியவா ளென்பு வயிரநீ டிறைச்சி பவழமென் கருவிழி நீலம், பொருவரு மொளிசேர் கவம்புரு டராகம் பொருந்துசெங் குருதிமா ணிக்க, மருவிய மயிர்வை டூரிய நிணங்கோ மேதகம் வாணகை முத் தங், குருவளர் பித்து மரகத மென்று கூறுவர் குலமணிப் பிறப்பே.

சுடர்கொண்மா ணிக்கத் திறம்வகுப் பவரார் சொல்லுவல் சுருங் கநான் கிடமும், படருநால [3]வருணத் திலகிய பெயரும் பன்னிரு குணமுமீ ரெட்டு, நெடியபுன் குறையுந் தகுமெழு நான்கு நிறங்க ளும் பிறங்கிய விலையு, [4]மிடமுறு பத்தி பாய்தலு மென்ன வெழுவ கை யிலக்கண முடைத்தால. (௧௧)

கருதிடின் [5]வலவை மாவலி கங்கை கம்பளை கல்லணை யென் னுந், தருசம னொளிசூழ் நதிகணான் கிடமாஞ் சாதிநான் கந்தணன் வெள்ளை, பரிவுறு மரசன் சிவப்புவாழ் வணிகன் பச்சைசூத் திரன் கறுப் பவைதா, மருவிய பெயர்கோ மளங்[6]குரு விந்தம் பதுமரா கம் பணு மணியே. (௧௨)

---

௯. வலவன் - வலாசுரன். தப்பி மண்விழுந்தவைகள்.

௧௦. வலனுடைய என்பு வைரம், இறைச்சி பவழம், கருவிழி நீலம், கவம் புருடராகம், இரத்தம் மாணிக்கம், மயிர் வயிடூரியம், நிணம் கோமேதகம், பல் முத்தம், பித்து மரகதமென்க.

௧௧. மாணிக்கம் எழுவகை இலக்கணமுடைத்து; இவற்றை "மாணிக் கத் தியல் வகுக்குங் காலை, சமனொளி சூழ்ந்த வொருநான் கிடமு, நால்வகை வரு ணமு நவின்றவப் பெயரும், பன்னிரு குணமும் பதினாறு குற்றமு, மிருபத் தெணவகை யிலங்கிய நிறமு, மருவிய விலையும் பத்தி பாய்தலு, மிவையென மொழிப வியல்புணர்ந் தோரே" (சிலப். ௧௪: ௧௮௯ - ௭, உரை) என்னுமேற் கோளாலுந் தெளிக.

௧௨. சமனொளி - இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை; இதனை, "இலங்காதீ வத்துச் சமனொளி யெனனுஞ், சிலம்பினை" (மணி. ௨௮: ௧௦௭ - ௮) என்ப தனாலும், அம்மலையை நான்குநதிகள் சூழ்ந்துள்ளனவென்பதை, "குடுமிச் செ ககாச் சமனொளி சூழ்ந்த, விரைநதி நானகி னிகழ்ந்தன குறியும்" (கல். ௪௭) என்பதனாலுமுணர்க. வலவை, மாவலிகங்கை, கம்பளை கலலணை என்னும் நதி கள் நான்கும் இலங்கைத்தீவிற் சமனொளியிலிருந்துண்டாவன.

(பி - ம்.) [1]'கடலினுந்தீயினும்', 'கடலினுநதியினும்' [2]'நாட்டினும்பரந்து வளர்ந்தன' [3]'வருணத்தியற்கையும் பெயரும்' [4]'இடமுறுவத்திப்பாய்தலு மென்னும்' [5]'வலகைமாவனகங்கை' [6]'குருவந்தம்', 'குருபந்தம்'

மின்னிய நெருப்பிற் சேரினுந் தகட்டின் மேவினும் [1]வெயிலி னுங் காத்து, மன்னிறு மோரந் தன்னினுந் தூக்க மருவினுந் தேய்ப் பினும் பிறங்கிக், கொன்னுறச் [2]சிவந்து பார்க்கவந் தோங்கிக் [3]குச்சி முன் பரந்துசேர்த் திடின்முன், பன்னிய வொளித்தாய் [4]மத்தக சுத்தி யுடையது பன்னிரு குணமால். (கங)

[5] மிகவுறு தராச மத்தகங் குழிதல் [6]வெச்சமிலேச்சுமி வெகுளி, [7] புகையொடு திருகன் முரணொடு செம்ம ணிறுகுதல் கருகுதல் பொரிவே, மிகவுறு புடாய நெய்ப்பிலி [8]சந்தக் கேடுநீள் வெய்யகீற் றென்ன, வகைபடு குற்ற மெண்ணிரண் டாக வகுத்தனர் மாசறு புலவோர். (கச)

வேறு.

பங்கயஞ்செங் கழுநீர்சா தக்கண் குத பல்லவமின் மினிகோ பம் [9]பரிதிதீப, மங்கிவிழு [10]தழற்குன்றி யுலோத்தி ரஞ்செவ் வரத்த மூய விரத்தமா தளைவீ வித்துச், செங்கலில வித்தழ்குரவு பாட லப் பூத் திலகமுருக் கிதழ்மஞ்சட் [11]டேறு கோவை, தங்கொளிச்சிந் தூ ரங்குக்கிற் கண்ண சோகின் றளிர்நிறங்க [12]ளவணேயோ டெழுநான் கென்பர். (கரு)

எண்டருதே சிடையளவே [13]விலைகோ டன்க ணியைந்த வற்றி னொளிபரத்தல் [14]பத்தி பாய்த, றண்டரளத் தியல்வகுப்பிற் பிறப்புப் பாம்பிற் சங்கினின்மீ னின்றலையிற் றமைழநெற் றூளி, [15]லொண்டொ

---

கங. இதிற்கூறிய மாணிக்கத்தின் பன்னிருகுணங்களை, "தேய்க்கி னெ ருப்பிற் சேர்க்கி னங்கையிற், றூக்கிற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற், குச்சை யின் மத்தகக் குறியினொ ரத்தி, னெய்த்துப் பார்வையி னேர்ந்து சிவந்தாங், கொத்த நற்குண முடையபன் னிரண்டும்" (கல்.சஎ) என்பதனாலும் தெளிக.

கச. மாணிக்கத்தின்குற்றம் பதினறென்பதை, "கருகினொய் தாதல் கீற்று வெகுளி, திருகன் முரணே செம்ம ணிறுகல், மத்தகக் குழிவு தராச மிலேச்சுமி, வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ், சந்தைநெய்ப் பிலியெனத் தருபதி னாறும்" (கல். சஎ) என்பதனாலும் தெளிக.

கரு. அங்கியும் அதில்விழுதழலும். சாதுரங்கமுதலியவை மாணிக்கத்தி ன்வகை; இங்கே மாணிக்கத்திற்குப் பொதுவாகக்கூறிய இருபத்தெட்டு நிறங் களை நால்வகைப்படுத்தி, சாதுரங்கத்திற்குப் பத்துநிறங்களும் குருவிந்தத்தி ற்கு எட்டும் சௌகந்திக்கு ஆறும் கோவாங்கத்திற்கு நான்குமாகக் கூறுவது முண்டு; "தாமரைகழுநீர்" (சிலப். பக். கூஎஅ) என்னும் மேற்கோள் முதலி யவற்றையும், "கதிர்விரைபரப்பும்" (கல். சஎ) என்பதையும், "சாதுரங்க நிறம்" (திருவிளை. மாணிக்கம். கூக) என்னும் செய்யுள் முதலியவற்றையும் பார்க்க. மேற்கூறியவற்றில் ஒத்தும் ஒவ்வாதும் இருப்பனவுள.

(பி - ம்.) 1 'வெயிலினுங்காற்று' 2 'சிவந்தபராகம்வந்தோங்குங்குச்சி' 3 'குச்சை' 4 'மரதகசுத்தி' 5 'மிகவுறுகாசம்' 6 'வெச்சமிலச்சுமிவெகுழி' 7 'பகை யொடு' 8 'சந்தைக்' 9 'பருதி' 10 'தணற்குன்றியிலோத்திரஞ்செவ்வாத்தி' 11 'சேறு' 12 'ஞ்சுவணேயோடு' 13 'வலைகோடின்களியைந்த' 14 'வத்தி' 15 'ஒண்டிறன்'

டிமங் கையர்களத்தி லியானைக் கோட்டி லுயர்கழையிற் காகவா கனர்திண் டோளிற், கொண்டலிலிப் பியிலேனக் கொம்பி லிக்கிற் கொக்கிலெனப் பகர்வர்வியப் [1]பிப்பி முத்தால். (கசு)

தங்கியமுள் ளேறுமுகங் கறுத்தல் செங்நீர் சார்வனமண் ணேறிடப்புத் [2]திருகல் கோணை, மங்குறு[3]சிப் பிப்பற்றுக் [4]காக வன்னி மருண்டிருத்தல் குறைபத்தே குணமே தட்பம், பொங்குடுத்தே சுருட்சிகனம் வயிரம் வைரா கரமேருப் பொருப்பிமவா னேம கூடந், [5] துங்கசவா லக்கமவந் திகமா தங்கந் தொகுமருண மெனுமெட்டா கரமே தோற்றம். (கஎ)

கீற்றுமலஞ் சப்படியே பிளத்தல் கோடி [6]கெடுதல்கரி துளை விந்து காகபாத, மாற்றருஞ்சீர் தருகோடி முரித ரூரை மழுங்கலிருத் தெனப்பகர்வார் குறையீ ராறும், போற்றிடுநற் குணந்தாரைச் சுத்தி [7] நோன்மை புரந்தரசா பம்பலகை யெட்டு மிக்க, வேற்றமுடைக் கோணமா றெனவைந் தாமற் றிலங்கியநீ லத்தினிய லியம்ப லுற்றேன்.

அணிபொழில்வாழ் குயிற்கழுத்தே [8]குவளை வண்டே யாகுலக் கண் செழுமேக மவிரிச் சாறே, யிணையிலுயர் [9]பூவைப்பூ நெய்தற் போதென் றிலங்கு மொளி யெட்டெனபர் குறையெட் டெண்ணிற், றணிவில்[10]சர சரப்பிரசத் தோடு பொல்லாச் சாரசமஞ் சணிவளிமண் சார்ந்த கிட்டம், [11]பிணிகொளிலைச் சுமியாகுங் குணநெய்த் துச்சி பிறங்கலொளி வளர்பவளம் பேசக் கேண்மின். (கக)

---

கசு. தேசிடையளவே விலைகோள், ஒளிபாக்தலே பத்திபாய்தல். முத்துக்கள் தலசம் சலசமென இருவகைப்படும்; அது பதின்மூன்றிடத்துப் பிறக்குமென்பர், பரஞ்சோதிமுனிவர்; திருவிளை. மாணிக்கம். ருக - ச. இங்கே 'காகவாகனர்திண்டோள்' என்றவிடத்து, அதில், 'ஐவாய்மாள்கை' என்பது கூறப்பட்டுள்ளது.

கஎ. "உடுத்திர ளனைய காட்சி யுருட்சிமா சின்மை கையா, லெடுத்திடற் றிண்மை பார்வைக் கின்புறல் படிக மென்ன, வடுத்திடு குணமாறு" (திருவிளை. மாணிக்கம். ருஅ) என முத்தின்குணம் ஆறென்பர். வயிரம் பிறக்குமிடம் எட்டு.

கஅ. வயிரத்தின் குற்றம், கஉ; குணம், ரு; "சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்த, றுளைகரி விந்து காகபாத, மிருத்துக் கோடிக ளிலாதன முரித, ரூரை மழுங்க றன்னொ, டீராறும் வயிரத் திழிபென மொழிப", "பலகை யெட்டுங் கோண மாறு, மிலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமு, மைந்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" (சிலப். கசு: கஅ0 - அரு, விசேடவுரை) என்னுமேற்கோள்களாலுமுணர்க.

கக. ஆகுலக்கண் - பசுவின்கண். பூவைப்பூ - காயாம்பூ. நீலத்தின் ஒளி வகையை, "கோகுலக் கழுத்துக் குவளை சுரும்ப, ராகுலக் கண்க ளவிரிச்

(பி - ம்.) 1'இப்பர்முத்தால்' 2'திருகல்கோணம்' 3'சிப்பியிற்பற்றுக்காகவர்ணி' 4'காகவர்ணமண்டிருத்தல்' 5'துங்கவாலக்கமவந்திதம்' 6'கேடுறுதளை', 'கேடுறுதல்கரை', 'கெடுதல்சரி' 7'நொய்ம்மை' 8'தவளைவண்டேயாகுலிக்கண்' 9 'பூளைப்பூ' 10'சரகரப்' 11'பிணிகொளிபச்சுமி', 'பிணிகொளிவச்சுமி'

துன்னியசிந் துரமீ[1]ச்சஞ் செங்காய் செம்மண் டுதுவளை மூச முசுக்கை துளங்கு வீரைப், பன்னியசெங் கனியென்பர் நிறந்திருக் குப் பைங்[2]க ருப்பத் துளைகல்லேய் முடங்கல் பொல்லா, மன்னும் வெளி றென்பர்[3]குறை பச்சை கிள்ளை மயிற்கழுத்து நெல்லினிளம் பயிர்பொன் வண்டின், மின்னுதரம் பொன்மையொடு பசுத்த னெய்த்தன் மேற் [4]பத்தி பாய்தனிறங் குணங்க ளென்பர். (௨௦)

கருகல்வெளி றுருடுபெரிரிவே கல்லே மண்ணை [5]காற்றிருக றாசமொடு குற்ற மெட்டா, மாரகதம்விட் டுயர்புருட ராகஞ் செம்பொன் வண்டகட்டிற் றேனெழுகு நிறமே யென்ப, ருரியவயி டூரியம்பொன் மேன்மு லைப்பா லொழுகுமொளி யென்பர்கோ மேத கத்தை, மருவுவயி டூரியத்தின் மீது தூய மதுத்துளிமே வியதென்பர் வண்ணந் தானே. (௨க)

முறைமைகெடா [6]விலைவதமக்கு நீதி யொன்றே மும்மணியா வனசொன்ன புருடராக, முறுவயிடூ ரியங்கோமே தகமே யென்றுங் கோதுவர்மற் றிவற்றின்க ணுதித்த வெண்ணின், [7]மறுவறுதோ ரா வல்லி கனக தோரா வல்லிமுத லாயினவுண் டென்பர் மற்று, நெறியுரைப்பி னுளபலவிங் கரசர் மாட்டு நேசமுடை யாருமைப்போற் கண்டி லேமால். (௨௨)

---

சாறு,........காயா நெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குணம் பதினொன்றுமே" (சிலப். கச: ககூ0, விசேடவுரை) என்னுமேற்கோளாலும் உணர்க.

௨௦. வீரை - ஒருவகைமரம். பவழத்தின் குற்றம் இன்னவென்பதை, "கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலுந், திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்" (சிலப். கச: ககள - அ) என்பதனாலும், பச்சையின் குணங்களை, "நெய்த்தன் மயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன்னுடன் பசுத்தல், வத்தி பாய்தல் பொன்வண் டின்வயி, றொத்துத் தெளிதலொடெட்டுங் குணமே" (சிலப். கச: கஅச - ரு, விசேடவுரை) என்பதனாலு முணர்க.

௨க. பச்சையின்குற்றம் எட்டும், "கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப், பொரிவு தராச மிறுகுதன் மாகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப" (சிலப். கச: கஅச - ரு, விசேடவுரை) என்பதனால் ஆராய்தற்குரியன.

௨௨. தமிழ்ப்பிரபந்தங்களுள் ஒன்றாகிய மும்மணிக்கோவையென்னும் பெயரிலுள்ள மும்மணியென்பன இவையென்பது, இதிலுள்ள மும்மணியா வன என்னும் வாக்கியத்தால் நன்குவிளங்குகின்றது. தோராவல்லி, தோரமல்லி யெனவும், கனகதோராவல்லி, கனக புட்பராகமெனவும் வழங்கும்.

(பி - ம்.) 1 'ஈச்சங்காயே' 2 'கருப்புத்துளை' 3 'குறைமற்றுக்கிள்ளை' 4 'வத்தி' 5'காற்றிறுக்கல்' 6'அலைவதமக்கு' 7'மறுவறு தோராவல்லி கனகதோராவல்லி'

வேறு.

மறுவறு [1]சிறப்பிற் பெருவிலை மணிகள் [2]வாய்த்தன விவையெ னக் காட்டி, யுறவுறப் பேசி விற்றிடக் கொண்ட வுத்தம ரிலக்கணங் கண்டே, நிறைவுறு மகிழ்ச்சிக் கடலிடை மூழ்கி நெறிப்பட நவநவ மணிகண், [3]மறைபறை யுலகிற் கண்டிலோ மென்று மவுலியும் விதி ப்படி யமைத்தார். (உ௩)

அரசிளங் குமரர்க் குயர்விழா நடத்தி யணிமுடி மறைநெறி சூட்டிப், பெருமைசேர் வணிகன் றனைநயப் பிப்பான் பெரும்பொ ருள் கொண்டுமுன் செல்லக், கருதிய பொருள்கள் வேண்டுவ வளிக் குங் கடவுள்கண் டெழுந்துளை நகைத்தாங், குரியவா லயத்தை நோக்கிநேர் போகி யொளித்தனன் றுதித்தது சயிப்ப. (உ௪)

[4] ஆங்கணே மறையோ ரமைச்சரன் புடைய வழகிய சொக் கெனத் தேறி, யீங்கிவ னளித்த மணிமுடி சூடற் கெத்தனை தவஞ் செய்தா னிதனுற், பாங்குடை யுலகந் தனிமுழு தாண்டு பகைகடிந் [5]தூழிவாழ்ந் தறத்தி, ஞேங்குவ னென்று போற்றியா லயத்தி லுத் தம னடிபணி வித்தார். (உ௫)

[6] அதர்படத் துதித்து மன்னவன் மகிழ்ந்தே யவனியோர் நா ளும்வாழ்ந் திலங்க, நதிபொதி சடையா னருளினுல் [7]விளங்கி நாற் பெரும் படைநனி படைத்து, நிதிகவர் ஞாதிப் பகைகடிந் தெடுத்த நீணிதி கவர்ந்துய ரறத்தின், மதிமர போங்க விருந்தர சாண்டான் வரமனு வெனநெடுங் காலம். (உ௬)

ஆகத்திருவிருத்தம் - ௬௨௯க.

---

## உ௬.—ஆனையெய்த திருவிளையாடல்.

தவமுறு பத்தித் [8]தென்னவ னொருவன் சைவநூல் சிவபுரா ணங்கள், சிவனையு மொளிவெண் ணீற்றையு நாளுந் தெய்வவஞ் செ ழுத்தையும் போற்றிப், புவியொடு தானும் பொருளெனக் கொண்டு பூண்டுயர் மதுரையம் பதியிற், பவநிசி யகல வருளினுல் விளங்கிப் பகையற வாழுநா டன்னில். (க)

---

உ௩. நவம் - புதுமை, ஒன்பது. மறை பறை - வேதம் சொல்லுகின்ற.

(உ௬)

க. பவ நிசி - பாவமாகிய இருள்.

(பி - ம்.) [1]'பிறப்பிற்' [2]'வாய்ந்தன' [3]'மறையறையுலகிற்' [4]'ஆங்கணமறை யோர்' [5]'வூழிவாழ்ந்ததனின்' [6]'அதிர்பட' [7]'விளங்கு' [8]'தென்னவன்றேர்ந்து'

தந்திர மிக்க மூந்தையோர் சோழன் ஞானையால் வெல்லமாட் டாமன், மந்திர வாதஞ் செய்துகை தவனை மதுரையம் பதியொடுங் கூட, மூந்துற வெல்லக் கடவமென் றெண்ணி முடிவில்[1]பல் பொருள் களுங் கொடுத்து, வெந்திற லமணர் தங்கள்பாற் செல்ல விட்டனன் [2] கட்டிநெட் டோலை. (உ)

வேறு.

நம்பெரு மடிகள்[3]காண்க நலந்தரும் வளவ னோலை
யெம்பெரும் பொன்னி நன்னாட் டிலங்குயர் பதிகண் மிக்க
[4] செம்பொனோ டளிப்ப லின்று செழியனை மதுரை யோடும்
வம்புறக் கோறல் வேண்டு மந்திர வாதத் தென்றே. (ங)

முட்டவெண் கிரிக்கண் வாழு முதல்வரெண் ணாயி ரத்தோர்
கட்டவிழ்த் தடைவி னோலை வாச்கங் கண்டு வாழ்ந்து
சட்டெனக் கூடி யின்றோர் தந்தியைத் தோற்று வித்து
விட்டிமைப் பொழுதிற் சேர விழுங்குவிப் பேமென் றெண்ணி. (ச)

[5]மன்றுநீ டசோக நீழன் மந்திர வாதஞ் செய்ய
வொன்றிய [6]தூமத் தீயி னோமமார் சத்தி யாலே
வென்றியி [7]னடக்கு மேரு வென்னவோர் வேழந் தோன்றி
நன்றிகொள் புவன மூன்று நடுங்கிட வதிர்ந்த தன்றே. (ரு)

---

உ. "மறமலி யமண ரெல்லா மந்திரவாதஞ்செய்து" என்பர்பின்; ங.சு:உ எண்ணி நெட்டோலையைக்கட்டி விட்டனன்.

ங. பதிகள் - ஊர்கள். என்று நெட்டோலையைக் கட்டிவிட்டனனென முன்னேகூட்டுக.

ச. எண்கிரி - எட்டுமலை; அவை பலவாறு வழங்கும்; அவற்றின்பெயர் களை, சைனர்களுள் வழங்குவதாகிய, "பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி, யருங்குன்றம் பேராந்தை யானை - யிருங்குன்ற, மென்றெட்டு வெற்பு மெடுத் தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" என்னும் பழைய வெண்பாவாலும், "அஞ்சனங் கௌஞ்சங் கோவத் தனகிரி கூடங் காஞ்சி, குஞ் சர சைய மேம கூடமே விந்த மென்னு, மஞ்சிவர் வரைக ளெட்டும் வை குறு மமணர்" (திருவிளை. யானை. எ) என்பதனாலு முணர்க; மதுரையைச் சூழ்ந்த எட்டு மலைக ளென்பாருமுளர். வாழ்ந்து - மகிழ்ந்து. சட்டென - விரைவாக.

ரு. மன்று - பொதுவான இடம்; அசோகமரம் அருகர், சித்தர், உபாத் தியாயர், ஆசிரியர், சாதுக்களென்னு மிவர்கள் தங்கிய ஐந்திடங்கள் கூடிய மன்றின்கண் நிற்பதாகச்சொல்லப்படுமாதலின், 'மன்றுநீடசோகநீழல்' என்றார்; "சந்தி யைந்துந் தம்முடன் கூடி, வந்துதலை மயங்கிய வான்பெரு மன்றத்துப், பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்" (சிலப். கக: கசு - உக) என் பதனாலுணர்க.

(பி - ம்.) [1]'ஒண்பொருள்களுங்' [2]'கட்டி நீட்டோலை', 'கட்டியேயோலை' [3] 'காண' [4]'செம்பொனுடளிப்பன்' [5]'மன்றனீடசோக' [6]'ஓமத்தீயில்' [7]'அடர் க்குமேரு'

மொஞ்ச[1]கக் கைய ரந்த மும்மத வருவி பாயும்
வெஞ்சினத் [2]தறுகட் செங்கட் குஞ்சர வெற்பை நோக்கிப்
பஞ்சவன் றன்னை யந்தண் பதியொடு மெடுத்துச் சேர
விஞ்சவோர் கவள மாக விழுங்கென வறைந்து விட்டார். (சு)

ஆலகா லங்க டுப்ப வடர்ந்தகிம் புரிவெண் கோட்டாற்
கோலமா முகிலைப் பீறிக் குத்திவான் முகடு சாடி
மேலுடு வுதிர்த்து நாகம் வெருக்கொள [3]மிதித்துக் கூடச்
[4] சாலும்வெஞ் சமண ரோடு நடந்தது தரணி யேங்க. (எ)

[5] மதுரை[6]நீட் டைந்து கூப்பி டெனவட கீழைக் கோணத்
ததிர்வொடு தோன்றக் கண்ட வச்சமி லாத வென்றி
முதுவலிச் செழிய னஞ்சி முடிமணி [7]யெனக்க ளித்த
விதுமுடி யரற்கு ரைப்ப லென்னவா லயத்து மேவி. (அ)

[8] பெருமநின் னருளி னாலே பிறிதொரு வருக்கு மஞ்சே
னருகர்மந் திரித்துச் சேர விழுங்கென வறைந்து விட்ட
பரியகைக் கூற்ற மென்னும் பகட்டினாற் கலங்கி னேனிங்
கொருவரு மிலைநீ யல்லாற் காத்தரு ளொல்லை யென்றான். (கூ)

அரசகேள் கீழ்பா லிஞ்சி யணையவட் டாலை கட்டின்
[9] றுரனொடும் வில்லா ளாகி யொல்லைவந் தெவருங் காணக்
கரிகரி யாக வெய்வல் கலங்கிடே லென்றோர் வாக்குத்
தெரிவுற வாகா யத்திற் சிறந்திடக் கண்டா னன்றே. (கo)

[10]தொழுதிறை திருவாக் கென்று சோகம்விட் டகம கிழ்ந்து
பழுதிலா வமைச்ச ரோடும் பன்முறை பழிச்சிப் போந்து
முழுவதும் வல்ல தெய்வக் கம்மியர் தம்மான் முன்ன
ருழைமதி தவழெ யிற்பா லுரைத்தவா றேங்கச் செய்தான். (கக)

---

சு. மொஞ்சகம் - மயிலிறகின்தொகுதி; மந்திரித்தற்குச் சைனர் கையிற் கொள்வது; "தழையுலாங்கையர்" (திருவிளை. விருத்த. க.)

அ. நீட்டு - தூரம். கூப்பிடு - கூப்பிடுதூரம். அதிர்வு - முழக்கம். 'முடி மணியெனக்களித்த' என்றதனால், இவன்காலத்து இரண்டுதிருவிளையாடல்கள் நடந்தன வென்பது அறியப்படுகின்றது.

கo. அட்டாலை - மதின்மேன் மண்டபம்; அது ஞாயிலென்றுங் கூறப் படும். கரி கரியாக- யானைகரிக்கட்டையாக; கரியாகச் சாட்சியாக வென்று மாம்; "கரியாய் மொழியுங் கரியாய் விடாமல், எரியார் தழல் வீழ்ந் தெழுந்து" என்றார்; நூல்வர் நான்மணி. உரு. கண்டான் - கேட்டறிந்தான்.

கக. முன்னர் உழைமதி தவழ் எயில்-கிழக்குமதில்; "கீழ்பாலிஞ்சி" (கo) என்றார். முன்னர் - முதலிலென்றுமாம்; உழை - மான்.

(பி-ம்.) [1]'கைக்கையர்' [2]'துங்கச்' [3]'மதித்து' [4]'சாலவெஞ்' [5]'மதுரையூர் கூப்பீடென்ன வடகீழ மூலைக்கோணத்து' [6]'நீடைந்துகூப்பீடென' [7]'எமக் களித்த' [8]'பெருகுநின்' [9]'உரவொடும்' [10]'தொழுதனன்'

தெற்றிசேர் தலத்துட் டோன்றிச் சிலையுட னம்பொன் றேந்திக்
குற்றுடை வாளுங் கட்டிக் குலவு[1]தொப் பாரங் கட்டி
முற்றுமெய் யணிவி ளங்க முகங்குறு வியர்ப னிப்ப
வெற்றிகொள் புரங்கள் செற்ற மேருவில் லாளி நின்றான். (௧௨)

நண்ணரு முருவங் கண்டு நயந்துபூ மழைபொ ழிந்து
விண்ணவ ரயன்மா லாகண் டலன்வியன் முழவ மார்த்தார்
மண்ணவர் துதித்தார் வேந்தன் வாழ்ந்தெழ வியந்தான் சூழ்ந்த
வெண்ணருங் கன்னி மாத ரினவலை சிந்தி னாரால். (௧௩)

ஊறிடு மருவி யோங்க [2]லூரனுடை முழக்கங் காட்டத்
தேறிநின் றதிச யித்துச் சிரித்துவா னுறச்[3]சி லைத்து
மாறனுந் துயரந் தீர மதுரையம் பதியோ ருய்யக்
கூறரு மிலக்கை நாடிக் [4]குறித்துநீள் கணைவி டுத்தான். (௧௪)

மானமில் சமண[5]ரெண்ணின் மந்திர வாதஞ் செய்து
[6] தேனலர் தொடையன் மார்பச் செழியனை மதுரை யோடும்
போனக மாகக் கொள்ளென் றேவின புழைக்கை மத்த
யானையை யெய்தான் முன்னம் யானையை யுரித்த வீரன். (௧௫)

யானையாழ் துயரந் தீர்த்தோன் யானைதாங் கண்டங் கண்டோன்
யானைவா கனத்தோன் போற்ற யானையா லயத்தி ருந்தோன்
யானையா னனனைத் தந்தோன் யானைவந் தனையு வந்தோன்
யானையை யுரித்த தன்றி யானையை யெய்தா னன்றே. (௧௬)

செல்லம ரெயிலட் டாலைச் சேவகன் விட்ட கொற்ற
[7] வில்லரி முகமால் வாளி வேழத்தை நாடிச் சென்று
மல்லலங் குளத்து மூழ்கி வயிறமுறு நிணம ருந்தி
[8] யொல்லையி னிலத்தி வாயா லோடிய துதப்பி யோட. (௧௭)

---

௧௨. தொப்பாரம் - வீரர்கள் தலையிலணியும் முடிவிசேடம்; இஃது இக்காலத்தில் இப்பெயருடன் விஷ்ணுவாலயங்களிற் பெரும்பாலும் காணப்படும்.

௧௩. எழ - மிக.

௧௪. அருவியோங்கல் - யானை. சிலைத்து - முழங்கி. இலக்கு - லக்ஷ்யம்.

௧௫. யானையை - தாருகாவனத்து முனிவர் அனுப்பிய யானையை.

௧௬. திருமாலும் பிரமனும் இந்திரனும் போற்ற. யானை ஆலயம் - எட்டு யானைகளாற் சுமக்கப்படும் இந்திரவிமானம். யானை ஆனனன் - விநாயகர். யானை வந்தனை - ஐராவதஞ்செய்த வணக்கத்தை.

௧௭. செல் - மேகம். அட்டாலம் - மதில் மேல்மண்டபம். அட்டாலைச் சேவகன்: உ௮. அரிமுகமால் வாளி - நரசிங்காஸ்திரம். குளம்,

(பி - ம்.) 1 'தோர்ப்பாரங்' 2'உரனிடி' 3'கலித்து' 4'குறித்த' 5'எண்ணி மந்திர' 6'தேனலங்' 7 'வில்லரிக்கணைவான்முடடும்', 'வில்லுறுகணை' 8'ஒல்லைமா நிலத்திவாயால்'

வேறு.

வீரன் விட்ட கணைபட விண்பயங்
கூர விட்ட குருதிப் பெரும்புனல்
வாரியொப்ப விளங்க வரையெனச்
சோரு மத்தி யிலத்தி சொரிந்ததால். (கஅ)

[1] கடுகி மோதிக் கதறி விழாமுனம்
படியின் [2]மாமகண் முன்னம் பரவினள்
கொடிது காத்தரு ளென்றுபொற் கோயில்வாழ்
கடிய வெட்டுக் களிறுங் களித்தவே. (கசு)

பிடிக ளோடும் பெரும்பயம் போய்த்திசை
முடிவில் யானைக ளெட்டு முழங்கின
வடைய மானிட ரச்சந் [3]தவிர்ந்தனர்
நடந வின்றனர் தொந்திவி நாயகர். (உ0)

உரன ழிந்து விழுந்த வுவாவினை
யிருமை மிக்க விலத்தியை நாட்டவர்
தரும மிக்க தனிவிளை யாடலின்
வரிசை காண வரையுரு வாக்கினன். (உக)

வேறு.

முடிசிகையினர் விடுசடையினர் முண்டித்தவர் கொன்றைக்
கடிகமழ்சடை யரனடியவர் கடுவிசையுட னணுகிப்
[4]படிதருதலை பறியமணர்கள் பயமொடுநனி குழறத்
தடிகொடுதலை சிதறினர்சய சயவெனநட நவிலா. (உஉ)

---

ெற்றி, வாலி; சிலேடை. இலத்திவாய் - அபானம். உதப்பி - வயிற்றிற் சோணியாமலிருக்கு முணவு.

கஅ. அத்தி இலத்தி சொரிந்தது - யானையானது இலத்தியைச் சொரிந்தது; "இலத்தியுள் விளை பாண்டமென்னுது" அரங்கத்தந்தாதி, சக.

கசு. பொற்கோயில் - சோமசுந்தரக்கடவுளின் ஆலயம்; "செம்பொனாலயத்துப் புக்கு", "பைம்பொனாலயத்துப் புக்கு" "பொருவருங்கோயின் முற்றும் பொன்னினால் வேய்ந்து" என்பர் பின்; உள: உஎ, எஎ; ௩0: ருங.

உ0. மானிடர் அடைய - மனிதர் எல்லாரும்.

உஉ. முண்டித்தவர் - தலையை மழித்துக்கொண்டவர். தலைபறி - தலைமயிரைப்பறித்துக் கொள்கின்ற.

(பி - ம்.) [1]'கடிகை' [2]'மாமகளும்முன்' [3]'தணிந்தனர்' 'படர்தருதலை புறியமணர்கள்'

வே று.

ஈன்றிய சமணர் மாளக் கவுரிய னனுப்பி யானை
பொன்றிய தல்லாற் கல்லாம் புதுமையைப் பார்ரெய்த
வென்றியைப் பார்ரந்தோ வெல்லயார் வல்லார் நந்தந்
தென்றமிழ்ச் சொக்க னல்லாற் றெய்வம்வே றுண்டோ வென்றான்.

வடிவுடைக் கடவு [1]ளங்கண் மறைகுவா னொருப்ப டுங்கால்
விடுவிசைப் புரவி மேன்முன் [2]விரைந்திறை யேவப் போனேன்
படிபுக ழமைச்ச ரோடும் பன்முறை [3]பணிந் தெழுந்து
கடிகமழ் கமலப் பொற்றாள் பிடித்தனன் கருத்துட் கொண்டு. (உச)

இவ்விடத் தென்று நின்றே யித்திருக் கோலந் தன்னை
மெய்வரப் [4]பழிச்சு வோர்க்கு வேண்டிய வரங்க ணல்கிச்
செவ்வையிற் காத்தல் வேண்டுந் தீர்த்தனே பத்தர் வாழ்வே
கொவ்வையங் கனிவாய் மங்கை கொழுநனே யெனத்து தித்தான். ()

இச்சையி னடியார் தங்கட் கெளியம்யா மாத லாலே
நிச்சய மாக விங்கு நிற்கின்றே நின்போ லெம்பாற்
கச்சமி லாத வன்பற் கண்டில மடிவி டென்று
நச்செயிற் றரவக் கச்சை நாயக னருளிச் செய்தான். (உசு)

அருளினு னிறைந்த தென்ன னடிக்கம லங்கள் விட்டுப்
பொருவில்பல் சிறப்புஞ் செய்து போற்றினன் புலியோர் போற்றப்
பரிவொடு நின்றா னங்கண் பணிவுடைப் பத்தர்க் கென்றும்
பெருகவேண் டுவகொ டுப்பான் காரணம் பிறங்க வென்றே (உஎ)

ஊனெழு குன்றை யானை மலையென வொழிந்த குன்றை
யீனமி லாவி லத்தி மலையென வெய்த கோவைத்
தேனலர்த் தொடையட் டாலைச் சேவக னென்ன நாம
மாநிலத் தன்று முன்னு மன்னிட [5]வழங்கு மன்றே. (உஅ)

---

உங. கல் - மலை.

உச. வடிவுடைக்கடவுள் - சுந்தரேசர்.

உரு. இச்செய்யுளால், பண்டைக் காலத்தில் அட்டாலைச் சேவகருடைய திருவுருவமிருந்ததென்றும் அது வழிபடப்பெற்றுவந்ததென்றும் தெரிகின்றது.

உசு. 'அடியார் தங்கட் கெளியம்யாம்': 'அடியவர்க்கெளிய சுந்தரன்', 'அடியவர்க்கெளிய சொக்கன்', 'அடியவர்க்கெளியவர்'. 'அடியவர்க்கெளிய வெம்பெருமான்' என்று இந்நூலில் பலவிடங்களில் வந்திருத்தல் காண்க. கச்சம் - அளவு.

உஎ. பிறங்க நின்றான்.

(பி-ம்.) [1]'ளங்கண்' [2]'விரைந்தருள்புரியப்போனேன்' [3]'பணிந்துபோந்து' [4]'பழிச்சினோர்க்கு' [5]'வழங்கிற்றன்றே'

[1]பாவியர் விட்ட கொற்றப் பருப்பத விபத்தை வீழ
மூவர்க டலைவன் சிங்க முகக்கணை விடுத்த லாலே
காவல [2]னவதா னத்தைக் காசினி காண நண்ணி
மேவரு நரசிங் கத்தை யிருத்தினன் வேழக் குன்றில். (உகூ)

ஆகத்திருவிருத்தம் - ருகo.

## உஎ.—[3]ஞானோபதேசஞ்செய்த திருவிளையாடல்.

அழகினுக் கழகார் மேனி [4]யாலவா யமுத வாயான்
பழுதில்சாத் தவர்கள் சூழப் பல்பெருஞ் சிறப்பிற் றோன்றிப்
பொழிலுல கனைத்துங் காணப் புரவிநூற் கியைய மிக்க
செழியன்முன் குதிரை யிட்ட திருவிளை யாடல் கேண்மின். (க)

சந்திர குலத்தி னீடோர் தானைவேல் வாகை மாற
னந்தமின் முன்னோர் போல வவனியை யடைவிற் காத்துச்
சுந்தரற் கன்பு பூண்டு [5]துலங்குமா மதுரை தன்னுண்
மந்திரத் தலைவர் சூழ வளம்பட வாழு நாளில். (உ)

---

உகூ. பருப்பத இபத்தை - மலைபோன்ற யானையை. காவலன் இருத்தினன்.

(உஎ)

க. இச்செய்யுள் கவிக்கூற்று. 'அழகினுக்கழகார் மேனி': "அழகெனு மதுவு மோரழகு பெற்றதே' (கம்ப. மிதிலை. ௩௪); "அழகினுக் கழகு செய் தார்" (ஷை கோலங்காண். ௩.) 'ஆலவாயமுதவாயான்': 'ஆலவாயமுத மன்' (திருநகா. கக), 'ஆலவாயமுதவாக்கன்' (ககூ: க.) சாத்தவர்கள் - சென்றுசென்று வியாபாரம் செய்யும் வாணிகர்திரள்; இது, ஸார்த்தமென்னும் வடமொழியடியாகப் பிறந்ததென்பர். புரவிநூல் - அசுவசாஸ்திரம். குதிரையிட்ட - குதிரைகளை அளித்த; "இனப்பரியிட்டதன்றி" என்பர் பின்னும்; ௩o: ருo. திருவாதவூரர்புராணத்துள்ள குதிரையிட்டசருக்கமென்னும் பெயரும் இங்கே அறியற்பாலது.

உ. வளம்பட - பலவகைச் செல்வமும் உண்டாக; "வளம்பட வேண்டா தார் யார்யாருமில்லை" நாலடி. கoரு.

* "குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார் குடமுழநந் தீச னை வாசகனுக் கொண்டார்" (திருநா. தனித்திருத்தாண்டகம், கக); "உனக்குக், கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு, நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி, நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி, நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத், தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" (திருவா. சிவபுராணம், ருசு - சுக); "அந்தண னாகி யாண்டுகொண் டருளி, யிந்திர ஞாலங் காட்டிய வியல்பும்", "திருவார் பெருந்துறைச் செல்வனாகிக், கருவார் சோதியிற் கரந்த

(பி - ம்.) 1 'பாவிகள்' 2 'அவதானங்கள்' 3 'குதிரையீடு ஞானவுபதேசஞ் செய்த' 4 'ஆலவாயான்மகிழ்ந்து' 5 'துளங்கு'

நீதிமா மதூக நீழ னெட்டிலை யிருப்பை யென்றோர்
காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்
சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துலங்கக் காட்டும்
வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால். (௩)

---

கள்ளமும்" (ஷை. கீர்த்தி. ௪௨ - ௩; ௫௪ - ௫); "பாமா கந்தப் பழங்கட லது வே,............அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க" (ஷை. திருவண்டப் பகுதி, ௬௬ - ௬௫); "என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி, யறைகூவி யாட் கொண் டருளி, மறையோர் கோலங் காட்டி யருளலும்" (ஷை. ஷை. ௧௪௭ - ௯); "அருபரத் தொருவ னவனியில் வந்து, குருபர னாகி யருளிய பெரு மையை", "மெய்தரு வேதிய னாகி வினைகெடக், கைதர வல்ல கடவுள்போற்றி", "என்னையு மொருவனாக்கி யிருங்கழல், சென்னியில் வைத்த சேவக போற்றி" (ஷை. போற்றி. ௭௫ - ௬, ௮௮ - ௯, ௧௨௯ - ௧௩௦); "ஈறி லாதநீ யெளி யை யாகிவந் தொளிசெய் மானிட மாகநோக்கியும்" (ஷை. திருச்சதகம், ௧௧); "செங்க ணெடுமாலும்............வானவன் பூங்கழலே பாடுதுங்கா ணம்மா னாய்" (ஷை. திருவம். ௧ - ௧௪); "நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங் காட்டி நாயிற் கடைப்பட்ட நம்மை யிம்மை, யாட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி, யாடப்பொற் சுண்ண மிடித்து நாமே" (ஷை திருப்பொற். ௮); "வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னாதே, கன்னெஞ் சுருக்கிக் கருணையினா லாண்டு கொண்ட,.........பொன்னங்கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ", "அருவாய் மறைபயி லந்தணனா யாண்டுகொண்ட, திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ" (ஷை. திருக்கோ. ௧௧, ௧௪); "உருநா மறியவோ ரந்தணனா யாண்டு கொண்டான்", "வாவாவென் றென்னையும் பூதலத் தேவலித் தாண்டுகொண் டான்" (ஷை. திருத்தெள்ளேணம், ௧, ௭); "பெருந்துறையான், சீரார் திருவடி யென் றலைமேல் வைத்தபிரான்" (ஷை. திருப்பூவல்லி, ௧௦); "கருணையினாற் றேவர்குழா, நாணுமே யுய்யவாட் கொண்டருளி" (ஷை. திருப்பொன்னூசல், ௫); "அந்தண னாகிவந் திங்கே யழகிய சேவடி காட்டி.........ஆட்கொண்டரு ளும்,.........தேவர்பிரான்" (ஷை. குயிற்பத்து, ௧௦); "அந்தண னாவதுங் காட்டி வந் தாண்டா யாரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே" (ஷை. திருப்பள்ளி. ௮); "நாயேன் றனையாண்ட பேதாய்", "முன்னே யெனையாண்ட, பார்ப்பானே" (ஷை. புணர்ச்சிப்பத்து, ௯ - ௧௦); "ஆண்டுநீ யளித்த வருளினை மருளி னான் மறந்த, வஞ்சனேன்" (ஷை. வாழாப்பத்து, ௬); "திருவடி யென்றலை மே னட்டமையால்" (ஷை. குலாப். ௮); [ஷை. அருட்பத்து, அற்புதப்பத்து சென்னிப்பத்து ஆகிய இவைமுதலியவற்றைப் பார்க்க.] "பெருந்துறையெம் புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப், பேதங் கெடுத்தருள்செய் பெருமை யறியவல்லார்" (ஷை. திருவார்த்தை, ௭).

௩. மதூகம் - இருப்பைமரம்; 'நெட்டிலை யிருப்பை' என்னும் அகவல், "நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடுடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப், பரதர் மனைதொறு முணங்குஞ், செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே" (கபிலர்வாக்கு) என்பது. இது தமிழ்நா வலர் சரிதையிற் கண்டது. இருப்பையும் மகிழும் அத்தலத்திற்குரிய விரு க்ஷங்களென்று தெரிகின்றன: "கமழ்மதூக மகிழ்வாத புரத்து" (கடம்ப. இலீ லா. ௨௭.) அத்தலத்தில், ஸ்ரீமாணிக்க வாசகர்க்குச் சிவபெருமான் திருச்சி லம்பொலியைக் காட்டியருளினர்; "வாதையம் புரத்துகண்ணி மணிச்சிலம் போ

ஆதியா தித்தன் [1]சோம னக்கினி தமது பேரால்
வேதியர் தலைமவந் தேத்தி விளம்புமுன் னுகங்கண் மூன்றுங்
காதலின் வணங்கக் கண்டு கடையுகம் வாத ராச
னீதியின் வணங்க வாத புரமெனா நிகழு மூதூர். (ச)

தெரிவையர் விழியை யேய்க்குஞ் சேல்வளை களத்தை யேய்க்கும்
பரிபுரப் பதத்தை யேய்க்கும் [2]பங்கயம் பழனந் தோறுந்
தருமுகிற் றனை போர்த்துத் தாரகை முத்தம் பூணக்
கருதிநீள் கமுகை யேய்க்குங் கன்னலைச் செந்நெ லேய்க்கும். (ரு)

மன்னுமிந் நகரி தன்னுண் மானமங் கலத்தா ராகுந்
தொன்னெறி [3]முனிவ ராமா மாத்தியர் தொழுகு லத்து
நன்னெறி விடையிற் போந்தோர் நன்கணத் தலைவர் நாம
மின்னெறி வாத வூர ரென்னவந் துதயஞ் செய்தார். (சு)

மன்னுமுற் றொடர்பி னாலே மாசற வீரெட் டாண்டின்
முன்னைநூ னீதி நூன்மற் றியாவையு முற்றக் கற்றுக்
கொன்னுற வளரக் கேட்ட [4]கொற்றவ னயந்த ழைத்துத்
தன்னுடை [5]நன்னு மத்தாற் றலைமைசேர் நாமஞ் சாத்தி. (எ)

---

சைகாட்ட" (உஅ: கச); "வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (திருவா. கீர்த்தி. ருஉ - ௩) என்பதனாலு முணர்க. வேத நாதரென்பது, அத்தலத்துச் சிவபெருமானுடைய திருநாமமாதலின் 'வேதநாயகனார்' என்றார்; 'வேதியர்' என்பர்மேலும்; ச. திருமால் வந்து பூசித்தபொழுது "வேதாஈமம்" என்ற சுருதி, சிவலிங்கப் பெருமானிடமிருந்து தோன்றினமையின், இத்திருநாமம் அமைந்ததென்று அத்தலத்து வடமொழிப்புராணம் தெரிவிக்கின்றது.

ச. ஆதியாகிய ஆதித்தன். சோமன்-சந்திரன். வாதராசன்-வாயுதேவன்.

ரு. வளை - சங்கு. "கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன" (பெரிய. நாடு. கரு) என்பதை இச்செய்யுளின் ச - ஆம்அடி ஒத்துள்ளது.

சு. மானமங்கலமென்பது திருவாதவூரருடைய முன்னையோரிருந்த ஊரின் பெயரென்று தெரிகின்றது; மானபுரமெனவும் வழங்கும். இந்நூல், உஅ: அ-ஆம்செய்யுளிலுள்ள, "இருநி லிருசின் மானபுரமென்னுங் கொடுமை பொறுக்க கிலேன்" என்பது ஆராயத்தக்கது. ஒருகணநாதர், சிவபெருமான் கட்டளைப்படியே வந்து திருவாதவூரராக அவதரித்தனரென்பதை, "கணநாதர் தமிலொருவன் விடையிற் போந்து கமழ்மதுக மகிழ்வாத புரத்து வாழந், தணராமாத்தியர்குலத்துட் டோன்றி" (கடம்ப. இலீலா. உஎ) என்பதனாலும் உணர்க. இந்நூலிலுள்ள "இத்தகைமை யிற்றிகழு மெல்லையினி லுட்புக விலங்குகணநாத னொருவன்" (உஉ: அ) என்றது இங்கேஅறியற்பாலது. இச்சரிதவிரிவை, திருவுத்தரகோசமங்கைப்புராணம், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்தானுமுணர்க.

எ. முன்னைநூல் - வேதமுதலியன. தன்னுடை நன்னுமத்தால் தலைமைசேர்நாமம் - தென்னவன் பிரமாராயரென்பது; ஆல்: ஓடு; "தென்னவன்பிரம

(பி - ம்.) [1]'சோமனசனிகள்', 'சோமனசுவினி' [2]'பங்கயப்பழனக்' [3]'முனிவராயமாத்தியர்' [4]'கொற்றவன்வந்தழைத்து' [5]'மன்னுமத்தாற்'

மல்லலஞ் சிறப்பி னோங்கும் வரிசைகள் பலவு நல்கி
யெல்லையில் [1]சேனைக் கேற்ற தாழ்வுகேட் டிருத்தி யென்னக்
கல்வியின் மிகுதி யானுங் கருத்துணர் கூர்மை யானுஞ்
சொல்லரு மமைச்சர்க் கெல்லாந் [2]துளங்குமுற் றலைவ ரானார். (அ)

கரிபரி திண்டேர் வென்றிக் காய்சின வீர ராற்றுந்
தரைபுகழ் செய்திக் கெல்லாந் தலைவரா யவனி வேந்தர்
வரவிடு திறையுங் கண்டு மற்றவர்க் கினிய செய்து
[3] பரிவுடைத் தென்னன் பாரந் தம்வயிற் பரித்துப் போந்தார். (கூ)

துளங்கிய பத்தி பூண்டு சொக்கநா யகன்வி ரும்ப
விளங்கிய நலங்கள் செய்து மேதகு தொண்டர் மாட்டுங்
குளிர்ந்ததங் கிளைஞர் மாட்டுங் கொடுத்தரும் பொருண்மற் றெங்கும்
வளர்ந்தபே ரறங்கள் செய்தார் மனத்திலோ ராசை யில்லார். (கo)

மன்னவ ரிவரே யென்ன வாழுநா ளனிலுஞ் சாதி
மெய்ந்நெறித் தரும நீங்கா வேதிய ரமைச்சி னாலே
முன்னையிற் றனது செல்வ முடிவிலா தோங்கக் கண்டு
தென்னவன் மகிழ்ச்சி [4]யெய்திச் சிறக்குநா டம்மி லோர்நாள். (கக)

வே று.

கோதி லாத குதிரைத் துறையவர்
தீதின் மாறன் றிரு[5]மு னணைந்தவன்
பாத மீது பணிந்தாங் [6]கொடுங்கிநின்
றோது வார்க ளூறுபெருஞ் செய்திகள். (கஉ)

நீதி மன்னவ ரேறே நினைவுறச்
[7] சீத வெம்மையிற் றேய்ந்தன சில்பரி
வாத நோயிடை மாய்ந்தன சில்பரி
யாதி வெப்பி லழிந்தன சில்பரி. (கந)

கண்ட மாலை கவுசி மகோதர
மண்ட சாலம்வெஞ் [8]சூலை யலகுநோய்

---

ராயனே காண்க" என்பர், பின்னும்; சுக. பிரமாரயனென்பது, பிரமாதிராய னெனவும் சிலசாதனங்களிற் காணப்படுகின்றது.

அ. ஏற்ற தாழ்வு கேட்டிருத்தல் - புகுந்துள்ள குறைகளைவிசாரித்துப் பரிகரித்திருத்தல்; அமைச்சர்க்கெல்லாம் வாதவூரர் தலைவரானமை, "அமைச்சர் கடம்முட் கற்றறிவுள்ள தலைவனே" (கஎ) என்பதனாலும் அறியப்படும்.

கூ. செய்தி - நாற்படைச்செய்தி.

கந. இதில் குதிரைகளின் நோய்கள் கூறப்படுகின்றன.

கச. கோடகம் - குதிரை.

(பி - ம்.) [1]'சேனைக்குற்றதாழ்வு' [2]'துலங்குமுற்' [3]'பரிவொடுந்தென்னன்' [4]'செய்யச்' [5] 'முனடைந்து' [6]'ஒதுங்கி' [7] 'சீதைவெம்மை' [8] 'சூலமலகை நோய்'

தண்டை நோய்[1]பிர மேகந் தலைக்கனங்
கொண்டு மாண்டன சில்பெருங் கோடகம். (௧௪)

துற்ற மற்றை வரிசைத் துரகமும்
வற்றி யுய்யுமுய் யாவென மன்னின
பொற்பி லங்கு புதுப்பரி யிங்குநங்
கொற்ற மோங்க விரைவிற் கொளப்படும். (௧௫)

மண்ணி னீண்மறு மண்டலங் கொள்பவர்க்
கெண்ணி லங்கொ ரிலக்க மிவுளிகள்
கண்ணு பந்தியிற் கட்டத் தகுமென
வுண்ணி றைந்த விருப்பி னுரைசெய்தார். (௧௬)

வே று.

மற்றவ ரியம்பக் கொற்றவன் கற்ற வாதவூர் முனிவரை யழைத்திங், குற்றுயர் புறுநங் காரிய மனைத்து நின்னுணர் வாலுணர் கின்றே, நற்பிர மாணி நீயலா லுண்டோ நானிலத் தமைச்சர்க டம்முட்,கற்றறி வுள்ள தலைவனே நினக்கோர் காரிய [2]முணர்த்துவங் கேண்மோ. (௧௭)

பகர்ந்தனர் வந்து பரித்துறை யாளர் பரிவுறு நம்பரி யனைத்து, மகந்தரு நோயால் வீந்தன வென்றே [3]யறைப்படுங் காசணி தூசு, தகும்பெருங் கனகம்வேண்டுப வெடுத்துத் தாவுமாவிறங்குபட் டினத்துப், புகுந்துயர் பரிகொண் டணைந்திட வேண்டும் புரவிநூ லிலக்கணத் தியைய. (௧அ)

வே று.

என்றது [4]சொல்ல வாழ்த்தி யான்சொன்மி னெனவே சொன்னார்
நன்றருள் செய்த மாற்ற நாதனே விரைவிற் [5]செய்வ
லின்றுநீ விடைதா வென்ன வியம்பிநல் விடையிற் போந்து
துன்றுபொன் னறைமாட் டெய்தக் காவல ரெதிர்ந்து நித்தார். (௧௯)

---

௧௫. துற்ற - நெருங்கின. கொளப்படும் - கொள்ளல்வேண்டும்; தேற்ற வினை.

௧௬. மறுமண்டலம் - வேற்றரசர் தேயங்கள். பந்தி - குதிரைச்சாலை. கட்டத்தகும்: தேற்றவினை.

௧அ. அகம் - பாவம். வீந்தனவென்று பகர்ந்தனரெனக்கூட்டுக. அறை-பொன்னறை. புரவிநூல் - அசுவசாஸ்திரங்கள்; சூரியனும் சாலிகோத்திரரும் அந்நூல்கள் செய்யப்பட்டுள்ளனவென்பர்.

௧௯. மாற்றம் நன்றென்க. விடை - உத்தரவு, காளை; சிலேடை.

(பி - ம்.) [1]'பிறமேகந்தலைக்கனங்' [2]'உணர்த்துவல்' [3]'அறைபடுஞ் காசமைநூக்' [4]'சொல்லா முன்னு ரிறைஞ்சியான் சொல்வதானேன்', 'சொல்ல வாழ்ந்த சொல்லினெனவே' [5]'செல்வல்'

வேறு.

பொன்னி னீடிய புஞ்சமா ரறையினுட் புக்குத்
துன்னு பல்பொருள் சூழ்ந்தகண் காணியி னெடுத்துப்
பன்னு நீதிசேர் பல்பெருங் [1]கணக்கினும் படுத்து
மூன்வி ருப்பொடு கட்டினர் பெட்டக முட்ட. (௨O)

வேறு.

பொய்ம்மை [2]யின்றிப் பரிக்கும் புகழுடைச்
செம்மை யோரைத் தெரிந்து பரிவொடும்
வம்மி னென்ன வரவழைத் தாங்கவர்
தம்ம னங்[3]களிப் பத்தன நல்கினார். (௨௧)

ஆங்கி லங்கு மளப்பரும் பெட்டகந்
தாங்கு மென்றவர் தம்வயிற் சேர்த்தரு
டேங்கு நாதன் றிருவால வாயுமை
[4] பாங்கி னானைப் பணிவமென் [5]றெய்தினார். (௨௨)

வேறு.

எண்ணில்பெரும் பாவ மிமைப்பளவி னீக்குவிக்கும்
புண்ணியநன் னீர்பொலியும் [6]பொற்றா மரையதனு
ணண்ணிநெறி யாசமித்துப் போந்து நலங்கடரும்
பெண்ணை யனை துதிக்கைப் பிள்ளை யுழைச்சேர்ந்தார். (௨௩)

ஆங்குமர னோங்கியபே ரண்டம் வலம்வரவே
யோங்குமரன் றன்னைவலம் வந்தாங் குறுகனியை
வாங்குசதி ரோனே மதவா ரணவரசே
தேங்கு[7]புக ழைங்கரனே செய்யமலர்த் தாள்போற்றி. (௨௪)

காத்தருளா யென்று தொழுது கரங்கூப்பி
யேத்தி யருள்பெற்றுப் போந்தாங் [8]கினிமைதருஞ்
சீர்த்தி பொலியு மிமவான் றிருமகளார்
வாய்த்த திருக்கோயில் புக்கார் மதியுடையார். (௨௫)

---

௨O. புஞ்சம் - தொகுதி. கண்காணியின் - மேற்பார்வையுள்ளோனால்; இப்பெயர், இப்பொருளில் தென்னாட்டில் வழங்குகின்றது.

௨௧. பரிக்கும் செம்மையோர்- சுமத்தற்குரிய நல்லொழுக்கமுடையோர்; "பொன்பரித்தவரை" என்பர் பின்னும்; ௬௧.

௨௩. பெண்ணை அனை துதிக்கை பிள்ளை - பனைபோன்ற துதிக்கையை யுடைய பிள்ளை; விநாயகக்கடவுள்; "பனைக்கைமும்மத வேழம்" (தேவாரம்.) பெண்ணை, பிள்ளையென்றது சொன்முரண்.

௨௪. ஆம் குமரன் - பெருமையை யுடையவராகிய முருகக்கடவுள். ஓங்கும் அரன். கனி - மாங்கனி.

(பி-ம்.) [1]'கணக்கினுட்படுத்தி' [2]'யன்றிப்பரிக்குப்' [3]'களிப்பத்தர' [4]'பாங்கினாரைப்' [5]'ஏகினார்' [6]'பொற்றாமரைவாவி' [7]'புகழையனே' [8]'இனியதருஞ்'

என்றூர் வரைமயிலே யேழ்பொழில்வாழ் [1]கோகிலமே
யொன்றுய வேதா கமவாவி யோதிமமே
பொன்றாத வெண்ணெண் கலைபேசும் பூவையே
மன்றார் கடம்பவன மானே யடிபோற்றி. (உசு)

வேறு.

இவ்வண்ணந் துதித்தி றைஞ்சி யின்னருள் பெற்றுப் போந்து
செவ்வண்ணச் சொக்கன் மிக்க செம்பொனு லயத்துப் புக்கு
மைவண்ணக் கண்டத் தானே வாய்த்தபே ரண்டத் தானே
மெய்வண்ணப் [2]பாதத் தானே யென்றுசூழ்ந் திறைஞ்சி வீழ்ந்தார். ()

விழுந்தவர் திருமுன் சென்று விண்ணப்பஞ் செய்வார் வேந்தர்
செழும்பொருள் கொடுபோய்க் கொள்ளுங் காரியந் தீங்க தின்றி
யொழுங்குறப் பலித்தல் வேண்டு முனையலா லுதவி யில்லென்
[3]றழுந்தமுன் னுரைத்துப் போது மளவினி லருளா லாங்கு. (உஅ)

வெண்டிரு நீறு கொண்டோர் வேதிய னுவந்த ளிப்பக்
கண்டது வாங்கிச் சாத்திக் காரியம் பலிக்கு மென்று
கொண்டகங் [4]களித்துப் போந்து குறைவிலாக் கனகத் தோடு
மண்டிய தானை யோடும் புறப்பட்டார் மதுரை விட்டு. (உகூ)

கற்றைவெண் கவரி வீசக் [5]காயகர் கீதம் பாடக்
கொற்றவெண் குடைநி ழற்றக் கோதையர் மருங்கு வாழ்த்த
மற்றுமன் னரைநி றுத்தி மாணிக்கச் [6]சிவிகை யேறி
முற்று[7]பல் லியங்க ளேங்கப் போந்தனர் முடுகெ வன்றே. (ஙO)

சாலிநீள் கழனி தோறுந் [8]தண்டுலங் கதிரா வீனும்
பாலுறு தடங்க டோறும் பணிலநித் திலம்[9]பி றக்கு
மேலுறு சாபந் தீர விந்திரன் வெள்ளை யானை
காலைவந் திறைஞ்சுந் தொல்லைக் [10]கானையம் பதிய டைந்தார். (ஙக)

---

உசு. என்றுஆர் - சூரியன் பொருந்துகின்ற; சூரியனை ஒத்த வென்பதுமாம். இச்செய்யுளில், மயில்முதலிய பறவைகள் உரியஇடங்களுடன் பாராட்டப்பட்டுள்ள நயங்கள் மிகப்பாராட்டற்பாலன.

உஎ. வாய்த்த பேரண்டத்தான் - அண்டங்களைப் பெற்றருளியவர்.

ஙO. காயகர் - இசைப்புலவர். மற்றுமன்னர் - வேறுஅரசர்கள்.

ஙக. காலை - சிவபெருமான் திருவடியை. கானை- திருக்கானப்பேர்; கானையார்கோயில். ஐராவதம், தனக்கிருந்தசாபம் தீரும்பொருட்டுச் சிவபெருமானை வழிபட்டதென்பது அத்தலபுராணவரலாறு; "மானமா மடப்பிடி வன்கையாலலகிடக், கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்" (திருஞா. தே.) என்பதனுமுணர்க. ஐராவதத்தால் உண்டாக்கப்பெற்ற மிகப்பெரிதான தடாகமொன்று யானைமடுவென்னும் பெயருடன் இன்றும் அத்தலத்தேயுள்ளது.

(பி - ம்.) [1]'கோகுலமே' [2]'போதத்தானே யென்றடிதொழுது' [3]'அழுந்தி' [4]'களிக்கப்' [5]'கானவர்' [6]'சிவிகைமீது' [7]'பல்லியங்கறங்க' [8]'தண்டுலக்கதிராய்' [9]'பிறங்கு' [10]'கானலம்பதி'

வேறு.

ஆரண னும்பகலு மிந்துவு மாடரவு மந்தண னும்மரியுந் தும்புரு [1]நாரதரும், வாரண மூர்திருமான் மைந்தனு மிந்திரனும் வானுயர் தேவர்களுங் [2]கோடுடை மாமுனியும், பூரண நாமகளும் பூமகளும்முமையும் பூழிய னுந்திருவோ [3]டேழுல கும்பரவுங், [4]காரண வன்குரவார் கந்தவ னச்சோமன் காளைம ணங்கமழுந் தாளைவ ணங்கினரால். (கஉ)

வேறு.

கருதுமப் பதியை விட்டுக் காதங்கள் பலவு நீங்கி
வருநெறி வசத்தி னுறு மாசின்முற் றொடர்பி னுறு
மருள்புனை வாத வூர ரன்புடைச் சம்பு வாழுந்
திரைபொரு [5]மொய்யார் பொய்கைத் திருப்பெருந் துறையைச் சேர்ந்தார்.

வளைமதி காட்டப் பூக மரகதங் காட்டக் கொன்றை
நளிநிதி காட்டக் காட்ட நாக[6]நித் திலமெ வர்க்கு
முளமகிழ் துறக்கங் காட்ட வுயர்சிவ புரத்துச் செல்லக்
கிளரொளி வழியீ தென்று கேதகை காட்டச் சென்றார். (கச)

நிறைபெருந் தவத்தோர் வேள்வி நீங்கரும் பெருமை மிக்கோர்
மறுவிலா மூன்று நூறு மறையவர் விளங்கு மூதூ

---

கஉ. பகல் - சூரியன். அந்தணன் - பிரமன். திருமான்மைந்தன் - மன்மதன். கோடுடைமாமுனி - கலைக்கோட்டுமுனிவர், பூமகள் - பூமிதேவி. பூழியன் - பாண்டியன். காரணவன் - சுந்தரேசுவரர். சோமன் - சோமேசுவரர். காளை - காளையீசர்; அத்தலத்திற் சுந்தரேசுவரர், சோமேசுவரர், காளையீசரென்று மூன்று சிவலிங்கப்பெருமான்களுடைய சந்நிதிகள் உள்ளன. வக்கிரம சோழன் மகள் சுகந்தகேசியை மணம்புரிந்த வரகுணபாண்டியர், அவளுடைய அழகின் மிகுதியைக்கண்டு அத்தலத்திற் சிவபெருமானுக்கு அர்ப்பணஞ்செய்தனரென்பதும் அவளுடைய கூந்தலின் நறுமணம் எங்கும் பரவியதுபற்றி அத்தலம் சுகந்தவனம் அல்லது கந்தவனமென்று பெயர்பெற்றதென்பதும் அத்தலபுராண வரலாறுகள்.

கங. 'மொய்யார்பொய்கை' என்பது, திருப்பெருந்துறையிலுள்ள ஒரு தீர்த்தம்; "மொய்யார்தடம் பொய்கைபுக்கு" (திருவா. திருவெம். கக) என்பதனுமுணர்க. திருப்பெருந்துறையென்பது, பிருகத்தீர்த்தமென்று வடமொழியில் வழங்கும்; இத்தலம் இக்காரணப்பெயர்பெற்றதை, திருப்பெருந்துறைப் புராணத்துள்ள பெருந்துறைப் படலத்தாலுணர்க.

கச. வளை - சங்கு. நாகம் - புன்னை; நாகம் நித்திலங்காட்ட; நித்திலம் - முத்து; இது புன்னை யரும்பிற்கு உவமை.

கரு. மூன்றுநூறுமறையவர் - முந்நூற்றுவர்; இவர்கள் இத்தலத்திற் சிவபெருமானைப் பூசித்தல் முதலிய வழிபாராட்டிற்குரியோர்; தில்லைமூவாயிரவரைப்போல. இறைவனின் அமரராக்குமென்க.

(பி - ம்.) [1]'நாரதனும்' [2] 'தோடுடைமா' [3]'ஏழுகமும்' [4] 'காரணன்வண்' [5] 'மெய்யார்' [6]'நித்திலமேயார்க்கும்'

நிறையினின் மருங்க ணேந்தோ ரியாவரா யினும்பி றங்கப்
பிறிவிலா வமர [1]ராக்கும் பெருந்துறை முந்தைப் பேரூர். (கடு)

வேறு.

அருந்தவர் சிந்தைசெ லுந்துறை வந்தணை யந்தணர் முந்தைமகம்
புரிந்துசெ யுந்துறை சந்தைப டிந்துறை புந்தி[2]க டந்தபதந்
தருந்துறை யிந்திரை வந்துறை யுந்துறை தொந்திகொ டந்திபடும்
பெருந்துறை யெந்தைப ரிந்துகு ருந்தினி ருந்தபெ ருந்துறையே. ()

வேறு.

வயலெலாங் கன்னல் செந்நெல் வனமெலா நாகம் பூக
மயலெலாந் தேர்வி மான மனையெலா முனிவர் வானோர்
[3] புயலெலா [4]மாட கூடம் புறமெலாம் வேள்வி யோமங்
கயலெலாந் தாவும் [5]வாவிக் கரையெலாந் தவஞ்செய் வோரால்.(கஎ)

வேறு.

சகம்[6]பரி வறுகலைச் சங்க மேறிய
மகந்தரு மறையுரு [7]வங்க மாறற
முகந்தரு பவக்கடன் முடிய வோடியே
தொகும்பொருள் படுபெருந் துறையைச் சார்ந்ததால். (கஅ)

வேறு.

அந்நக ரணையா முன்ன [8]ரங்கநெஞ் சுரைவே றாகித்
துன்னுபே ரன்பு நீடத் துணைவிழி யருவி பாய
வுன்னரு மயிர்சி [9]லும்ப வுயர்கரங் குவிய வாறு
வன்னிசேர் மெழுகே யென்ன வுருகினார் வாத வூரர். (கக)

திருந்துமுற் றவத்தி னாலே செல்வமே லாசை விட்டுப்
பரந்தநெஞ் சொடுங்கக் கண்டு பன்முறை யதிச யித்துப்
பெரும்பதி யடையா முன்ன ரடைந்தது பேரன் பெந்தை
பொருந்திய தலங்க டம்முட் டலமிது [10]போலொன் றின்றே. (சo)

---

கசு. சந்தை - வேதம்; சிவபெருமான் உபாத்தியாயர் வேடம்பூண்டு அத்தலத்தில் ஓரிடத்திற் சிலநாளிருந்து மேற்கூறிய முந்நூற்றுவர்களுடைய பிள்ளைகளுக்கு வேதத்தை ஓதுவித்தமையின், 'சந்தைபடிந்துறை' என்றார்; "வேத நாயகற்கு" என்பர்பின்னும்; கூச. ஓதுவித்த இடம் பள்ளிக்கூடமென்று இன்றும் வழங்குகின்றது. தொந்திகொள்தந்தி - விநாயகர். குருந்தமரம் - இத்தல விருக்ஷம்.

கஅ. கலைச்சங்கம் - வித்தையின்தொகுதி; ஆடையின்தொகுதியென்பது மற்றொருபொருள்; சிலேடை. மறையுருவங்கம் - திருவாதவூரர்.

கக. சிலும்ப - சிலிர்ப்ப.

(பி - ம்.) 1'ஆரும்' 2'கடந்து' 3'புயலெலாங்கூடுமாடம்புறம்' 4'மாடப்புறம்' 5'வாவிகரை' 6'பரவுறு', 'புரிவுறு' 7'வங்கமாற்றரு' 8'அங்கணெஞ்சு' 9 'சிலிர்ப்ப' 10'போலின்றின்றே'

பரிவினிங் கெய்தற் கென்ன பாக்கியஞ் செய்தே மிந்த
வரியசெங் கனகத் தோடு மமர்வமென் [1]றறுதி யிட்டுப்
பொருவரும் படையை மிக்க பொன்பரித் தவரை மற்றும்
வரிசையுள் ளவரை யங்கண் வரவழைத் தருளிச் செய்வார். (சக)

வே று.

வரர்[2]புக ழாடித் திங்களிற் குதிரை வந்திடா தாவணி மதியிற் [லாம்
கரைதொறு மிறங்கு மையமோ வில்லை காவலகூ ரரும்பொருட் கெல்
பரிகனி கொண்டு வருகுவ லியானே பாண்டியற் [3]குரையுமிச் செய்தி
தெருமர லுறாது கடிது[4]போய் நீங்கள் சிவன்செய தெரிந்திடா தென்றார்.

வே று

ஆங்கவர் போயு வப்ப வரசனுக் குரைப்ப விப்பா
லீங்கிவ [5]ரொப்பார் போல யாவையும் விட்டுப் பொய்கை
யோங்குநீ ராடி வெண்ணீ றணிந்துய ரால யத்துப்
பாங்குறு மிறைவன் றன்னைப் பணிகுவான் றனிய டைந்தார். (சரு)

திருந்திய சிகையு நூலுஞ் [6]செவ்வியிற் றுளங்க வானுள்
விரிந்ததா ரகைக்க ணத்துள் விளங்குதண் மதிய மென்னப்
பரிந்துமா ணவர்கள் சூழப் பத்தரூர் வரவு பார்த்துப்
பெருந்துறைக் குருந்த நீழ லிருந்தனன் பெரிய [7]வாசான். (சச)

காசிலா மறைமு ழங்கக் கருணையிற் சிறந்தி ருந்த
[8] தேசிகே சனைக்கா ணுமுன் செயலழிந் துடலங் கம்பித்
தாசிலா விதியி னெட்டா லஞ்சினுன் மண்ணிற் றோயப்
பாசமூன் றகல வீழ்ந்து பன்முறை பணிந்து நின்றார். (சரு)

நின்றவர் தம்மை யன்பு நீடிய திருநோக் கத்தால்
வென்றிகொள் சிரமுன் னாக மேவுதா ளீற தாக
வொன்றிய மந்தி ரத்தா ஞேக்கிநோக் குபதே சத்தான்
மன்றுற வுபதே சித்து முன்னுற வரவ ழைத்தான். (சசு)

---

சக. பாக்கியம் - புண்ணியம். அறுதியிட்டு - நிச்சயித்து.

சஉ. நீங்கள்போய் உரையும்.

சங. ஒப்பார்போல - இராசகாரியங்களை ஒழுங்குபடச்செய்யும் இயல்புடையவரைப்போல; "பெரியசெல்வரொப்பார்போல்", "மனமகிழ்ந்து விரைந்தொப்பார்போலச்சென்று" என்பர்பின்னும்; கூச, எக; "ஒவ்வாதார் தாமெனைவ ரொப்பார்மற் றெனைவர்' (சீவக. கருசங) என்பதையும் அதனுரையையும்பார்க்க.

சரு. காசுஇல் நான்மறை. எட்டால் - அஷ்டாங்க வந்தனத்தால். அஞ்சினுல் - ஐந்து அங்கவந்தனத்தால். பாசமூன்று - மும்மலம்.

சசு. நோக்குபதேசம் - சக்ஷுர் தீக்ஷை.

(பி - ம்.) 1'உறுதி' 2'புகலாடித்' 3'உரையுமின்' 4'போநீங்கள்' 5'ஒப்பர்' 6 'செவ்வையிற்' 7'வாணன்' 8'தேசிகன்றனை'

அன்னவ ரொல்கி மெல்ல வஞ்சியஞ் சலியிற் செல்லப்
பன்முறை முறுவல் கூர்ந்து பாவனை செய்து பண்பிற்
றன்னடி சூட்டி நாமஞ் சாத்தியா சாரம் பூட்டிச்
சின்மய வஞ்செ ழுத்தைச் செவிப்புலத் துபதே சித்தான். (௪௭)

நோக்கினாற் பாவ கத்தா னுவலரும் பரிசனத் தாற்
காக்குமீ னுடல டக்குங் கமடமொண் பறவை யென்ன
வாக்கினு க்கு முன்ன ரடைந்தது பரம ஞானம்
வாக்கினு மடங்கை சேர்ந்தா ளகன்றன மலங்கண் மூன்றும். (௪௮)

வேறு.

[1]தேடு நீசிவ பாக்கியஞ் செய்தனை
நாட வேண்டுவ கண்டனை யானமைப்
பாட வேண்டு மெனப்பரங் கண்டவ
ராடி வாசக மோதுவ ரன்புற. (௪௯)

மருவு பொற்பத [2]மன்னுறக் கண்டுள
முருகி யற்புத வாசக மோதுவார்
பரவு சென்னியம் பத்தெடுத் தோதியே
யரிய பாடலச் சோவென வோதினார். (௫௦)

வேறு.

சிரித்த முகமுங் [3]கவின்குழலுந் தீரா வருவிக் கண்மலரும்
விரித்த கரமுஞ் சபவடமும் வெண்ணூன் மார்புந் திருநீறுந்
தரித்த திருவா சகமொழியுஞ் [4]சாந்த மெய்யுங் குறுவியர்வு
மரித்த மனமும் புளகமுமாய் நின்றார் வாத வூர்முனிவர். (௫௧)

வேறு.

பதியின்மை பவத்தி னூம் பதிந்தமெய்ஞ் ஞானத் தானு
முதிரும்வெம் பிறவிப் பாச மறுத்தவர் மூர்த்தி நாதன்
விதியினிற் காண்டி யென்ன [5]மேதகு சாத்த லோதும்
புதுமைகூர் பிரம சாரிப் புதல்வரை விதியிற் கண்டார். (௫௨)

---

௪௮. முதலடியிரண்டும் நிரனிறை.

௪௯. சிவபாக்கியம் - சிவபுண்ணியம்; என - என்றுசொல்ல. பரங்கண்டவர் - திருவாதவூரர்.

௫௧. சபவடம் - ஜபமாலை. மரித்த-நினைத்த (ஸ்மரித்த), இறந்தவென்று மாம்; "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" (தாயு. பரா. ௧௬௬.)

௫௨. சாத்தல் - வேதம்; திவ்யப்பிரபந்த மோதுதலைச் சாத்துமுறை யென்னும் வழக்கமும் இதனை வலியுறுத்துகின்றது.

(பி - ம்.) 1 'தேடி நீள்சிவ' 2 'மன்னிடக்கண்டுள், முருக' 3 'கவிகுழலுங்' 4 'சார்ந்த மெய்யும் புனைவடமு, மரித்த வுரோமபுளகமும்' 5 'மேதரு'

[1]நன்புளீர் நீங்க ளென்ன புண்ணியஞ் செய்தீர் நாதன்
றன்பரி வெய்தி நாளுஞ் [2]சார்ந்தரு களையப் பெற்றீ
ரின்புறு மெனக்கு மிப்பா லிருப்பதோர் கரும மில்லை
யன்புளீ ரடைந்தே னென்பா ரதிசயப் பத்தெடுத்தார். (ருங)

வேறு.

அங்க ணிவ்வா [3]றறைந் திடுங் காலையப்
பொங்கு ஞானப் புதல்வர்க டம்மொடு
மங்கை நாயகன் மாணிக்க வாசக
விங்கு நில்லென் றியம்பி மறைந்தனன். (ருச)

ஆதி நாயக னென்றெழுந் தாயிரம்
போத மேவும் [4]புதல்வர்க டம்மொடு
மோது ஞானங்கள் காட்டி யொளிக்குமுன்
வாத வூரர் வலியபித் தேறினர். (ருரு)

[5]குழுவி னோடு குருவை நினைந்திணை
விழிக ளாறு பொழிய விழுந்தெழுந்
தழுது விம்மி [6]யரற்றி யரற்றிநின்
றெழுவில் வாசக மோதத் தொடங்கினர். (ருசு)

வேறு.

[7]மாறநின் றென்னை யென்னு மாறிலொண் கோயிற் பத்துத்
தேறல்வண் புணர்ச்சிப் பத்துச் செத்திலாப் பத்து மற்று
மாறிய பிரார்த்த னைப்பத் தாசைபபத் துயிரு ணிப்பத்
தேறிய புலம்பல் வாழாப் பத்தெண்ணப் பத்தெ டுத்தார். (ருஎ)

அரும்பெரு நகரி னிற்போந் தவ்வயிற் றிகழ்வ கண்டே
[8]பொருந்துமம் மனையே சுண்ணங் கோத்தும்பி புகழ்த்தெள் ளேணந்
திருந்துபூ வல்லி யுந்தி தோணோக்கஞ் சிறந்த [9]பாவை
மூரண்கடி சதக மெய்யென் [10]றோதினு ரோதப் புக்கார். (ருஅ)

---

ருச. ஞானப்புதல்வர்கள் - ஞானபுத்திரர்கள்; சிஷ்யர்கள்.

ருரு. குருந்தமரத்தினகீழே சிவபெருமான், தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்பது மாணாக்கர்களுடன் ஞானசாரியராக எழுந்தருளியிருந்தனரென்று உணர்க; திருவுத்தரகோசமங்கைப்புராணத்தில், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்திற் கூறப்பெற்றுள்ள, திருவாதவூரருடைய பண்டைவரலாறு இங்கே அறியற்பாலது. புதல்வர் - மாணாக்கர்.

ருஅ. திகழ்வ-அம்மனை முதலிய விளையாட்டுக்கள். 'மெய்'என்பது, திருவாசகத்தில், திருச்சதகத்தின் முதற்குறிப்பு.

(பி - ம்.) [1] 'நலங்குளீர்' [2] 'சார்தருமதனைப்பெற்றீர்', 'சார்தருங்கருணை பெற்றீர்' [3]'அடைந்திடுங்' [4]'புனிதர்கள்' [5]'குழுவினீடு' [6]'அரற்றியுரற்றிநின்று', 'உலற்றிநின்று' [7]'மாறிலொண் கோயிற்பத்து மாறிநின் றென்னையென்னுந் தேறலொண்' [8]'பொருந்துமின்னியறேய்சுண்ணங்' [9]'மற்றும்' [10]'ஓதுவார்'

### வேறு.

வருந்தியுட லூணுறக்க மின்றி யாங்கண் வாசகமோ திடக்கேட்ட தொண்ட ரெல்லாம், பொருந்தியதி சயித்திவைமுன் கேட்ட வல்ல புதுமையெனச் சூழ்ந்திறைஞ்சிப் போற்றல் கண்டு, பெரும் புரவி கொளவந்த பொருளனைத்தும் பின்வருங்கா ரியமொன்றும் பாராராகிப், பரிந்துகொளு மெனக் கொடுத்தார் சிறிது நாளிற் பாண்டியனு மீண்டுபொருண் மாண்ட தாங்கே. (ருசு)

தருங்கனகக் குவையனைத்து [1]மளித்து நாளுந் தாமேயோர் சங்கையறப் [2]பாடிக் கொண்டு, குருந்தினொடு மறுகினொடு மறுக விப்பாற் குணமொழித்துத் தனமழித்த செய்தி முற்றுந், திருந்து[3]நெறி மதியமைச்ச ரிரண்டு சென்று செப்பக்கேட் டுளத்தாறுச் சீற்றத் தோடு, மிருந்துமணி [4]முடிதுளக்கிச் செங்கோன் மாற னிகற்றூதர் கரத்தோலை யெழுதி விட்டான். (சுo)

### வேறு.

தென்னவர் பரவுந் தென்னவ னோலை தென்னவன் [5]பிரம ராயனே காண்க, பொன்னிறை யறையிற் பன்முதல் கொண்டு புரவி கொண் டணைவான் பரிவொடும் போனு, னென்னினைந் தின்னம் வந்தில னமைச்சற் கிப்படிச் செய்யத் தக்கதோ கடிது, மன்னிய வாடற் புரவிகொண் டடைவின் வருவது கரும மற்றது பழுதால். (சுக)

### வேறு.

இத்திரு முகத்தை யாங்க ணெய்திய தூதர் காட்டப்
பத்திசெய் தடைவின் வாங்கிப் [6]பாசுரங் காணுமுன்ன
முத்தம மன்னன் சித்த முணர்ந்தனர் நெடிது யிர்த்தார்
[7]புத்தியு ளினைத்தார் சாலக் கலங்கினர் புலம்பி னூரால். (சுஉ)

---

ருக. ஊண் உறக்கமின்றி உடல்வருந்தி. ஆங்கண-அவ்விடத்து. கேட்டன அல்ல. சூழ்ந்து - ஆராய்ந்து

சுo. கனகக்குவை - பொற்குவியல். சங்கை - சந்தேகம். மறுக-சுழலாநிற்க. ஆறு - தணியாத. முடிதுளக்கி - தலையசைத்து.

சுக. தென்னவர் - தென்னாட்டினர். தென்னவன் பிரமராயன்: இது வாதவூரருக்கு அரசன் முன்பு கொடுத்த பட்டப்பெயர். இப்பெயரைச் சிலாசாஸனங்களிற் பரக்கக்காணலாம்.

சுஉ. பாசுரம் - ஓலையிலுள்ள வாக்கியம்.

(பி - ம்.) 1 'அழித்து' 2 'பாடிக்காணக், குருந்தமொடும்' 3 'நெறிதரும்' 4 'முடிதுளங்கச்', 'முடித்துங்கச்' 5'பிரமாதிராயன்', 'பிரமாதராயன்' 6'பாயிரம்' 7'புத்தியினினைத்தார்', 'புத்தியுளிழைத்தார்'

தென்னவ னமைச்ச னேயா [1]னென்னகா ரியஞ்செய் தேன்மே
லென்னதாய் விளையுங் கெட்டே னிவுளிகொள் வதற்கே வந்தேன்
பொன்னையே [2]யழித்தே னந்தோ புகலவோர் மாற்ற முண்டோ
மன்னவற் பிழைத்த லாகா மற்றினி யாவ தென்கொல். (சுரு)

ஆத்ரித் தடிய னேனை [3]மாலழித் தாண்டு கொண்ட
வேதநா யகற்குச் சென்று விண்ணப்பஞ் செய்வ லென்றுங்
கோதரும் பெரிய செல்வ [4]ரொப்பார்போ லச்சத் தோடுஞ்
சோதியா லயத்துப் புக்குத் தொழுது[5]நின் றழுது சொல்வார். (சுச)

வேறு.

தேமா லயனு மறியாத தேவ தேவே தயாநிதியே
வாமா கொண்டு வரச்சொல்லி வழுதி யோலை வரவிட்டான்
ரூமா வொன்றுங் கொண்டிலலை தனமு மடியார் தமக்கிட்டேன்
போமா றுரையாய் கண்பாராய் புவியி லினியார் துணைசெய்வார். ()

பொருந்து தில்லை வனங்கடந்து போந்து வேந்தற் சேர்ந்தருளின்
வருந்த வுடலந் தனிவிருத்த மறையோ னாகி மறையோர்கட்
கிரங்கி யருங்[6]கீழ் நீர்காட்டி யிரங்கன் மீட்ட பெருமானே
குருந்த வரம்பிற கரந்தமறைக் [7]கொழுந்தே [8]செழும்பொற் றுள்போற்றி.

வேறு.

போற்றியென் வாழ்முத லேயென வெடுத்துப் புலருமுன் னினி
யவா சகத்தா, லேற்றுயர் கொடியுடை யானையங் குணர்த்தி யினிய
நற் றுதிகளாற றுதிப்பச், சாற்றருங் கொடுந்துயர் கூர்ந்தவர் துயரந்
தணித்திடு வானருள் கூர்ந்து, தோற்றிய தவ்வுழி மேற்றிகழ் விசும்
பிற் றுளங்கிட வுயர்திரு வாக்கு. (சுஎ)

---

சுரு. கெட்டேன் - ஐயோ. மாற்றம் - விடை. மன்னவற் பிழைத்தல். இராசத்துரோகம். ஆவது - செய்யத்தக்கது.

சுசு. வேந்தன் - பாண்டியன். உடலம் வருந்த. இதிலுள்ள வரலாறு, இங்கே கூறப்பட்ட வண்ணம் திருப்பெருந்துறைப் பழையபுராணத்துள்ளது; இக்கதையிற சிலபகுதி, திருப்பெருந்துறைப் புதியபுராணத்துள்ள பெருந்துறைப் படலத்தாலும் விளங்குபுலப்படும். 'கீழ்நீர்காட்டி' என்பதன் வரலாற்றைத் திருப்பெருந்துறைப் புராணத்தின் ௨ - ஆம் பதிப்பு முகவுரையின் கரு - ஆம் பக்கத்துள்ள குறிப்பாலுணர்க.

சுஎ. போற்றி - பாதுகாத்தருள்க. உணர்த்தி - துயிலுணர்த்தி.

(பி-ம்.) 1'என்னகாரியதனைச்செய்தோம்' 2'அளித்தேன்' 3'மாலளித்து' 4 'ஒப்பர்போல்' 5 'விண்ணப்பஞ்செய்வார்' 6 'கீணீர்காட்டி.' 7 'கோவே'ீசம் பொற்' 8'சிற்பொற்றுள்'

வேறு.

நினக்கி யாமுண் டௌமஞ்சே னிலைமை யுடனே கைதவற்குக்
கனத்த புரவி வருமென்று கருணை யுறவேண் டுபவிட்டுப் [ட
பணைப்[1]பை யோலை நிறைத்தெழுதிப் பரிவின் [2]விடுப்பா யெனக்கேட்
வினைக்க ணில்லார் களித்தெழுதி விட்டார் நெடிய கட்டோலை. (சுஅ)

வேறு.

ஓதுபுகழ் [3]வாள்வழுதிக் கடியேன் வாதவூரனேன் விண்ணப்ப [4]முணர்ந்து கொள்வாய், தீதுமொழி கேளாதைந் தாறு நாளிற் றிரளி வுளி வருஞ்சிறந்த [5]பந்தி கட்டி, வீதிபட நீர்க்குவிடுந் தடங்கள் வெட்டி வீதிநகர் வையாளி யலங்க ரிததாங், கேதமொழிந் தடியேனை நயந்து முன்போ லெழுந்தருளி யிருந்தருண்மெய் யென்றே தேறி. ()

இத்தகவிற் றூதர்கரம் விடுத்துத் தம்பா லியைந்தபெரும் பாரம் விடுத் தாலயத்து, மெத்தனவிற் றுயிலுங்கான் மருங்க ணைந்து மெய்த்தவகே ளன்புடையார் நின்போ லில்லை, சித்தமுறு காரியநா முடித்த றிண்ணந் தீரமொடு தென்னவனுள் வருமுன் சென்று, புத்திகளி தரத்தக்க துரைத்தி யென்று புகன்றருளித்தா னன்பர் சுமை பூண்டு கொண்டான். (எ0)

கனவுநிலை நீங்கியபின் போவலென்றே கருணையுடை நாயகனை வணங்கி வாழ்த்தி, மனமகிழ்ந்து விரைந்தொபபார் [6]போலச்சென்று மதுரையடைந் தமைச்சருடன் மண்டப பத்தின், முனமெழுதி வரு மோலை கண்டு ளத்து முனிவொழிந்த மன்னவனைக் காண மன்னன், றனதருகு வரவழைத்தாங் கிருந்தோர்ப் போக்கித் தனித்துரைப்பா னுளத்தினிய [7]தயாமீக் கூர்ந்தே. (எக)

வேறு.

மறங்கடி பொருட னக்கு வாசியெவ் வளவு கொண்டீ
றிறங்கிய துறைநா டேதே தெவ்வள வுயர்பு போது
நிறங்கடா மென்னெ மக்கேற் றுனதென் போது நீதி
பிறங்கிலக் கணங்க ளென்னை [8]பேசிடீர் கூச லின்றி. (எஉ)

---

சுஅ. உளம் அஞ்சேல. வேண்டுப இட்டு - வேண்டுவனவற்றைச் சேர்த்து. பை ஓலை - பசிய ஓலை. வினைக்கண் இல்லார். கட்டு ஓலை - கட்டினையுடைய ஓலை.

சுசு. கேளாது உணர்ந்து கொள்வாய். ஐந்தாறு நாளென்பது, ஐந்தும் ஆறுமாகிய பதினொரு நாளெனவும் முப்பது நாளெனவும் பொருள்கொள்ள இடந்தருகின்றது. வையாளி - குதிரையை நடத்தும் இடம். ஏதம் - துன்பம்.

எ0. மெத்தன - மெல்ல. தீரம் - தைரியம்.

எஉ. மறம் - பாவம். துறை ஏது, நாடு ஏது; ஏது - யாது. உயர்பு எவ்வளவு போதும் - உயர்ந்த குதிரைகள் எவ்வளவு வரும். கூசல் - நாணமுறல்.

(பி - ம்.) [1]'பேடியோலை' [2]'விடுவாயெனக்' [3]'மாறனுக்கிங்கு' [4]'உணரக்', 'உணரக்கேளாய்' [5]'பத்தி' [6]'போலப்போந்து' [7]'தயாவு' [8]'பேசிடுக'

என்றுரை செய்யக் கேட்ட வினியமா முனிவர் தேறி
மன்றுணு தனைநி னைந்து பகருவார் மன்ன ரேறே
வென்றிமா ராட்ட கங்காம் போசமா ரியஞ்சாம் ப்ராணி
துன்றுசைந் தவமுன் ஞன துரகமோ பெருகக் கொண்டேன். (எந)

புகலருஞ் செலவு டைத்தாய்ப் புணரியின் முழக்க மிக்குப்
பகைபட வொன்றுக் கொன்று பிணைத்தெழும் பெருமை கூர்ந்து
சகமதி சயிப்பத் தோன்றுந் தாண்டுவெம் பரிமா நிறக
வகைபடு மறுகாற் பொங்கு மதுரையு மிடம்போ தாதால். (எச)

மன்னிய விலக்க ணத்தால் வருணத்தாற் கதியான் மிக்க
நன்மைகள் சொல்லத் தக்க வல்லவோர் [1]நாவா லின்று
முன்னுற வந்த வாறே காண்கின்றாய் முழுது மீங்கே
யென்னையான் வியந்து கூறே னென்றனர் [2]நிலைமை பூண்டு. (எரு)

உற்றது கேளா முன்ன ருவகைகூர்ந் தணியல் வாசி
கொற்றவெண் குடை[3]க ளாசி கோவைசேர் முத்த மாலை
பொற்பூறு மாணிக் கப்பூண் பொற்படாம் பட்டுக் கூறை
மற்றும்வேண் டுவகொ டுத்து விடுத்தனன் வரிசை கூர. (எசு)

விரைவொடும் விடையிற் போந்து வேண்டுப தமக்கு நல்கும்
பரிவுடைச் சொக்கன் வாழும் பைம்பொனு லயத்துப் புக்குக்
கரையழி யன்பி னோடுங் கசிந்துநின் றிறைஞ்சி யேத்தி
யுரைசெய்வார் தனித்து மெல்ல வுற்றகா ரியத்தை யாங்கு. (எஎ)

வேறு.

நந்தார்கரர் செந்தாமரை வந்தார்தொழு மெந்தாய்
நாதாவதி பூதாசதுர் வேதாவித கீதா
பந்தார்விரல் வண்டார்வரி வண்டார்குழல் கொண்டாள்
பாகாவென தாகாபர யோகாசிவ லோகா
முந்தாதர கங்காதர சங்கார[4]வி டங்கா
மூலாகம நூலாகுண சீலாகிரி சூலா
தந்தாவென நின்றாடிய பொன்றாழ்மணி மன்றார்
தாளாவரு ளாளாகின தாளாவெனை யாளே. (எஅ)

---

எந. முனிவர் - மாணிககவாசகர்.

எச. வகை - குறுந்தெருக்கள். மறுகால் - வீதிகளால்.

எரு. வருணம் - நிறம். ஒருநாவாற் சொல்லத்தக்கவோ.

எசு. அணியல் - ஆபரணம். களாசி - காளாஞ்சி. கோவை - கோத்தல். பொற்படாம் - பீதாம்பரம். பட்டுக்கூறை - பட்டாடை.

எஎ. உற்றகாரியத்தை உரைசெய்வார்.

எஅ. கீதம் - இசைப்பாட்டு. வண்தாரில் வரிகளையுடைய வண்டுகளார்ந்த. ஆகம் - மனம்.

(பி - ம்.) 1 'நாவின்' 2 'கிழமை' 3 'காளாஞ்சி', 'களாஞ்சி' 4 'விடங்கா மூதார்கள மீதேயணி யாலா குணசீலா'

வேறு.

மன்னு தாரகம் வருமென்று வழுதி மகிழ வுரைசெய்தேன்
பொன்னு மடியார் தமக்கிட்டேன் போமா றுரையாய் கோமானே
யென்னை யடிமை [1]யாக்கொண்ட விமையோர் தலைவா வுமைபாகா
வுன்னை யொழிய வறியேனென் றுரைத்தா ரிடும்பை யுடம்பானர். ()

வேறு.

ஈங்கிது சொல்ல வானத் திசைந்ததோர் பெரிய வாக்காங்
கோங்கிய தஞ்ச லஞ்ச லென்னவவ் வுரைகே ளாமு
னீங்கரும் பரிவிற் போந்து நீடுதம் மனைக்க ணெய்தி
யாங்குயர் நாய னாரைப் பூசைசெய் தமுது செய்தார். (அ0)

உண்டலுஞ் செய்தி [2]யெங்ஙன் முடியுமென் றுளத்த ழுங்கிக்
கண்படை கொள்ளுங் காலைக் [3]கண்ணனை கிளைஞர் வந்து
பண்பினி [4]னுணர்த்தி மன்னர் நீதிநூல் பரக்கக் கற்றுத்
தண்புக ழமைச்ச னாய் சாதுமார்க் கந்த விர்ந்தே. (அக)

மன்னவ ரிதய மாரே யறிகுவார் வாத வூரா
வென்னது நினைந்தா யந்தோ வருவதே யினியா ருண்டு
நின்னுறு கிளைஞர்க் கென்ன விடும்விடு நீரார் யாமா
ரன்னிய ரல்லான் [5]ஞாலத் தார்வெறுப் பாரு வப்பே. (அஉ)

ஈசனோர் மனிதன் போல வென்னைவந் தாண்டு கொண்டான்
மாசறு பிறப்பும் விட்டேன் மன்னவற் பிழைத்த லாகா
பேசிலிங் கதனால் வந்தேன் பெரும்பொருட் டனிசு மின்றே
யாசிலோ ருபாயத் தாலே போக்குவ [6]லைய மின்றே. (அங)

[7] இங்குளீர் போமி னுங்கள் காரியத் தென்று நீக்கப்
[8] பங்கய விலையு நீரு மெனவவர் பற்றற் றுங்குத்
தங்கணெஞ் சகத்து நொந்து போயினர் தரும மாறன்
மங்கல முறைசெய் வோர்கள் வந்தனர் மற்றை ஞான்று. (அச)

---

எகூ. இடும்பை - துன்பம்.

அ0. நாயனார் - தலைவர்; "உத்தம நாயனாரை" (சடு: க0), "நாயன் சொல்லை மறுத்திடல் பாவம்" (ருரு: கப), "செந்நெறிநாயன்" (சு0: கரு.)

அக. எங்ஙன் - எங்ஙனம். தவிர்ந்து அமைச்சனாய்.

அஉ. கிளைஞரைப் பாதுகாத்தற்கு இனி யாருண்டென்று சொல்ல. ஆர் வெறுப்பு ஆர்உவப்பு - ஆர்பகை ஆர்நட்பு.

அங. தனிசு - கடன். 'மன்னவற் பிழைத்தலாகா':சுங.

அச. பங்கயவிலை - தாமரையிலை. மங்கல முறைசெய்வோர் - நற்குண முடைய ஏவலாளர்; "நன்னெறி முறைசெய்வோர்" என்பர் மேலும்; அஅ.

(பி - ம்.) 1'யாட்கொண்ட' 2 'யென்னாய்' 3 'கண்ணிணைக்' 4'னுரைத்தி' 5 'ஞானத்து' 6'ஐயமின்றி' 7'இங்குரீர்' 8'பங்கயத்திலையு நீருமென்றவர்'

புரவிவந் தனவோ வென்ன மெய்ப்பட வருமிப் போது
விரைதல்வேண் டாம்பொ றுத்து வீதிகோ டிக்கச் சொன்மின்
கருதினீங் [1]கென்னை யின்றோர் கலியாண ளுகக் காண்மி
னுரைசெய்த மாற்றந் தப்பா துரைசெயு மரசற் கென்றார். (அரு)

ஆங்கவர் போந்து செய்தி யறைந்திடக் கேட்ட வேந்தன்
பூங்கமு கரம்பை நாட்டிப் பூரண குடங்கள் வைத்துத்
தேங்கமழ் தாம நாற்றித் திசைதொறுந் தீப மேற்றி
யோங்குபட் டாடை யான்மேல் விதானித்தா னுயர்வான் முட்ட. ()

[2] பந்திவை யாளி சங்க மண்டபம் பண்ட சாலை
கொந்தவி ழலங்கன் மாட மாமடங் கோபு ரங்கள்
சுந்தரன் பெரிய கோயி றோரண வாயில் வீதி
யிந்திர நகரி யென்ன வெங்கணு மலங்க ரித்தான். (அஎ)

மெய்ந்நெறி மன்னர் மன்னன் விளம்பிய காலஞ் சென்ற
தின்னமும் வந்த தில்லை யினப்பரி யென்று சீறி
நன்னெறி முறைசெய் வோரை விடுப்பவாங் கவர்க ணண்ணி
முன்னுறக் கேட்பப் பின்னு முன்புபோன் மொழிந்து விட்டார். ()

வேறு.

மல்ல லோங்கு மலய முனிவகே
ளல்ல தோர்[3]விளை யாட னவின்றனே
கல்வி மன்னன் கனக [4]மழித்தவொண்
செல்வ மாமுனி பின்னரென் செய்தனன். (அகூ)

ஆகத்திருவிருத்தம் - ருகூகூ.

---

## உஅ.—நரி குதிரையான திருவிளையாடல்.

இத்தகு தியினி ருக்குங் காலையி லெழுந்தி றைஞ்சி
யொத்தபே ரமைச்சர் முன்னின் றுரைசெய்வா [5]ரரச ரேறே
மத்தன்வார்த் தையினைக் கேட்டு வளநக [6]ரலங்க ரித்தாய்
பித்தனீ யல்லா லுண்டோ பேசுவ தென்னை யாங்கள். (க)

---

அரு. கோடிக்க - அலங்கரிக்க. கலியாணன் - நல்ல நடையையுடைய வன்; "நல்ல கல்யாண னன்றே" (உகூ: கஉ.)

(உஅ)

க. மத்தன் - மயக்கமுடையவன்.

* "அரியொடு பிரமற் களவறி யொண்ணு, னரியைக் குதிரை யாக்கிய நன்மையும்","மதுரைப் பெருநன் மாநக ரிருந்து,குதிரைச் சேவக னுகிய கொள் கையும்", (திருவா. கீர்த்தி. நரு - சு; சச - ரு); "பந்தம்பறிய பரிமேற்

(பி - ம்.) [1]'எனையுமின்றோர்' [2]'பந்திவைகாளி' [3]'விளையாட்டேவின்றனே' [4]'அளித்த' [5]'அரசர்கோவே' [6]'அலங்கரிப்பாய்'

பெருந்துறை யடைந்த போதே பித்து[1]மேற் கொண்டா னங்கண்
டிருந்துசெங் கனக மூற்றும் போக்கினன் செயல்வே றுனன்
பொருந்துகோ வணமு மோடு மல்லதேர் புரவி யில்லை
[2] யிரங்கிடேல் வளைத்து வாங்கு பொன்னிழ வாதே யென்றார். (௨)

வே று.

தூய்ய மன்னவ [3]னன்னவர் சொல்லலீ டுயிர்த்துச்
செய்ய தாமரைக் கண்மலர் தீயெழ விழித்து
மைய னெஞ்சனை வளைத்திடும் வளைத்திடு மென்ன
வெய்ய சொல்லுடைப் பிரம்படிக் காரரை விடுத்தான். (௩)

இன்னல் செய்குவான் சென்றவ ரிடர்கெட வோது
முன்ன ரும்பெருஞ் செய்திகள் கண்டுள மஞ்சித்
துன்னு மன்பிது கண்டில மென்றுகை தொழுதே
மன்னு [4]மேனியி னேவன செய்திலர் வளைத்தார். (௪)

மற்று மூ[5]ன்றொழித் திளைத்தவர் வளைப்பிடை யிருப்பக்
கொற்ற மன்னவன் பின்னருங் கூற்றினை யனைய
வெற்றி வீரரை விடுத்தனன் சிறைசெயு மென்றே
செற்ற மோடெழ [6]வைதனர் வைத்தனர் சிறையில். (௫)

---

கொண்டான் நந்த, வந்தமிலா வானந்தம்" (திருவா. திருவம்மானை. ௩);"ஞால மிகப் பரிமேற்கொண்டு நமையாண்டான்" (திருவா. திருப்பொன்னூசல், அ); "பாய்பரிமேற் கொண்டென், னுள்ளங் கவர்வரா லன்னே யென்னும்" (திருவா. அன்னை. எ); "நற்பரிமேல் வருவானை", " தாவிவரும் பரிப்பாகன்" (திருவா. குயிற்பத்து, ௬, அ); "வான்புரவி யூரு மகிழ்ந்து" (ஷை திருத்தசாங்கம், ௬); "தெரிவற நின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனார்", "பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்", "பாண்டியனார், புரவியின்மேல் வர" (ஷை திருப்பாண்டிப்பதிகம், க, ௩, ௬);"நரிகளெல்லாம், பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே" (ஷை திருவேசறவு, க); 'ஆட லமர்ந்த பரிமா வேறி யையன் பெருந்துறை யாதியந்நா, ளேடர்க லையெங்கு மாண்டு கொண்ட வியல்பறிவார்", "வஞ்சாத்திறேடுஞ் சதுரன் பெருந்துறை யாளி யன்று,மங்கையர் மல்கு மதுரை சேர்ந்த வகையறி வார்" (ஷை திருவார்த்தை, ௪, ௧௦); "தேவருங் காணாச் சிவபெருமான் - மாவேறி, வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க" (ஷை திருவெண்பா, ௬); "பரியின் மேல்வந்த - வள்ளன், மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள்" (ஷை பண்டாயநான் மறை, ௨); "நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால மெல்லா நிகழ்வித்து" (ஷை ஆனந்தமாலை, எ); "கூடற் பதிவரு மாடற் பரியோன்" (கல். ௬௬.)

௨. "ஓடுங் கவந்தியு மேயுற வென்றிட்டு" (திருவா. துலா. க.) [சுவந்தி-கோவணம்.] வளைத்து - தடுத்து; "வள்ளனீங்கப் பெறாய் வளைத்தேனென" (சீவக. அஅ௬.)

(பி-ம்.) [1]'மால்கொண்டான்' [2]'இரங்கிடலழைத்துவாங்கு' [3]'அன்னது' [4]'மேனியைநோவன' [5]'ஒழிந்திளைத்தவர்' [6]'வைதவர்'

வேதனைப்பட விருத்திய வெங்கொடுஞ் சிறையாற்
போத நீடிய கடுந்துயர் பொறுக்கமாட் டாம
லாதி நாதனை நினைந்தழு [1]தலர்க்கணீர் சொரிய
வாத வூரரும் புலம்புவார் வாசக மோதி. (௯)

வேறு.

மன்னுசுந் தரனே வாசி வந்தன வில்லையென்று
தென்னவன் வளைத்து வைத்துத் தீயெழ நெருக்கா நின்றான்
முன்னது பொறுக்க கில்லேன் முடிப்ப[2]னென் னுயிரை நீயன்
றென்னை[3]யாண் டனையென் வேண்டி யின்றிரங் காத தென்னே.

வேறு.

[4] பொருவி லெரிவாய் சொரிந்ததெனப் புரவி வரவு சொலச்சொலவிங், [5]கிருநி லிருநின் மாண்புர மென்னுங் கொடுமை பொறுக்ககிலேன், வரிசை கூர வீற்றிருக்கு மன்னர் வாழ்வு மினியமையு, முறையும் பொருளுங் கடந்தமறை யொளியே [6]வெளியே யுதியாயே.

மின்னும் புகழா வருளாளா மெய்யே மனிதர் போல்வந்திங், கென்னெஞ் சுருக்கி யுரைத்தவுரை தப்பா தெனவந் தியானுரைத்தேன்,மன்னன் காண்பான் விழிகுழிய வழியை நோக்கி யிராநின்றான், றுன்னும் புரவி கொடுவிரைவிற் றோன்றாய் தோன்றாய் தோன்றாயே.

வேறு.

ஆரிய [7]மொழியு ளோரு மருந்தமிழ்ச் செய்யு ளோருங்
காரிய முறைசெய் வோரும் யாவருங் கசியச் சொல்வார்
[8] சோர்வறக் குழைத்தா யென்றுஞ் சோதியே சுடரே யென்றுஞ்
சீரிய நாம மோதத் தரித்திலர் [9]தேவர் தேவர். (க0)

வேறு.

ஒழுக்கந் தருமந் தவந்தான முறவு வாய்மை பொறைமற்றும்
விழுப்ப முள்ள சூத்திரர்வாழ் மிழலை [10]நாட்டு நரியெல்லா
மழைத்துத் [11]தெருட்டி விளையாட லவனி மீது நனிவிளங்கத்
தழைத்த தலத்தை நரிக்குடியென்[12]றின்றுஞ் சொல்வர் சான்றோரே.

---

எ. என்வேண்டி என்னையாண்டனை.

அ. இரு, நில்: ஏவல். மானபுரம் - மானமங்கலம்; இது, குடிப்பெயரைக் கூறியிகழும் இகழ்ச்சிக் குறிப்பு.

க0. ஆரிய மொழியுளோர் - வடமொழிப்புலவர். 'குழைத்தாய்' என்பது குழைத்தபத்து. 'சோதியேசுடரே' என்பது அருட்பத்து.

கக. மிழலைநாடென்பது திருப்பெருந்துறையின் பக்கத்திலுள்ளது; அதிலுள்ள வேளாளர்களின் பெருமை மிழலைச்சதகத்தால் விளங்கும். நரிக்குடியென்பது, இப்போது புதுக்கோட்டையைச்சார்ந்த ஊராகவிருக்கின்றது.

(பி - ம்.) [1]'அலர்கணீர்' [2]'னின்னுயிரை' [3]'ஆண்டனையேல்' [4]'பொரிவி' [5] 'இருநிலிரு நிலியமபுரம்' [6]'வெளியினுதி' [7]'மொழியனேரும்' [8]'சேர்வுறுபொருள்கடேர்ந்து' [9]'தேவதேவே' [10]'நாட்டுணரியனைத்து' [11]'திரட்டி' [12]'இன்னும்'

வேறு.

அண்டம் [1]விள்ள வடிப்பர் பிடிப்பர்க
ணண்டு னூர்நரி [2]காணரி யாதுநீர்
கொண்ட மன்ன னிடங்குறு காமுனம்
பண்டை தூங்குரல் காட்டும் பயமற. (கஉ)

வேறு.

குணங்கொண் டினைய போதித்துக் குதிரை யாக்கித் தற்பிரியா
திணங்குங் கணங்க டமக்கடைத்துப் புறப்பட் டாரோ ரிவுளிமிசை
வணங்குங் கணங்[3]கோ மாயுவுமா மாயப் புரவி மீதேறி
யணிந்து புறப்பட் டதுதுறையா [4]ளுடைநா யகனைப் புடைசூழ்ந்து.

வேறு.

ஆதர வடியார் மூற்று மடிபணிந் தேத்தப் போந்து
வாதையம் புரத்து நண்ணி மணிச்சிலம் போசை காட்டத்
தீதற [5]வாண்ட வெந்தை திருச்சிலம் போசை யென்றே
யேதமா முனிவர் தேறி யிசைபடத் துதிக்க லுற்றார். (கச)

வேறு.

கணங்கொள் சிறுவ ரிடியெனமுன் னூதுங் காளங் கறங்குற்ற
துணிந்து புடவி விசேடமுயர் துறக்கத் துணர்த்தச் செல்வதுபோன்
மணங்கொண் மதுரை காதமென வாசித் [6]தூசி வீசியதங்
கணைந்த தறியா ராயறிவா னறைவா ரீசன் றிசைநோக்கி. (கரு)

வேறு.

கோலிய பொன்னோ வில்லை குதிரையோ வரவு காணேன்
[7] காலவெங் தூதர் போலக் காவல னேவ லாளர்
மேலெழ நெருக்கா நின்றார் மெலிவுறும் வினையே னுற்றே
னாலவா யானே சால வஞ்சினே னஞ்சி னேனே. (கசா)

---

கஉ. நரியாது - நரித்தன்மையில்லாமல்; "நரிப்பாய் நாயே னிருப்பேனோ" (திருவா. கோயின்மூத்த. க.)

கங. அடைத்து - ஒப்படைத்து. கோமாயு - நரி. துறை - பெருந்துறை; ஆளுடைநாயகரென்பது, அங்கே ஸ்வாமி திருநாமம்; வாதவூரரை யாட்கொண்டருளினமைபற்றி இப்பெயர் இவருக்குண்டாயிற்று; திருப்பெருந்துறையை ஆளுடையார் கோயிலென்பதும் இதுபற்றியே.

கச. வாதையம்புரம் - வாதவூர். இறைவன் மணிச்சிலம்பின் ஓசைகாட்டியதை, "வாதவூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (திருவா. கீர்த்தி. ருஉ - ங) என்பதனாலு முணர்க.

கரு. ஈசன் திசை - ஈசான திசை.

(பி-ம்.) [1]'பிள்ள' [2]'காணலியாது' [3]'கோமாயுவுயர்மாயப்' [4]'உடையநாயகனைச்சூழ்ந்து' [5]'வாழ்ந்த' [6]'தூளி' [7]'காலன்வெங்'

நாதனே யருளிச் செய்த வார்த்தையை நம்பி வந்தேன்
வேதனே [1]யுறவோ நாயேன் மெய்ம்மொழி மொழிந்தே னுகச்
சோதிநீள் வாசி கொண்டு தோன்றெனப் புறம்போந் துள்ளத்
தேதமுற் றழுங்கா முன்ன மெய்திய தூதர் சொல்வார். (கஎ)

புண்ணிய வடிவ ரேயொண் புத்தியு ளவரோ விந்த
மண்மிசை யமைச்சர்க் கெல்லா மன்னர்நீ ரல்லா லுண்டோ
வெண்ணரும் புரவி வந்த தின்புறக் கண்டோந் தாழா
துண்மகிழ்ந் தேத நீங்கி யுரைசெயு மாசற் றென்றார். (கஅ)

அத்திறங் கேளா முன்ன ரகமகிழ்ந் தரசன் பாற்சென்
றுத்தம மன்று சீற்ற மொழி[2]யொழி நகரின் பாங்கர்த்
தத்துமா [3]வந்த தென்று சாற்றினர் தூத ரென்னச்
சித்திர மண்ட பத்துச் சேர்ந்தனன் வாழ்ந்து வேந்தன். (கக)

நிலவுசா மரையி ரட்ட நித்திலக் குடைநி ழற்றத்
[1]தலமகி ழால வட்டந் தையலார் நின்று வீசத்
தொலைவிலா மன்னர் போற்றச் சூதமா கதர்கள் வாழ்த்த
வலகிலா [5]வணியாற் பொங்கி யரிகொளா சனத்தி ருந்தான். (௨௦)

வெம்பரி வரவு பார்த்து வீதிவா யிருக்குங் காலைச்
சம்புமா சமாதி யாலே சம்புமாத் தாழ்க்கக் கண்டு
வெம்பிநீ டம்பி ளோடி யோசனை மீண்ட தூதர்
செம்பரி வரவு [6]நான்கு திசையினு மில்லை யென்றார். (௨க)

மற்றது சொல்ல நல்ல மந்திரி வாய்த்தா னந்தோ
வுற்றநம் [7]பொருளை யெல்லா மழித்தலு மன்றி யோங்குங்
கொற்றமா வீங்கிப் போது வரும்வரு மென்று கூறி
முற்றிய பொய்ந்ந டாத்தா னின்றன னெனமு னிந்தான். (௨௨)

[8] நீக்கிலேக் கடியார் தம்மை நிரைநிரை வரவ ழைத்துக்
கோக்கட னுகு நீங்கள் கொண்டுபோ யஞ்சிக் கூசா
தூர்க்குள புளிக்க லேங்கி யுள்ளமா றனைத்தும் வெட்டி
மூர்க்கமந் திரியி வன்றன் முதுகிடைப் போக்கு மென்றான். (௨௩)

---

கக. தத்துமா - தாவிச்செல்லும் குதிரை.

௨௦. சூதர் - நின்றேத்துவார்; மாகதர் - இருந்தேத்துவார்.

௨க. சம்புமா சமாதியாலே - சிவபெருமானது பெரிய சங்கற்பத்தாலே. சம்புமா - நரியாகிய குதிரை.

௨௩. நீக்கு இல் கோக்கு அடியார் - ஒழிவில்லாமல் கோக்குதலையுடைய ஏவலாளர். மாறு - மலாறு; மிலாறெனவும் வழங்கும்.

(பி - ம்.) [1]'உறுமல்' [2]'பொழினகரின்' [3]'வந்ததென்று' [4]'தலம்புகழ்' [5]'மணியாற்பொங்கும்' [6]'நாலுதிக்கிலும்' [7]'பொருளனைத்தும்' [8]'நீக்குகோக்'

அங்கவர் கொடுபோய் நோவ வடிப்பதற் கணையக் கண்டு
செங்கணீர் வார வாரத் திருமுகம் வேர்ப்ப வேர்ப்ப
வங்கணன் றனைநி னைந்தாங் கடைக்கலப் பத்து முன்னாத்
துங்கவா சகங்க ளோதத் தொடங்கினார் வடக்கு நோக்கி. (உச)

வேறு.

வாதை மறலி தண்டமென மன்னன் சிறைசெய் கூடத்துப்
போது [1]திகழ்பூம் பொழிலணைந்த பூங்[2]கோ கிலத்தைப் பார்த்தருளிக்
கீத மினிய குயிலேயென் றெடுத்த திருவா சகங்கிளர
வோதி முடியா முனமெங்கு முள்ளா னுள்ளத் தருள்சுரந்தான். (உரு)

வேறு.

தெரிதரு காள வோசை யவனியைச் [3]செவிட தாக்கி
மருவிய கடை[4]நாட் பொங்கு மழைமுழக் [5]கதனைக் காட்டப்
பரியெழு குரஞ்சேர் தூளி பகன்மறைத் திரவைக் காட்ட
விருமைசேர் நகரி தன்னு ளெய்தின வெவரும் காண. (உசு)

மாவல வீரன் வந்தான் வணங்குவோ ரிணங்கன் வந்தான்
[6] பாவலர் புலவன் வந்தான் பாண்டிநன் னாடன் வந்தான்
காவலர் பெருமான் வந்தான் கடம்பமா வனத்தான் வந்தான்
றேவர்க டேவன் வந்தா னென்றன தெய்வச் சின்னம். (உஎ)

வழுதிகண் டதிசயித்து [7]மயங்கிமால் கொண்டோர் போலத்
தொழுதுகொண் டெவருங் கண்ணீர் துளிப்பவா சகங்க ளோதி
[8] யழுதிடு நாய னாரை யழைத்தரு கணைத்தி ருத்திப்
[9] பொழிதரு கண்ணி னீரைத் துடைத்தனன் பொறுக்கச் சொல்லி.

வேறு.

குழுவொடு திரண்டுஞ் சிதறியும் பரந்துங் கூடியுங் கடன்முது திரைபோற், கழறிகழ் பதத்துக் [10]கறும்பொரு செவ்வாய்க் [11]கடையின்வெண் ணுரைநில நனைப்ப, [12]விழுமிய வெண்சா மரைமுக மசைய [13]வின்னெனத் தார்மணி யார்ப்ப, முழவொடு [14]சுற்று முற்றையுங் காத்து வந்தது [15]முதுபரிச் சாத்து. (உகூ)

---

உச. வார வார - ஒழுக ஒழுக.

உசு. குரம் - குளம்பு. இருமை - பெருமை; இரண்டு தன்மையுமாம்.

உஎ. இணங்கன்-நண்பன்; "இணங்கரின்மையால்" (கம்ப. மரா. ௬௦௦.)

உஅ. நாயனார் - மாணிக்கவாசகர்.

உகூ. கறும் - கடிவாளம்; "கறும்பொருத செவ்வாய்" (புறநா. கஅ.) தார் - கிண்கிணிமாலை. பரிச்சாத்து - குதிரைத்திரள்.

(பி-ம்.) [1]'பொழிபூம்' [2]'கோகுலங்கடமைப்' [3]'செவிடு' [4]'ஞாட்பொங்கு' [5]'கென்னக்' [6]'பாவலபுலவன்' [7]'மலங்கி','மல்கி' [8]'அழுதயர்' [9]'பொழிமழைக்' [10]'கவுள்பொரு' [11]'கலினவெண்' [12]'விழுமுசாமரைகள் முகமொடுமசைய' [13]'கிண்ணெழத்' [14]'சுற்றி' [15]'மூரிமாச்'

வேறு.

கடப்பன குதிப்பன பகைத்தவை தனித்தனி களித்தனு மனிப்ப வொருபா, னடப்பன நிலத்துறு பணப்பணி நெறுக்கென நடிப்பன நெறிக்க ஞெருபா, லடர்ப்பன மிகைத்தக கனப்பரி திறற்பரி யையச் சமு றுவிப்ப வொருபால், விடக்கடல் [1]கொதித்தென மிகைத்தெவ ருமுட்கிட மிதிப்பன விதத்தி ஞெருபால். (௩௦)

வேறு.

வாளகிரி நூறுபட நூறுவன மாறுபட வானமுறு பேரண்ட நீள், கோளகையின் முட்டுவன பட்டமுறு மெட்டுயர்கு லக்க[2]ரிகண் மத்தகமிசைத், தாளதிர வைப்பவம ரேசன்விடு மாவினொடு தண்டு வன மண்டியொழியா, நீள்கடலு டுத்தவட மேருவையொ ருக்கியெழ நேரிடுவ மற்று மொருபால். (௩க)

வேறு.

இசைப்படு மூகிற்குல நிகர்ப்பன நிலத்தினை யிலத்தியி னிறைப்ப வொருபாற், றிசைப்படு குலக்கிரி களெட்டையு முழக்குவ செறுத்து மறுவற்ற வகல்வான், மிசைப்படு முடுக்குல முதிர்ந்திரு சுடர்க்களும் வெருக்கொள வுகைப்ப வொருபால், வசைப்படு [3]மணத்தொடு பெரு த்திடு மிலக்கண வகைப்படு வயப்ப ரிகளே. (௩உ)

வேறு.

எற்றிகழ் பலவி தஞ்சேர் பொற்றலைக் கீடி லங்க
வுற்றபன் மணியாற் பொங்கு மொப்பில்குப் பாய மின்னக்
கற்றையங் கவரி தூற்ற வாயுதங் கையில் வாங்கி
வெற்றிகொள் கொற்ற வீரர் வீதியிற் றூண்ட விட்டார். (௩௩)

வேறு.

மன்னியநித் திலமாலை நிலவெ றிப்ப மாணிக்கக் குண்டலங்கள் வெயில்வி ரிப்பத், துன்னுலகுக் கொருகுதிரை யாளாஞ சோதி சோதிவிடு குப்பாய மெய்ப்பான் [4]மின்ன, முன்னைமறைப் பரியைநெறி யைந்து மோங்க முடுகிவல மிடம்பரி[5]வத் தனஞ்செய் வித்து, [6]மின்ன

௩௦. களித்து அனுமனிப்ப. நெறுக்கென: ஒலிக்குறிப்பு. ககனம் - ஆகாயம்.

௩க. நூறு - புழுதி. பட்டம் - நெற்றிப்பட்டம். குலக்கரி - ஐராவத முதலிய எட்டுயானைகள். தண்டுவன - பொருந்துவன.

௩உ. "சோருமத்தி யிலத்தி சொரிந்ததால" (உ௬: க௮.) குலக்கிரிகள் எட்டு - சைனர்களுடைய மலைகள்; "ஆனை மாமலை யாதி யாய விடங்க ளிற்பல வல்லல்சேரினர்கள்" (திருஞா. தே.); "எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரு மேறினார்கள்" (பெரிய. திருஞா. அ௫௫); "வேதப்பகைவர் தம்முடம்பு வீங்கத் தூங்கும் வெங்கழுவிற், கேதப்படுமெண் பெருங் குன்றத் தெல்லா வசோகு மெறிகெனவே" (தக்க. உக௬.)

௩௩. தலைக்கீடு - தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை.

௩௪. மெய்ப்பால் - சரீரத்தின்கண். நெறி ஐந்து - கதியைந்து. பரிவத்

(பி - ம்.) 1 'கொதித்ததென மிக்கெவருமுட்கெட மதிப்பன' 2'இரிகண்' 3 'மனத்துடல்' 4'மன்ன' 5'வத்தஞ்செய்' 6'மின்னுண்மணிப்'

வணி பொலன்கலினக் குசைசவ லித்து விளங்குகர வாளங்கை துளங்க வந்தான். (கச)

வேறு.

வெல்பரி நிறத்தாற் பீடா லொலியினு லுரையான் மிக்க
பல்கடல் கிளர்ந்த வென்னக் கிளர்ந்தன பல்க டற்பாற்
சொல்லரு மளவில் கோடி சூரிய ருதித்தா லென்ன
வெல்லொடு விளங்கி ஞர்க ளியைந்த[1]சாத் தவர்க ளியாரும். (கரு)

விழுமிய குதிரை யீடு காண்பதற் கணைந்த விண்ணோர்
வழுவிலா முனிவர் நேமி மாலயன் மகவான் மற்றுந்
தொழுதிரு மருங்கு மீண்டித் துதிசெய்தார் கற்ப கப்பூஞ்
செழுமலர் பொழிந்து வாழ்த்திச் செயசெயென் றடி[2]சே வித்தார். ()

துங்கவெம் பரிமேற் றோன்றுஞ் சொக்கனைக் கண்ட வீதி
மங்கையர் சங்கி மூப்பார் வண்டுகில் சரிந்து நிற்பா
ரங்கமேற் செம்பொன் பூப்பா ரறிவுநா ணகல்வா ரெங்கும்
பொங்கிய [3]பெருஞ்சூல் கொள்வார் புலம்புவார் வீழ்வார் சோர்வார். ()

[4] அடியிணை காணீ ரென்பா ரலர்ந்ததா மரைக்கண் செவ்வி
வடிவினைப் பாரீ ரெல்லாம் வல்லசுந் தரனே யென்பார்
படிமிசைக் காண்டற் கென்ன பாக்கியஞ் செய்தோ மென்பார்
கடுவிசைப் புரவி நம்மை யொட்டுமோ காண்டற் கென்பார். (கஅ)

அன்னவர் புலம்பக் கண்ட வாடல்சேர் பாட லன்பர்
மின்னனார் தம்மை வேத மொழியரென் றெடுத்து மெல்ல
வின்னிய லன்னே யென்னு மென்றிசை படமு டித்துக்
கன்னல்சே ரன்னைப் பத்தாங் கோதினார் களியிற் கூடி. (கக)

இந்நெறி பரவ முன்போந் தெண்ணில்பல் லியங்க றங்கப்
பொன்மணிக் குடைநி ழற்றப் பொலன்கொள்சா மரையி ரட்ட
மன்னும்வெண் டோரை வீச வந்துவை யாளி வீதித்
துன்னிய கணங்க ளோடுந் துளங்கினான் வளங்கொ ணாதன். (௨0)

---

தனம் - சுற்றுதல்; "இடம்வலம் பரிவத்திப்ப" என்பர் பின்னும்; ருசு. கர வாளம் - கைக்கத்தி.

கரு. சாத்தவர்கள்-குதிரைவாணிகர்கள்; "குதிரையைக் கொண்டு குடகா டதன்மிசைச், சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி.

கசு. குதிரை ஈடு-குதிரைகளைக்கொடுத்தல். சயசயவென்று. [உஎ-அ.)

கஎ. சங்கு - வளையல். அறிவும் நாணும். காட்சியாற் சூல்கொள்ளுதலை, "விரும்புசூல் கொள்வார் வீழ்வார்" (ருச: உசு) என்பதனாலும், "பருப்பதக் கொடி புரைகவ சத்திகள் பரமன், திருப்ப தத்திடை வணங்கினின் றவனிடைச் சிந்தை, விருப்பம் வைத்தலு முனிவர்த மகளிர்போல் விரைவிற், கருப்ப முற் றனர்" (கந்த. துணைவர். க) என்பதனாலு முணர்க.

கஅ. காண்டற்கு ஒட்டுமோ. 'என்னபாக்கியஞ் செய்தோம்': உஎ: சக.

கக. அன்பர் - திருவாதவூரர். ௨0. தோரை - பீலிவிசிறி.

(பி-ம்.) [1]'சாத்துவர்கள்' [2]'சேவிப்ப' [3]'பொருமல்' [4]'அடியிணைக்காணீர்'

ஆங்குறக் கண்ட வேந்த னதிசய முற்றி யாரு
மோங்குமா யுதமும் பூணும் பருவமு முருவு மொத்துத்
தாங்குறை வற்றி ருந்தார் தலைவர்யா ரென்னக் [1]கேட்பப்
பாங்கணை வாத வூரர் தோன்றுவர் பரியி லென்றார். (௪௧)

அவ்வயி னெங்குந் தானே யாதார மாயி ருப்பத்
தவ்வுமோர் கோட கத்தை யாதார மாக்கிச் சால
வெவ்விய மூன்று பாச மறுக்குமென் கரத்து மிக்க
செவ்விய விரண்டு பாசம் பிடித்தனன் றிறமை கூர. (௪௨)

கருதிடி னொருகா லத்து மசைந்திடாக் கமலத் தாளைப்
பரிவொடுங் காண யாரும் பன்முறை யுறவ சைத்து
மருமல ரயனுன் மாலான் மறையினு லளக்க வொண்ணுத்
தருமணீ ருருவத் [2]தாணு தாணுவே யெனவி ருந்தான். (௪௩)

கள்ளநீங் கிடவ டிக்குங் கசையொலி யசனி மான
வுள்ளபே ரண்டம் விள்ள வுயர்மிடற் றோசை காட்ட
வெள்ளிமால் வரைமேற் றோன்று மேருமால் வரை[3]யே யென்னத்
துள்ளுவெண் புரவி மீது தோன்றினான் றரணி நாதன். (௪௪)

புண்ணியஞ் செய்த மேனிப் பூழியா வாழி வாழி
கண்ணிமை யாது [4]சற்றுக் கண்டிடு கண்டி டென்று
பண்ணியல் குதிரை வீரர் மெச்சுசே வகன்ப ரிந்து
மண்மிசை [5]யேறி னைவ் வாசியை வாசி யாக. (௪௫)

வேறு.

கூருந் தொடையும் பெயர்ச்சியுஞ் செல்லுங் குறிப்பொடு குசை
[6] கசைக் குரலும், யாருங் காணச் சீருந் தொழிலு மிதம்பட விதம்பல
காட்டிச், சேரும் பாடு [7]நேரும் விலங்குந் திறல்வல வோட்டிட வோ
ட்டுஞ், சாரும் மாக வாளியு [8]மற்றுஞ் சாற்றரு மார்க்கங்க டோன்ற.

௪௨. தவ்வும் - தாவும்; "தவ்வுபுனல்" என்பர்; ௩௦: ௩௨.

௪௩. தாணு - சிவபெருமான், கட்டை.

௪௨-௩. இந்த இரண்டு செய்யுட்களின்கருத்தை, "அண்டமெலா மாதார மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் தாளசையப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண்டாச னெதிர் போந்து மன்னு வெங்கள் குதிரையேற் றஞ்சிறிது காண்டி யென்றார்" (திருவிளை. நரிபரி. ௭௬) என்பது தழுவியிருத்தல் காண்க.

௪௪. கசை-குதிரையையோட்டுங்கருவி. ௪௫. வாசி-குதிரை, விசேடம்.

௪௬. வலவோட்டு - வலமாக ஓட்டுதல்.

(பி - ம்.) [1]'கேட்டபாங்கணைமுனிவர் முன்னேன் வாம்பரியுகைப்பனென் றார்' [2]'தாணுங்' [3] 'யெனப்பென்னத்தள்ளி' [4] 'நம்மைக்' [5] 'ஏறுவானங்' [6] 'கசை குரலும்' [7]'தேரும்விலக்கும்' [8]'மற்றுச்'

வே று.

1விக்கிதம் வற்கி தம்முப கண்ட மேவரு 2முபசவஞ் சவமாஞ்
3 சிக்கிலா நடைவெம் புளைவுதூ வாளி சிறுகின மெய்ந்நிறை கடுப்புப்
புக்குள பஞ்ச தாரையோ டத்த 4 புளகித மத்தமண் டலம்பே
ருக்கிர பெகிர மண்டலங் கோமூத் திரியெனு மொன்பதும் விளங்க.

வே று.

மின்பரிவு கூரவெழில் 5வெவ்விடைந டாத்தித்
தென்புலமி லங்கவரு தேவர்தொழு தேவ
னன்பரிரு பாலுமலர் சிந்திநனி யார்ப்ப
வின்பமுறு வெம்புரவி யேறினனு வந்தே. (சஅ)

வே று.

அரனரி யயனச் சுறவர சுமுனு
யிரமுக 6சுபதக் ரமமுறு நெறியே
சரிகம பதனித் தகவனு மனியா
வருமறை யயமுய்த் தனன்வய முறவே. (சகூ)

வே று.

மனத்துறு செருக்கொடு மருத்தைநிகர் வெற்றிச்
சினப்பரி பொருத்தமமர் செண்டுவெளி தன்னுட்
டனத்தன தனத்தன 7தனத்தன வெனத்தன்
வினைப்பட நெறிப்படி 8மிதித்தது நடித்தே. (ருo)

முந்திய செழுங்கவரி நின்றசைய முற்றும்
பந்தமுறு கஞ்சமணி கொஞ்சவெழு பண்ணிற்
9சந்துறு சதங்கைகள் சலஞ்சல னெனத்தன்
சுந்தர 10விசைப்படி நடித்தது கைத்தே. (ருக)

வே று.

தருமப் பரதச் சவுதத் தடைவே
தெரியத் தனதத் தனதத் தெனவே
11புரையற் றுருகிப் புவிமெச் சிடவே
பருமப் பரிநற் பதம்வைத் ததுவே. (ருஉ)

---

சஅ. மின் - தடாதகைப்பிராட்டியார்.

சகூ. சுபதக்ரமம் - சுபத்தைக் கொடுக்கிற நடை. அனுமனியா - ஒலித்து. மறை அயம் - வேதமாகிய குதிரை.

ருo. மருத்தை - காற்றை. செண்டுவெளி - குதிரையின் வையாளிவீதி.

ருக. கஞ்சம் - வெண்கலம்.

ருஉ. பரதச்சவுதம் - பரதநூல். பருமம் - குதிரை முதுகிற்றவிசு.

(பி - ம்.) 1 'விக்கிரவக்கிரம் விளங்குபதண்டமேவருமுபசுமஞ்சலமாஞ் 2 'உபவசம்' 3 'சிக்கினடை' 4 'புளகயம்' 5 'வெல்விடை' 6 'சுபதக்கிரமுறு' 7 'வெனத்தனித் துகைத்தே வினைப்படி' 8 'மிதித்தடி' 9 'சந்தறு' 10 'னிசைப்படி' 11'புரைவுற்று'

மெத்துந் தகவும் விதமும் படவே
[1]தித்தொந் தொந்தொந் தித்தீ யென்றென்
றொத்துந் தாளத் தொக்கத் தத்தித்
தத்தும் பரிதன் றுள்ளைத் தருவே. (ருங)

வே று.

பதிந்துமுன் காட்ட வெய்யோன் படியுமால் வரையிற் பாயா
வுதைந்துபின் காட்ட வெய்யோ னுதிக்குமால் வரையிற் றாவா
விதம்பட விடத்துக் காட்ட யமன்றிசைக் [2]கிரியின் முட்டா
விதம்பட வலத்துக் காட்ட மேருவைக் கடந்த தாங்கே. (ருச)

குறைவின்[3]மண் டலம்வ ளைப்பக் கொள்ளிகொள் வட்ட [4]மன்றி
மறுவற விளங்கிற் றுங்கு வளைந்ததோர் குதிரை யென்னத்
துறைநிறை வீதிகாட்டத் தொடுகணைச் செலவே யன்றி
நிறைவொடு பிறங்கிற் றுங்கு நீண்டதோர் குதிரை யென்ன. (ருரு)

இடம்வலம் பரி[5]வத் திப்ப விரண்டுயர் குதிரை யென்னப்
படிமிசை விளங்கிற் றந்தப் பார்த்திவ னதிச யிப்ப
வடிபடும் வேத மென்ன வருந்தவஞ் செய்த தென்றே
யிடபமால் குதிரை யாவே னன்றிபா னெனப்ப ணிந்தான். (ருசா)

மண்ணகத் தெவருங் காண வாதவூ ரர்க்கா வந்து
நண்ணுதற் கரிய வீரர் நாறபெருந் திசையு முட்டப்
பண்ணுறத் [6]தூண்டு நீதிப் பரிதருகட் கிமையா விண்ணோர்
கண்ணிமைத் தார்விண் [7]மண்ணு னதுகட றிடரா யிற்றே. (ருஎ)

ஏறலு மற்று முள்ள விருங்கண [8]நாத ரெல்லாங்
கூறரு மல்ல மார்க்க மயின்மார்க்கங் குரக்கு மார்க்கம்
[9] வீறுடை முயலின் மார்க்கங கணைமார்க்கம் வியரால் வீதி
சேறுற வுகைத்தார் மற்றுங் கதிகளாற் சிறக்க வாங்கு. (ருஅ)

இடவிய கதியின் வாசி யொருவர்போ லேறற் கிந்தப்
படிமிசைக் [10]கண்டே மில்லை தலைவர்யா ரென்னப் பல்கா
லடியிணை பரவி வந்த வருங்கண நாதர் யார்க்குங்
கடவுள ரிவர்கா ணென்று விரலகொடு காட்டி னரால். (ருகூ)

---

ருச. வெய்யோன் படியும் மால்வரை - அத்தமயகிரி.

ருரு. மண்டலம் - வட்டம். வீதி - நேராடல்.

ருசா. இடபமால்-இடபவடிவங்கொண்ட திருமால். என்று-எக்காலத்து.

ருஎ. கடல் திடராயிற்று.

ருகூ. பல்கால் தலைவர் யாரென்ன.

(பி - ம்.) 1'தத்தொந்' 2'கிரியை' 3'மண்டிலம்விளைப்ப' 4'மின்றி' 5'வர்த்திப்ப' 6'தாண்டும்' 7'மண்ணுய்க்கடற்டலாயிற்றனதே' 8'நாதாமுற்றும்' 9'வீறுள முயலின்மார்க்கம் வெற்கணைமார்க்கம்வீதி' 10'கணடதில்லை'

ஆங்க[1]வற் காண மூன்ன ரவசமா யெழுந்த தங்கந்
தேங்கமழ் முடியிற் றூமே சென்றன கரங்க டென்னன்
பாங்கல வெழுந்தி ருத்தல் பார்த்திவற் கென்றி ருந்தா
னீங்கரு [2]மனிதர் முற்று நின்றிலர் தொழுது வீழ்ந்தார். (சுo)

மிக்கமந் திரிகா ளிந்த வெம்பரிச் செட்டி நந்தஞ்
சொக்கனே போ[3]லெ னக்குத் தோன்றிடா நின்றான் வந்த
கொக்கினைப் பாரீர் காலந் தாழ்த்ததா யினுங்கொ ணர்ந்த
மிக்கமந் திரியைப் பாரீ ரென்றுபன் முறைவி யந்தான். (சுக)

கொற்றவன் றிருமு னின்று கூறுவான் குதிரைச் செட்டி
யுற்றநின் னமைச்சன் றந்த வுயர்பெருங் கனக முற்றும்
கற்கிக ளிடுவ தாக நம்முளோர் கைக்கொண் டார்கள்
வெற்றிகொண் மன்ன கொற்ற வெம்பரி நீதி கேண்மோ. (சுஉ)

வேறு.

புரிநீபாந் தரத்திமவான் புறத்தி னின்று [4]போந்துபெருந் துறை யிறங்கி வந்த வின்றிங், கருமறையிற் கடலமுதில் விதிகண் ணீரி லா ரழலி னுலூகத்தி லண்டந் தன்னி, லுரியதிசை யிருநான்கு தேவர் தம்மி லுயர்ந்தவெழு பிறப்பினவா யுரைசேர் மண்வாழ், சுரரரசர் வணிகர்சூத் திரர்நாற் சாதித் தோற்றத்த காணிந்தத் துரக மொத்தம்.

வேறு.

மருவுநாய் கழுதை [5]கோழி வாயதம் வெருகு கூகை
நரிபசா சேனம் பொல்லா நல்லன மயூரங் கீரி
பொருவிடை மடங்க லன்ன மகரம்வா னரம்பு ழைக்கைக்
கரிபுலி முனிவர் வானோர் கடும்பரிச் சுபாவ மன்றே. (சுச)

---

சுக. கொக்கு - குதிரை.

சுஉ. குதிரைச்செட்டி கூறுவான். கற்கிகள் - குதிரைகள்.

சுரு. பெருந்துறை - பெரியகடற்றுறை, ஒரு திருப்பதி. உலூகம் - கோட்டான். குதிரை, வேதமுதலிய ஏழிடத்திற் பிறந்தன என்பதை, "வெடி வாற் பைங்கட் குறுநரி யினத்தினை, யேழிடந் தோன்றி யினனூற் கியைந்து, வீதி போகிய வாலுளைப் புரவி, யாகக்கிய விஞ்சைப் பிறைமுடி யந்தணன்" (கல். அ) எனவும், "மிக்க செழுமறை நாவிற் கமலநாதன் விழிப்புனலில் விண்ணோர்க ளெண்மர் தம்பான், மைக்கடன்மே லமிர்தத்தி லங்கிமீதின் மல்கு கருப் பையிலுலுக வண்டந் தன்னிற்,றெக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன் றுக தொன்மையவா யீரிரண்டு துணைத்தா ணைற்றி, யொக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி லொண் புனலிற் செலலுநெறி யுளவுமாகி" (திருவாத. குதிரை. சo) எனவும் வருவனவற்றானுணர்க. மொத்தம் - தொகுதி; "பரிக்குமிப் பரிமா மொத்தம்" என்பர் பின்னும்; எஉ.

சுச. வாயதம் = வாயசம் - காக்கை. வெருகு - பூனை. ஏனம் - பன்றி. நாய் முதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் பொல்லா; மயூரமுதலிய

(பி - ம்.) 1 'அவர்க்காண' 2 'மனிதரெல்லா' 3 'எமக்குத்தோன்றிட' 4 'பொருந்து' 5 'ஓரி'

வேறு.

உத்தம விரலிற் காயமுஞ் சுழியு மொழிகளு நடைகளுந் துளங்குஞ், சித்திர நிறமு நாற்றமுங் குரலுந் [1]திறப்படு மனமுமில் வெட்டுஞ், சுத்தமா வுடைய விந்திரன் றனுப்போற் றுளங்கலா டரவுபோணலத்தான், [2]மெத்திநோர் வளைந்து திரண்டுநீண் டுயர்ந்து விளங்கிய கழுத்தன காணே. (௬௫)

வேறு.

மல்லிகை கோங்கு காயா மாதுளை மலர்பூங் கிள்ளை
நல்லன மற்று மிக்க நவமணி நிறத்த வாகி
மெல்லிய சிவந்த நாவும் வெளுத்துநெய்த் தொத்த பத்திப்
பல்லுமாற் றக்கு றுத்த கன்னமும் பழுதி லாத. (௬௬)

வேறு.

[3]இறுகிக் குவிந்து குழிந்ததகர்க் குரம்போற் குரமு மிளநவ்வி
மறியிற் கண்ணு [4]மகன்றுதணி முதுகு நீண்ட வாலதியுங்
குறுகிச் சிவந்த மேட்டிரமுங் குறுகா முகமும் வியனுதலுஞ்
சிறுகித் திரண்ட வண்டமுமெய் யழகுஞ் [5]செழிய காணுயே. (௬௭)

வேறு.

மேலெழின் முகமுந் தூய விதமுடை நான்கு தாளும்
பாலதின் வெளுத்த சுத்தப் பஞ்சகல் யாணன் பாராய்
வாலதி தலைநெஞ் சொக்க மற்றவற் றொடும் வெளுத்த
வாலிய [6]மணிஞ்சி றந்த வட்டமங் கலங்கள் பாராய. (௬௮)

உயர்கன வட்டம் போரா [7]ஞாரனுளான் கொங்கான் கங்கான்
மயில்வரி நீலான் பொல்லான் மகிழ்விதை [8]மௌவான் சேயா
ணயனவஞ் சனம்பொன் மாரி பாடல நளினி பச்சை
பயமிலா மரீசி கோரம் பட்ட[9]வர்த் தனங்கள் பாரே. (௬௯)

கஞ்சுகம் விலங்கு கொங்கை கவைக்குளம் புலக்கை கௌவ
மஞ்சுதா ளிரட்டை நாவோ ரண்டம்மேற் றண்டங் கொள்ளி
நஞ்சராத் தொழுநோய் காள முகந்திரி கன்னங் கொம்பு
மிஞ்சிய மற்றுங் குறற மொன்றிலே விளம்புங் காலே. (௭௦)

---

வற்றின் இயல்பையுடைய குதிரைகள நல்லன; திருவாதவூரர்புராணம், குதிரையிட்ட சருக்கம், ௩௬, ௩௭ - ஆம்பாடலகளைப பார்கக.

௬௬. ஷை புராணம், ஷை சருக்கம், ௩௭ - ஆம்பாடலைப் பார்க்க.

௬௭. வாலதி - வால. மேட்டிரம் - ஆண்குறி. ஷை புராணம், ஷை சருக்கம், ௩௯ - ஆம்பாடலைப் பார்க்க.

௬௯. ஷை புராணம், ஷை சருக்கம், ௪௬ - ஆம்பாடலைப் பார்க்க.

௭௦. ஷை புராணம், ஷை சருக்கம், ௩௪, ௩௫-ஆம்பாடல்களைப் பார்க்க.

(பி - ம்.) 1'திடம்படுகலமும்' 2'மெததுதோல்' 3'இறுகிச்சிவநதகரக்குரம் போலிருகாற்குரமும்' 4'அகன்றதனி' 5 'செய்ய' 6 'மனஞ்' 7'ஞாரானளான்' 8 'மௌவல்கையான்' 9'வத்தனங்கள்'

1 மன்னதீ மனம்வி திர்த்தல் 2பிசகல்கான் மடித்தல் வீழ்த
3 வின்னெறி விலங்க லச்சப் படுதன்4மே லேறப் பாய்தன்
5 முன்னெழல் கடித்தல் வீதி நிற்றற்6ருண் முகஞ்சா டித்தல்
பின்னெழ விருத்தன் 7மற்றுந் தீங்கிலே பேசற் கின்றே. (எக)

கருதின்8வண் கதிவெங் கால கந்துக நிலைமை யோங்க
மருவிய குலமா மங்கை முகமுக மடங்கல் வாவல்
பொருவரு நடிகள் வைப்பிற் புயலொலி யொலியே மிக்க
பரிவுடை மன்ன நின்னைப் பரிக்குமிப் பரிமா மொத்தம். (எஉ)

பெருக்கும்வெம் பட்ட யானை முகத்தலாற ருள்கள் வையா
9 கருத்தினி லுலவு மாக்கள் கருத்தனைந் தையுங்க டக்கு
முருத்தெழ வொலிப்பின் வானத் தும்பர்கோன் பரியு மஞ்சு
மருத்தினுங் கடிய மாக்கள் வாய்த்தன சம்பு வாணை. (எங)

வே று.

இப்பரி மாவொரி லக்கம வற்றினு ளிக்குழு வோரொருமா
10முப்பஃ தாயிர மோர்பழு தின்றிமு தறறா 11மித்தரமும்
வைப்பதி னூறுகு றைந்தன பின்னிவை யாயிர மற்றிவையு
மப்படி பெற்றவி லைப்பொனி லக்கம னைத்துமு ணர்ந்துகொளே. ()

வே று.

ஆரிருள் விடப்பே ரண்ட மாயிரங் கதிர்வி ரிக்குஞ்
சூரிய னுஞ் சூழ்த முரிதமார் பரியா லேகாண்
கூரும்வா ரிதிகொ ளாமற் குவலயங் கிடத்தல் 12கௌவை
வாரிதி குடிக்குந் தீவாய் வடவையம் பரியா லேகாண்.* (எரு)

13திண்டிறன் மன்னர் சென்று செற்றவர் மண்ட லங்கள்
14கொண்டுதம் மன்ன ராளக் கொடுப்பதுங் குதிரை யேகாண்
மண்டுபோ ரினில்வென் னிட்ட மன்னரைப் படக்கொ டாமற்
கொண்டுபோய் விரைவி லுய்யக் கொள்வதுங் குதிரை யேகாண். ()

---

எக. மற்றும் தீங்கு இல - வேறும் உள்ளனவாகிய தீங்குகள் இல்லை.

எஉ. கதிவெங்கால - நடையை விரும்புகின்ற கால்களையுடையன. கந்துகம் - பந்து.

எங. 'சம்புவாணை' என்பது சிலேடை.

எச. இதிற் குதிரைகளின் விலைகள் கூறப்பெற்றுள்ளன.

எரு-கூ. இவற்றுற் குதிரையின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

* இதுமுதல் ஐந்துபாடல்கள் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படவில்லை.

(பி - ம்.) 1'மன்னதி' 2 'மசகல்' 3 'இன்னெறியிலங்கல்' 4 'மேலெற்றப்' 5'முன்னெழுக' 6'காழ்' 7'மற்றுத்' 8'வன்கதி' 9'கருதநெனில்' 10'முப்பதொராயிரம்' 11'மானதுகாண' 12'கேணல்' 13'திண்பகை' 14'கொண்டுளே'

அரும்பெருஞ் செந்தீ யில்லா வந்தணர் வாழ்வு போலும்
விரும்புதா ரகைக ளில்லா விளக்கமி லகல்வான் போலுஞ்
சுரும்புசூழ் மலரில் லாத சோலையுந் தடமும் போலு
நெருங்கிய துரக மில்லா நீள்பெருஞ் சேனை மன்னே. (எஎ)

[1] பரியகை யானை திண்டேர் பதாதிக ளெனும்ப டைக்குப்
புரவியில் லாத போது பொலிவுடைத் தன்று [2]மண்ணும்
வரிசையு மற்று முற்றுந் தருவது மன்ன வர்க்குத்
துரகமே யல்லா லுண்டோ தென்னவ சொல்லுங் காலே. (எஅ)

வரும்பரி தாழ்த்த வாகேள் வளர்சரா சரங்க ளெல்லாம்
புரிந்திளைப் பாறுந் தில்லைப் பொதுவினு [3]ளாட லாலே
யரும்புக ழாயி வற்றுக் கச்சுவ மென்னு நாமந்
திருந்தவோர் பொழுது நில்லா தெனுமது கொண்டு தேறே. (எகூ)

ஆதலா லறிஞர் முன்னே [4]வறவுறப் பேசிக் கொண்டு
நீதியிற் கைக்கொ ளின்று நின்ன து புரவி யாக
வீதியிற் கயிறு மாறி விட்டபி னன்மை [5]தின்மை
யோதுவ நமது பார மல்லமே யுன்ன வென்றான். (அ0)

அத்திறஞ் சொல்ல [6]நல்ல வறிவனீ யறைந்த தொக்கு
முத்தம நன்மை [7]தின்மை யுன்கைவிட் டென்கை புக்கா
லெத்தையு மறிதல் வேண்டா [8]வென்னவே முற்று மென்னச்
சித்திர மாக்க டம்மைத் தென்னவன் கைக்கொ டுத்தான். (அக)

எத்திமா வறிஞர் முன்னே யினியபே ரன்பிற் கூடிச்
சேர்த்துநம் மிடத்துண் டான செழுங்கன கங்கண் முற்றும்
பார்த்திடி னின்றி வற்றோர் பரிக்குநேர் விலைபோ தாவால்
வாய்த்தன குதிரை யென்று மன்னவன் வாங்கிக் கொண்டான். ()

அய்யமில் லாமன் முன்னின் றுவணி மூல நன்றூட்
டுய்யபே ருலகுக் கெல்லாந் துளங்கி[9]ரா வுத்த ராயன்
மெய்யைமெய் யுடைய [10]மெய்யன் மெய்யடி யானை வேண்டிப்
பொய்யிலா மன்னன் காணப் பொய்ப்பரி மாறறஞ் செய்தான். (அங)

---

எகூ. ஆடலாலேதான் தாமதமாயிற்று. 'ஓர் பொழுதும் நில்லாது' என்பது, சிலேடை. அச்சுவம் - வியாபிப்பது.

அ0. தின்மை - தீமை; ஓதுவனவாகிய நன்மைதின்மை; "அடியவர் நன்மை தின்மையறிபவன்" எனபர்; ௩௫: கக; "தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே" (கம்ப. பயன். உ.)

அக. 'சித்திரமா' என்பது சிலேடை.

அங. இராவுத்தராயன் - குதிரைச்சேவகன்; இராவுத்தனென்பது, இராஜ புத்திரனென்னும் வடமொழிச் சிதைவென்பர்; "இனிமைகூர்ந் திராவுத்தற்கு"

(பி - ம்.) 1'பரவரும்' 2'மன்னும்' 3'ஆறலாலே' 4'அழகுறப்' 5'தீமை யோதுவர்' 6'நல்லறிவுநீ' 7'தீமை' 8'என்னதுமுற்றுமென்றுச்' 9'ராகுத்த'

மின்னிய வுலகு தன்னில் வித்தின்றி [1]நாறு செய்வோ
னன்னெறி யில்லாப் பொல்லா நரகரைத் தேவு செய்வோன்
மன்னிய நரிக டம்மை மறுகெலாம் [2]வாவி யேறித்
தென்னன்முன் குதிரை யாகச் [3]செய்புதோன் றுமல் விட்டான். ()

வந்துறக் கயிறு மாறி விட்டபின் வரிசை கூரப்
பந்தியுட் கட்டுமென்று பரித்துறை யாளர் கையின்
முந்துற [4]வடைப்பப் போற்றி யவரவர் முதுபே ரன்பிற்
றந்தமில் வகையிற் [5]சேர்ந்து தனித்தனி கைக்கொண் டாரால். (அ௫)

இந்நெறி மன்னர் மன்ன னினிமை[6]கூர்ந் திராவுத் தற்கு
நன்மைகூர் வரிசைத் தூசு நல்குவ மென்று நல்கக்
கொன்னுறு கரஞ்சேர் செண்டி லேற்று[7]முற் கொம்பிற் சேர்த்துத்
தன்னடி யாரை வேண்டிச் சடைமிசைப் [8]புனைந்து கொண்டான். ()

[9] பாடன்மா முனிவ ரேத்தப் பாண்டியன் றிருமுன் னெய்தி
நீடுமா றேடுஞ் சொக்க னீள்பரி யுகைத்துக் காட்டிச்
சேடன்மா நிலத்தா ரன்றிச் சேனுளா ரெல்லாங் காணச்
சூடலாற் றூசு சொக்கன் றூசென [10]வழங்கிற் றன்றே. (அஎ)

ஆங்கது செண்டி லேற்பச் சீறிய வரசற் கண்டு
[11]தீங்ககல் வாத வூரர் தேசவா சார மென்ன
வோங்கிய தியாக வேந்த னைக்குமென் றெவர்க்குந் தூசு
தூங்ககில் லாம னல்க [12]வாங்கிமுன் சூடி னாரால். (அஅ)

முன்னுறச் சென்று பன்றி நேடுதாண் முளரி சூடிப்
பின்னியன் முனிவ ரங்கண் பிடித்தபத் தெடுத்துப் பாட
நின்னுடை நினைவு வந்து முடித்தன நேச மிக்க
நன்முனி யடிவிடென்று நாயக னருளிச் செய்தான். (அ௯)

நற்றிரு மேனிக் கீடு நவையற விட்டுக் கையிற்
[13]பொற்றகை வாளம் வாங்கிப் புரவிமேற் கொண்டு காணச்
சற்றடி வடிம்ப சைத்துச் சடைமுடி யிலங்குந் தூசு
மற்றுமோர் கங்கை யென்ன வருபவ னுருவம் போற்றி. (௯௦)

---

என்பர் பின்னும்; அ௬; "கலாபத் தனிமயிலேறு மிராவுத்தனே" என்பது கந்த ரலங்காரம், ௫௦.

அ௪. நாறு - நாற்று. இச்செய்யுள், "நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும், விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்" (திருநா. தே. திருவாரூா) என்பதன் கருததைத் தழுவிவந்துளளது.

அ௬. வரிசைத்தூசு-சம்மானமாககொடுத்த ஆடை. செண்டு-ஓராயுதம்;

அஅ. தூங்ககில்லாமல் - தாமதியாமல். [கொம்பு - அதன்முன் பாகம்.

௯௦. திருமேனிக்கீடு - கவசம். கைவாளம் - கைக்கத்தி; "கரவாளம்" என்றூர் முன்னும்; ௯௪. அடிவடிம்பு - அடியின் விளிம்பு.

(பி - ம்.) 1'ஞாறு' 2'வாளி' 3'செம்பு' 4'அடைவிற்' 5'சேர்த்து' 6'கூரிராகுத்தற்கு' 7'முற்காம்பிற்கோத்துத்' 8'அணிந்து' 9'பாடலமுனிவ' 10'துளங்கிற்' 11'தீங்கிலா' 12'வாங்குமுன்' 13'பொற்கரவாளம்'

பல்வித வலங்கா ரஞ்சேர் பாய்பரி யுகைக்கு மிக்க
செல்வமார் சிறப்பி ஞசை யுடையஞ மீசன் றென்ன
ஞெல்லையி னீந்த தூசு சூடிஞ னும்பர் காண
மல்லல்கூர் கமலக் கையிற் கபாலமார் வாங்கு வாரே. (கூக)

கண்டவ ரமைச்ச ஞரைக் கடவுளை வியந்து செங்கை
முண்டகங் குவிய நெஞ்ச முண்டக மலரக் கண்க
ளுண்டுளி சிந்த விந்த நுவலருங் குதிரையீடு
கண்டன மென்று ணந்தக் [1]கடலிடைத் திளைத்தாரன்றே. (கூஉ)

வாழ்ந்துபொற் பட்ட மூன்ற வரிசைகள் வாதவூரர்க்
கீய்ந்துநல் விடையிற் போக்கி யெழுந்துதன் னுழைக்கண் வேந்த
ஞர்ந்தபல் லியங்க ளாலே யவனியை நிறைத்துச் சார்ந்தான்
றூழ்ந்துசெவ் வந்தி மாலை தபனஞர் சாத்தக் கண்டு. (கூஙு)

குணந்தரு கணங்களோடு குறுநகை செய்து தேவர்
பணிந்துபின் வரமுன் போன பத்தர்கள் பத்தன் றுனும்
பிணைந்தபல் செய்தி யெல்லாம் பிறங்குதன் பெரிய கோயி
லணைந்துபே ரங்க யற்க [2]ணுமைமயிற் கருளிச் செய்தான். (கூச)

சயந்தரும் பெருமை மிக்க சம்புவின் குதிரை யீடு
வியந்துகற் பவர்ப ரிந்து கேட்பவ ரிடத்து மெல்ல
முயங்கு[3]நல் குரவு நீங்க மூத்தவ ணீங்க நீங்கா
நயந்தரு மிளைய [4]மங்கை நண்ணுதற் கைய மின்றே. (கூரு)

வேறு.

அரிய நாயக ஞர்விளை யாடிய
புரவி யீடு புகன்றனே மன்னவர்
பரவு மன்னவன் பந்தியிற் [5]கட்டிய
பெரிய கோடகம் பின்னரென் செய்தவால். (கூசு)

ஆகத்திருவிருத்தம்-- கூகரு.

---

கூக. ஆசையுடையனென்பது சிலேடை; விருப்பமுடையவன், திக்காகிய ஆடையையுடையவன்.

கூங. உழை - வீடு. செவ்வந்திமாலையென்பது சிலேடை.

கூச. பத்தர்கள் பத்தன் - சிவபெருமான்; ஙங: உக; ஙரு: உஅ; ஙசு: உஅ; ஙஅ: ங; சO: எ; சக: எ; சசு: உஎ; சஎ: அ.

(பி - ம்.) [1]'கடலிடையலைத்தாரன்றே' [2]'உமையவட்கு' [3]'நல்குரவுநல்கு மூத்தவணீங்கி', 'நல்குரவுநீங்கி' [4]'நங்கைநணுகுதற்கு' [5]'கூடிய'

## உகூ.—குதிரை நரியான திருவிளையாடல்.

இருமைதரு [1]மதுரைநகர் நின்றமாய வினப்புரவி முகமுகம் பார்த் தென்னே நென்னல், வெருவவடி யுண்டதல்லாற் கழுத்துங் காலும் வெங்கயிற்றூற் கட்டுண்டே மேலு நிற்பிற், குருதிபடப் புண் படுவே முணவுமில்லை கொள்ளிடுவர் புல்லிடுவர் பாவம் பாவ, நாருமி னித் [2]தொத்துவர்நாம் விடியு முன்னர் நம்முருவங் கொடுநழுவக் கடவோ மென்றே. (க)

வேறு.

[3]மிடற்றிலுறு கயிறெயிற்றூற் கங்குற் போதே மென்றறுத்து மதியாது நரிக ளாகிக், கடைத்தெருவும் வாயில்களு மடமு மன்றுங் கடிமனையு மங்கணமு நுழைந்து மற்றெவ், விடத்திலும்புக் கொன் றுக்கொன் றுறுமிச் சள்ளிட் டிரும்பசியா விகல்செய்து நகரி தன் னுட், புடைத்தெவரு மெழுந்திருப்பச் சுழல வோடிப் போகாம லூளையிடப் புகுந்த வன்றே. (உ)

வேறு.

மண்டு மமரர்கள் கண்டு நகையுற மாறன் வெருவுற நீளவே, தொண்டை விடுவன வண்டம் வெடிபட நண்டை நினைவன துன்றி யே, பண்டை நெறியினின் [4]மண்டை யகழ்வன பந்தி மனைமறு கெங் கணுங், கண்ட வவரவ ரஞ்ச வுறுமுவ கள்ள முறுமன முள்ளவே.()

வேறு.

மற்றது கண்டு நின்ற வகைத்துறை யாளர் முற்று
மூற்றிய பயத்தோ டென்னாய் முடியுமீ தெனக்க லங்கிக்
கொற்றவன் றிருமுன் சென்று கூறுவார் புலரு முன்னம்
பற்றல ரேறே நந்தம் பந்தியுள் விசேடங் கேண்மோ. (ச)

இன்னவென் றறிந்தோ மில்லை யிரவிடை யாணர் மாக்க
ணன்னரி போற்சி றுத்து [5]நம்முளோர்க் காணு முன்ன

---

க. முகமுகம் பார்த்து - ஒன்றன் முகத்தை ஒன்று பார்த்து (சரு:உக); "கண்மலகு நீரார் முகமுகங்க ணோக்கினரே" (சீவக. கஅ௦அ.) கயிற்றை மென்று. தொத்துவர் - தொத்திக்கொள்வார்.

உ. அங்கணம் - சலதாரை. சள்ளிடல் - நரியின் ஒலிக்குறிப்பு.

ந. தொண்டை விடுவன - கூவுவன. உள்ள - உள்ளன.

ச. வகைத்துறையாளர் - பலவகைப்பட்ட துறைகளைப் பாதுகாத்தலையு டைய வேலையாளர்.

ரு. யாணர்மாக்கள் - புதியனவாய் வந்த குதிரைகள்.

(பி - ம்.) [1]'மதுரையினுணின்ற' [2]'தொற்றுவர்' [3]'மிடற்றிறுகுங்கயிறு' [4]'மண்டி' [5]'நம்முளோர்காணும்'

முன்னெழ வெருவிக் கைவி லகப்படா தோடி முற்றுந்
தன்னமார் தொண்டை யாலே தரணியை நிறைக்கக் கண்டேம். (௫)

பழுதில்கண் டியின்றோ மில்லை பருப்புநெய் கருப்புக் கட்டி
[1] யெழிறர மட்டித் திட்டே மிதவிய புல்லு மிட்டேங்
கழுவிய பயறுங் கொள்ளுங் கடலையுந் துவரை யோடு
முழுவதுஞ் சிறக்க விட்டே மொக்கணி முட்டக் கட்டி. (௬)

உற்றவை மற்ற வற்று ளொன்றயி லாது பண்டை
வெற்றிகொள் புரவி [2]துள்ளு மறிக்குழு வேழக் கன்று
குற்றமி னல்லி யாடு குக்குடஞ் சூக ரங்கள்
மற்றுமிங் குள்ள வற்றின் மணிக்குடர் பிடுங்கக் கண்டேம். (௭)

இந்நெறி விளைந்த வென்ன வேங்கிநீ [3]டுயிர்த்து வீழா
[4] மின்னற விடிக்கு மேயோ விளைவதற் கேது வேதோ
நன்னெறிப் பொருட்குந் தீங்கு நணுகுமோ நெறிக்கே டுண்டோ
செந்நெறி யோர்க்குக் குற்றஞ் செய்தன வுளவோ வின்றே. (௮)

குருமொழி பிழைத்த துண்டோ கோளர்வாய்க் கேட்ட துண்டோ
தருமநேர் குன்றிற் றுண்டோ தகாக்கொலை செய்த துண்டோ
[5] வாரழக் கொண்ட துண்டோ மறைநெறி கோடிற் றுண்டோ
வரவிதி வசமோ வேதோ வறிகிலே னெனவ யர்ந்தான். (௯)

விரைகொண்மண் டபத்துப் போந்து மெலிகுவோ னென்கொ லென்
பொருவருஞ் சிறப்பின் வந்து போற்றிடு மமைச்சர்க் கண்டு [று
தெரிவுறப் புகுந்த வாறு செப்பநீ டுயிர்த்தி யாரு
மிருநில நோக்கி நின்று ரியம்பவோர் மாற்ற மின்றி. (௧௦)

தகவொடு நாளுஞ் செய்யுஞ் சடங்குகண் முடித்து ளத்து
ணகையொடும் வாத வூரர் நணுகியீ தறியார் போலப்
புகலருந் தழலிற் றோய்ந்த புண்டரீ கம்போன் மிக்க
முகநனி புலரு மன்னன் முன்பணிந் தென்கொ லென்றார். (௧௧)

---

௬. மட்டித்து - கலந்து. இதவிய - இனிய. மொக்கணி - குதிரைக்குக் கொள்ளுமுதலிய உணவுகட்டும்பை; "மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி, சொக்க தாகக் காட்டிய தொன்மையும்" (திருவா. கீர்த்தி. ௩௩ - ௪.)

௭. மறி - ஆடு. சூகரம் - பன்றி.

௮. 'மின்னுமலிடிக்குமா' என்பது ஒரு பழமொழி.

௯. வரர் - சிறந்தவர், தலைவர். அர - அரனே; இஃது இரக்கப்பொருளினும் வரும்.

௧௦. நீடு உயிர்த்து யாரும் நின்றார்.

௧௧. சடங்குகள் - நித்தியகன்மங்கள்.

(பி - ம்.) 1 'எழிறருமட்டியிட்டேயிதவிய' 2 'தள்ளுமறிகளும்' 3'உயிர்த்தழன்று', 'உயிர்த்தழன்று' 4'மின்னன்றி','மின்னிற' 5'வரர்களைக்கொன்றது'

மாடுறக் கண்டு நல்ல மதியுடை யமைச்ச னேநீ
நாடிலிங் குனையா ரொப்பார் நல்லகல் யாண னன்றோ
கூடிய பரிநன் றாகக் கொண்டுவந் தனையே யுண்டோ
தேடிய வருமை சற்றே [1]தீங்குவே றுண்டோ வென்ன. (கஉ)

பகையிலா வேந்தே யெங்கும் பழுதற நேடி நல்லோர்
புகழுயான் கொணர்ந்த தெய்வப் புரவியிற் பொல்லாங் குண்டோ
வகைவகை நெருநற் போதே வரையறுத் தறிஞர் முன்னு
வகமகிழ் வொடுகைக் கொண்ட தார றி யார்கூ றென்றார். (கங)

அணைந்திது நெஞ்சஞ் சாம லறைவதெ னெருநற் கண்ணீ
கொணர்ந்தமா நரிக ளாகிக் கொடுங்குரல் காட்டி யூருட்
பிணம்பட யாவுங் கொன்று திரிகின்ற செய்தி பித்தா
வுணர்ந்தனை யிலையோ கெட்டே னினியுண ருதியோ வின்றே. (கச)

மேலுயர் குருவின் மாட்டும் வேந்தர்கண் மாட்டுந் தூய்மை
சாலுநான் மறையோர் மாட்டுந் தயாவுடைத் தோழர் மாட்டுஞ்
சீலமா தவத்தோர் மாட்டுஞ் சிந்தையுஞ் சாது வஞ்சங்
கோலுமூர்க் கருக்குத் தண்டங் கொலையலா [2]லுண்டோ வேறு. (கரு)

வெந்திறற் சிவையை யெல்லாம் வெம்பரி யாக்கி யின்றென்
[3]மந்துரை தன்னுட் கட்டப் பண்ணினை மதிம யக்கி
யிந்திர ஞாலஞ் செய்வ தெம்முட னேயோ சாதி
யந்தண னுறு யான்மற் றறைவதிங் கென்னை நின்னை. (கசு)

வேந்தர்பொன் னழித்தோர் நல்லோர் வீடு[4]மார்க் கஞ்சா திப்போர்
வாய்ந்தமா வுகைத்த வாசி வாரியப் [5]பெருமா னெங்கே
சேர்ந்தசாத் தவரோ சொல்லாய் திண்ணிமை யோடு மெல்லச்
சார்ந்தநின் மேனி முற்றுந் தண்டிக்க வடுக்குங் காணே. (கஎ)

ஆரண மோதிற் றிந்த வடைவு[6]செய் வதற்கோ வென்று
கோரமா மொழிகள் கூறிக் கூற்றென முறைசெய் வோரைத்

---

கஉ. 'நல்ல கல்யாணனன்றோ' என்று இகழ்ந்தான்; "என்னையின்றோர் கலியாண னாக்க் காண்மின்" (உஎ: அரு) என்றதை உட்கொண்டு.

கச. கொணர்ந்தமா - குதிரை. [செய்யுள் தெரிவிக்கின்றது.

கரு. இன்னார் இன்னார்மாட்டு வஞ்சனை செய்யலாகாதென்பதை இச்

கசு. சிவை - நரி. மந்துரை - குதிரைச்சாலை. இந்திரஞாலம் - இந்திர சாலம்; "இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்" (திருவா. கீர்த்தி. சங.)

கஎ. வாசிவாரியப்பெருமான் - குதிரைச் சேவகர்களின் தலைவன்; வாரியர்-நடத்துச் செலுத்துவோர். சாத்தவர் - வியாபாரிகள்; "குதிரையைச் கொண்டு குடநா டதன்மிசைச், சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி. உஎ-அ.) திண்ணிமை - வன்மை, தைரியம். [யறை-சிறைச்சாலை.

கஅ. ஆரணமோதிற்று - நீ வேதமோதியது. கோரம் - கொடுமை. சிறை

(பி - ம்.) [1]'தீங்கதிலுண்டோ' [2]'உண்டோவென்றே' [3]'மந்திரை' [4]'மார்க்கஞ்' [5]'பெருமானெங்கே' [6]'செய்யற்கோ'

[1] தீர்வற வழைத்து வெய்ய சிறையறை வளைத்து வைத்துச்
[2] சாரரும் பொருளை னைத்துந் தண்டித்து வாங்கு மென்றான். (கஅ)

ஆங்கவர் தம்மைக் கைக்கொண் டகன்றவ ரிணையி லாத
வோங்குபே ரன்பு கண்டுள் ளுருகிமெய்ந் நலியா ராகி
யீங்கிறை பணித்த வாறு செய்திடா விடினெ மக்குத்
தீங்குறு மென்று வெய்ய சிறையறை வளைத்து வைத்தார். (கக)

பிறங்கிய வடிவான் மிக்க பெரும்பருந் துரக மெல்லாங்
குறும்[3]பெரு நரிக ளாகி [4]நெடுங்குரல் காட்டக் கூற்றிற்
றிறம்பட முனிந்த தென்னன் சிறைபுகுந் தழுங்கி மிக்க
வறந்தரு முனிவன் பின்னென் செய்தன னறைதி யென்றார். (உ௦)

ஆகத்திருவிருத்தம் - எகரு.

## ௬௦.—மண்சுமந்த திருவிளையாடல்.*

பொறையகத் துடைய வேந்த னமைச்சரைப் போக வேவி
யறையகத் தொழியாத் துன்பத் தொடுபுகுந் தழுங்க விப்பான்
மறையகத் தோரி ரும்பு தருமனத் தேனை யென்று
சிறையகத் [5]தோதா முன்னரு சிவனகத் தருள்சு ரந்தான். (க)

வேறு.

பொதியில் வரைசேர் தமிழ்நாடும் பொய்யா வையை மாநதியு
மதுரை நகரும் பாண்டியனு மண்ணுஞ் செய்த தவத்தானுந்
துதிசெய் தொண்ட ரகமகிழத் தொண்டு செய்து பிட்டளிக்கு
முதுமா டங்கை தவத்தானு முகிறு யகளை நினைப்பிட்டான். (உ)

உ௦. குறும்பெருநரிகள்: முரண்.

(௬௦)

க. அறையகத்து - அறையில். "இரும்புதரு மனத்தேனை" என்பது திருவாசகத்தில் திருவேசறவின் முதற்குறிப்பு.

உ. 'பொய்யாவையை மாநதி' என்பது "வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" (சிலப். கங: கஎ) என்பதைத் தழுவியது. முதுமாமங்கை - பிட்டு வாணிச்சி; இவள்பெயர் செம்மனச்செல்வி.

* "மணியார் வைகைத் திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்" (திருநா. தே. திருப்பூவணம்); "ஆங்கது தன்னி லடியவட் காகப், பாங்காய் மண்சுமந் தருளிய பரிசு, முத்தர கோச மங்கையு ளிருந்து, வித்தக வேடங் காட்டிய வியல்பும்" (திருவா. கீர்த்தி. சகூ - க௱); "கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை, மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு, புண்சுமந்த

(பி-ம்.) [1]'தீரவுற்றழைத்து' [2]'சாருறும்', 'சாருமப்' [3]'பரிகரி' [4]'கொடுங்' [5]'ஏகாமுன்னஞ்'

பணிந்த வருணன் றனைநோக்கிப் பண்டே நமக்கு நனிநல்ல
குணஞ்சேர் வேத முனியிருக்குங் கொடிய சிறையைக் கண்டனையே
கணஞ்சேர் பொழுதிற் றுழாது கங்குற் கண்ணே கரைகடப்ப[தான்.
மணஞ்சேர் [1]பொருள்கொண் டுறுநதியை வருவிப் பாயென் றறிவித்

மேக நாத னெழுந்திரங்கி மெய்கள் கருகி மழைவிடக்கண்
டாகஞ் சலங்கி வேகவதி யருங்கால் கட்ட நில்லாது
பூகந் தெங்கு பறித்தெறிந்து பொரு[2]மீன் மறியப் பரந்தழுங்கி
மாக முட்டப் பயங்கொண்டு வந்த தெவரும் பயங்கொள்ள. (௪)

மன்ற றிகழ்தென் கரைகடந்து மதுரை நகருட் புகக்கண்டு
துன்று மிரவிற் பறையறையுஞ் சும்மை கேட்டு வாள்வழுதி
கன்றி மனமென் னுகுநதி கால மொழிந்த காலத்திங்
கின்று பரவை யெனப்பரந்த [3]தின்றே முடிவென் றழிந்தெழுந்தான்.

ஆண்ட வதிகா ரியையழைத்[4]தின் றருள்சேர் முனியை வளைத்ததனு
லீண்ட வந்த தோவறியே னிறைவன் செயலோ தெரியாது [ட்டு
மாண்ட கரையை விரைவினிற்போய் மனைக டொறுங்கோ லறையி
வேண்டி யடைப்பா யெனப்போக விட்டான் விடிந்த திருங்கங்குல்.

செருவார் கணக்க ருடன்கூடிச் செல்வோன் றண்டஞ் செய்[5]தூரி
ணரைசேர் கிழவர் சிறியோர்கண் முதலோர் நடுங்க வடித்தெற்றித்
திரைசேர் கரையை யளந்திட்டுக் கொடுப்பத் தெருமந் தவர்பெரிய
வரையே யெனத்தங் கோலறைகண் மகிழ்ந்து[6]சுமத்தப் புகுந்தனரால்.

---

பொன்மேனி பாடுதுங்காண்'' (ஷை. திருவம். அ); "மண்பான் மதுரையிற் பிட்டமுது செய்தருளித், தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட, புண் பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ'' (ஷை. திருப்பூவல்லி, கசு); "பிட்டு நேர்பட மண்சுமந்த பெருந்துறைப்பெரும் பித்தனே" (ஷை. திருக்கழுக்குன்றப்பதிகம், உ); "மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கக் கொற்றாளாகி, நரைத்தலை முதியோ ளிடித்தடு கூலிகொண், டடைப்பது போல வுடைப்பது நோக்கிக், கோமக னடிக்க வவனடி வாங்கி, யெவ்வுயி ரெவ்வுல கெத்துறைக் கெல்லா, மவ்வடி கொடுத்த வருணிறை நாயகன்'' (கல். சக.)

ந. வேதமுனி - வாதவூரர்.

௪. கால்கட்ட - வாய்க்கால்களின் தலைப்பிற் படலிட. பயம் - நீர், அச்சம். 'பயங்கொண்டு...பயங்கொள்ள': மடக்கணி.

௫. வெள்ளமிகுத்த விடத்துப் பறையறைவித்தல் மரபு. சும்மை - ஒலி. மனம்கன்றி. என்னுகுமோ.

௬. கோல் - அளக்குங்கோல் ; அறை - வரையறை செய்த கோட்டம்; கோலால் அறுதிசெய்த இடமுமாம்; "குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுது மென்ன'' (திருவாத. மண்சுமந்த. ௩௩.)

௭. தண்டம் - தண்டனை; ௩௧: ௧௩.

(பி - ம்.) [1]'புனல்' [2]'மீனுகளப்பாய்த்தழுங்கி' [3]'இன்றேமுடிவென்றழிந்தொழிந்தான்' [4]'இன்னருள்' [5]'ஊருள்' [6]'சுமக்கத்தொடங்கினரால்'

முதுபேர்[1] நகரிற் றென்கிழை மூலை மனையி லிருப்பாளோ
ரிதமார் பிட்டு வாணிச்சிக் கிடுங்கோ லறைக்கோ ராளின்றி
விதிரா வழுது விழுந்தெழுந்து மேவு தண்ட மாற்றுமற்
பதிவா யுழன்று திரியுங்காற் கண்டா னெங்கும் பார்த்துள்ளான். (அ)

நாதப் பறையன் பெருங்குயத்தி பங்கன் றுங்க நஞ்சுண்டோன்
வாதைக் கிழவி பிட்டுதிர்க்கு மகிழ்ந்து மண்மீ துருக்கொள்வான்
சோதிக் காதிற் றழைசெருகிச் சும்மா டம்மா மதியாக்கிப்
பேதித் தறுதற் கச்சைபுனைந் ததிலே விட்டான் பெருங்கொடுக்கு. ()

மழுவைப் பிரமன் றலையோட்டை மண்வெட் டியுங்கூ டையுமாக்கி
யழகார் தோளின் மிசைவைத்தொன் றணிமா முடியிற் கவித்தொன்று
பழுதி லொழியா நகைதுளங்கப் [2]பதிறு ருண்டின் பருவத்துப்
புழுதி படைத்த திருமேனி பொலிய வலிய நடைநடந்தான். (௧௦)

வருந்து மவடன் பாற்கிட்டி வாரா யம்மே விழுந்தெழுந்து
பரந்து திரிகின் [3]றனையிந்தப் பார்மே னினக்கின் றென்போலத்
திருந்து கொற்றாள் கிடையாது வேண்டு மாயிற் செப்பெவரும்
விரும்பி யழைப்பப் போகாதிங் கணைந்தே னின்னை வேண்டியென. ()

வேறு.

நல்ல வவதரத்தே நண்ணினீர் நாயகரே
தொல்லை வினையறுக்குஞ் சொக்கே வறியகிலேன்
மெல்லியமெய்ந் நோவ வடிப்பரிகள் வேந்தராள்
வல்லையினின் மண்சுமக்க வல்லீரோ நீரென்றாள். (௧௨)

வேலை யுலகில் விறகு சுமப்பதல்லாற்
[4] சாலுமுடி மேல்வைத்துத் தண்ணீர் சுமப்பவன்யா
னேலவரு மண்சுமக்க வல்லே னிளையாமற்
கூலியெனக் கேது தருவா யெனக்கூற. (௧௩)

---

அ. விதிரா - நடுங்கி.

௯. நாதமாகியபறை; 'நாதப்பறையன்' என்பது "நாதப்பறையினர்" (திரு வா. அன்னை. ௧) என்பதைத் தழுவியது; நஞ்சுண்டோன்: சிலேடை. நஞ்சுண்டோனென்பது, கள்ளர்வகையில் ஒன்றன்பெயர். பிட்டு உதிர் - உதிர்ந்த பிட்டு. கொடுக்கு-ஆடையின் தொங்கல். இச்செய்யுளிற் சிலசாதிப்பெயர்கள் தொனித்தல் காண்க.

௧௧. அம்மே - அம்மையே. கொற்றாள் - மண்வேலை செய்பவன்; "மண் ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கக் கொற்ற ளாகி" (கல். ௪௯), "கொற்றாள விவரி லிங்கோர் கூடைமண் சுமந்தா ரில்லை" (௨௩) என்பவற்றாலு முணர்க. கொற்று, படியென்னும் பொருளிலும் வழங்கும்.

(பி-ம்.) [1]'பொன்னகரில்' [2]'பதினறியாட்டைப்' [3]'திரிகின் றனையென்ன' [4] 'சாலமுடி'

அந்தித் திருக்கும் பொருளில்லை யையரோ
கந்தித்து வெய்தாய் நறுவிதாய்க் கண்ணுக்குச்
சிந்தைக் குவந்திருக்குஞ் செவ்விகூர் பிட்டுண்டு
முந்தத் தருகுவல்யா னென்றாண் [1]முதுநரையாள். (கச)

சிட்டனருட் சொக்கன் றிருவுளத்துக் [2]கொத்தவணி
வட்டமுறு பிட்டென்ன வேண்டா வரைந்தம்மை
யிட்ட மதுகே ளெனக்கிங்கு நீயிட்ட
பிட்டுதிரு மாமென்றான் வேள்வி யவியுவந்தான். (கரு)

வேறு.

தக்கதோ மனிதர் பொல்லார் கோலறை தாழா தோங்க
விக்கணைத் தின்க [3]ணாற்றங் கரையடைந் தயின்றி வற்றை
யொக்கமண் வெட்டி முட்டச் சுமந்திடு முழப்பா தென்று
மிக்கமென் பிட்டுச் சுட்டுக் கொடுத்தனள் விருப்பங் கூர்ந்து. (கசு)

நின்றது வாங்கிக் கச்சைச் சுற்றுழை நெருங்கக் கட்டித்
தின்றிது போலொன் றில்லை சிவனறி குவனென் றாடி
மன்றலம் பொழில்சூழ் வையைக் கரைமருங் கடைந்து மாறா
வொன்றிய நகையி னோடு முலாவினு [4]னகில நாதன். (கஎ)

இனியன பெற்றா னல்லோ ரெவர்க்குமிட் [5]டயில்வ தல்லாற்
றனியயி லார்க ளென்று சாற்றுவார் பழையோ ரென்று
கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு
வினைபடச் சுமக்குங் கூலி வேலையா ளர்க்கு மீந்தான். (கஅ)

வளர்தரு பிட்ட னைத்து மாண்டபின் மீண்டு மெய்தித்
தளர்ந்திடே லம்மை சாலத் தளர்ந்தியான் பசியால் வந்தே
னளந்தகோ லறைபார் சென்று சிறிதொழிந் தவற்று ளெல்லாந்
துளங்கவா றுறச்சு மந்தேன் சொக்கனு ராணை யென்றான். (ககூ)

---

கச. அந்தித்திருக்கும் பொருள் - முடித்து வைத்திருக்கும் பொருள்; "வேதம், அந்தித்து மறியான்" (திருவிளை. நகர. க௦சு.) கந்தித்து - மணம்வீசி. உண்டு - உள்ளது.

கரு. வட்டமுறு பிட்டு - வட்டவடிமாகக் கிண்ணத்தாற் கொட்டி அமைத்து வைத்திருக்கும் பிட்டு; "கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு" (கஅ.) அம்மை: விளி.

கசு. உழப்பாது சுமந்திடும்.

கஅ. இச்செய்யுளின் முன்னிரண்டடிகள், "இனியவை பெறினே தனி தனி நுகர்கேம்" (பதிற். ருஅ: கங) என்பது முதலியவற்றைத் தழுவி வந்துள்ளன.

ககூ. அம்மை: விளி.

(பி - ம்.) 1 'நரைமுடியாள்' 2 'ஒப்பாநீ' 3 'யாற்றங்கரை' 4 'உலகநாதன்' 5 'அயிலினல்லாற்'

சுத்தமா வுதிரை வேண்டிச் சுமந்திடான் சுயந்தே னென்ன
வுத்தம மெய்தோய் மண்கண் டுவகைகூர்ந் தரசே யின்னுஞ்
சித்திரப் பிட்டுச் சுட்டுத் தருகுவல் செல்லு மென்று
[1] வித்தகப் பிட்டுச் சுட்டுக் கொடுத்தனள் வெம்மை கூர. (௨௦)

புகழ்ந்தது வாங்கி யொல்லை போந்திரும் புனலி யாற்றின்
றருங்கரை யடைந்து முன்போற் றுனையின் றெவர்க்கு நல்கி
யுகந்தகொற் றுளர் நாப்பண் வளம்பல வுரைத்து நல்ல
சுகம்பட வடைப்பான் போல வுடைப்பன்மண் சுமவா ளுகி. (௨௧)

ஓங்குகோ லறைய ளந்த வுயர்பெருங் கணக்க ரங்கட்
டீங்கறச் சுமக்கு நல்லா டெரிப்பதற் கிணையக் கண்டு
வாங்கரு விரைவி னோடும் வந்துபேர் சொக்க னல்லா
ளீங்கெனை யொப்பா ரில்லை யென்னைமுன் றெரியு மென்றான். (௨௨)

மற்றுள பெருங்கொற் றுளர் சுமவாது மருட்டி யெங்குந்
தெற்றிய விவனை யோமுன் றெரிப்பதின் றெனவி லக்கக்
கொற்றுள விவரி லீங்கோர் கூடைமண் சுமந்தா ரில்லை
முற்றுமிங் கியானே நின்று சுமந்தன னெனமொ ழிந்தான். (௨௩)

[2] செம்மையின் வேலை யொன்றுஞ் செய்தில னேனுஞ் சொல்லு
மம்மர்தீர் வார்த்தை யாலே யாரையு மழுப்ப வல்லா
னம்மையுங் கோளு ரைக்கத் தகுமிவ னென்ன நாடித்
தம்முளே வெருவி முன்னர்த் தெரித்தனர் தமிழ்க்க ணக்கர். (௨௪)

கொடியதின் கணக்கர் போகக் [3]குழம்புகொற் றுளர் நாப்பண்
முடியணை கூடை யாக முறுவல்கூர்ந் தினிய பாடித்
தடமிசைக் கொட்ட ணைத்துத் தாண்மிசைத் தாளே யிட்டுக்
கிடையற வுலக மெங்கும் படர்ந்தவன் கிடந்தான் மெல்ல. (௨௫)

வளர்கரை பார்ப்பான் வந்த மன்னவன் மனிதர் கண்டு
கிளரமண் சுமவா ளுகிக் கிடப்பவன் யாவ னென்னத்
தளர்வுடை வேலை யாளர் சாற்றுவார் மற்றிவ் வூரு
ளொளிவளர் பிட்டு விற்பா ளிட்டவா ளெனவு ரைத்தார். (௨௬)

---

௨௦. என்ன - என்றுசொல்ல. உதிரை - பிட்டு. 'வித்து நெற்பிட்டு' என்ற பாடத்திற்கு விதைநெல்லரிசியாலாக்கிய பிட்டென்று பொருள்கொள்க.

௨௨. கோலறையை. நல்லாள் - நன்மையையுடைய ஆட்களை. வாங்கு தல் - கொள்ளுதல்.

௨௩. கொற்று - கொத்து.

௨௫. குழம்புதல் - கலக்குதல். கொட்டு அணைத்து- மண்வெட்டியைத் தழுவிக்கொண்டு. கிடை - கிடத்தல்; ஒப்புமாம்.

(பி - ம்.) [1]'வித்துநெற்பிட்டு' [2]'செம்மையன்' [3]'குழப்பு'

நெறிப்படக் கிடப்ப தென்னே வடிவனீ நின்னே யாருந்
துறைச்சமை யாளென் றிங்குச் சொல்கின்றா ரின்று னக்குக்
குறித்தகோ லறையி [1]லாங்கோர் கூடைமண் ணிட்டா யில்லே
கறுத்ததி காரிக் குன்னைக் காட்டுவம் போது கென்றார். (உஎ)

நல்லகா ரியம தென்று நயந்தவ ரோடுஞ் செல்லக்
கொல்லெறி யடிகுத் தென்று கூற்றெனத் தண்டஞ் செய்யும்
வல்லதி காரி கண்டு மனத்ததி சயித்துச் சால
மெல்லிய வடிவ னீயார் விளம்பிடு விளங்க வென்றான். (உஅ)

தந்தைதாய் நட்டோ ருற்றோர் சகோதரர் [2]பொருளொன் றில்லே
யிந்தமா நகரி லியானோர் மூலேயி லிருக்குங் கொற்ற
ளுய்ந்திட வெவர்க்கு நாளு முதவுவ லென்னைக் கொண்டு
பந்ததி காரிக் கென்ன காரியம் பகர்தி யென்றான். (உகூ)

புத்தியு ளொழியாச் சீற்றம் பொருந்ததி காரி நல்ல
பத்திசேர் குணவான் போலப் பகர்ந்தனே [3]பகுந்து னக்கு
வைத்தகோ லறைக்கோர் கூடை மண்சுமந் திட்டா யில்லே
யுத்தரஞ் சொல்லா நின்றாய் கண்டில முனைப்போ [4]லெங்கும். (௩௦)

சதமுறை யடித்தற் குன்னைத் தகுந்தகா தல்ல வுன்றன்
விதமுறு வடிவங் கண்டே மெய்யொருப் பட்ட தில்லே
யதர்பட விரைவொ டும்போ யடையடி படாதென் றேவப்
புதியவ னடையா ளுகிக் கிடந்தனன் போந்து முன்போல். (௩க)

வேறு.

அவ்வயினில் வெய்ய வரசன் விடையின்வருஞ்
செவ்வி முறைசெய்வோர் தீரக் குறைபார்த்துக்
கவ்வை விளைத்து வருங்காற் கரையழிந்து
தவ்வுபுனற் கோலறையைக் கண்டார்க டாழ்வாக. (௩உ)

---

உஎ. வடிவன் நீ - அழகுடையவனாகிய நீ: "மெல்லிய வடிவனீ' (உஅ.) கறுத்த - கோபித்த; தொகுத்தல்; கறுத்தென்றுமாம்.

உஅ. நயந்து அவரோடும்.

உகூ. பந்து - வந்து; திசைச்சொல்; இது 'வைத்து' என்பதுபோலப் பொருளின்றிப்பயிலுவதொரு சொல்.

௩௦. பகுந்து - பங்கிட்டு.

௩க. சதமுறை - பலமுறை. அதர்பட - வழிபட.

௩உ. தீரக்குறை - கரையின் குறையை. கவ்வை-துன்பம்; ஒலியுமாம். தவ்வுதல் - தாவுதல்.

(பி - ம்.) [1]'இன்றோர்' [2]'பிறரொன்று' [3]'பணித்து' [4]'இங்கே'

காய்ந்து விரைவி னிகலிக் கறங்கென்னச்
சேர்ந்து சுமக்கின்ற சிற்றாளை யெற்றுபுன
லூர்ந்தகரை யெங்கு முயர வுயராமற்
றூழ்ந்ததிது யார்கோ லறை[1]விரைவிற் சாற்றுகென. (௬௩)

மன்ற றிகழ்பிட்டு வாணிச்சி கோலறையீ
தின்றிங் கவளிட்ட கொற்ற[2]ளிவனுழப்பி
வன்றிறலீர் யாங்கள் சுமப்பமதி யாதுகிடந்
தின்று விளையாடு கின்றான்போ யென்றார்கள். (௬௪)

வெந்தழல்கண் சிந்த வெகுண்டாங் கவர்கண்டு
சிந்தைசிறி தஞ்சாது தீரத்து மண்சுமவா
திந்த விளையாட லெக்கா ரணமென்னக்
கந்தரனோ வச்சுமப்பல் காரணமொன் றில்லென்றான். (௬௫)

இன்று விரைவி லெழுந்து சுமவாயேற்
பொன்ற வடிப்பமென வஞ்சினன் போலெழுந்து
மன்றறிகழ் கொட்டா லொருகூடை மண்வெட்டா
வென்றிமுடி மேல்வைத்து மெல்ல நடையிட்டான். (௬௬)

வேறு.

உன்னவரி யான்மேன்மை யங்க யற்க ணுமைகொங்கை படச்சிவக்கு மெய்யன் முற்றுங், தன்னுருவ மென்னுமது மண்ணிற் காட்டத் [3]தளருநடை யிடக்கண்டு தண்டஞ் செய்யுந், தென்னன்முறை [4] செய்வோர்க ளங்தோ விந்தச் சிற்றாயக் கொற்றாளின் [5]கையிற் சற்று,நன்மையிலே [6]யுடைப்படையா னெனப்பி டித்து நடுமுதுகிற் கறுத்தடித்தார் சிவக்க நாடி. (௬௭)

வேறு.

மன்னிட வடிப்பக் கங்கைக் கரையுயர் மண்ணை யோங்கக்
கன்னலசேர் செந்நெல் வைகைக் கரையிடா முறுவ லோடு
மென்னையே னடிக்கின் றீரென் றியைந்தகொற றாளர் நாப்பண்
டன்னுரு வொளித்தான் புக்குத் தன்னைத்தான் பிடித்த டித்தான்.()

படுமெழு மதியை நந்தம் பாண்டியன் மரபெ னத்தான்
முடிமிசைச் சுமத்த லன்றி முடிமிசை யுவந்து வைத்த
வடிவுடைக் கங்கை யாறு தென்னவன் வைகை [7]யாற்றிற்
கடிபட மண்சு மந்தா னவன்றிரு வருளுக் குண்டோ.* (௬௯)

---

௬௮. கங்கைககரையுயர்மண் - திருமுடியில் வைத்திருந்த மண்.

௬௯. திருவருளுக்கு உண்டோ - திருவருளுக்கு எல்லையுண்டோ.

* இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 1‘என்றுசாற்றுகென’ 2‘அவன்’ 3‘தள்ளி’ 4‘வாரியர்கள்’ 5 ‘னகையின்றுற்றும்’ 6 ‘அடைப்பனென்ப’ 7‘யாற்றி, லடி’

இறையவ னொளிப்ப நின்ற விறைமுறை செய்வோ ரோடிக்
கறுவியெங் கொளித்தா னென்று நேடிமுன் காணா ராகி
வெறிகமழ் பிட்டுச் சுட்டு விற்பவ ளிடத்தி மைப்பிற்
குறுகியாங் கவளைக் கண்டு தண்டிப்பான் கோலி னார்கள். (௪௦)

ஆங்கவர் கோலா [1]முன்ன ரருளினா லெவருங் காண
நீங்கரு மிளமை பெற்று நிலத்தினின் றெழுந்து தெய்வப்
பாங்குடை யுருவத்தோடும் பரசிவ லோகத் தேகத்
தேங்கிய முறைசெய் வோருந் திகைத்ததி சயித்து நின்றார். (௪௧)

வேறு.

அடித்தபுளி மாறுபல சொல்வ தென்னை யரசன்முது கோவல்ல நம்பி ராட்டி,முடிக்குரிய விந்திரனான் முகன்மா லாதி முப்பத்து முக் கோடி தேவர் தம்மிற், பிடித்தவரி லடித்தவரிற் பாலர் பார்ப்பார் பெண்டிரின் மூத்தோரி னிற்ப வற்றி, னடப்பவற்றிற் பறப்பவற்றி னூர்ப வற்றி னடுமுதுகி னிடைப் [2]புடைப்பு நணுகிற் றன்றே. (௪௨)

பொருந்துதலத் தோர்நகரோர் புறத்தோர் நாட்டோர் பூழியன் பாற் சென்றறிவ மென்று சென்று, வரைந்தொருவன் மேலடியிங் கியாவர் மாட்டு மன்னியதென் னெனமாறன் [3]மாற னென்றாங், கரும்பெயர்பெற் றோனுந்தன் முதுகு காட்டி யருட்சொக்க னறிகுவ னென் றிருப்ப வாங்கண், டிருந்த வெழுந் ததுவிசும்பி லெவருங் கேட்பத் திருவாக்குத் திருவாத வூரர்க் காக. (௪௩)

பாண்டியனே வேதஞ்சொல் [4]யாண்டு வாழி பாக்கியமன் னாநமக்கு வாதவூரன், பூண்டதொண்ட னிவன்முகத்தா னம்மு ளோர்க்குன் பொருளறத்தின் வந்ததனால் வாங்கி யிட்டேம்,வேண்டுவன பரியுமிட்டேம் விடுவித் தற்குன் வேலையின்மண் சுமந்தடியும் பட்டு முண்டே, மீண்டுவிடு விடுநினக்கே நன்மை சால விவனைத்தன் வழி திரிதற் கிரங்க லென்றே. (௪௪)

---

௪௧. பிட்டு வாணிச்சி ஏக.

௪௨. புளிமாறு-புளியின் மலாறு. புடைப்பு-அடியாலுண்டாகிய வீக்கம்.

௪௩. மாறனென்பதன் பெயர்க்காரணத்தை இங்கே புலப்படுத்தி யிருத்தல் அறிதற் பாலது.

௪௪. வேதஞ் சொல்யாண்டு - நூறுபிராயம். இவன்முகத்தால் - இவன் வழியால். விடுவித்தற்கு - சிறையினின்றும் நீக்குதற்கு. தன்வழி திரிதற்கு இவனை விடுவிடு.

(பி - ம்.) [1]'முன்னின் றருளினால்' [2]'புடைப்ப' [3]'மாறனென்றோங்கு' [4]'யாண்டும்'

அந்தவுயர் திருவாக்குத் தோன்றயாரு மதிசயித்து மன்னவனை நோக்க மன்னன், சிந்தைபய மெய்ந்தியுறு புளகத் தோடுந் தேவர் பிரான் பரிமதுரைத் தெருவி லேறுங், கொந்தகன்வாக் கிதுபரிமாற் றுறுதி யென்று கொடுஞ்சிறையின் விடுத்தருகு வரவ ழைத்து, வந் தனைசெய் தினியபல வுபசா ரத்தால் வணங்கினான் றிருவாத வூரர் தாளில். (சரு)

சார்ந்தவென தறியாமை யாலே மிக்க தாழ்வுகள்செய் தேன வற்றைப் பொறுத்துச் சாலச், சேர்ந்தருகிங் கெழுந்தருளி யிருப்பீர் போவீர் [1]திருவுளத்தி லடைத்தபடி செய்யுந் தூய,வேந்தர்[2]புக ழுருட் சொக்கர் நும்மேல் வைத்த மெய்யன்பு வையகத்துக் [3]கண்டே யில்லை, யேந்துதிரு வாதவூர் நாய னீரே யெனத்துதிப்ப யாரும்[4]வியந் திறைஞ்சி னார்கள். (சசு)

செந்நெறிசேர் விசும்பிடையிற் றோன்றுஞ் சொல்லைத் திருவாக் கே யெனத்தெளிந்தாய் தேவே யுன்னை டையா, நின்னையடைந் ததுகொண் டிப் பேறுபெற்றே னீக்கரிய வெம்பாசத் [5]துவக்க றுத்தே, னென் வழியிற் போகுவலின் றையநீக்கி யிணையில்லா வெந்தையையுன் டென்று ணர்ந்த, வுன்னருமைப் பிரமாணத் தானின் செல்வ மோங்கி யிடுந் தீங்கின்றி யுண்மை [6]யென்றே. (சஎ)

வேறு.

வைத்தரு ணமச்சி வாய வாழ்கவென் றெடுத்தாங் கோதி
யுத்தமர் போகக் கண்ட வுவகைகூர் செழியர் கோமான்
பத்தியிற் பின்சென் றேத்திப் பணிந்துநல் விடையிற் போந்து
சித்திர மண்ட பத்து ளிருந்தனன் செயலை வாழ்த்தி. (சஅ)

வாழ்ந்தருள் பெற்ற வேந்தன் மந்திரித் தலைவ ரைப்பார்த்
தேய்ந்தகா ரியநதா னுவ தழிவறுங் கிணி[7]நீள் வாரி
சூழ்ந்தமா நிலத்துத் தூய சூத்திர ரொழிந்து நீதி
வேந்தர்மாட் [8]டமைச்சி னுக்கு வேதிய ராகா ரென்றான். (சகூ)

---

சரு. மதுரைத் தெருவிற் பரியேறும். கொந்தகன் - படைத்தலைவன்; "கொந்தகப் பெருமானென்கிற,நன்னெறிப்பட்டங் கட்டி நல்கினான் பரிவட்டங் கள்", "கொந்தகப் பெருமான் கேண்மோ" (சு0: உஎ, ௩அ.) பரிமாற்று - குதி ரையை மாற்றுதல்.

சஅ. 'நமச்சிவாய வாழ்க' என்பது, திருவாசகத்திற் சிவபுராண அக வலின் முதற்குறிப்பு.

சகூ. தூயசூத்திரர் - சற்சூத்திரர்.

(பி - ம்.) 1 'திருவுள்ளத்து' 2 'புகழ்தரு' 3 'கண்டதில்லை' 4 'வீழ்ந்து' 5 'தொடக்கு' 6 'ஈதால்' 7 'நீர்' 8 'அமைச்சுநன்னூல் வேதியராகாது'

தொன்னெறி வாத வூரர் சொக்கனா லயத்துப் புக்கின்
றென்னையா ளுதற்கு நாதா வினப்பரி [1]யிட்ட தன்றி
மன்னிய முடிவ ருந்த மண்சுமந் தனையே யந்தோ
[2] வன்னமா மேனி நோவ வடியுமுண் டனையே யென்ன. (௫௦)

உத்தர கோச[3]மங்கை கழுக்குன்றுங் குருவங் கண்டு
சித்திரக் கோவை பாடித் தில்லையம் பலத்து வாவென்
றத்தன்வா னத்து ரைப்பப் போந்தருந் தமிழ்கள் பாடிப்
புத்தன்வா தையும்வென் றியாரும் போற்றுபொற் பதம டைந்தார். ()

தொல்லைமா மன்ன னெந்தை சுத்தனை விருப்ப வேடன்
பல்லுமு மிறைச்சி நஞ்சம் பாலக னிறைச்சி யம்மை
நல்லபிட் டயிலக் கண்டே நல்லடி யார்க்கு நல்லான்
மெல்லியல் பாக னல்லால் யாருள ரெனவி யந்தான். (௫௨)

பொருவருங் கோயின் முற்றும் பொன்னினான் மேய்ந்தி யாரும்
பரவவெண் குடை[4]க ளாசி பகடுசா மரை[5]து சேறு
னரிவையர் முதலா நல்கி முன்னையி னன்பு பூண்டு
தரையினை யளவில் காலந் தருமநன் னெறியி னாண்டான். (௫௩)

வெருவரு முறமும் பட்ட வெந்திற லடியும் வேய்ந்த
வொருதனிக் கூடை மண்ணு முயர்ந்தநீள் கரையு மூத்த
நரைமக னுயர்து றக்க நண்ணிய வாறுங் கண்டு
பரவிய மனிதர் முன்னிற் பலபெருஞ் சிறப்பின் வாழ்ந்தார். (௫௪)

நிறைவுறு மதியங் கண்ட நெடுங்கடல் போலச் செல்வம்
பிறிவற விளங்கி மன்னன் பெருந்தம்ப ருலகம் பெற்றான்
மறைபறை யிறைவன் [6]பிட்டுண் டடியுண்டு மண்சு மந்த
வுறுகதை கற்போர் கேட்போ ருயருல காளவ ரன்றே. (௫௫)

---

௫௦. அன்ன: நெஞ்சறி சுட்டு. மா - அழகு. என்ன - என்று திருவாத வூரர் துதிக்க.

௫௧. சித்திரகோவை - திருச்சிற்றம்பலக்கோவையார்.

௫௨. மன்னன் - பாண்டியன்; எழுவாய். வேடன - கண்ணப்பர். பாலகன் - சிறுத்தொண்டரின் புதலவர். அம்மை - செம்மனச் செல்வி (பிட்டுவாணிச்சி.) அடியார்க்கு நல்லான்: "ஒரு அடியார்க்கு நல்லான் கன்றல் வேண்டா னமக்கோர் கருணையுள்ளான்", "அடியார்க்கு நல்லானே காயகன்" (௩௫: ௬, ௧௬.)

௫௩. மேய்ந்து - வேய்ந்து. ஏறும் ஆனும்.

௫௪. உயர்துறக்கம் - சிவலோகம்.

௫௫. பறைதல் - சொல்லுதல். இறைவன் - சிவபெருமான்.

(பி - ம்.) [1]'இடுவதன்றி' [2]'அன்னமார்' [3]'மங்கைகரினுமுருவங்காட்டி' [4]'காளாஞ்சி' [5]'துசென்றுங்கு' [6]'பிட்டினடியுண்டு'

சுந்தர னவதா னங்கள் சொல்லுவோர் நினைப்போர் கேட்போர்
சந்தத முனிவர் வானோர் சாரணர் சித்த ரேத்த
முந்தொளி விமானத் தெய்தி மூவுல கத்தி னோடு
மிந்திரன் முடிமேற் றாள்வைத் தேறுவர் சிவலோ கத்தே. (௫௬)

ஆகத்திருவிருத்தம் - ௭௭௧.

---

## ௩௧.—விருத்தகுமாரபாலரான திருவிளையாடல்.*

சீர்விளங்கு முன்னொருகாற் பாண்டி நாட்டுச் சிறந்தபெருங் கிராமத்தோர் மறையோன் செல்வம், பார்புகழுங் குலமொழுக்கம் விழுப்பமிக்கோன் பணிமதுரைச் சொக்கற்கே பத்தி பூண்டோன், பேரியலாண் மகவின்றி யருமை யாவோர் பெண்பயந்து வேகத்தால் வடிவாற் சொக்கை, நேரவரு முயர்பிரம சாரிக் கிந்த நேரிழையைக் கொடுப்பமென நிச்ச யித்தான். (௧)

இத்தகவி னிருந்தோனென் டொடிக்கு நல்யாண் டெட்டுநிறைதருகாலை யோதி மிக்க, [1]புத்திரிபேர் பாகவதப் பிரம சாரி புக்கிலுழைப் பிச்சை கொள்வா னனுநக் கண்டு, வித்தையினால் வடிவான் மற் றொன்றுங் காணன் விரைவொடுகன் னியையுதகஞ் செய்யக் கண்ட, சுத்தமுடை மாதாவுஞ் சுற்றத் தாருந் துயருழந்து நனிவெகுண்டு சோகங் கூர்ந்தே. (௨)

குன்றமனங் காதையைபிப் பிரம சாரி குடிமுதல்கே ளாதினிய வேதங் கொண்டே, நன்றிபுனை கன்னிதனை யுதகஞ் செய்தாய் நன்றறியா யென்றிகழ நல்ல தாதை, யொன்றியிவன் கோத்திரசூத் திரங்கேட் பாமிங் கும்பர் பிரா னருளினு [2]லொத்த வாயி, னின்றிது காண்

௫௬. அவதானங்கள் - திருவிளையாடல்கள்.

(௩௧)

௧. பெருங்கிராமம் - ஐந்நூறு குடிகள் நிறைந்தவூர்; (சூடா. இடப்பெயர். ௩௬.) புல்லையென்னு மூரில், கௌரி அவதரித்தனளென்று சுந்தரபாண்டியம், கௌரிச்சருக்கம், முதற்செய்யுள் முதலியவற்றால் தெரிகிறது.

௨. பாகவதப் பிரமசாரி - வைணவப்பிரமசாரி. புக்கில் - வீடு. உதகஞ் செய்ய - தாரைவார்க்க.

௩. மனங்குற. கன்னி-எட்டுப் பிராயமுடையவள்; "அகவை யிருநான் குடையாள் கன்னி" (மாயூரப்புராணம்.) இடுகுறி-இடப்படு நெற்றிகுறி.

* "பாலவிருத்தருமானார்தாமே", "பாலவிருத்தனு மானான்கண்டாய்" (திருநா. தே.)

(பி - ம்.) [1]'புத்தியன்' [2]'ஒத்தசாயின்'

பேமென்று கேட்பச் சொன்ன னிடுகுறிகோத் திரமுதன்மற் றியா வுந் தோன்ற. (௩)

இன்பமுறு பாகவத னியாவுஞ் சொல்லி யிடுகுறிவே றென்னலு மே யேங்கி நின்றோ, ரன்புமுதற் பலகுணங்க ளுண்டா லுை மவ னிமீ தொருகுற்றம் யாவர் மாட்டுந், துன்பமுற வுண்டாகா திராது வேத சூத்திரங்கோத் திரங்கல்வி யொழுக்க மற்று, [1]நன்புதரப் பெற் றேமென் [2]றுறியாரு நலந்திகழ்மா தாவையுஞ்சொன் னயத்தா லாற்றி.

தந்திர நூன் மறைவிதியிற் சாறு செய்தே சடங்குமுடித் துதக நெறி தப்பா வாறு, முந்தவளித் தினியபல நல்கி நல்ல மொழிமொழி ந்து வழிவிடுப்ப வணங்கி னேடுஞ், சிந்தைமகிழ் தருமறையோன் மாம னீந்த செல்வமொடுந் தன்பதியிற் செல்லக் கண்ட, பந்தமுறு தந்தைமுத னல்லுற் றோர்கள் பரிவுகள்செய் தெதிர்கொண்டார் பண் பின் வாழ்த்தி. (௫)

ஆங்கினிய பரதேசம் போன பிள்ளை யணிபொலிய மணஞ்செ ய்து மாதினோடு, பாங்கின்வர வென்னதவஞ் செய்தா யென்று பலர் புகழக் கண்டிருந்தும் பாவி மாதா, வீங்கிவளோர் சைவன்மக ளென் னக் கேட்டா ளெரிதருவெப் பத்தினொடுந் தலையை மோதித், தாங்க லருந் துயருழந்தா ணெடிது யிர்த்தாள் சாற்றுமா றென்னென்று டணியா ளாகி. (௬)

வ்ளமைமறை யோனிறைவன் செயலா லந்த வடிவுநிறை பவித் திரைபான் மனம்வை யாம, லிளமைதரு பருவத்தே யிருப்ப நாளு மீசனுக்கே மனம்வைத்த நேச வல்லி, யளவிறந்த பாகவதர் புசித்தல் கண்டாண் டாழ்துயருற் [3]றின்னமுது படைத்து நந்தந், தளர்வகல நுதனீறு விளங்க விங்கோர் தவமுனிவர் நணுகாரோ வென்பாள் சாற்றுள். (௭)

முன்னையவ னல்வினையான் மாமன் மாமி முதலாவவ் வுழைநின் றும் பிறிதோ ரில்லத், துன்னருமோர் காரணத்தாற் போக வோர்நா ளுற்றவர்கட் குற்றவன்மற் றியாவும் வல்லான், றென்னனையா ளுடை மதுரைச் சொக்கநாதன் றிருநீறு விரன்மூன்றுந் திகழச் சாத்தி, [4]மின் னணிநூன் மணிமார்பில் விளங்க மூத்த விருத்தர்தள ருருக்கொண் டான் விரும்பி மாதை. (௮)

---

௪. வேதசூத்திரம் - வேத சம்பந்தமான சூத்திரங்கள்.

௫. சாறு - கலியாணம். நெறிதப்பாவாறு உதகம் அளித்து; உதகம்- தாரை. இனியபல - ஸ்திரீதனங்கள்பல. பந்தம் - உறவு, முறை.

(பி - ம்.) [1]'நன்கு' [2]'றரியாரும்' [3]'யாமமுது' [4]'மின்னொளி'

வேறு.

முன்வளை தனுவன தனுவு மூத்ததோர்
பன்னக வுரியன பழைய மேனியு
[1] மென்மா லனநரை முடியும் வீழ்ந்தெழு
நன்மைகொ டளர்நடை யொடுந டுக்கமும். (௯)

கையுறு குடையொடு தண்டுங் காதினிற்
செய்யகுண் டலமும்வீ ழுடையுஞ் செவ்விசேர்
துய்யபுன் முறுவலுந் துளங்க மங்கலத்
தையனீ பிச்சையி டென்னச் சார்ந்தனன். (௧௦)

வேறு.

உழையிடை யமுது படையெனக் கண்ட வுத்தம வணங்கெதிர் வணங்கித், தொழுதுபே ருலகிற் றனிவிளை யாடுஞ் சொக்கனே வறிதிலே னடியே, னெழினுத னீறு காணுமுன் போன திடரென்ன புண்ணியஞ் செய்தே, னழகுடன் றிகழுந் தலைவரே யமுதென் றகத்தினு ளெழுந்தரு ளுதற்கே. (௧௧)

நாதனே கடியள் [2]கொடியளென் மாமி நன்குள வறைக்கத வடைத்திப், போதிலோ ரகத்துப் போயின ளமுது படி[3]புறம் பில்லையென் செய்கே, ேனதுமே லமுது செய்யுமா றென்ன வுத்தமன் சித்திர வணங்கே,[4]சோதுசேர் கதவந் திறக்குநீ செலுங்காற் [5]றுணிந்தினி யகம்புகுந் தெடுத்தே. (௧௨)

பரிவொடு பருப்பு மன்னமு மாகப் படைவயிற் றுறுபசி பெரிதென், றருள்பட வுரைப்பக் கேட்டலும் பதறி யறைக்கடி வாயிலிற் செலுங்கா, லூரனுறு கதவஞ் [6]சடக்கெனத் திறப்ப வொண்டொடி கண்டதி சயித்து, [7]விரைவினுட் புகுந்து சிறந்தன வெடுத்தாங் கமைத்தனள் விருப்புடை யடிசில். (௧௩)

---

௯. தனு - வில், உடம்பு. மாலன - மால்காரை யொத்த.

௯ - ௧௦. இந்த இரண்டு பாடல்களும், "அணங்கா வுரித்ததோ லனைய மேனியன், வணங்குநோன் சிலையென வளைந்த யாக்கையன், பிணங்குநூன் மார்பினன் பெரிதொர் புத்தக, முணர்ந்துமூப் பெழுதின தொப்பத் தோன்றினான்", "வெண்ணரை யுடம்பினன் விதிர்தத புள்ளியன், நுண்ணவி ரறுவைய ஞெரிந்த கோக்கினன், கண்ணவிர் குடையினன் கைத்தண் டேன்றினன்" (சீவக. ௨00௯ - ௧0) என்பவற்றை யொத்துவிளங்குதல் காண்க.

௧௧. படை: ஏவல்.

௧௨. அமுதுபடி - அரிசி. மேல் அமுது செய்யுமாறு ஓது மென்ன.

௧௩. படை - படைப்பாய். சடக்கென - விரைவாக.

(பி - ம்.) 1'மின்னமர் நன்னரை' 2'கொடியளம்' 3 'புறமில்லை' 4 'சோதிநீள்' 5'துணிக்துநீயன்புகூர்ந்து' 6 'சடனெனத்' 7'விரைவொடு'

அரம்பையங் குருத்து மருங்குற விரித்தாங் கடைவின்மென் போனகம் படைப்ப, [1]விருந்தின னுதர பூரண மாக வுண்டெழில் வி ரைமணக் கோலப், பெருந்தக விலங்க வெண்ணிரண் [2]டாட்டைப் பிள்ளையாய் விளங்கினன் கண்ட, கருந்தடங் கண்ணி யதிசயித் [3]தஞ்சி நின்றனள் காமனும் வருத்த. (கச)

வேறு.

வாசிகை முடிபி றங்க [4]மார்புதாழ் மாலை மின்னத்
தூசெழின் மருங்கி லங்கத் துளங்குதண் கலவை சாத்தித்
தேசுடை யணிய ணிந்து திருமுகங் கவினெ றிப்ப
வாசைகூர் தருமெய் கொண்டு விளங்கினு னநங்க [5]னுண. (கரு)

இந்நெறி நிகழுங் [6]காலை யேந்திழை [7]தனது மாமி
பொன்மனை வாயில் [8]வந்து புகுந்தவர் யாரோ வென்ன
வன்னமோர் [9]மாற்ற மின்றி யங்கையை நெரித்து நின்றாள்
பன்னகா பரணன் கண்டோர் பாலக னுருவங் கொண்டான். (கசு)

வேறு.

துன்னுபன் மணியி னல்லணி சிறந்த [10]தொட்டிலுட் பட்டணை நிரம்பப், பொன்னரை ஞாணு நன்னுத னீறும் பொலியநோக் கஞ்ச னந் [11]துலங்க, மென்னகை செய்து தன்னடி மலரின் மேதகு பெரு விர லமுதுண், டன்னையில் புதல்வன் முன்விளை யாடி யழுதனன் பவளவாய் நெரித்து. (கஎ)

அவ்வயின் வந்த தீவினை மாமி யகத்திடைப் புகாமுனங் கண்டே, வெவ்வுரை யோடு முள்ளழன் மண்டி வெகுண்[12]டுமுன் னிவ்வணைக் கிடந்த, செவ்விய பால னாரென வினவத் தேவியுந் தெருமர லுற்றுக், கொவ்வையங் கனிவாய் திறந்துரை செய்வாள் கூடலு யகன்றிரு வருளால். (கஅ)

வேறு.

தீதிலா வடிவி னேங்குந் திருவினு ளென்றோர் மிக்க
மாதவ முடையா ளிந்தத் தொட்டிலுள் வளர்த்தி வைத்திப்
போதுதன் கணவ னேடும் போயினு ளேக்கிக் கொள்ளென்
றூதர மாமி கேளென் றடைவினி [13]ளெடுங்கிச் சொன்னுள். (ககூ)

---

கரு. வாசிகை - மலர்மாலை.

கஎ. பட்டு அணை - பட்டாலாகிய அணை. நோக்கு - கண்ணில். அன்னையில் புதல்வன் - தாயில்லாத பிள்ளை; பிறப்பில்லாதவர்; "தாயில்லாப் பிள்ளை முகந்தனை நோக்கி" (திருவிளை. விருத்தகுமார. கூஉ.)

ககூ. திருவினுள் - லக்ஷ்மி. வளர்த்திவைத்து - தூங்கச் செய்துவைத்து விட்டு.

(பி - ம்.) 1'இருந்ததினுதர பூரணமாவுண்டெழிதரு' 2'ஆண்டிற்' 3'இறைஞ்சி' 4'மார்பினின்' 5'னென்ன' 6'வேலை' 7'தன்னம்' 8'வந்தாள்' 9'வார்த்தை' 10'தொட்டிலும்' 11'துளங்க' 12'டுறமில்' 13'ஒதுங்கிச்சொல்வாள்'

தரும்பிறர் பாலன் றன்னைத் தையலாய் நீயோ காப்பா
யிருந்தவா றழுகி தைய கோவென [1]விடித்து [2]வீழ்த்துப்
பரந்தவொண் டொட்டி லோடும் பாலனைப் புறத்துப் போக்கி
[3]வருந்திடக் கதவ டைத்தாண் மருமக டனையுந் தள்ளி. (௨0)

வள்ளன்மென் முறுவல் கூரா மழவுருக் கரந்து பண்டைத்
தெள்ளுபே ருருவங் கொண்டு தீதிலா மடமா துக்கு
மொள்ளிய கற்பான் மிக்க வுமையுருக் கொடுத்துக் கூட்டி
மெள்ளயான் சொக்க னென்று போயினன் விசும்பிற் காண. (௨௧)

அடியவர்க் கெளிய சொக்க னருடனைப் பாரீர் காணப்
பொடியணி மாது போன புதுமையைப் பாரீ ரென்று
படிமிசை யோர்க ளெல்லாம் பரவினர் நெடுமா [4]லேத்தக்
கடிகமழ் சடையி னானுங் காவல்சேர் மதுரை புக்கான். (௨௨)

ஆகத்திருவிருத்தம் - எ௯௩.

## ௩௨.—மாறியாடின திருவிளையாடல்.*

முன்னமோர் காலந் தொல்லை முறைமையி னவனி காத்து
மன்னுமோர் தென்னர் கோமான் மதுரையம் பதியி லோங்கும்
பொன்னெயி லிலங்கு கோயிற் புனிதனுக் கன்பு பூண்டு
பன்னெறித் தானை சூழப் பகையற வாழு நாளில். (௧)

குன்றவி லீச னுடுங் கூத்தினைக் கற்க லாகா
தென்றஃ தொழிந்த கல்வி யாவையு முறறக் கற்று
வென்றிகொ ளுமை மெண்ணெண் கலைவலலா னெனவி ளம்பி
யொன்றிய புகழை யெங்கும் பரப்பினு னுலகத் தோங்க. (௨)

அன்புறு வளவன் மிக்க சீர்த்திகேட் டாடன் முன்னு
மின்புறு கலைகள் யாவுங் கற்பமென் [5]றிகலிக் கற்றுத்
தன்பெய ருலகி லெண்ணெண் கலைவல்லா [6]னென்று சாற்றி
நன்புட னிருப்ப வாங்கோர் பாடக னடைந்தா னுடி. (௩)

(௩௨)

௨. அஃது - பரதநூல்.

௩. மிக்க சீர்த்தி, பாண்டிய னுடையது. வளவன்கேட்டு. இகலி-மாறு பட்டு; "இகல்விட்டு" (௨௩) என்பதனால் சோழன் இப்பொழுது மாறுபட்டிருந் தமை வலியுறும்.

* "பஞ்சவ னிறைஞ்ச வன்புடன் வேண்ட, மாறிக் குனித்த நீறணி பெரு மான்" (கல். ௨எ.)

(பி - ம்.) 1'அடித்து' 2'வீழ்க்கு' 3'வருநதிவன்கதவு' 4'வாழ்த்த', 'போற்ற' 5'இகலிற்' 6'என்னச்'

எந்தைகேண் முற்றுங் கற்றோர் நீயலா துண்டோ வென்று
முந்துறப் [1]புகழ்ந்து வாழ்த்தி முடிவில்பல் சிறப்பு நல்க
வந்தநல் வரிசை யிற்போர் தாடக மாடக் கூடற்
கந்தனை யனைய கல்விக் கைதவன் றன்னைக் கண்டான். (௪)

மனத்தினைக் கவரு நல்ல வார்த்தைகள் சொல்ல வல்ல
வினைக்கொள்பா டகன்வ ணங்கி மீனவர் குலவி ளக்கே
கனத்தமா நிலத்து ளெண்ணெண் கலைவல்லா னென்னு நாம
நினக்கல வனைத்தும் வல்ல நேரியற் காகு மன்றே. (௫)

வளம்படு கூத்தும் வல்லன் மற்றதோ வறியாய் நீயென்
றுளம்பட வஞ்சா னாகி யுரைத்திடக் கேட்ட மாறன்
றளர்ந்துரை செய்வான் கல்வி சாற்றின்மா நிலத்தி யாவு
மளந்தறி வாரு முண்டிங் கறிந்திடா தாரு முண்டே. (௬)

இன்னியல் வாண வென்ன யாசக னுக்கு மென்று
பின்னரு முரைப்ப வுட்கிப் பேசரும் விளிவிற் [2]கூடி
மன்னவன் காட்டா னாகி [3]வாழ்த்தியா சகனை வேண்டும்
பொன்னணி யாடை நல்கி விடுத்தனன் பொலிவு கூர. (௭)

மந்திரி கட்குச் சொல்லி வழங்கிய விருதை நோக்கி
யந்தவொண் புயங்க நட்ட மாடிட வேண்டு மென்று
சந்துற வாமத் தாண்மேல் வரவலத் தாண்மே னின்று
சிந்தையால் வருந்தி [4]முற்றக் கற்றனன் சிறிதுநாளில். (௮)

நானில முய்ய முன்ன நாயக னாடுங் கூத்தை
மானிட ராட லாகா தென்றநாம் வருந்திக் கற்றே
மீனமி லாத சென்னி செற்றத்தா லென்று சால
மீனவன் றுயர முற்று நெஞ்சக மெலிவா னானும். (௯)

அன்றியு மொரு[5]தா ளூன்றி யடுத்ததாள் வளைத்தெ டுத்து
நின்றநு நோவக் கண்டே நினைப்பினோர் கணத்துப் போது
மின்றுநின் றிடவொண் ணாதா யிருந்த[6]திங் கென்றுங் கெட்டேன்
மன்றுற நின்ற னந்தோ மாறி[7]நின் றாடா தென்பான். (௧௦)

---

௬. உளம்பட - மனம் மெலிய ; இச்செய்யுளின் முன்னிரண்டடியால் அக்காலத்திருந்த கலைவாணர்களுடைய நன்றியறிவும் அஞ்சாமையும் வெளியாகின்றன.

௭. விளிவு - அவமானம்.

௮. விருது - எண்ணெண் கலைவல்லானென்பது. புயங்க நட்டம் - ஒருவகை நடனம், "புயங்கனீ" (திருஞா. தே.) வாமத்தாள் - இடத்தாள்.

௧௦. நின்றல் - நிற்றல்; மெலித்தல். கெட்டேன்-ஐயோ.

(பி - ம்.) 1'புகழவாழ்ந்து' 2'கூடு' 3'வாழ்த்தும்' 4'முற்றும்' 5'தாளன்றி' 6 'இங்கென்னை' 7'நின்றடிலொன்றோ'

தருகன மூதுபே [1]ரண்ட சராசர மனைத்துந் தாங்கும்
பெரியவ னுத லாலே பேசருந் தாள்வ ருத்தந்
கருதினங் குண்டா காதா யிருக்கினு மிருக்குங் காணிற்
றெரிவரி தவன்றன் செய்தி யெனமனந் தெளிவன் றேறான். (கக)

இப்படி வருந்தல் கண்டே யிரங்கியீ சான கோணத்
தொப்பருந் திருமன் றத்தி லும்பர்கோன் வேண்ட முன்ன
மெய்ப்பட வாடுங் கூத்தை விட்டுமெல் வலத்தாள் குஞ்சித்
தப்பெரும் புதுமைக் கூத்தை யாடினா னதிர வீசி. (கஉ)

வேறு.

பேறு[2]சால் பதஞ்சலி முனியும் பேரருள்
வீறு[3]சால் வியாக்கிர முனியுங் கண்டுகண்
ணுறுபாய் தரமுன மாடுங் கூத்தனார்
மாறனூழ் துயர்கெட மாறி யாடினார். (கஈ)

ஏர்தரும் வலப்பத மிடம்வ ரப்பணை
சார்தரு மிடக்கரம் வலம்வ ரத்தனி
வாதுறு கூத்தினை யாடி மாசறு
கோதைசூழ் தாண்மிசைக் கொடியுங் கட்டினான். (கச)

எழிறரு மன்னவ னெழிவி லேதமும்
பொழின்மிசை யாடும்வார் வலியும் [4]போக்கிட
வழகுடன் மாறினின் றாடுங் கூத்தினைத்
தொழுதவம் பிகையும்வெந் துயர நீங்கினாள். (கரு)

வேறு.

நத்தமார் நடுநள் ளியாமத் தருமறை நாதம் பாடப்
பெத்தமா னிடரா லாடுங் கூததினை யொழிந்து பேரா
ருத்தம வருங்கூத தாட வும்பாகோ னயன்மா லாதி
யித்திற மியார்வல் லாரென் றதிசயித் திறைஞ்சி னாரால். (கசு)

தொண்டர்கள் விடியு முன்சென் றுரைசெயத் தொழுதுட் கண்ட
வண்டமிழ் மாறன் வைத்த மனத்தினுங் கடிது வந்து
பண்டருங் கூத்துக் கண்டான் பரவினான் றொழுது வீழ்ந்தா
னண்டர்நா யகனே யுய்ந்தே னெனவதி சயிததா லித்தான். (கஎ)

---

கஉ. ஈசானகோணம் - வடகீழ்மூலை. அதிரவீசி ஆடினான்என்க; "அதிர வீசியாடுவாய்" (திருஞா. தே.) 'அதிரவீசியாடுவான்' எனபர்பின்; உரு.

கரு. இதன் இறுதியடியிலுள்ள சொல்நயம் பாராட்டற்பாலது.

கச. பணை - வாத்தியம்; உடுக்கைப் பறை. 'மாறியாடிக் கொடியிட்ட பெருமான்' என்பர்பின்னும்; உரு.

கஎ. பண்டு அருங்கூத்து - முன்பில்லாதகூத்து; பண்தரும்-இசையைத் தருகின்ற வென்றுமாம்.

(பி - ம்.) [1]'அண்டஞ்சராசரம்' [2]'சார்' [3]'சார்' [4]'போக்கிய'

வேறு.

தெரிதரு கருணைச் சோதியே[1]வலப்பொற் சேவடி யாலுள திருக்கூத்
துரைசெயி னுலகத் தெங்கணுங் காண வுளததது புதுமையோ வல்ல
வருமையா [2]விடப்பொற் சேவடி யாலிங் காடிய திதுபெரும் புதுமை
[3]கருதின் றடியே னினியுனை வேண்டிக் கொள்வதோர் காரிய முண்டால்.

படியக மிசையிற் பரிவுள நினக்கே பரிவுள மதிக்குலம் விளங்க,
வடிவுறு திருக்கூத் தென்றுமிவ் விடத்தே மன்னிட வேண்டுமென்
றேத்த,முடியுடை வேந்தே யதுசெய்வ லென்றே முழங்கிட வுயர்திரு
வாக்குக், கடிகொள்வான் மிசையிற் றோன்றிடக்கண்டு துதித்தனன்
களித்தகண் டுளிப்ப. (கக)

வேறு.

மன்னிய பெரிய சிற்றம் பலத்தினை வரிசை கூரப்
பொன்னினான் மேய்ந்து முத்தாற் புரிவலித் தணிசி றந்த
மின்னொளி மாணிக் கத்தால் விளிம்புசேர்த் திலங்க வெங்கும்
பன்மணித் தாம நாற்றிச் சிறப்பித்தான் பண்பு கூர. (உ0)

மதியினை நிகர்த்த முத்தக் கவிகையு [4]மாணிக் கத்தாட்
கதிர்விடு கொற்றக் கற்றைக் கவரியும் வயிரஞ் [5]சேர்ந்து
நிதிதரு கனக சிங்கா தனமுநீண் முடியும் பூணும்
புதியவா சிகையு மற்றுப் புவியும்[6]வேண் டுவகொ டுத்தான். (உக)

வேறு.

மன்னவர் மன்னன் பன்முறை வணங்கி மகிழ்ச்சிமாக் கட
லிடை மூழ்கித், தன்னுடை யிடத்துப் [7]போந்தடி யவர்க டம்பெருந்
துயரறிந் திரங்கும், பன்னியற் பெருமான் றன்வயின் [8]வைத்த பரி
வினைக் கண்டுகண் டுவந்து, மின்னொளி விளங்கு மடங்கலா சனத்து
மேதினி வியப்பவீற் றிருந்தான். (உஉ)

வேறு.

அன்றுமுன் னதிர வீசி யாடுவா னென்று மேவார்
குன்றமுன் மாறி [9]யாடிக் கொடியிட்ட பெருமா னென்று
மன்றுற வழங்கக் கேட்ட வளவனு மிகல்விட் டன்பிற்
சென்றுமுன் வழுத்தி னனச் சிவனினுஞ் செழியர் கோவை. (உ௩)

---

கக. வடிவுறுதிருக்கூத்து - சொக்கத்தாண்டவம்.

உ0. முன், "தென்மதுரை மாநகர்சேர் திருச்சிற்றம்பலம் போற்றி" (கடவுள்: கச) என்றார். புரிவலித்து - சயிறுகட்டி.

உக. மாணிக்கத்தாள் - மாணிக்கத்தாலாகிய காம்பு.

உஉ. இயற்பெருமான் - சொக்கநாயகர்; இயல் - அழகு.

உ௩. மன்றுற - பலரறிய; க௩-இன் குறிப்பைப்பார்க்க.

(பி-ம்.) 1'இடப்பொற்' 2'வலப்பொற்' 3'கருதினிங்கு' 4'மாணிக்கக்காற்' 5 'சேர்த்து', 'சேர்த்த' 6'வேண்டுப' 7'பொருந்தடியவர்' 8'சேர்த்த' 9'ஆடக்'

இத்திருக் கோலந் தன்னைத் தொழுபவ ரென்றுங் குன்றாப்
புத்தியும் [1]பொருவி லாத பத்தியும் புகழு முண்டாய்ச்
சத்திய ஞால முற்றுந் தனிக்குடை நிழலி னாண்டு
முத்தியும் பெறுவர் தீரா மும்மல [2]மம்மர் தீர்ந்தே. (உ௪)

[3] கோடிய வேன மாகிக் குவலய மிடந்து முன்னந்
தேடிய நெடுமால் காணாச் [4]செழுஞ்சுடர் மேனிச் சொக்கர்
வாடிய மாறன் றேற மதுரைமா மன்றுண் மாறி
யாடிய பாதங் கண்டே னருவினை கண்டி லேனே. (உரு)

ஆகத்திருவிருத்தம் - ௬௧௮.

---

## ௬௬.—பழியஞ்சின திருவிளையாடல்.

மாசிலா மதுரையிலோர் மறையோன் முன்னாள் வனிதையொடு முலைப்பாலுண் பால னோடு, [5]நேசமுடன் மாமனிடத் தணையப் போங் கா னெறியிடையா தவன்வெய்ய கதிரா னைந்து, பேசரிய வருந்தண்ணீர்த் தாகத் தாங்கோர் பெருமைதரு வடதருவி னீழன் மேவி, [6]யா சின்மட மாதினைத்துக் கிடப்பக் கண்டே யகன்றனன்முன் றண்ணீர் கொண் டணைவா னெண்ணி. (க)

விரைவொடுபோ யினபின்னர் முன்னோர் வேடன் வேட்டையின்மேல் வந்துவிழுங் கிளியை யெய்து [7]பரியவிலைக் கொம்பின்கட் டொங்கி [8]னான்ற பகழி[9]மருத் தாலசைந்து பாவை மார்பிற், கருகி விழா முதுகின்க ணுருவி [10]யப்பாற் கழலுங்காற் புனல்கொண்டு வந்து கண்ட, வரியகண வன்றரியா னற்றானகி யழுதுவிழுந் தலமந் தா னவி சோர. (உ)

அழகினு லருங்குலத்தா லன்பா னின்போ லாரொப்பா ரெனக் கினியா ருண்டென்[11]றுறு, விழிபெருக முகத்தறைந்து கொளுங்கால் வேறோர்வேட் டை[12]வேட் டொருவேடன் விரைவிற் றோன்றப், பழி கருது மிவன்கண்டு வாரா யிந்தப் பழுதிலா வெழின்மாதை யேது வேண்டி, யிழிவுபடு குலத்தவனே கெடுவாய் கொன்றா யென்றானஞ் சினனஞ்சா [13]வீரன் றானும். (௩)

---

(௬௬)

க. ஆதவன் - சூரியன். வடதரு - ஆலமரம்.

உ. எய்து - எய்தலால். தொங்கி னான்ற - தொங்கிய; ஒருபொருட்பன் மொழி. பகழி - அம்பு.

(பி - ம்.) 1'புகழும்' 2'மாசு' 3'கோடுடையேனமாகி' 4'செஞ்சுடர்' 5'நேச முடை' 6'ஆசிலா' 7'பருவவிலை' 8 'நின்ற' 9'மாருதத்து' 10'ஆவி' 11 'ஆரு' 12'வேட்டடு' 13'நீசன்றானும்'

பறையுமது கொடிதடியேன் கொன்ற தில்லை [1]பழியையே ஞராய்ந்து கொள்ளு மென்ன, மறையவன்போ காவாறு வெகுளி பொங்கி மறித்தவனை நெறிப்படிமண் ணுலகாண் மன்ன, னறமலியும் வாயிலிற்போ தென்று கொண்டாங் கழுங்குழவி யொடுமுறையிட் டாற்றிச் சென்று, நெறியுடைய வமைச்சர்கா [2]ளிவ்வெவ் வேட னெறியிடைக்கொன் றனெய்[3]தென் மாதை யென்றான். (ச)

[4] மந்திரிக ளவன்வருந்திப் புகன்ற வாறு மாறனுக்கு விண்ணப் பஞ் செய்ய மாறன், சிந்தைபரி தவித்துநெடு வாயில் வந்து தீராம [5] லழுங்குழவி தனையுமிக்க, வெந்துயரத் தொடுமுறையிட் டெய்தா னென்னும் வேதியனை யுங்கண்டு மெலிதல் வேண்டா, வந்தணநீ யெனச்சொல்லி யாற்றி வெய்ய வடுங்கணைவே டனைநோக்கி யருளிச் செய்வான். (ரு)

வினையுறுவே டுவநின்னைக் கொல்வ தில்லை மெய்ப்படநீ செய்தி யுரை யென்ன வேடன், கனைகழற்றாண் மன்னவனே நீதி வேந்தே கருணையனே நாயடியேன் கொன்ற தில்லை, மனுநெறியி னாராய்ந்து கொள்க வென்று வணங்கியுட னடுங்கி[6]வியர்த் துரைப்பக் கண்டு, தனதுளநொந் தருமறையோன் மனத்த கத்துத் தணியாத பெருந் துயரந் தணியச் சொல்வான். (சு)

ஏதமொழி மறையோனே கரிய வேட [7]னியம்புமொழி கேட் டனையே யாமா ராய்ந்து, நீதிபடச் [8]சொலநின்றே மம்பால் வீந்த நே ரிழைகுன் றுவாறு நலஞ்செய் [9]தெய்திங், காதிவ்வதி யொருவராற் [10]றடுப்ப வொண்ணு ததநீயு மறிதியே யெனவி டுப்ப, வேதி யன்[11]போய் நனியழுங்குங் கிளைஞர்க் கூட்டி விதியின்கட் டகுந்தக னஞ் செய்தான் விம்மி. (எ)

செந்நெறிசேர் சுந்தரனுக் கன்பு பூண்ட தென்னவன்வே டனை யழைத்துத் தெளிந்திப் போதே, யுன்னையும்வே ருடன்களைவன் சிறை யிற் போகென் றுயர்ந்த[12]கொடுஞ் சிறைக்கூடத் தடைத்துத் தானே, யென்னையு[13]மா ளுடைமதுரைச் சொக்க நாத னெங்குமுளான் யாவு மளந் தறிவான் முன்னர், மன்னியிது விளங்கினல்லால் விளங்கா தென்று வரிசைதிக ழாலயத்து வந்து புக்கான். (அ)

---

ச. பறையும் அது - சொலலிய அசசொல். போது - வா.

சு. உடல்நடுங்கி.

எ. ஏதம் ஒழி - துன்பம் ஒழிவாயாக. இங்குஎய்து - இங்கேவா. தகும் தகனம் - துன்மரணமாக இறந்தவர்க்குச் செய்தற்குத்தக்க தகனம்.

(பி - ம்.) 1'பழியையுநீர்' 2'இவ்வெவ்வேடன்' 3'றனெம்மாதை' 4'மந் திரிகயேருழந்துகண்ட' 5'அருங்கணை' 6'வெயர்த்து' 7'இயம்புமது' 8'கொல நின்றேம்','கோல்நின்றேமட்பால்வீந்த' 9'இந்த,வாதிவிதி' 10'தப்ப' 11'போய்த் தனியழுங்குங்' 12'பெருஞ்' 13'ஆளுடைச் சொக்கநாத னெங்கோன்'

தென்றமிழ்நா டுடையானே யறஞ்சொல் கோவே தேவாதி தே வேநின் னருளால் வைய, நன்றியயந் திடக்காக்கு மடிமைக் கின்று நாடரிய பெரும்பழிவந் தடைந்த தெங்கு, நின்றறிய வல்லானீ யல்லா லுண்டோ நினக்கடிமை வேண்டினறி வித்தி தோன்ற,வென்றலுமஞ் சினவீச னகர்சோ தித்தற் கெய்[1]தெய்தி னறிவிப்ப மென்றான் றேற.

மன்னவன்விண் மிசைக்கேட்டு மகிழ்ந்தா லித்து வளமைபுனே தன்னிடத்து [2]வந்து விள்ளான், முன்னைமுறை யுண்டி[3]கழித் தரு ளாற் றானே முற்றியகங் குற்[4]போதி னகர்சோ திப்பான், றன்விரை விற் போந்துலவுங் காலைச் சேர்ந்தோர் தவப்பிரம சாரிமணஞ் செய்யா நின்ற, மின்னு[5]மனைப் புறத்துறுதிண் ணையின்க ணியாரும் [6]வெருவு முருப் புனைந்திருவர் மேவக் கண்டான். (௧0)

வேறு.

[7]தெரிவுற விவரை யறிகுவ மென்று சென்றரு கணைந்துரு வொ ளித்துப், பொருவரும் வீர னின்றிடுங் காலைப் புலப்பட நிலைப்பட ருரைப்பார், விரையுருப் புனைந்து மணஞ்செயு மிவனை விரைவொடு புதுமையா வின்று, பரிவொடு கொண்டு போய்விட வேண்டும் பந்த ரோர் பரிந்திட வென்றார். (௧௧)

ஈங்கிது பகரக் கேட்டவாள் வேந்த னிலங்கவீ தறிகுவ மென் றே, நீங்கருங் கருணைச் சொக்கநா தனையே நினைந்துதன் றுண்மையே துணையா, வோங்கிய மனத்தின் வெளிப்பட நணுகி [8]யுரன்பட மருங் குற நின்றே, [9]யாங்குல குயிர்க ளேங்கிடு முருக்கொண் டணைந்தநீர் யார்கொலோ வறியேன். (௧௨)

இங்குரை செய்த வாறுகேட் டனனின் றெப்படி மெய்ப்பட மன்ற, றங்கிய பெருங்கல் யாணமுன் செய்யுந் தார்மண வாளனின் னுயிரை, மங்குறக் கவர்வ துரைசெயு மென்ன மற்றவர் தீரனு யிருந் தாய், [10]கொங்கவிழ் தாம வீரனே யாங்கள் [11]யமபடர் கொண்டு[12]போ மாகேள். (௧௩)

இம்மண வாளன் மெல்லிள மாதை யினியகைப் பிடித்திடு மள விற்,செம்மனே யகத்துக் கொல்லவற் றான திறம்படு [13]கோடிலா மொ

௬. 'அஞ்சினவீசன்' என்பது, சொக்கநாயகர் பழிக்கு அஞ்சியதைப் புலப் படுத்தியது.

௧0. விள்ளான் - சொல்லானாகி. [ளவை.

௧௧. படர் - யமதூதர். விரை - மலர் சந்தனம் முதலிய நறுமணமுள்

௧௪. வற்றான - வன்மையையுடையதான. ஆர்த்த தம்பு-கட்டியகயிறு.

(பி - ம்.) 1 'எய்தேயதறிவிப்பல்' 2 'வைத்து' 3 'களித்து' 4 'போதுள்' 5 'மறைப்' 6'வெருவவுரு' 7'தெரிவுறமிவரை' 8'உரம்பட', 'உரன்பெற' 9'ஆக் குலவுயிர்கள்' 10 'கொங்கலர்', 'கொங்குவீழ்' 11 'யமன்படர்' 12 'போமது' 13'கொட்டிலா'

ட்டை, வெம்மைசேர் பசுவுண் டார்த்ததும் பறுத்து [1]விடுப்பமற் றது
திரண் முழவின், சும்மையின் [2]வெருண்டு முட்டிடக் கொண்டு போகு
வக் தொழுதியு ளுடி. (கச)

வேறு.

இயம தூத ரைய மில்லை யென்று சொல்ல மன்னவ
னயம தெய்தி நீதி வாயி னண்ணி வாடு முனிவனைப்
பயமு ருத ழைத்து வந்து படர்கள் பின்னி றுத்தியே
யயமு ருது படர்கள் சொல்லு மறிவு கேளெ னச்சொனான். (கரு)

நன்றி கொண்ட முனிவ னெஞ்சு தேற நாத னருளினு
னின்ற தூத னுக்கு மற்று யர்ந்த தூத னினைவுறக்
கொன்ற [3]வீறு கூறு மொன்று குன்ற மன்ன குஞ்சர
மொன்று சீய மொன்று நாக மொன்று புண்ட ரீகமால். (கசு)

மன்னு நீதி கோடி டாத வைய மாளு மன்னவன்
றன்னை யும்[4]ம றைத்தி றச்ச டங்கடங்க லும்முடித்
துன்ன ருந்த வத்தி னு[5]னுயர்ந்த யாக முனியையு
மின்ன மூண்டு கொன்ற தெந்தை யந்த கன்ற னேவலால். (கஎ)

ஆல நீழ றன்னின் மன்னு மழகின் மிக்க பழுதிலோர்
மேல்கு லத்து தித்த [6]செவ்வி வேதி யன்றன் மாதைமுன்
னேல வேட ஞேர்சு கத்தை யெய்து [7]கொம்பின் ஞான்றதோர்
கோல சைத்து வீழ்த்தி யாவி கொண்ட தின்று கண்டனை. (கஅ)

மரணம் வந்த காற்று ரும்பும் வச்சி ரம்ம தாய்விடுங்
[8] கருதி யிங்க தெங்ங னென்று காணின் முன்ன மன்னுமென்
பெரிய தந்தை யசனெ னுங்[9]தொல் பெருமை மிக்க காவல
னுரிமை கொண்ட வடிவ மங்கை யுயிர்க வர்ந்த வாறுகேள். (கக)

வடிவ மிஞ்சு கவினி னிந்து மதியை ஞாலம் வெருவமென்
கொடியி லங்கு பூவின் மாலை வீழ வாவி கொண்டனன்
விடுவி டின்று கதையை யிந்த வெய்ய தேனு வான்மணந்
திடுமி லங்கு பிரம சாரி யினிமை கூரு முயிரினை. (உ0)

---

கரு. அயம் = ஐயம் - சந்தேகம்.

கசு. உயர்ந்ததூதன் - இருந்தவனாகிய பெரியதூதன். கூறும்-கூறுவான்.

கஅ. சுகத்தை - கிளியை. கோல் - அம்பு. எய்ததை உ-ஆம் செய்யுளா லும் உணர்க.

கக. பெரியதந்தை: எழுவாய். அசன் - அசமகாராசர்; இரகு மகாராச ருடைய புத்திரர்; தசரதருடையதந்தை. வடிவமங்கை - இந்துமதி.

உ0. இந்துமதி - அசமகாராசர் மனைவி; நாரதமுனிவர் வீணையிற் புனைந் திருந்த பூமாலை காற்றால் வீழப்பெற்று இந்துமதி இறந்தனளென்பது, இர

(பி - ம்.) [1]'விடுதலும்' [2]'வெருட்டி' [3]'வீறுகவில்லவனென்று' [4]'மறைத் திடச்' [5]'உகந்தயாக' [6]'செல்வி' [7]'தொங்கி' [8]'கருதினீங்கது' [9]'சொல்'

வேறு.

விரைவொடு கொடு[1]போ கேமேல் வெய்யநங் கூற்று வேந்தன்
பரிவுற முனிவ னென்று பன்முறை தம்மிற் கூற
வரமுனி யதிச யித்து வழுதுமே னிவர்கள் சொன்ன
வருளிலா வுரைகள் கேட்டே னறிவதொன் றின்னு முண்டால். (உக)

இம்மண வாளன் [2]மேய வின்னுயிர் மருப்பில் கோவாற்
செம்மையிற் கவர்வ மென்றார் சிறிதுபோ திங்கு நின்று
மெய்ம்மையோ வன்றோ வென்று விளங்குவ மென்னக் கேட்ட
வம்மனு வேந்தர் வேந்த னதுதகு மென்று நின்றான். (உஉ)

நன்னெறிக் கன்னி மாதை நயந்துகைப் பிடியா முன்னந்
துன்னுபல் லியமு ழக்கிற் றும்பிடைக் கிடந்த தேனு
முன்னெழ [3]வெருட்சி பொங்கி முளைத்தளை யறுத்து மொட்டை
மன்னிய சிரத்தான் முட்டிக் கொன்றது மன்ற லோனை. (உஙு)

வேறு.

அணிபொலி மறையவன் வீய வக்கண
மணமனே பிணமனே யாக மறறவ
ணணுகிய மனிதர்கள் கண்டு [4]நாமொடு
தணிவற வரற்றினர் தலையை மோதினர். (உச)

உயிர்நிலை யாமையை யுணர்ந்து மன்னனும்
பயமொடு கூடினன் படரும் போயினர்
நயமுறு மாமுனி தெளிந்து நாவுறச்
செயிரற வழுததினன் றென்ன னீதியை. (உரு)

---

வம்சம், அ-ஆம் சருக்கத்திற் கூறப்பெற்றுள்ள கதை. இதனைத் தமிழ் இரகு வங்கிசம், இந்துமதி பிறப்புநீங்குபடலம், சஉ-ஆம் செய்யுள் முதலியவற்றா னும், "நன்னுண மதியக் குடையோன் குலோததுங்க னுகைவெற்பிற், பொன் னு ளயோத்தியி லுண்டாய பாவம் புனத்துமுணடோ, அந்நாளும் பெண்பழி கொண்டது மாலையென் றுருளுசொல்வா, ரிந்நாளும் பெண்பழி கொள்ளவிம் மாலை யெதிர்பட்டதே' (குலோத்துங்கசோழன் கோவை, கஎரு) என்னுஞ் செய்யுளாலுமுணர்க. தேனுவால - பசுவினால.

உஉ. மருப்பு இலகோ - கொம்பிலலாதபசு.

உஙு. முளைத்தளை - முளையிறகட்டியகட்டு.

உச. "மன்றங் கறங்க மணப்பறை யாயின, வன்றவற் காங்கே பிணப் பறையாய்" (நாலடி. உஙு), "மணமகனே பிணமகனுய் மணப்பறையே பிணப் பறையாய், அணியிழையார் வாழததொலிபோ யழுகையொலி யாய்க்கழிய', (திருவிளை. பழியஞ்சிய. உக) எனபவை இங்கே யறியற்பாலன. நாம்-அச்சம்.

(பி - ம்.) [1]'போதேமேல' [2]'மேவுமின்னுயிர்' [3]'வெகுட்சி' [4]'நாவுற'

### வே று.

அரிய வெந்தை செயல்கண் டதிசயித் தந்த ணன்றன் ஞெடுந்தன் னிடத்திடைப், பரிவி னேடு மடைந்தாங் கமைச்சரைப் பரிதித் தோற்றத் தழைத்துப் பழுதறத், தெரிய வோதிட யாமினி யிற்புக்க செய்தி யாவையுங் கேட்டருட் டென்னவ, தரும நூனெறி யாய்ந்திடு மன்னவர் தலைவ னீயல தில்லெனச் சாற்றினர். (உசு)

வழுத்த மைச்சரை நோக்கி[1]யின் றிங்கெனை வரிசை கூறப் [2]புகழுவ தென்கொனீ, ரிழுக்க தாமிப் பழிக்கஞ்சி நீக்கினன் யாவும் வல்ல வருட்சொக்க நாயக, னழித்தி யாவையு மாக்கவல் லான்றன தருளை வாழ்த்து மெனவாழ்த்தி யேத்தினர், பொழிற்குள் வாழு மனிதருஞ் சுந்தரன் பொருவி னீதிகண் டேத்திப் புகழ்ந்தனர். (உஎ)

வேட னைச்சிறை விட்டவ னெஞ்சகம் விரும்ப வேண்டுப [3]நல்கினின் னுற்றவர்,தேடு முன்னனீ போகெனப் போக்கியே தீதி லாத முனிக்குஞ் சிறப்புட, னூடி நன்மணஞ் செய்யென் றிரும்பொரு ணல்க வாங்கி நயந்து வியந்துபோ, யாடி நன்மணஞ் [4]செயதொண் புதல்வனே டருளை வாழ்த்தி யிருந்தன னந்தணன். (உஅ)

### வே று.

அத்தனப் படுப ழிக்கே யஞ்சியக் கணத்துத் தோன்ற
வுத்தமப் பத்தி மாறற் குணர்வுற [5]வுணர்த்த லாலே
பத்தர்கள் பத்த னுக்குப் [6]பழியஞ்சுஞ் சொக்க னென்றோர்
வித்தகப் பெரிய நாமம் விளங்கிய தவனி மீது. (உகூ)

### வே று.

[7]முட்டிப் பார்ப்பான் முறையிடு
மொட்டைப் பசுவின் பாய்ச்சலொடும்
விட்டுப் போன தெனவின்றும்
வட்டத் தலத்து வழங்கியதே. (௩௦)

ஆகத்திருவிருத்தம் - அசஅ.

---

உசு. யாமினியில் - இரவில்.

உஎ. யாவையும் அழித்து ஆக்கவல்லான் - எல்லாப்பொருள்களையும் சங்கரித்துச் சிருட்டித்தருள வல்லமையுடையவர்.

உகூ. சோமசுந்தரக்கடவுள் பழிக்கஞ்சியதை, "தென் றமிழ் நாடு" (க) என்னுஞ் செய்யுளாலும் உணர்க; "பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே" (மதுரைக். உகூ.)

௩௦. இச்செய்யுளின் பொருள் ஒருபழமொழியாக வழங்குகின்றது.

(பி-ம்.) 1'யிங்கென் றனை' 2'புகலுவ' 3'நல்கிமுன்' 4'செய்து' 5'உரைத்தலாலே' 6'பழியஞ்சி'. 'பழிக்கஞ்சி' 7'குட்டிப்'

## ௩௪.—மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

வளவியதோர் நன்னாட்டு முன்னோர் கால மாசிலா வுயர்மறையோன் றனக்கு மிக்க, விளைமைதரு பருவததே மனைவி யுண்டா யிவள் வயினோர் புதல்வன்விதி வசததாற றோன்றி, யளியினுற வளர்ந்தாங்க னேவா லேவுண் டன்புடைமா தாவைமன மருட்டிப் புலை,வுளமறிந்த தாதையவ மானவஞ்ச முணர்வுடையோர் விளளாமரன் றெளிததுப் போந்தான். (௧)

பிறாறியி னீதிருன்று மென்று கொண்டு பேணியுள மெலிந் திருப்போன் றனிதமதோா நாளிற, பொருறையறியா மைந்தனுமா தாவுந் தம்மிற் புணருமிடத தறியாது செலலக் கண்ட, வுறுபுதல்வன் மண் வெட்டுங் கொட்டால [1]வெட்டா வுயிர்கவர்ந்தான் மறறிதனை யோர்ந்து பார்ப்பி, னறிவிலிவேள் [2]கொடுங்கணை[3]பட் டுளைந்தார்க கந்தோ வற மெங்கே நெறியெங்கே யன்பே பா வெஙகே. (௨)

மற்றவனுந் தந்தையுயிர் [4]செகுத்த பின்றை வஞ்சமுடன் றற் சேர்ந்தா தம்மைக் கூட்டி, யுறறதுமை யானினிய பாலுஞ் சோறு முண்ணுங்கா லேயில் விகங்ச் செத்தா னென்று, சறறும்ரங காதிரு ண்ட கங்குற் போதே தாழாம லெடுததழலுந் தழலிற சுட்டுப், பெற் றகொடும் பாவியொடு மிலலத துளள பிறங்கும்பொருள் கவாந்தகன் றான் [5]பெரிது தூரம். (௩)

ஆங்கொருவ ரறியாம லிரவிற் போங்கா லாறலைக்குங் கொடுவே டர் கண்டு சேரா, வீங்கிவன்ற னுடலைப்புடைப்ப வடித்துக் கையி னிரும்பொருளுங [7]கவர்ந்தெழுன்மா தையுங்கைக் கொண்டு, தாங்க ருத யேகினாமற றென்றேவனறு சாறறுவது தலத்துன்க ளெவருங் காணத, தீங்ககல நினைபபமதாாகா ரியநதா வூருள சிவனகொடுபோய் விடுவதொர்கா ரியந்தானுமே. (௪)

ஆறிடையி லலறிவிழுந் தெழுந்து வெய்ய வரும்பாவி யடியுண்ட புண்ணீ மொய்பப, மேலொருவா துணையின்றிப் புழுத்துத் தானே விாததசிரத் தொடுந்துணிகம்கா வண்ணததுனோடு, நாறுமுட லகத்தோடு

(௩௪)

௧. அவமானவஞ்சம் - அவமானததைத் தரும் வஞ்சனைத்தொழில்; "அவ மான வஞ்சம பிரர்ககுரை யார்க ணலலோர்" என்பர் பின்னும்; ௩௫: ௪௦.

௨. கொட்டு - மணவெட்டி.

௫. புணணில் ஈமொய்ப்ப. ஆரோவென்னத் திரிந்தான்.

(பி-ம்) [1]'வெடடி' [2]'கொடுங்கணையேபட்டுழைப்பாரகு' [3]'படடாலந்தோ' [4]'செகுததப்பினனர் வஞ்சமுடைததசோந்தார' [5]'பெரிய' [6]'புடைப்பவிடித் தக்', 'புடைப்பப்பிடித்துக' [7]'கவர்நதிள'

[1]மடவி தோறு நாணமின்றி மனைகடொறுஞ் சென்று சென்று, சோ றிரந்து [2]தின்றுழன்று திரிந்தான் கண்டோர் சொல்லுகொடும் பாவி யிவ ஞரோ வென்ன. (ரு)

தன்னுணர்வால் விதிவசத்தை நினைந்து நொந்து சார்ந்தபெரும் பாதகத்தைத தணிப்பா னெண்ணி, [3]முன்னருந்தீ வினைதீர்க்கும் கங் கை கன்னி முதலான தீர்த்தங்கள் விரும்பிப் போங்காற், பன்னெறி சேர் பிரமகத்தி [4]பற்கடித்துப் பயமுறுத்திப் பின்றொடரப் பரிந்து பார்ப்பான், பின்றொருவர்க் காணுன்முன் னதனைக் கண்டு பிரமிப் பன் வெருவிப்பன் முறைகம் பிப்பன். (சு)

ஆர்ந்தபெரும் புனற்றீர்த்தத் துறைசெ லுங்கா லாடாமற் புறத் தீர்த்துப்போடக் கண்டு, போந்தவனி யோரிடத்துந் தரிப்ப தின்றிப் புகழ்த்தாதை வதைபொருவில கருணை யாயைச், சேர்ந்தகொடும் பா வமிரண் டானு நொந்து திரிதருவோ னெந்நாளும யாவ ரேனுஞ், சார் ந்தவர்வெம் பாவங்க ளீக்குஞ் சொக்கன் றகுகடம்ப மாவனத்தைச் சார்ந்தான் வந்தே. (எ)

நீக்கலரும் புகழ்க்கினியான் கருணை மெய்ய னீதிதிகழ் பதியி னெறி வசததான் முன்ன, ராக்கியாற றவத்தாலவந் தணையுங் காலை யங்கயற்கண் [5]மங்கையைநல லணிதி ருதது, நோக்கிநயந் துரைசெய் வா னுமையே மார னுவலரும்பூங் கொடுங்கணைமே தைத்தால யாவர், காக்க[6]வலா ரிதரிதெவ் விடதது மந்தக் கணைக்கிலக்கா காதாரு முண் டோ [7]காணின். (அ)

மதனகணையா னெந்தவன்றான் வரைந்த கற்பின் மனைவியின்க ணின்றானே னிரயங் காணு, னிதனுசெய்பிறா மனைச்சேறல விரும்பி னுனே வினிமைதரு முயர்துறககங் காணுன் மறறும, வ தங் கடரு [8]மாங்கனே யலவாழ் வுகமோ வேராவா ணுறுலென வரம்பி னிலலான், பதங்கொடுதத நமையும் விடா னவனுக கென்றும் பட் டகுணனு சுட்டாலுந் தீரா தன்றே. (கூ)

வே று.

இன்னன சொல்லி நல்ல வினிமைகூ றின்பந் துய்த்து
மன்னவீற் றிருக்குங் காலை வரும்பெரும் பாவி மண்ணிற்
றன்னிக ரிலலா வநதத தானவை பவதது ளுலே
முன்னுறச் சென்றான் கண்டான மூவருங் காணு தானே. (கல)

சு. கன்னி - கன்னியாகுமரியென்னும் ஆறு. கம்பிப்பன் - நடுங்குவன்.

எ. புறததுார்தது - வெளியேஇழுதது.

கூ. 'படடகுணம் சுட்டாலுந்தீராது' என்பது ஒருபழமொழி.

கல. தானவைபவம் - தலவிசேடம்.

(பி - ம்.) 1 'அடவிதோறு நாடோறும் வழிதோறு நாணமின்றி' 2 'திரிந் துழன்றுதின்றான்' 3 'முன்னிருந' 4 'பலவிறக்கி', 'பல்லுறக்கி' 5 'அம்மையை' 6 'வலார்தரிதெவ்' 7 'என்ன' 8 'அநங்கனேவில் வாழ்க்கைக்கு'

அறமலி நந்தி [1]தேவ ரருங்கொடும் பாவி நீயார்
முறையிலா தவனே சீசீ போவெனக் கேட்ட முக்க
ணிறையவன் கருணை மெய்ய ருகலா விரங்கிக் [2]கெட்டே
னறிவிலான் யாரு மில்லான் வரவிடென் றருள்சு ரந்தான். (கக)

ஆக்கிய வுலகத் தின்க ணறிவுடைப் பெரியோ ராவு
நீக்கருங் கொடிய பாவ நின்னிடத் தடைந்த தந்தோ
போக்கவோர் [3]விதியு மில்லை யாயினும் போக்கு கின்றேம்
பாக்கிய வசத்தா னம்மைக் காணலாற் பரிவு கூர்ந்தே. (கஉ)

ஒண்பொரு ளின்மை யில்லை யுயர்ந்ததா னஞ்செய் யென்னப்
பண்புறக் [4]கேணி னக்குப் பரிந்தியாம் விதிக்கு மாறு
மண்புகழ் [5]தருகோ வுக்குப் புற்பிடி வழங்கு நந்தம்
விண்கொளா லயத்தை யங்கப் [6]பதக்கிணஞ் செய்மெய்ந் நோவ. (கங)

இன்புற வினிய காயத் திரியையா யிரத்தெட் டோது
நன்புறு முருத்தி ரத்தை நாளுமத் தியய னஞ்செ
யன்பின்மெய்ம் முழுதும் பூதி யணியெழுத் தைந்து மோது
மென்பொரு டருந்தொல் வேத விதியிவை யின்னுங் கேண்மோ. ()

வேறு.

நம்மடி யவர்க டம்மடி மலரி னணுகுமொண் புனல்பருகுரைப்பின், மெய்ம்மையை யுரையா மாடிய புனலில் விதியின்மூச்சந்தியு மூழ்கு, செம்மையோர் பொழுது பிச்சைகொண் [7]டுண்டைம் புலனையுஞ் செறுவிடா திவற்றை, மும்மைசேர் யாண்டு நோக்கிரும் பாவ நீக்குவை [8]முனிவரும் வியப்ப. (கரு)

அப்பெரும் பாவிக் கித்திறஞ் செய்யென் றடைவுற விதித்தல் கண்டெழில்சே, ரொப்பரும் பரிவி னங்கயற் கண்ணி யுளத்ததி சயித்தடி பரவிச், செப்பரும் பாவிக் கருள்சுரந் தறங்கள் செப்பிய தெப்படி யென்று, மெய்ப்பட வினவத் துப்பமர் மெய்யன் [9]விருப்புற வறத்திற முரைப்பான். (கசு)

---

கக. இறையவன்: எழுவாய்.

கஉ. பரிவுகூர்ந்து போக்குகின்றேம்.

கங. தானஞ்செய்யென்று சொல்லுதற்கு உன்கையிற் பொருளில்லை. கோவுக்கு - பசுவுக்கு.

கச. நன்பு - நன்மை. உருத்திரம் - ஸ்ரீருத்திரம். பூதி - விபூதி.

கரு. செறு - அடக்கு. நோக்கு - செய்.

(பி - ம்.) 1 'கேசர்' 2'கேட்டே' 3'விதியினில்லையாயினும் போக்குவோம் யாம்' 4'கேண்மோ நின்னைப்பரிந்து நாமுரைக்குமாறு' 5'கோவினுக்கு' 6'பிதக்கணம்', 'பிரதக்கணம்' 7'உண்ணைம்' 8'மூவரும்' 9'விதிப்புற'

மங்கைகே ளறிவு [1]பொறையற நீதி வாய்மை[2]நே ரச்சமன் புடையோ, ரங்கவர்க் காப்ப தநிசய மல்ல வாங்கவை யவர்தமைக் காக்குந், தங்கிய விவற்றுட் பிறங்கிட வொன்றுஞ் சார்விலா தின்னு யிர் தளர்வோ, [3]ரிங்கவர் தம்மைக் காத்தல்கா ணுலகி லதிசய மியம் பிடி லன்றே. (கஎ)

ஆதலா லிவன்கட் கருணையாஞ் செய்தே மென்றுபே ரன்பொ டுங் கூடி, வேதநா யகனு மாதிநா யகியும் [4]விருப்புவைத் தறத்திறம் வினவி, நீதியின் மறைய மறையவ[5]னிறைவ னிகழ்த்திய வாறுசெய் தொழிவில், பாதக [6]நீக்கி விளங்கின னெவரும் பன்முறை யதிச யித் தேத்த. (கஅ)

வேறு.

உன்ன ரும்பெரும் பாவ மொழித்தது
முன்னங் கண்டனிர் முக்கட் சிவனலா
லன்னை யொப்ப வணுக்கட்கு நல்லவர்
பின்ன ருஞ்சில ருண்டோ பிதற்றரே. (கசு)

உருகாதநீச............ஆணையால். [முழுப்பாகத்தைடு-ஆம் பக்கம்பார்க்க.]

ஆகத்திருவிருத்தம் - அசுஎ.

## கூடு.—அங்கம்வெட்டின திருவிளையாடல்.*

தெண்டிரை[7]வா ரிதியுடுத்த மண்ம கட்குத் திலக[8]மெனு மது ரையின்கண் முன்னோர் காலம், பண்புடையா னொருபணிக்கன் றோன்றி யெண்ணில் பத்திநிகழ் புதல்வர்க்குப் பலவி தஞ்சே,ரொண் டிறலா யுதகலைகள் பயிற்றி[9]யங்க ணொருசாமப் பொழுதொழித்தா லயத்தி னண்ணி, வண்புகழ்சேர் சொக்கனருள் கூர நாளும் வலஞ் செய்தன் பாற்[10]றொழுவன் மற்றெப் போதும். (க)

---

கசு. அணுக்கட்கு - உயிர்களுக்கு.

(கூடு)

க. பணிக்கன் - யுத்தமுறையைக் கற்பிப்பவன்; கசு.

* "தாரமுய்த்தது பாணற்கருளோடே" (திருநா. திருவியமகம், திருவால வாய்); "ஒருதனி யடியாற் குதவுதல் வேண்டி, மண்ணவர் காணவட்டணை வா ளெடுத், தாதி சாரிகை யடர்கிலைப் பார்வை, வாளுட னெருக்கன் மார்பொடு முனைத்தல்,பற்றிநின் றடர்த்த லுட்கையின் முறித்த, லானனத் தொட்ட லணி மயிர்ப் புரோக, முட்கலக தெடுத்த லொசிநிட மழைத்தல், கையொடு கட்டல் கடிக்துள் ளழைத்தலென், றிவ்வகை பிறவு மெதிரம ரேறி,யவன்பகை முறித்த வரும்பெருங் கடவுள்" (கல். ருக.)

(பி - ம்.) 1'பொறையறை' 2'தேர்', 'சேர்' 3'இங்கிவர்' 4'விருப்புடை யறத்திறம்வினம்பி' 5'நிகழ்' 6'நீங்கிப்போயினன்' 7'வாருதி' 8'அன்ன' 9'அங் கோரொருசாமப்' 10'றூழ்ந்தொழுவன்'

எற்றிகழு முடன்மூத்தோன் மனைவி தானு மிளமைதரு பருவத்தே கற்பான் மூத்தாண், மற்றவன்றன் கைப்பட்ட புதல்வ ரெல்லாம் வழிபாடு செய்துதமக் கியன்றதொன்று,குற்றமறக் கொடுத்தடைவிற் போதுங் [1]காலக் குழுவின்கட் சித்தனெனு மொருவன் [2]கூடாச், செற்றமொடு மனத்தொன்று [3]வைத்து நாளுஞ் செய்தொன்று பின் றிரிவன் [4]சிறந்தோர் போல. (௨)

தீதிலா வினிமைதரு முயர்ப ணிக்கன் றீங்கறியா ஞதலினுற் றீமைகூரு, மேதிலா னுளக்கருத்தை யறியா னுகி யிட்டதிசைச் சொட்டைமுத லெண்ணில் கோடிக், கோதில்படைக் கலமுற்று மன்பு கூர்ந்து கொடுத்தனையா ரொப்பரெனக் [5]கூற மண்ணிற், சாதனையா லெனைவெல்வா ரில்லை யென்று தனைவியங் [6]தாங் காரித்துத் திரிவன் சால. (௩)

வேறு.

என்றவங் கங்கள் வென்றே யிகல்படத் தானும் வேறே
ரான்றவொண் கெருடி கட்டி யளவிலா மைந்தர்க் கூட்டித்
தோன்றமுன் சாதிப் பித்த [7]றாநெறிச் சிரம நீதி
சான்றவ ராய மற்றைத் தயாவுளோர் கண்டு சீறி. (௪)

ஆயுத கலைகள் வல்ல வசைவிலா சானை நண்ணி
நாயனீ ரேநீ ரொன்று மறிகிலீர் நம்மு ளோரை
நேயமி லாத வஞ்ச நெஞ்சகச் சித்த னீக்கித்
தாயமாய்க் கெருடி கட்டிச் சாதிப்பிக் கின்று னின்றே. (௫)

என்றவர் கூறக் [8]கேட்ட வினையிலா னவன்செய் குற்ற
மொன்றையுங் [9]காணு னம்பே ரோங்கடி யார்க்கு நல்லான்
கன்றல்[10]வேண் டான மக்கோர் கருணையுள் ளானென் றூறி
[11]நன்றிகூர் பணிக்கு மீந்து போதுநா[12]ணஞ்ச நெஞ்சன். (௬)

---

௨. எல் - ஒளி. கூடா - கூடி; வந்துசேர்ந்து.

௩. சொட்டை - ஒருவகை ஆயுதம்; "சொட்டைவாள் பரிசை" (வி. பாரத. கிருட்டின. ௧௦௧.) ஆங்காரித்து - அகங்காரங்கொண்டு.

௪. அங்கம் - போர், யுத்தபரிபாஷை விசேடம். கெருடி - வில்வித்தை முதலியவை பயிலும் கூடம். மைந்தர் - மாணுக்கர் சிரமம் - யுத்தப்பயிற்சி; "சிலைக்குரு விறற்குரு குலக்கும ரருக்குவரு சிரமநிலை காண்மினென" (வி. பாரத. வாரணுவத. ௫௪.)

௫. நாயனீரே - தலைவரே. கெருடிகட்டி நம்முளோரை நீக்கிச் சாதிப்பிக் கின்றுனென இயைக்க.

௬. அடியார்க்கு நல்லான் - சோமசுந்தரக்கடவுள்; ௩௦: ௫௨; ௩௫: ௧௬. கன்றல் - வாடுதல். பணி - வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்குந்தொழில்.

(பி - ம்.) 1'காலைக்', 'காலங்' 2'கூரச்,செற்றமொன்றுமனத்' 3'வைத்துத் தானும்' 4'சிறந்தவன்போல்' 5'கூறிச்' 6 'ஆங்கரித்துத்' 7 'தூய்நெறிச்' 8'கேட்டலகிலை' 9'காணநம்பேர்' 10'வேண்டாநமக்கோர்' 11'நன்று' 12'ளஞ்சா'

நற்குரு மனைவி தன்னைக் கவருவா னயர்ந்து கொண்டாங்
குற்றகா ரியத்தை யுள்ளத் தொளித்தொழுங் குள்ளான் போலப்
பொற்புறு மனைக்கண் வந்து நல்லன மொழிவன் போற்றி
மற்றவன் றனைக்கா ணுனேல் வளஞ்சொல்வ [1]னிறைஞ்சி மெல்ல. ()

நன்னுதன் மாத ராரே [2]நாதரெங் கடைந்தா ரென்ற
வின்னருண் மடந்தை சார்ந்த விவன்கருத் தறியா ளாகிப்
பொன்னெயி லால யத்துப் போயினார் போந்த தேதிங்
கென்னவாய் விடாமற் போவா னொடொரு மிடம்பெ றுமல். (அ)

[3]மிண்டுறு கயவ னோர்நாள் வேறொரு வர்க்கா ணுமற்
கண்டுமா தினைப்பி டிப்பக் கற்புளா ளாத லாலே
புண்டரு நெஞ்சத் தோடும் போயினா ளுதறி விட்டு
மண்டிய பயத்திற் போனான் வஞ்சகக் கயவன் றானும். (கூ)

பின்னவ மான வஞ்சம் பிறர்க்குரை யார்க ணல்லோ
ரென்னுமவ் வுரையை நோக்கி யேதமின் முல்லை வல்லி
[4]தன்னுயிர்த் தலைவ னுக்குஞ் சாற்றிடா ளெங்கு முள்ள
வின்னெறிச் சொக்கன் றானே யறிகுவ னெனவி ருந்தாள். (க௦)

அடியவர் நன்மை தின்மை யறிபவ னறிந்தி ரங்கிக்
கடிதிவன் வடிவங் கொண்டு கயவனை நணுகிச் சொல்வான்
வடிவிளை யவனீ யானோ கிழவன்மா நிலம திப்பப்
படிமிசை மறுகி லேறி வெட்டவா பாடை கூறி. (கக)

நின்றனை [5]வென்று யேனீ நினைத்தகா ரியம்ப லித்தற்
கின்றுகே ளைய மில்லை யிருந்திடு பேடி யாயி
னன்றியோ ராணை யாயிற் புறப்படு புறப்ப டங்கம்
வென்றியில் லானே யென்னப் புறப்பட்டான் வெகுளி பொங்கி. ()

பலகைவாள் கடிது வாங்கிப் படைக்கல வினைஞர் தம்மு
ளிலகிய வுலகத் தென்னோ டெதிர்ப்பவ ரில்லை [6]யின்று
வலியிலாக் கிழவ னீயோ வெதிர்ப்பவ னென்று வஞ்சப்
புலையனு மெதிர்த்தான் மற்றோ ரெதிரிலாப் புனிதனோடும். (கந)

---

எ. அவன்றனை - ஆசிரியனை; வளம் - தனதுபெருமை.

அ. அருள் - தொடர்புபற்றாதே யாவரிடத்தும் தோன்றும் இரக்கம். இடம் - சமயம்.

கூ. மிண்டு - இடக்கரானமொழிகள்.

க௦. முல்லை - கற்பு. சொக்கன்தானே அறிகுவன் - சொக்கநாயகர் இயல்பாகவே அறிந்தருளுவார்; யாம் விண்ணப்பிக்க வேண்டுவதில்லை. [சபதம்.

கக. தின்மை - தீயசெயல். மறுகில்: "வீதியிலேறி" (கச.) பாடை -

கந. மற்று ஓரெதிரிலா.

(பி-ம்.) 1'நின்று' 2'நாதனெங்கடைந்தான்' 3'மிண்டொரு' 4 'தன்னுயர்' 5 'நீவென்றுயேல்' 6'என்று'

கோதிலா மனப்ப ணிக்கன் குலத்தினைக் காக்க வேண்டி
வீதியி லேறி யங்கம வெட்டுதற் கியைந்து நின்றான்
காதிய [1]புரங்க டந்தோன் கணத்திடை வெட்டி [2]வீழ்த்துத்
[3]தீதட வல்ல னாகி யிருந்துமே செய்யா னாகி. (௧௪)

வலம்படு திறத்தி னோடும் வந்[4]தியை யாவ லத்தி
லிலங்குபத் திரத்தி னோடு மிடம்படு தடியி னோடுங்
கலங்கிட [5]வொட்டி முட்டிப் பிடித்தனன் கையும் வாளும்
விலங்கெனு மணியணிந்து மேதினி யதிச யிப்ப. (௧௫)

நாகமா புரத்து வாழ்வோ னல்லடி யார்க்கு நல்லோ
னேகநா யகனை ணிந்த வணியினுக் கிகல்வே [6]றின்றிப்
போகெனிற் போகொ ணாதாய் வரவெனில் வரவொ ணாதா
யாகம்வேர்த் தஞ்சி நின்றா னங்கநூற் [7]றெட்டும் வென்றான். (௧௬)

அஞ்சிய நெஞ்சன் றேறி யறிகிலேன் முன்போ [8]லல்லை
நெஞ்சுளோ ரஞ்சும் வித்தை நீணிலத் தெங்கே கற்றாய்
மிஞ்சுபத் திரத்தோ டொள்வாள் [9]வெட்டுவோ மென்ன விட்டுக்
கஞ்சவாள் பலகை வாங்கி [10]நடந்தனன் கடுமை கூர. (௧௭)

இலகுவாள் [11]விதிர்ப்பக் கண்ட விமையவ ரருளைவாழ்த்த
வுலகிலா சாரம் பேணி யுலாவிட வுணராச் சித்த
னிலமிசை யஞ்ச முட்டி வெட்டுவ னியமத் தோடும்
வலியநீ பார்த்துக் கொள்ளென் றிறக்கினான் வலிய தோர்கை. (௧௮)

செறுத்துமே னடத்தல் கண்டு [12]சிறிதுமெய் [13]வியர்த்துச் கம்பித்
[14]தறத்துளா னெவர்க்கு மஞ்சா [15]னஞ்சினார் போன டித்தாங்
[16]கிறக்கின கைக்கு மாறா விட்டகை யிறக்கி முன்னங்
குறித்தவன் கொள்வ தான நிலத்தையுங் [17]கொண்டு சொல்வான். ()

வடிதர வொட்பத் [18]தூண்ட நூக்கமட் [19]டயங்கு ளிப்ப
[20]நடுவெழ வீசச் சாரக் [21]கலப்பனோர் [22]நடக்க முட்டக்

---

௧௫. பத்திரம் - ஒரு வகைக்கத்தி. ஒட்டி - சபதஞ் செய்து.

௧௬. நாகமாபுரம் - மதுரை; "அதோரகாக் யஸ்ய புரஸ்ய நாதம்" (ரகு வம்சம் ௬-ஆம் சர்க்கம், ௫௯.) எனவும் "உரகமா நகரான் றென்னனிவன்" (இரகு. மாலை. ௪௦௪) எனவும் வருவனவற்றுள் 'உரகாக்யஸ்ய புரம்' எனவும், 'உரகமாநகர்' எனவும் மதுரை கூறப்பட்டிருத்தல்காண்க.

௧௭. நெஞ்சுளோர் - தைரிய முடையோர். கஞ்சவாள் - வெண்கலத் தாற் செய்தவாள்.

(பி - ம்.) 1'புரங்கடிந்தோன்' 2'வீழ்க்கத்' 3'தீதறவல்லானாகி யிருக்கவும்' 4 'இயையாவயத்தின்' 5'ஓடி' 6'இன்றி' 7'எட்டு' 8 'இன்றி' 9 'வெட்டுமோ' 10'நடத்தினன்கடுமை' 11'விதிர்த்துக்' 12'சிரித்து' 13'விதிர்த்துக்' 14'அறுத்து' 15'அஞ்சினாற்போல்' 16'இறக்கினன்' 17'கூறிக்கொள்வான்' 18'துண்ட' 19'டக் கழிப்ப' 20'நடுவெழுவிச்சை' 21'கலப்பு' 22'நடக்கன்முட்டல்'

[1] கடகுள கோச ரக்கை [2]வெட்டவுட் கணக்கி லாதாய்
படிமிசை வலக்கை வீழ வெட்டுவெல் [3]பார்த்தி யென்றான். (௨௦)

இந்திர னயன்மால் சோம [4]னெனவிகல் பேசி முட்டி
[5] மூந்துற வெட்ட வெட்டுங் கையினைப் பிடிப்பான் முந்தும்
வெந்திறற் பணிக்கன் கையை மீளவும் விட்டு வெட்டச்
[6] சந்துடன் வீழ்ந்த வந்தத் [7]தலத்திடை வாளுங் கையும். (௨௧)

கையற வெட்டா முன்னங் [8]கட்டிய [9]சொட்டை யாலே
வெய்யசொற் சொன்ன நாவை விரைவொடு மரிந்து நாளும்
பொய்மைசெய் தொழுகு நெஞ்சைப் புரையறக் குத்திப் பத்திச்
செய்தியின் வணங்கி டாத சிரத்தையு [10]மறுத்து வீழ்த்தான். (௨௨)

கண்டவர் பயந்த ணிந்து கடுமைகண் டதிச யித்து
வெண்டலை விருத்த ராயும் விளங்குநம் [11]பணிக்கர் தம்மை
மண்டலத் தாரே யொப்பார் மற்றிவ ருருக்கொண் டெய்தி
யண்ட ர்நா யகன்வென் றானோ வென்னுமுன் றொளித்தா ரர்த்து. ()

வென்றிகொண் மைந்த ரெல்லாம் வென்றவர் தமைக்கா ணமற்
சென்றணி பொலியில லத்துத் தேவியை வணங்கி வாழ்த்தி
வன்றிற லுத ரெங்கே போயினா ரென்ன மங்கை
கொன்றையஞ் சடிலச் சொக்கைக் கும்பிடப் போனா ரென்றாள். ()

அவ்வுரை தெரியக் [12]கேட்டே யவரவர் முகமு கம்பார்த்
திவ்வுரைக் கேது வென்கொ லென்னுங்கா லிரும்ப ணிக்க
னவ்விசேர் கையி னானை நலந்தரு தாளி னானைச்
[13]செவ்வியி னிறைஞ்சி [14]வந்தான் செபவடக் கரமுந் [15]தானும்.(௨௫)

வந்தவன் றொழுது நின்ற வாயிலிற் [16]றொகுதி கண்டிங்
கெந்துநீர் [17]புதல்வீ ரெல்லா மிப்பொழு [18]தணைந்த தென்ன
மூந்து[19]நம் முருப்போல் வந்து முன்னைநம் பகைவ னுய
வெந்திறற் சித்தன் றன்னை வென்றன [20]னொருவ னென்றார். (௨௬)

விரைவொடுங் களத்து வீழ வெட்டிடா மறைந்தோர் தம்மைத்
தெரிவுற வென்றீர் நீரென் றிருந்தனனு [21]சிறியே மென்னக்

---

௨௨. சொட்டை: ௩-இன் குறிப்பைப்பார்க்க.

௨௪. வென்றிகொள் மைந்தர் - ஆசிரியருடைய வெற்றியைத் தமதாகக் கொண்ட மாணுக்கர்கள். சித்தனை வென்றமையின், 'வன்றிறலுதர்' என்றார்.

௨௬. எந்து - என்ன; திசைச்சொல; "அதெந்துவே யென்றருளாயே" (திருவா. அருட்பத்து, ௧-௧௦.)

(பி - ம்.) 1'கடவுள' 2'வெட்டக்காண்' 3'பார்பார்' 4'வென' 5 'மூந்துறத் தொட்டு' 6'சந்தொடும்' 7'தலத்தொடு' 8'கடியதோர்' 9'கொட்டை' 10'அறுத் தான்வீழ்த்து' 11 'பணிக்கரைப்போல்' 12 'கேட்டோரவாவற' 13 'செவ்வையி' 14'வந்தார்' 15'தாமும்' 16'தொழுதி' 17'புதல்வர்', 'மைந்தர்', 'வீரர்' 18'அணைந்தீ ரென்ன' 19'நம்' 20'ரொருவர்' 21'செல்வாவென்னக்'

கருதியாங் கவன்முன் னுற்ற கருத்தறி [1]யாமை யாலே
புரையிலா மனையிற் புக்கான் புகலவோர் மாற்ற மின்றி. (௨௭)

சித்திர மனைய கோலத் தேவியை வினவத் தேவி
பொத்திய செய்தி சொல்லிப் புனிதனே வென்று னென்ன
மெத்திய பரிவிற் போந்து வெளிப்பட வெவர்க்குங் கூறிப்
பத்தர்கள் பத்த னல்லா லாருளர் பழுது [2]தீர்க்க. (௨௮)

மேவிய புதல்வி ரென்று விளம்பியா லயத்து நண்ணித்
தேவதே வனைவ ணங்கிச் செப்புவா னெப்பி லானே
யாவிநா யகனே நின்பா லன்பிலா வென்பால் வைத்த
வோவிலா நின்பே ரன்பை யெப்படி யுரைக்கு மாறே. (௨௯)

[3] கருதியென் னுயிரை யின்றென் குலத்தினைக் காக்க வேண்டிப்
பொருவின்மெய் கரந்து பொல்லாப் புலையனே னுருப்பு னைந்திங்
கரியபே ரங்கம் வெட்ட [4]வியைந்தனை யடிமை வேறு
தரைமிசை [5]யின்மை யாலோ தலைவனே யெனத்து தித்தான். (௩௦)

மற்றுமன் னவன்முன் னான மனிதர்கண் டதிச யித்துப்
பற்றிய வடியார் தம்மேற் பழுதுவா ராமற் காக்கு
முற்றவன் றன்னைக் கற்பார் மடந்தையை யுண்டென் றேத்தும்
வெற்றிகொள் பணிக்கன் றன்னை வியந்தனர் நயந்து வாழ்த்தி. (௩௧)

பணியடி யார்க்கு நல்லார் பத்திர மென்னுஞ் சொல்லு
மணிபொலி திறத்தி னோங்கு மழகிய சொக்க னென் றுந்
துணிவுடைத் தோலாக் கையுந் துளங்கிட வன்று முன்று
வினையிலா வுலகத் தின்கண் [6]வழங்கின வெவரும் போற்ற. (௩௨)

ஆகத்திருவிருத்தம் - ௮௬௬.

---

## ௩௬.—மதுரையான திருவிளையாடல்.

மன்னிய புகழ்க்க டம்ப வனத்திரு நகரி தன்னுட்
செங்நெறித் தத்த னென்னும் பெயருடைச் செழியர் கோமான்
றென்னெறி மறைத்து திக்குஞ் சுந்தரற் கன்பு பூண்டு
முன்னமோர் காலந் தால முறைமையிற் [7]பரிந்து காத்தான். (௧)

---

௨௮. பொத்திய - மறைத்த. மெத்திய - நிரம்பிய.

௩௧. 'உண்டென்றேத்தும் வென்றிகொள் பணிக்கன்' என்றது ஆஸ்திக னென்றபடி.

(பி - ம்.) 1'யாமலேதான்' 2'நீக்க' 3 'கருதியின் னுயிரை' 4 'விரைந்தனை' 5 [illegible] 6 [illegible] 7 [illegible]

அறமலி வைதி கத்தி னருட்ரு நெறிபொ ருமற்
கறுவியாங் கதுகு லைப்பான் வேண்டுப கணத்திற் கூட்டி
மறமலி யமண ரெல்லா மந்திர வாதஞ் செய்தோர்
திறலுடை யரக்கன் றன்னைத் தோற்றுவித் தார்தி ரண்டு. (௨)

வெண்பிறை யெயிற்றுக் கொற்றக் கருநிற விரிசெங் குஞ்சிப்
பண்பிலா வரக்கன் றன்னோர் பாம்புருக் கொள்ளப் பாம்பு
விண்படர் வரைபோற் றோன்றி மேதினி நடுங்க நஞ்சங்
கண்பட விழித்துச் சீறி யெழுந்தது கனன்றுபொங்கி. (௩)

செல்வமார் செழியன் மிக்க சிவபத்தி [1]முதிர்வா னம்மைக்
கொல்லுமா றெண்ணி னானீ கூசிடா [2]தணுகி யாங்க
ணெல்லைமா நகரி யோடு முரனுடை யவனை நின்வாய்ப்
பல்லுற விழுங்கி டென்று பாம்பினை யேவி னார்கள். (௪)

தூவிட வெண்பற் செங்கட் கருநிறச் சுத்தத் துத்திப்
பாவகப் பகுவாய் நாகம் படம்விரித் தடர்ந்து நீண்ட
வால்விதிர்த் துடன்மு றுக்கி வச்சிர விரட்டை நெட்டை
[3]நாவசைத் துயிர்த்து ரத்திற் சேர்ந்தது நகரின் பாங்கர். (௫)

தானது கண்டோ ரோடித் தலத்துளோர் தம்மை யெல்லா
மூனுயிர் கொள்வான் கூற்ற மணைந்ததோ வறியோ மோங்க
[4]வானுறு வரைபோ லின்றோர் மாசுணம் வந்த தென்று
மீனவற் குரைப்பக் கேட்டு வந்தனன் விரைவிற் [5]கூடி. (௬)

[6] தெரிவுறத் தடுப்பான் வந்த தென்னவன் போகி நெட்டை
வரையுயர் வடிவங் கண்ட தேதென மருண்டு நின்று
பெரியபாம் பணியுஞ் சொக்கப் பிஞ்ஞகா வென்று நெஞ்சத்
துரனோடுந் தியானித் தெய்தா னொருதனிப் பாணங் காண. (௭)

---

௨. கறுவி - கோபித்து.

௩. இந்நாகம், திட்டிவிடமென்பார், 'நஞ்சங்கண்பட விழித்து' என்றார்; இது நஞ்சுவிழியரவமெனவும் வழங்கும்; "நஞ்சுவிழியரவினல்லுயிர் வாங்கி" (மணி. ௨௩: அ௪); "கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசு" (கம்ப.தாடகை. ௪௦.)

௫. பாவகப் பகுவாய் - நெருப்பைக்கக்குகின்ற பிளந்தவாய். உரத்திற் சேர்ந்தது - மார்பால் நகர்ந்து வந்தது; உரம் - வலியுமாம்.

௭. 'பெரியபாம் பணியுஞ்சொக்கப் பிஞ்ஞகா' என்றது, கருத்துடையடையணி.

(பி - ம்.) [1]'முதிர்ந்து' [2]'அஞ்சி' [3]'நாவிசைத்துயிர்த்துயிர்த்துச்' [4]'வானுறைவளி' [5]'கூட்டி' [6]'தெரிவறத்'

வானார வதனைத் தாவி வருமுனங் கடிப்பத் தேறி
மீளவும் விட்ட கொற்றப் பஃறலை வெவ்வாய் வாளி
நீளுருச் சின்ன மாக வீர்ந்திட நீத்த மென்னக்
கோளழல் விடத்தை வாயா லுமிழ்ந்தது கொடிய நாகம். (அ)

[1] கடியபாம் புமிழ்ந்த வேகக் கடுவிடம் பெருக்கா றாகிப்
படிபுகழ் நகரிற் சென்று பரந்திட வழலாற் றாமற்
குடிதழுஉ மன்னன் முன்னா மாவிடர் குழறிச் சென்று
சடைமுடி யழகன் கோயி லடைந்தனர் சரண மென்று. (௯)

வேறு.

அரவா பரணா சரணஞ் சரணம் மடியார் துயரங் களைவாய் சரணங், குருமா மதிசேர் சடையாய் சரணங் கொடுமா [2]விடமுண் டவனே சரணந், துரைநா யகனே சரணஞ் சரணந் தக்கோர் பரவுஞ் சொக்கே சரணங், கருதார் புரமெய் தவனே சரணங் கருணா கரனே சரணஞ் சரணம். (௧௦)

பாரோர் பரவும் பரனே சரணம் பணிவா னவர்கட் [3]கணியாய் சரணம், வீரா விதழித் தாரா சரணம் மெய்யா [4]வுழைசேர் கையா சரணந், தேரா விருவர்க் கரியாய் சரணந் தெளிவா ரொருவர்க் கெளியாய் சரண, மாரா வமுதே சரணஞ் சரண மழகா வருளா கரனே சரணம். (௧௧)

மழுவார் படையாய் கொடுமால் விடையாய் வரிதோ லுடையாய் புடைமா துடையா, யழகா வென்றிப் [5]புழுகா வன்பர்க் கரியா யன்பர்க் கெளியா யிந்தத், தழலார் வஞ்சக் கொடுமா நஞ்சைத் தணியா யிங்குத் தணியா யென்றுய்த், தழுவார் தொழுவார் விழுவா [6]ரெழுவா ரானார் சோர்வா ரானா ரவரே. (௧௨)

வேறு.

புகலென வந்து போற்றப் புண்ணியச் சொக்க மூர்த்தி
பகாரு மனிதர் முற்றும் படுந்துயர் தனையு மஞ்சச்

---

அ. அதனைக்கடிப்ப - அப்பாணத்தைக் கடிப்ப.

௯. அழல் - விடம். அழகன் - சோமசுந்தரக்கடவுள்; "அழகனீ புயங்கனீ", "முப்புரஞ் செற்றவழக" (திருஞா. தே.); "அழகனே யாலவாயி லப்பனே" (திருநா. தே.)

௧௧. ஆரா அமுதே- தெவிட்டாத அமுதமே.

௧௦-௧௧. விடத்துன்பத்தைப்போக்க வேண்டுமென்பதற்குக் கூறிய அடைகளும், 'கருணாகரனே', 'அருளாகரனே' என்று கூறியிருத்தலும் ஆராய்தற்பாலன.

௧௨. புழுகு - மலையெருக்கம் பூ. வன்பர்க்கு அரியாய்.

(பி - ம்.) 1'கடியவாயு' 2'புரமுண்' 3'இனியாய்' 4'உமைசேர்கையாய்' 5 'புகழா' 6'அயர்வார்'

சகமிசை யோடு நஞ்சத் [1]தடினிவெம் மையையுங் கண்டு
மிகவருள் சுரந்தான் கோளை [2]விரைவினிற் றணிப்பா னெண்ணி. ()

சடைமுடி [3]யமுத விந்து விந்துவைத் தெறித்துச் சார்ந்த
விடமெலா மதுர மாக்க வெப்பமுற் [4]றடைந்தோர் யாற்று
ளிடரெலா [5]நீங்கப் புக்காங் [6]கின்பமெய் தித்தி ளைத்து
நடநவின் றூர்க ளெந்தை பெருமையை நயந்து வாழ்த்தி. (கசு)

திருவம ரருள்சேர் சொக்கன் றேவர்க டேவன் [7]வெய்ய
வரவுமி ழால வாற்றை மதுரமாக் குதலா லாங்கு
வார்புகழ் பதிக்கு நாம [8]மதுரைமா நகரி யென்றே
[9] பரிவுற வன்று மூன்றைப் பரந்தது பாரின் மீது. (கரு)

காவல னெய்ய வெய்ய கடுவிட முடியக் கக்கி
யேவொடு மறிந்து கம்பித் தின்னுயிர் விட்ட பாம்பைத்
தேவியு நயப்ப மண்ணிற் றிருவிளை யாடல் காண
மாவரை யாக்க நாக மலையென வழங்கிற் றன்றே. (கசு)

வே று.

விதுவரவ..............மதுரைநகரே.*

வே று.

நாணமி லாதோர் மீண்டு நச்சரா மாண்டி மைப்பிற்
சேணுயர் விலங்க லாதல் கண்டும்பின் றெளியா ராகி
மாணுடைத் தத்தன் றன்னை [10]மதுரைமா நகரி யோடுங்
காணமுற் கொல்வோ மென்றுங் கவரவர் [11]கழறிப் பேசி. (கஎ)

வே று.

நறையி லங்க சோக நீழ னண்ணி யெண்ணி லாதவா
மறம லிந்த [12]சந்த மிஞ்சும் வஞ்ச மந்தி ரங்களா
லிறையி னம்பர் வெள்ளி வெற்பை யெள்ள வுள்ள மஞ்சவோர்
திறம்வி ளங்கு வலியி லங்கு தேனு வைப்ப டைத்தனர். (கஅ)

---

கங. தடினி - ஆறு. கோள் - விடம். [யை.

கச. அமுதஇந்து விந்துவை - அமிர்தமயமாகிய சந்திரனிடத்துள்ள துளி

கஎ. இங்கே சமணரை, 'நாணமிலாதோர்' என்றதுபோல் ''மானமில் சமணர்'' என்பர் பின்னும்; உரு. காண-காணும்படி. கழறி-சபதங்கூறி.

கஅ. எள்ள - ஒப்ப; உவமவுருபு. தேனு - பசு.

* இச்செய்யுளின் முழுப்பாகத்தை ரு-ஆம்பக்கத்திற் காண்க.

(பி - ம்.) 1 'தடினியினானுங்' 2 'விருப்பினிற்றடுப்பான்' 3 'யிருந்த' 4 'அணைந்தோர்' 5 'நீக்கிப்' 6 'இன்பமேமெய்திளைத்து' 7 'பைவாய்' 8 'மதுர' 9 'பரவுற'10'மதுரமா' 11'கழலப்' 12'தந்த'

படைத்த வெய்ய பசுவை யீசர் பத்தர் வாழு மதுரையைப்
புடைத்த ழித்து ழக்கெ னப்பு கன்று போக விட்டலுங்
கடுத்த வெஞ்சி னத்தி ளேடு கால [1]மேக மென்னவே
யிடித்த திர்ந்து சென்ற தெந்நி லத்த ரும்வெ ருக்கொள. (கக)

வேறு.

வெல்லருங் கோவைக் கண்டு வேந்தன்முன் ளோர்ந டுங்கிக்
கொல்லொணுப் படையெ வர்க்கும் வெல்லொணு தென்று கொற்றத்
தொல்லையா லயத்துச் சென்று சொக்கனே யென்ன வெல்லாம்
[2] வல்லநா யகனி தற்கென் செய்குவே மாற்றற் கின்றே. (உ௦)

அறமறக் கொல்ல வந்த தாயினும் பசுவைக் கோறன்
மறைவழக் கல்ல வீரம் வாங்குத றகுமென் றெண்ணி
முறையிடு பவரைக் காப்பான் வரையென முன்கி டந்த
திறலுடை யடல்வெள் ளேற்றை யேவினுன் றேனு மீது. (உக)

படிமிசை யெவருங் காணப் பாற்கடல் கிளர்ந்த தென்ன
விடைவிடை கொண்டெ ழுந்து வெள்ளிமால் வரைமீ தேற
விடிதரு பெரிய வெள்ளை யிகலுடைக் கடிய மேக
நடையொடு செல்வ போலச் சென்றது நாசி மூசி. (உஉ)

வாவுறு வடிவா னேற்றைக் கண்டபோ தேம யங்கி
மேவுவீ ரியத்தை யெல்லாம் விட்டிணை விழியை மூடி
யாவுரு நடுங்கி வீய வார்த்தெழுந் தகிலத் தோர்க
டேவதே வனைத்து தித்தா ருறுபயந் தீர்ந்து தேறி. (உ௩)

தாருறு நெடிய சேவாற் பேருடற் [3]றழைந்த தாடிக்
கூரிய பெரிய கோட்டுக் கோவுயிர் விட்ட பின்னர்ச்
சீரிய பிறங்க லாக்கித் திருவிளை யாடல் காணப்
பார்மிசை வழங்கு வித்தான் பசுமலை யென்ன வாங்கு. (உச)

---

கக. விட்டல் - விடல்; விரித்தல் விகாரம். காலமேகம் - ஊழிக்காலத்து மேகம்.

உ௦. 'கொல்லொணுப்படை யெவர்க்கும் வெல்லொணுது' என்பது ஒரு பழமொழி. எல்லாம் வல்லநாயகன்- சோமசுந்தரக்கடவுள்; "சிவமெனும் பொரு ளு மாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதாம்" (ஆனந்தலகரி, க) என்பர்.

உக. 'அறமற...வழக்கல்ல' என்பது ஒருபழமொழி.

உஉ. விடை விடை கொண்டு: மடக்கணி. "சொல்விடைகேட்டுச் செல் விடை வெற்பும்" (மதுரை மும்மணிக்கோவை, உ௮.) மூசி - மூச்சுவிட்டு, மோந்து.

உச. தார் - கிண்கிணிமாலை. தாடி - அலைதாடி. பிறங்கல் - மலை.

(பி - ம்.) [1]'வேகம்' [2]'வல்லநாயக விதற்கென் செய்குவேன் மாற்றற்கென் றுன்' [3]'தளர்ந்த'

மந்திர வாதஞ் செய்த மானமில் சமணர் தந்தம்
வெந்தசந் தங்க ளோடும் போயினர் விளிவோ டஞ்சிச்
சிந்துரத் துங்கச் செங்கட் பெருந்திமிற் றிரண்ட னேர்வாற்
சந்திரப் பகிர்ம ருப்புச் சுந்தரத் தரும வேறு. (உரு)

கொடுந்தலை மேரு வெற்பைக் கோட்டுமண் கொண்டு வெய்யோ
னெடுங்குமால் வரையின் பான்மேய்ந் துதயமால் வரையிற் றுவி
யடுங்கட லேழு நீருண் டவனிகாற் சிறைகொண் டுப்பா
லிடங்கொள்பே ரண்ட முட்ட [1]விட்டிறுத் திட்ட தாங்கு. (உசு)

வினையற வந்தி றைஞ்சு மெழின்மழ விடையை நோக்கி
மனமகிழ்ந் தணிக ளோடு மதிதவ ழுயர்பி னோடு
மினிமையிற் கிடத்தி நாம மிடபவெற் [2]பென்னப் போந்த
தனுவொடுங் கிடந்த தோங்கத் தண்டலை மலையதாகி. (உஎ)

ஆங்கது கண்டோ ரெல்லா மதிசயித் தருளை வாழ்த்தித்
தாங்கரு [3]மூவகை கூர்ந்தார் தனிவிளை யாட றன்னைப்
பாங்குமைக் கருளிச் செய்து பத்தர்கள் [4]பத்த னங்க
ணீங்கரும் விடையை நோக்கி யிருந்தன னேசங் கூர்ந்தே. (உஅ)

ஆகத்திருவிருத்தம் - கஉஎ.

---

## ௩எ.—வெப்புத்தீர்த்த திருவிளையாடல்.*

ஞான முற்றிய வெற்றிகொ ணற்றவர்
பாணி றத்திரு நீறு [5]பரப்பியே
மீன வற்சுடு வெப்ப மொழித்துறு
கூனி மிர்த்த திருக்கதை கூறுவாம். (க)

---

உரு. சந்தம் - இயல்பு.

உசு. கோட்டு மண்கொள்ளல் - களிப்பின் மிகுதியால் மண்ணைக் கொம்பாற் குத்தியெடுத்தல்; இத்தப்பிரயோகத்தைச் சீந்தாமணி முதலியவற்றிற் காண்க; "கோட்டுமண் கொள்ளா" (முத்தொள்ளாயிரம்.) காற்சிறைகொண்டு - காலிடங் கொண்டு. உப்பால் - பின்பக்கம்; முதுகு; "ஊழையு முப்பக்கங் காண்பர்" (திருக்குறள், சுஉ௦.)

உஎ. தண்டலைமலை - சோலைமலை.

உஅ. நீங்கரும் விடை - ஸந்நிதியிலெழுந்தருளிய இடபமூர்த்தி.

(௩எ)

க. ஞானமுற்றிய வெற்றிகொள்கற்றவர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வெப்பம் - சுரம்.

* திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருளிச் செய்த திருவாலவாய்த் தேவாரங்கள் ஆராய்தற்பாலன.

(பி - ம்.) [1]'இட்டிருக்கின்றது' [2]'எனப்போவென்னத்' [3]'இனிமை' [4]'பத்தன்மற்று' [5]'பரப்பவே'

வேறு.

நன்னெறிசேர் காவிரிசூழ் நன்னாட்டு முன்னொருகாற்
பன்னிரண்டு பெயருடைய செழும்புகலிப் பழம்பதியுண்
மன்னுமறை யோர்குலத்து வைதிகவா ரணமென்றோர்
கன்னன்மொழிப் பாலகனார் கவுணியகோத் திரத்துதித்தார். (உ)

பானலங்கட் கவுரிமுலைப் பாலமுது செய்தருளி
யூனமிலா வருங்கலைக ளோதாம லுணர்ந்துயர்ந்த
ஞானநிறைந் தரும்பதிகம் பாடிமறை நாடரிய
மானமர்கை யான்மாட்டு வரிசைகளவ் வண்டுபெற்றார். (௩)

அன்புடைநா வுக்கரசோ டாதிமறைக் காட்டெய்தி
நன்புறுகா விரிநாடு திருநீறு நனிவிளங்க
மன்புகழ்சேர் புனலவையை வளநாடு சமணர்களாற்
றுன்புறுமென் றேயொருஞ் சொல்கின்றா ரென்றழுங்கி. (௪)

சாதிமுறை யறியாத சமணர்வழி யொழிவித்தே
யாதரவி னுமைத நாட்டனுங் யனுசெழுதலும்
வேதநெறி யுஞ்சால [1]விளங்குவிக்க வேண்டுமென
வோதரிய திருவுள்ளத் துணருங்கா லிறையருளால். (௫)

மன்னமைச்சன் குலச்சிறையும் வளவர்கோன் றிருமகளார்
தென்னவன்றன் மாதேவி துருவுடைமங் கையர்க்கரசு
முன்னரிய சிவபதத்து முதுரசசியஞ் லொளித்தோலை
யின்னல்கெட விடுத்தாரங் கெய்துயவா றதுகேட்டு. (௬)

வேறு.

அருண்ஞான சம்பந்தர்க் கடிமை யாற்று வல்லமானி குலச்சிறைவிண் ணப்ப[2]மின்று, பெரியோரா றிருவுளளப் பெருமை கேட்டேம் பேசரிய துறத்தமணர் தம்மை முறமும, விரைவாக வெழுந்

உ. பன்னிரண்டு பெயர்களாவன: பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய, சிரபுரம, புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலமெனபன; காழியெனவும கொச்சையெனவும் வழங்கும்; பெரிய. திருஞான. கச - ஆம் திருவிருத்தம் பார்க்க.

௩. ஓதாமலுணர்ந்துயர்ந்த: ருள. வரிசைகள் - பொற்றாளம், முத்துச்சிவிகை, முத்துப்பந்தர் முதலியன.

௪. மறைக்காடு - வேதாரணியம்.

௫. சாதிமுறை யறியாத சமணர் என்றது, கூட்டத்தினரென்பதைப் புலப்படுத்தியபடி; "குழுவுடையமண" என்பா பின்னும; சுக. உணருங்கால - ஆராயுமிடத்து; உணாதல - ஆராய்தல: "நத்தகடுவெழுந் துணாவார்" ௩ஃ: ௩.

எ. மானி - மங்கையர்க்கரசியார். பறிதலையர் - சமணர். பழுதாமென்று ஓலை விடுத்தாரென முன்னே கூட்டுக.

(பி - ம்.) [1]'விளக்குவிக்க வேணுமென்றாங்கு' [2]'என்று'

தருளி வெல்ல வேண்டும் வெண்ணீறு மஞ்செழுத்தும் விளங்க
விங்குப், பரிவோடு மெழுந்தருளா தொழியி னொடு பறிதலைய ராற்
சாலப் பழுதா மென்றே. (எ)

வேறு.

சென்ற வோலையின் செய்திகண் [1]டின்புறு
நன்றி கூர்தரு ஞானசம் பந்தரும்
வென்றி யாலவாய் மெய்யனை வாழ்த்துதற்
கின்று கால மெனவொருப் பட்டனர். (அ)

சார்ந்த நாவுக் கரசுந் [2]தவாநலஞ்
சேர்ந்த மாந்தருஞ் செந்நெறிப் [3]பாலரே
வாய்ந்த நாட்டிதி வாரம்பொல் லாவெனச்
சூழ்ந்து பன்முறை சொல்லி விலக்கினர். (கூ)

என்னை யாளுடைச் சொக்கை யிறைஞ்சுதற்
குன்னு நெஞ்சுடை யேனுக் குணர்வுளீர்
புன்மை நாளும் புனிதமா மென்றுயர்
நன்மை யாப்பு நவிலுவா ரின்புற. (க0)

வேறு.

ஏயுற வச்ச முற்ற மாந்தர்க ளினிமை கூரப்
போயுறு காரி யங்கள் பலிப்பதன் பொருட்டு முன்னர்
வேயுறு தோளி பங்க னென்றுயர் மேன்மை கூர்ந்த
பாயிரப் பதிக மோதிப் புறப்பட்டார் பரிய யாரும். (கக)

மெய்திக ழப்பர் தம்மை விடுத்தியன் மதுரை நோக்கி
வைதிக நெறியைக் காக்க மானமில் சமணர்க் காயப்
பொய்யிலா [4]ஞான யானை மதம்பட்டுப் போகா நின்ற
தையம தில்லை யென்ன வறைந்தன காக ளங்கள். (கஉ)

கழுமலப் பால ஞானை கருணைகூர் மானி யோடு
விழுமிய வமைச்சன் காண்க மேதினி முழுது மெச்சக்
[5] குழுவமண் குண்டர் தம்மைக் கூவிவா தித்து வென்று
வழுதிநா டடைய நீறு பரப்பிட வருகின் றேமால். (கங)

---

அ. சென்ற - வந்த. 'ஆலவாய் மெய்யன்' ௩எ: உஅ; சஉ: ச.

கூ. நாள்-நக்ஷத்திரம்; திதியிலும் நூறு மடங்கு வலியுடைத்தாதல்பற்றி, நாள் முற்கூறப்பட்டது.

கக. "வேயுறு தோளிபங்கன்"என்பது கோளறுபதிகத்தின்முதற்குறிப்பு.

கஉ. மானமில் சமணர்; ௩கூ: உரு.

(பி - ம்.) [1]'இன்புற' [2]'தயாவுடைச்' [3]'பாலக' [4]'யானைஞான' [5]'குழுத்திகழ்'

வேறு.

ஐயமிலை யென்றினிய திருமுகத்தை முன்னடைந்தோர்
துய்யகரம் [1]விடுத்தடைந்த தொண்டர்குழாஞ் சூழ்ந்தேத்தச்
செய்யபுனற் காவிரிசூழ் சென்னிவள நாடகன்று
வையைநதித் தென்பாண்டி நன்னாடு வந்தடைந்தார். (கச)

[2] ஏந்துமறை வேந்தர்திருப் புத்தூ [3]ரிறைஞ்சிமதி
தோய்ந்தகொடுங் குன்றந் தொழுது திருப்பதிகஞ்
சேர்ந்திசையின் வானிற் பொலியென்று தேர்ந்தோதிப்
போந்துமது ரா[4]புரியி னெல்லை புகுந்தனரால். (கரு)

வேறு.

மலலல்சேர் நகரத் தேயெண் வரையகத் தமணர் முற்றுஞ்
சொல்லருந் தீக்க ணுக்க நின்னிமித் தங்கள் கண்டு
வெல்லரும் பகையுண் டாகு மென்றவர் வெருக்கொண் டுள்ளத்
தொல்லையின் மன்னன் பாறசென் றுரைசெய்வார் பரசி மெல்ல. ()

பிண்டிவே ரற்று வீழப் பிரம்புநேர் பிளப்பக் கையிற்
குண்டிகை யுடையப் பாய்முக் குடையுகக் கழுவா யேறக்
கண்டனங் கொடுங்க ணுத்தோள் கண்ணிடந் துடிக்கு மூர்வேம்
பண்டிகழ் கூகை யார்ந்தை பாழிமேற் குழறுங் காணே. (கஎ)

இன்னதென் றறியே மென்னு மெனவஞ்சா வரச னஞ்சித்
துன்னியோர் தமைவி டுத்துத் துயருறத் திருமு கங்கண்
டின்னறீர் மானி யாரு மின்புறு மமைச்ச னாரு
நன்னிமித் தங்கள் செய்யக் கண்டுள நனிந யந்தார். (கஅ)

இந்தவா றுறுங்கா லங்க ணினிமையிற் சிலர்வந் தெய்தி
மந்தர முல்லையி னூர்க்கு வைதிக யானை நந்தஞ்
செந்தமிழ் நகரின் பாங்கர்ச சேர்ந்ததென் றுரைகை கூறத்
தந்திர வமைச்ச னாரை யேவினா தயாவு கூாநது. (கக)

ஆண்டுமுன் சென்று காணு மறிவுடை யமைச்ச னார்முன்
பூண்டபே ரன்பு நீடப் [5]புளகெழ வுடல்கம் பிப்ப
வீண்டுகண் ணருவி சோர வெதிர்துதித் திறைஞ்சி வீழ்ந்தார்
காண்டகு பிள்ளை யாருங் கண்டெடுத் தணைததார் வாழ்த்தி. (உ0)

---

கரு. கொடுங்குன்றம் - பிரான்மலை; இஃது உக்கிரகிரியென்றுவடமொழியில் வழங்கும்; 'வானிற்பொலி' என்பது அததலப்பதிகத்தின் முதற்குறிப்பு.

கசு. நகரதது ஏய். எண்வரை: கஉஎ-ஆம் பக்கததுக் குறிப்பைப்பார்க்க.

கஎ. பண திகழ் கூகை, இகழ்சசி. பாழி - குகை.

கஅ. என்னும் - யாதாமோ. திருமுகம் - ஓலை.

கக. வைதிகயானை - திருஞான சம்பநத மூாததி நாயனார்.

(பி - ம்.) [1]'விடுத்தினிய' [2]'ஏந்துமதி' [3]'இஞ்சிமதி' [4]'புரியெல்லை' [5]'புளகெழுநதுடல', 'புளகம்வநதுடல்'

முதிருமா மறைமு ழங்க முத்தமிழ் வாணர் போற்றக்
கதிர்விடு முத்தக் கொற்றச் சிவிகைமேற் கவிகை துன்றப்
புதியசா மரையி ரட்டப் [1]பொருவரும் வாது காண்பான்
றுதிசெய்து வந்த, வானோர் சூழ்ந்தலர் மாரி பெய்ய. (உக)

வேறு.

சுரருலகு புகவொலிக்குந் துன்றுசெழுங் காகளங்கள்
பரசமய கோளரிவந் தானென்று பணிமாற
வரிசைகள்[2]கொண் டெதிர்கொண்ட மாமறையோர் குணலையொடும்
பொரியலர்சிந் திடத்தொண்டர் போற்றிசய சயவென்ன. (உஉ)

வேறு.

அதிர மாமுழ வருடரு மிருடிக ளார்த்துத்
துதியி னேத்திடச சாததிய சுட்டிநீ றிலங்க
வெதிரி லாதசெம் பவளவெண் ணகைநிலா வெறிப்பப்
பதியின் மேவினர் நித்திலப் பந்தரி னீழல். (உங)

வேறு.

அறமுற[3]நண் ணியஞான முனிவரள விடவொண்ணு
மறுவிலுயர் கோபுரம்பொன் மதிலிலங்கு நகர்கண்டிங்
கிறைவர்திரு வாலவா யெம்மருங்[4]க தெனுமளவிற்
றுறவுநெறி தரும்பெரிய தொண்டரா கரவென்றே. (உச)

மாசறுபூம் பொழில்புடைசூழ் மதில்வாள கிரிகாட்ட
வீசுகொடி விசும்பளப்ப விண்ணவர்சூழ் மேருவெனத்
தேசொடுவான் [5]முகடுதொடுஞ் செழுமணிக்கோ புரமிலங்கு
மீசனுறை திருவால வாயிதுவே யெனக்காட்ட. (உரு)

---

உஉ. பணிமாறுதல் - இயங்கேவுதல்; "பணிமாறுந் தனிக்காளத் தெழுந்த வோசை" (பெரிய. திருஞான. ருகக.) குணலை - ஒருவகைக்கூத்து; "குண்டிகை குசையிசை தண்டுகள் கொணடெதிர் குணலை மலிந்தனர்" (கோயிற்பு. பதஞ்சலி. கச.)

உங. சுட்டியும் நீறும்.

உக-ங. "சதுரா னனனுஞ் சக்ரா யுதனுஞ் சந்த்ரா தபரும் மிகதரா திபரும், மதுரா புரிவா தறிவா மெனமேல் வரவுந் தனன்வை திகவா ரணமே" (தக்க. கஅஉ.)

உரு. திருநகர்: ச.

(பி - ம்.) 1 'பொருவருமதுரை', 'பொதுவறும்வாது' 2 'கண்டு' 3 'எண்ணிய' 4'ஏதெனு' 5'முகத்தோடுஞ்'

வேறு.

மாசில்கை [1]கூப்பிக் கண்டுமுன் பதிக மங்கையர்க் கரசியென் றெடுத்துக், கூசியா லயத்துச் சென்றெழு நிலைசேர் கோபுரத் தணைந் துவீழ்ந் திறைஞ்சிப், பேசருந் துதியால் வலஞ்செய்துட் புகுந்து பெ ருங்கவிப் புலவனைக் கண்டு, நேசமார் விதியின் வணங்கியொண் பதிக நீலமா மிடற்றென வெடுத்தார். (௨௬)

வேறு.

உளநெ கிழ்ந்திட வொழிவிலா விழிபுனல் சொரியப்
புளக மேவிடப் பொடியணி மெய்விதிர் விதிர்ப்பக்
கிளர வோதிடுங் கீதவொண் பவளவாய் குழறக்
களிகொள் வேதியர் மூழ்கின ரானந்தக் கடலுள். (௨௭)

போது மெல்லையிற் புகழுடைச் செம்பியன் மகளார்
காது நெஞ்சுடைக் காரமண் குண்டர்க டம்மை
வாதின் வெல்லுவான் பிள்ளையார் வந்தன ரென்றே
யாதி யாலவாய் மெய்யனை வணங்கவென் றடைந்தார். (௨௮)

வந்து [2]காதலிற் பிள்ளையார் மலரடி வணங்கிச்
சந்து மேவுடல் புளகெழக் கண்ணினீர் ததும்பச்
சிந்தை யன்புறக் [3]கண்டுநின் றிருமுகங் காண்பா
னெந்தை யேயென்ன புண்ணியஞ் செய்தன [4]னின்றே. (௨௯)

வேறு.

மையறுகற் பகக்கன்றே வரையரையன் றிருமகளார்
துய்யதனத் தமுதுண்டு சோதிவிடு மணிவிளக்கே
மெய்முகிலே தமிழ்க்கடலே யருட்குன்றே மேதினியோர்
செய்தவமே மறைப்பயனே செழும்பதுமப் பதம்போற்றி. (௩௦)

வேறு.

என்று போற்றிட விரக்கமுற் றருமறைத் தலைவர்
மன்ற லங்குழற் பாண்டிமா தேவிகேண் மகிழ்வி
னின்று வந்தன னின்பரி வாலென நயந்தாங்
கொன்ற வேண்டுப நல்கிமுன் போயின ரொல்லை. (௩௧)

வேறு.

இன்னருள்சே ரமைச்சனு ரிடங்காட்டப் போந்தினிய
தொன்னெறிசேர் வாகீசச் சுவாமி[5]மடத் தவதரிப்ப
வன்னதுகேட் டிருஞ்[6]சமணர் திரண்டறிவான் விடுத்ததிறன்
முன்னிகழ்ந் தினர்சொல்ல [7]முட்டுச்சஞ் சலமுற்றார். (௩௨)

---

௨௬. 'மங்கையர்க்கரசி', 'நீலமாமிடறு' என்பன பதிகங்களின் முதற்குறிப்புக்கள்.

௨௭. ஒழிவிலா - ஒழிவில்லாமல். ௨௮. காதும் - துன்புறுத்தும்.

௩௨. வாகீசசுவாமி மடமென்று ஒருமடம் மதுரையில் முன்புஇருந்ததாக (பி - ம்.) 1'கூப்பக்' 2 'காவலிற்' 3 'நின்று' 4 'என்றே' 5 'மடத்தவரிருப்ப', 'மடத்தவர்தரிப்ப' 6'சமணராண்டறிவான்' 7'முட்டிச்'

வேறு.

விட்ட வாறது கேட்குமுன் வெய்யவாழ் கிணற்றுட்
கட்டி வீழ்ந்தனர் சிலர்சிலர் களத்திடைக் கயிறுங்
கிட்டு ஞான்றனர் சோர்ந்தன ரெட்டிதின் றசோகின்
முட்டி மாண்டனர் [1]புரத்தமண் குரத்தியர் முடிய. (ருரு)

மதியி லாதவ ராங்கது கண்டுளம் வாடி
யெதிரி லாதநஞ் சமயமின் றிறந்தது விரைந்தே
முதிரு முன்னர்யா மொழிகுவம் [2]வழுதிமாட் டெனவே
யதிர்வி னோடுசென் றுரைசெய்வா ரரசனைப் பரசி. (ருச)

வேறு.

மறைஞானி யென்பானோர் சோழியவை திகச்சிறுவன் மதுரைமேவிப்
பொறையாருஞ் சுந்தரன்ற னடிவணங்கித் தானறிந்த புதுமை கூர்ந்த
வறமாருந் தமிழ்பாடி யருவிவிழி யொடும்புளகத் தோடு நின்று
துறையாரும் வாகீசச் சுவாமிமடத் தவதரித்தான் சுருதி பாடி. (ருரு)

மன்னவகேண் மதியாதிந் நகர்வந்தா னவனம்மை வாதின் வெல்வா
னிந்நகர்வந் ததுகண்டே யேனோரு முட்டானே மென்னக் கேட்கு
மன்னவனு மடிகளே யான்கேட்டு முட்டென்ன வருக ரெல்லா
மின்னழலை மந்திரித்து விடுந்தேக விடுவமுள [3]மெலியே லென்றார்.

செந்நெறியி னுற்றதுசெய் தோட்டுமெனக் கேட்டெழுந்து சிற்றத் தேகி, வன்னியைமந் திரித்தேவச் [4]செல்லாது நின்றுழன்று மறுகக் கண்ட, பின்னரிவன் சிறியனலன் பெருநெருப்பை யிடுவமெனக் கங்குல் போர்முன், மன்னுமடத் தெரியிட்டார் தங்கள்வயிற் றெரியிட்டார் மறைந்து சென்றே. (ருஎ)

வேறு.

இங்கது காணு முன்ன ரெங்குமாஞ் சொக்கன் மங்கை
[5]தங்கிய வங்கங் கம்பித் தெரிதரு தழல்சு டாம
லங்குமுன் சென்று காப்ப வருந்தமிழ்க் காழி வேந்தர்
தங்கிய தறியா ராகித் தனியணைப் பள்ளி கொண்டார். (ருஅ)

---

இதனால் தெரிகின்றது; ருரு. "வாகீச முனிகளென்ன, ஆண்டுளா ரொருவர் வேண்ட வவர்திரு மடத்தி லன்பு, பூண்டெழு காத லோடும் போயினர் புகலி வேந்தர்" (திருவிளை. பாண்டியன் சுரம். ருக.) அவதரிப்ப - தங்க, அறிவான். அறியும் பொருட்டு. முட்டு - இங்கே கேட்டு முட்டு (சைனபரிபாஷை.)

ருரு. கட்டி - கல்லைக்கட்டிக்கொண்டு. ஞான்றனர் - தொங்கினர்.

ருச. அதிர்வு - நடுக்கம். 'இறந்தது' என்றார், துணிவுபற்றி.

(பி - ம்.) 1 'புத்தமண்' 2 'வழுதியற் கெனவே' 3 'மெலியலென்றார்' 4 'போகாது' 5 'தங்கியலங்கம்'

காதல்சே ரடியார் சூழ்ந்து கைவிதிர்க் கொண்[1]டு ணர்த்த
நீதியி னெழுந்தி தற்குக் காரண நிருப னென்றே
நாதனை நினைந்து மானி மங்கல நன்னாண் பார்த்தாங்
கோதினார் செய்ய னேயென் றுயர்திருப் பதிக மோங்க. (௩௯)

வேறு.

சண்பை நாயக ரேவிய தழலிறை யருளாற்
றொண்டர் வாழ்திரு மடத்தினைச் சுடாதுபோய் விரைவிற்
குண்டர் [2]கேள்வியான் கூனுடை மீனவ னுடன்மேன்
மண்டி வெப்பென வருத்திய தியாவரும் வருந்த. (௪0)

வரிசை நீடிய ராடக மாளிகைப் புறத்து
விரைகொள் சோலையும் வெஞ்சுருட் கொண்டது வெப்பாற்
கருதி மெல்லணைப் படுத்ததண் கதலியங் குருத்துஞ்
சருகெ ழுந்தது புலர்ந்தன சந்தனம் பனிநீர். (௪௧)

மூடு பாயுடைக் கையர்கண் முகமுகம் பார்த்து
நாடி யொல்லைவந் திரவிடை நாமிடு நெருப்பு
நீடு [3]மிம்மடஞ் சுட்டதி லென்றுநீ டியிரா
வோடி [4]யாழ்ந்ததம் பாழியின் விடியுமு னொளித்தார். (௪௨)

வேறு.

பழுதிலால் வல்ல மருத்துவர் முதலோர் [5]மருந்தினாற் பார்ப்பவுந் [6]தணியா, தெழுமனல் கண்டீ தென்கொலென் றறியோ மெங்களாற் றணிந்திடா தென்னச், செழியனு மவரை வெருவுற முனிந்து சிறந் தயந் திரங்கண்மந் திரங்கண், முழுவதும் வல்ல வடிகண்மா தம்மை முடுகவிங் கழையுமி னென்றான். (௪௩)

ஆங்கது சொல்லப் பாங்குறு மடியா ரவரவர் தொடர்விடா தேகி, நீங்கருந் துயரச் செய்தியைத் தோன்ற நீதியி னிகழ்த்தினின் றழைப்ப, வோங்கிய திறஞ்சே ரெண்பெருங் குன்றத் துறையுமெண் ணாயிரஞ் சமணர், தாங்கரும் விரைவிற் றிரண்டுவந் தாற்றாத் தழலெழு மரச னைக் கண்டார். (௪௪)

கண்டவர் வருந்தே றிண்டிறன் மன்னா கடிதினிக் [7]கொடுங் கடுஞ் சுரத்தை, மண்டல மதிப்ப மாற்றுவ மென்றே [8]வரைந்தயந் திரங்க ண்மந் திரங்கள், கொண்டுறப் பார்க்கு மளவினின் முன்னர்க் கொடுஞ்

---

௩௯. கைவிதிர்க்கொண்டு - கையை உதறிக்கொண்டு. உணர்த்த-எழுப்ப. 'செய்யனே': திருஞா. பதிகத்தின் முதற்குறிப்பு.

௪௧. சுருட்கொண்டது: பெரிய. திருஞான. எ௬௨.

௪௨. பாய் உடை - பாயாகிய உடை; "பாயுடையார் விடுத்ததழல்" (திருவிளை. திருவால. க)

௪௪. எண்பெருங் குன்றம்: பக்கம், க௨எ-பார்க்க.

(பி - ம்.) [1]'உரைப்ப' [2]'கேள்வியாக்' [3]'அம்மடஞ்' [4]'வாழுந்தம்' [5]'மருந்தினிற்' [6]'தீராது' [7]'கடுங்கொடுஞ்' [8]'வரைந்தியந்'

சுர மாங்கவை கண்டு, பண்டையின் வருத்த நிலத்தினு மரசன் றரித்திலன் மிகப்பரி தவித்தான். (சரு)

வேறு.

அனைவரும் புறத்துப் போந்தீ தென்கொலென் [1]றலையக் கண்டு
புனிதநீ றணியா தஞ்சிப் புனல்கொடு நீறு சாத்து
மனமுடை மானி யாரு மந்திரித் தலைவ ரூரு
நினைவறிந் திருந்து சொல்வார் நிலைமையோ டரசற் கூடி. (சசு)

நறைமுடிச் சொக்கை [2]யேத்த ஞானசம் பந்த ரென்றோர்
சிறுவர்வந் தாரிவ் வெப்பந் தீர்ப்பரோ வறியோம் யாரு
மறமலி சத்தி மானென் றறைகின்றார் வரவ ழைத்தற்
கிறைவநின் றிருவு ளந்தா னறிகிலே மெனப்ப ணிந்தார். (சஎ)

மெல்லெனச் சொல்லக் கேட்ட மீனவன் சிறி யாறிக்
கொல்சுர நீக்க நீங்கள் கூறிய புதல்வன் வந்தா
னல்லமண் கேள்விக் குள்ளே முழுகுவேன் றன்னை நண்ணிச்
சொல்லருஞ் சாம்பல் கொண்டு தொடுவனே சொன்மி னென்றான். ()

பண்டிதர் தமையு மந்தப் பாலகன் றனையு மின்று
[3]தண்டமிழ் மன்ன நின்றன் சந்நிதி வரவ ழைத்து
மண்டமுன் மாற்று மென்று விளம்புக [4]மாற்றி யிட்ட
வொண்டிறற் சத்தி மானைக் கைக்கொள்கென் றுறுதி சொன்னார். ()

ஆசிலீர் நல்ல தொல்லை யழையுமி னெனவ ழைப்பப்
பேசிவந் தமணர் முன்ன ரிருந்தனர் பிள்ளை யாரும்
[5]பூசுநீ றிலங்க முன்னிற் பொருவருஞ் சிறப்பி னெய்தி
யீசனை நினைந்தி ருந்தா ரிட்டசிங் காச னத்து. (ருo)

திறம்படு கொடிய வெண்ணா யிரம்பெருஞ் சிங்க நாப்பண்
மறங்கடிந் துளதோர் யானைக் கன்றுநேர் மன்னிற் றென்னக்
கறம்படு மனத்தி னோருங் காரமண் குண்டர் நாப்ப
ணறங்கரை நாவி னானு நிகழ்ந்தன னருளுட் கொண்டே. (ருக)

கழுமல முனியை மன்னன் காணுமுன் சிறிது வெப்ப
மொழியநீ ரெங்கு ளீரென் றுவகையின் வினவக் கண்டு
பழுதறு பிரம னூரென் றெடுத்தரும் பதிக மோதக்
குழுவொடு [6]திரண்ட மற்றைக் குவலயத் தருந யந்தார். (ருஉ)

சஎ. அறமலி - தருமமலிந்த; அற - மிகவென்றுமாம்.

ருக. கறம் - கருமை; "அறங்கரை நாவினன் மறை முற்றிய" (தொல். பாயிரம்.)

ருஉ. கழுமலம் - சீகாழி. 'பிரமனூர்' என்றது, திருச்சக்கரமாற்றென்னும் பதிகத்தின் முதற் குறிப்பு.

(பி - ம்.) 1 'அறையக்' 2 'ஒத்த' 3 'தண்டல' 4 'மாற்றவல்ல' 5 'பூசி' 6 'நின்ற'

வேறு.

எழின்மட மாத ரமைச்சனார் திரண்ட வேதிலார் திறங்களைக் கண்டே, செழியனுக் கருக ரருகராக் கண்டேஞ் சேர்ந்தனி ரிங்குநம் மூகத்தாற், குழூவில்வெல் பவர்யார் தோற்பவ ரியாரென் றறிகிலே மெனப்பயங் கூர்ந்து, தொழுமதி யாது மானினேர் விழியென் றெடுத் தனர் தொடுத்திரும் பதிகம். (௫௩)

குன்றியோர் தமைமெய் யறிகுறி யாலுங் குளிருவித் திருப்பமற் றருகர், வென்றிமந் திரிகேண் மங்கைகே ளின்று மெய்தரு நீங்கள் சான் றாக, வன்றிறன் மன்ன னிடப்புறத் தழலை மாற்றுவம் யாங்க ளீங் கிவனு, மொன்றிய விரைவின் வலப்புறத் தழலை யொழித்திடக் கடவனென் றுரைத்தார். (௫௪)

இப்பொழு தளந்திங் கிவன்றிற மறிவோ மென்றுதங் கல்வியை மதித்துச், செப்பிய [1]மொழியை மாறனுங் கேட்டுச் செழுமுனி மேவினு னம்மை, மெய்ப்பட நீற்றாற் றொடுமெனக் கூசி வெருவிய நெஞ்சமு மிருப்ப, வப்படிச செயுமென் றியைந்தனன் முன்ன ரரும் பெருந் தவத்திரும் பயனால். (௫௫)

அங்கவ னியைய நனிமன மகிழ்ந்த வமைச்சரு மரசமங் கையரும் வெங்குரு வரசே யங்கநோய் மருந்தே விளங்குநின் சந்நிதிப் பட்ட பொங்கொளி யரசற கிவ்வழ றகுமோ வெனவிழிப் புனலுக நின்று செங்கரங் கூப்பி யடியிசை வீழ வெழுந்தனா துருவுளத திரங்கி. ()

உரைகெழு வேத மாகமம் புராணம் யாவையு மோதிடா துணர்ந்தோர் விரைகமழ நீற்றுக் கோயிலு ணீறறை மென்கரத் தள்ளிமந் திரித்துப் பரிவுறு சிவனை [2]நயமுற நினைந்து பாண்டியன் றனைநனு குங்காற் பெருநிறை யமணர் நிலலென வெழுந்து பேசுவா ரிடியென முழங்கி.

மண்டழுன் மாற்ற வலலைமயன் மாறறு மற்றுநின் வழிகளைக் கொண்டே, பண்டைநின் கரத்துக் கொண்டநீ றாகா [3]பகைமருந் திட் டநீ றின்று, கண்டிடிற் சென்னி மண்டலத் தவனீ யென்றுமுன் கண் டது விலக்க, முண்டக வதன மழகெழச் சிறிது முறுவல்கொண் டுரைசெய்வார் முனிவா. (௫௮)

செந்தமிழ் [4]பயிலுஞ் சுந்தரன் கோயிற் றிருமடைப் பள்ளியுட் கிடக்கு, மந்திர நீறறை நீங்களே யெடுத்து வரினுமா மென்றலும் வெ குண்டு, வெந்த[5]நீ றியாங்க டொடுவமோ வென்று விளம்பநந் தொண்

---

௫௩. 'அருகாருகரா: மடககணி. 'மானினோ விழி': திருஞா. பதிகததின் முதற்குறிப்பு.

௫௬. வெங்குரு - சீகாழி. ௫௭. நீற்றுககோயில் - விபூதிப்பை.

௫௮. நின்வழிகளைக்கொண்டேமாற்று.

௫௯. 'செந்தமிழ்பயிலுஞ்சுநதர':'செநதமிழக்கினிய சொக்கன' (௫௨:௨.)

(பி-ம்.) [1]'வாறு' [2]'மனமுற' [3]'பலமருநது' [4]'பரவுஞ்' [5]'நின்சாம்பல்'

டர்போ யெடுத்து, வந்திடு கென்றார் மிண்டர்க ளதுவும் விலக்கினார் வழக்கல வென்றே. (ருகூ)

மன்னிய விபூதி கொடுவரு வதற்கு மனத்திலோர் சூழ்ச்சியு மில்லீ, ரென்னிது பகர்ந்தீர் நீங்களோ நணுகீ ரெம்முளோர் போகவு மொட்டீர், [1]புன்னெறி யிலாதோர் தமைவிடு நமக்குப் பொருந்தி னோ[2]ரெமக்குமா மென்ன, மன்னவன் முறையோர் தம்மைமுன் விடுப்ப வந்தனர் [3]வெள்ளைநீ றள்ளி. (சூ0)

வே று.

மற்றவர் கொடுப்ப வாங்கி மந்திர [4]மென்றெ டுத்து
முற்றிய பதிகத் தாலே [5]முதிர்ந்தன பாடி யிந்தக்
கொற்றவன் றனைநங் கையாற் றொடுத்தகா தென்று கூசி
நற்றிரு நீற்றை யள்ளி யெறிந்தனர் [6]வலப்பா னண்ணி. (சூக)

தாய்யநீ றணுகா முன்னங் குளிர்ந்திடச் சூழ்ச்சிக் கையர்
பையுண்மந் திரங்கள் கொண்டு பன்முறை [7]யடித்துப் பார்க்குங்
கையுறு நொய்ய பீலி படப்படக் கனன்றெ ழுந்து
நெய்யுறு நெருப்பே யென்ன நீடிய தப்பால் வெப்பம். (சூஉ)

பண்டைமந் திரங்கள் வெந்து படைத்தவெந் திரங்கள் வெந்து
பிண்டியுந் தண்டும் பாயும் பீலியுங் குடையும் வெந்து
மண்டழு றணிப்பா னங்கண் டெளிப்ப[8]மந் திரித்த கையிற்
குண்டிகை நீரு நின்று கொதித்திடக் கண்டார் குண்டர். (சூந)

ஆங்கது [9]கண்ட மன்ன னரு[10]வருத் தவரை யெள்ளி
யீங்குநீர் தொடத்தொ டத்தீ யெழுந்திரா நின்ற தின்றே
ரோங்கிய கொச்சைப் பால னெள்ளிய நீற்றை யள்ளிப்
பாங்குற வெறியும் [11]பாகங் குளிர்ந்தது பரிவு கூர. (சூச)

---

சூ0. 'பொருந்தினோர்' என்பதை, எமக்கும் பொருந்தினோரெனப் பின் னுங் கூட்டுக. ஆம்: அசைநிலை.

சூக. 'மந்திரம்': "மந்திரமாவது நீறு" என்னும் பதிகத்தின் முதல்.

சூஉ. கையர் - வஞ்சகர். பையுள் - துன்பம்.

சூந. பிண்டி - அசோகமரம். தண்டு - பிரம்பு; இச்செய்யுளும், "ஆலி வெந்து மந்த்ரம் வெந்து யந்த்ரம் வெநத மைந்தகைப்,பீலி வந்து பாயும் வெந்து பிண்டி யேற மண்டவே" (தக்க, கஎரு) என்பதும் ஒத்திருத்தல் காண்க.

சூச. கொச்சை - சீகாழி.

(பி - ம்.) [1]'புன்மை' [2]'நமக்குமாம்' [3]'வெந்தநீறு' [4] 'ஆவதென்றெ' [5] 'முதிர்ந்தமாடண்டி' [6]'இடப்பால்' [7] 'அடர்த்துப்' [8] 'மந்திரத்த' [9] 'கண்டு' [10]'வரைத்' [11]'பக்கங்குளுந்தது'

என்னது நீங்கள் செய்யுங் காரிய மியம்பு மென்ன
மன்னவர் மன்ன கேண்மோ விந்நெறி வந்த வாறு
முன்னிவ னமுத பாகத் தணைதலாற் றீர்த்தான் முன்னம்
புன்மைசேர் விடத்தாற் றீரா திருந்த[1]திப் புறத்து வெப்பம். (௬௫)

ஆங்குண மிதுவே யென்ன வருந்தமிழ்க் காழி வேந்த
ரோங்குபுன் முறுவ லோடு முரைசெய்வா ரரச ரேறே
யீங்கிவர் விளிவில் லாம மிம்மொழி மொழிந்தார் காணத்
தீங்குறு மப்பால் வெப்புந் தீர்த்திடக் கடவ மென்றார். (௬௬)

ஐயமில் பதிகத் தோடு மப்புறத் தணையா முன்னர்
வெய்யபால் குளிர்ந்த தங்கண் மேவுவெப் பாலு மிப்பாற்
பொய்யர்கள் பார்க்கும் பீலி சுருணறிப் புகைந்து முன்னிற்
கையற வெந்த தந்தக் கைதவன் கண்டு வைதான். (௬௭)

பண்டிதர் நீங்கு மென்று [2]பலவிதத் தவரை நீக்கிக்
கொண்டலங் குழலி னுரைக் குலச்சிறை யாரை வாழ்த்தி
மண்டலத் தாரே யொப்பா ரிவர்க்கென வரிசை கூர
முண்டகக் கரங்கள் கூப்பி முனிவரைத் துதிக்க லுற்றான். (௬௮)

பழுதறு சத்தி மானே பாலனே யான்முன் செய்த
வழுவுறு பெரும்பா வத்தா லழுந்தின னிந்நாண் [3]மேலிக்
குழுவுடை யமண்கைப் பட்ட கொடுவினைச் சேற்றை நீற்றாற
கழுவியாட் கொள்ளு கென்று வணங்கினன் கமலத் தாளில். (௬௯)

மன்னுநோக் குபதே சத்தால் வழுவற வுபதே சித்தாங்
கின்னருள் [4]சுரந்து நீற்றை யிருகரத் தானு மள்ளி
வெந்நொடு முன்னுந் தொட்டுப் பூசுமுன் வெப்புத் தீர்ந்து
முன்னிமி ராத கூனு நிமிர்ந்ததம் மூர்க்கர் காண. (௭௦)

கொடியவெஞ் சுரந்தணிந்து கூனிமிர்ந் [5]திலங்கி நல்ல
வடிவொடு [6]மெழுந்து பலகால் வணங்கிடு மரசற் கண்டே
சுடர்முடி மன்ன நின்பேர் சுந்தர மாற னென்றே
படிமிசை தனில்வ ழங்கப் படுவதென் றருள்சு ரந்தார். (௭௧)

பொன்னுயர் பீடத் தேற்றிப் புரத்தினை வலங்கொண் டார்த்து
மின்னவேண் டுபகொ டுத்து வேந்தன்றான் விடுப்பக் கண்ட
வந்நக ரோரு மிந்த வரும்[7]பொருட் பாலன் காணிற்
பன்னிய கந்த னென்றே பணிந்தன ரணிந்து நீறு. (௭௨)

---

௬௭. 'சுருள்' ௬௭: ௪௧.

௭௦. வெந் - முதுகு.

(பி - ம்.) [1]'அப்பாலவ்' [2] 'பரிபவித்', 'பரிதவித்' [3] 'மேனி' [4] 'கூர்ந்து' [5]'எழுந்து' [6]'நின்று' [7]'பொடிப்'

[1]வரிவிழி மானி யார்க்கு மந்திரி யார்க்கு மிக்க
கருணைசெய் தடைந்த வன்பர் கருத்தினை முடிப்பா ணைய
சுருதியா லிலங்கு நீதிச் சொக்கனை லயத்துப் புக்குப்
பரவியொண் புகலி வேந்தர் பண்டைமா மடத்த ணைந்தார். (எங)

பழுதுளம் வேவா நின்ற பறிதலைக் கையர் முற்று
மொழியவோர் மாற்ற மின்றி முட்டுப்பட் டினிக ளோடு
மழுவுறு பாழி செல்லக் [2]கதுபபிடை யழுமு கங்கள்
சுழியநீள் விரல்கொண் டிட்டுக் குரத்தியா தூரத்தி வைதார். (எச)

சுந்தரன் [3]றனைத்து தித்துச் சுந்தர மாறன் கோயில்
வந்துமா பூசை செய்து மவுலிமா ணிக்க வாசி
முந்துசிங் காத னம்பூண் முத்துமேற் கட்டி பட்டங்
கந்தமார் கவரி திண்டோர் கற்பகத் தருவோ டுந்தான். (எரு)

செல்வமார் செழியர் கோமான் செய்யவெம் மெய்யிற் சார்ந்த
கொல்லும்வெஞ் சுரமுந் தீர்ந்து கூனிமிர்ந் ததுவுஞ் சொற்றாய்
மல்லல்கூர் மலய வெற்ப வல்லப மெல்லாம் வல்ல
வெல்லருஞ் சமணர் பின்னென் செய்தனர் விளம்பி டென்றார். (எசு)

வேறு.

கட்டு செஞ்சொன் மலயக் கடவுள்கே
ணிட்டை நீங்கி [4]நிசியிடை யெய்தியே
மட்டு லாவு மடத்து மறைந்தெரி
யிட்ட பாதக வஞ்சக ரென்செய்தார். * (எஎ)

ஆகத்திருவிருத்தம் - ௪00௪.

---

## கூஅ.—கழுவேறின திருவிளையாடல.

கட்டுகழன் மாறனுறு காசினிவி ளங்கச்
சிட்டர்புகழ் கொச்சைமுனி சென்றருளின் விட்ட
மட்டவிழ்பொ ழிற்றிரும டத்திலெரி யிட்ட
துட்டர்கழு வேறுகதை சொலலலுறு கின்றேன். (க)

---

எச. பாழி - குகை. கதுபபு - கன்னம். குரத்தியர் - தவமுது மகளிர்.
எரு. வாசி - திருவாசிகை. கற்பகதரு - வாகனவிசேடம்.

(கூஅ)

க. மாறனுறு காசினி - பாண்டிநாடு. கொச்சைமுனி - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

* இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை.

(பி - ம்.) [1]'வரிசைகொண்மானியாருமந்திரியாருமிக்க, கருணையினிலகக்' [2]'கொடிற்றிடை' [3]'தனைத்துதித்தான்' [4]'நிலையிடை'

வேறு.

கன்னன்மொழி மடவாரு மமைச்ச ருருங் காழிநகர்ப் பெருமானைத் தனிய ழைத்து, முன்னவில்லா ருயர்ந்தசிவ சமயங் குன்றி முழுநிலமுஞ் சமண்மூடிற் றியாவும் வல்ல, வின்னருள்சேர் சைவசிகா மணியே வெல்வ தெங்ஙனவர் பலரொருவர் [1]நாம கிழ்ந்த, தென்னனெனின் மன்னருள மறியொ ணாது திருவுள்ள மறியகிலே மெனப்பணிந்தார். (௨)

இத்தகவென் னவில்கின்றீ ரிறையுண் டஞ்ச லேகுமென விடுத்துமடத் தமளி மேவி, நத்தநடு வெழுந்துணர்வார் புகன்ற தொக்கு நாமொருவ ரவரெண்ணி லிரவர் காணின், மெத்தியசூழ்ச் சியும்வல்லா ரவர்க டம்மை வெல்வதற்குப் பல்புகழ்க்கு நல்ல சொக்கன், பத்தர்கள்பத் தனையல்லாற் றுணைவே றில்லை பரசியவன் றிருவுள்ள மறிவோமென்றே. (௩)

வேறு.

சோதி வேதியர் துணைசெயு மவரொடுங் கூடி
யேத நீங்கிட விடியுமுன் றலையத் தெய்தி
வேத வேள்வியென் றெடுத்திசை மேதகு பதிக
மோது மெல்லையோ மோமென வோங்கிய [2]தோர்சொல். (௪)

அனைத்தும் வல்லவ னருட்டிரு வாக்கெனத் தேறி
நினைத்த காரிய முடித்தபே ரமைச்சரு நிறைந்த
மனத்து மாதருங் களித்தடி வணங்கிட நயந்த
வினைக்க ணில்லவர் சொல்லுவர் பின்னரு மெல்ல. (௫)

கலக வெஞ்சமண் கையரைக் களைந்திடா தொழியி
னிலகு சைவசித் தாந்தமுன் னிறந்திடு மிறந்தா
லலகில் வேதமும் வேள்வியு மழிந்திடு மழிந்தா
லுலக வேந்தனு மாரியு முலகமுங் கெடுமால். (௬)

---

௨. குன்றி - குன்ற. நாமமென்னு முன்னிலையுளப்பாட்டுத்தன்மை உயர்வு தோன்ற முன்னிலைக்கண்வந்தது; "நாமரையாமத்தென்னேவந்து" (திருச்சிற். ௧௬௪.); "நெருநனடந்தவரோ நாமென்ன" (கம்ப. சூர்ப்ப. ௧௧௬.) தென்னனெனின் மன்னனென்ன ஒருசொல் வருவிக்க.

௩. இறைஉண்டு - சிவபெருமான் உளர். அஞ்சல் - அஞ்சற்க; வியங்கோளெதிர்மறை.

௪. 'வேதவேள்வி' என்பது அத்திருப்பதிகத்தின் முதற்குறிப்பு; இது நாலடி மேல்வைப்பு. 'ஓம்' என்பது உடன்பாட்டையுணர்த்தும் வடசொல்; "ஒன்றுங் கதிர்முடியாற் கோமென் றுரைத்தருளி" (வி. பாரதம், இருட்டினன். ௪௦.)

௫. வினைக்கண் இல்லவர் - வினைகளிடத்து இல்லாதவர்.

(பி - ம்.) [1]'நாங்கிளந்த' [2]'ஓங்க'

ஐய மில்லென வறைந்திட வாங்கவர் விரைந்து
வைய மன்னனே வருநலந் தீங்கினுக் குரியான்
றுய்ய காரிய மவன்வயிற் சொல்வமென் றடைந்து
பைய வோதுமுன் வழுதியும் பழுதிலை யென்றான். (௭)

பின்ன மாநெறிச் சமணரைப் பெருந்தண்டஞ் செய்வான்
கன்னி மன்னவ னியைந்தது கேட்டலுங் கடுகித்
தென்னன் முன்னரின் முன்னையிற் சிறப்பொடு மடைந்தே
மன்னு மாசனத் திருந்தனர் வைதிகத் தலைவர். (௮)

வேறு.

மற்றவ ரிருப்பக் கேட்டெண் வரைப்பெருந் தலைவ ராய
செற்றமில் சமண ரெண்ணு யிரவருஞ் செற்றங் கூர்ந்து
கொற்றவன் காண வென்றி குலைத்திடக் கடவே மென்றே
வெற்றிகொண் முரச மெற்றி யடைந்தனர் [1]விரைவிற் கூடி. (௯)

கருதினிச் சிறுவ னெண்ணெண் கலைமுதற் கல்வி யாவு
முரைகெழு முளத்து ளோதா துணர்ந்தவ னுயர்த ருக்க
மரியபல் கலையால் வெல்ல லரிதுமை கண்ட நந்து
சுருதிமந் திரத்தால் வெல்வந் தோன்றவென் றெண்ணி யாரும். (௧௦)

[2] வாரடா சிறுவ நீதான் மந்திர மேத றிந்தா
யோரினின் வேத நான்கி னோதிய வெழுத்த னைத்தின்
வீரியம் புழுத்தி ரண்டு வெட்டிய தொப்ப தல்லாற்
காரிய முண்டோ வென்றி சண்டிநுன் களித்தல் வேண்டா. (௧௧)

படுவழி நினக்கொ ருக்காற் பலித்தது கொண்டா லித்தாய்
விடுவிடு காகஞ் [3]செல்லப் பனைக்கனி விழுந்த தொக்குங்
கடைவழி யிதுகொண் டோநீ சாதிக்க வந்தாய் கற்றுப்
புடவியி லெம்மை வெல்வா ரில்லைகாண் புகலுங் காலே. (௧௨)

மணிதிக ழுன்றன் மிக்க மந்திரந் தனையு மெங்க
ளிணையிலா வீர மிக்க மந்திரந் தனையு மின்று
துணிவுற வெழுதி யேட்டைத் தோற்பவர் வெல்வார்க் காணத்
தணிவிலா நெருப்பி னுப்பண் டனித்தனி யிடவா காண்பேம். (௧௩)

---

௭. ஐயம் இல் - சந்தேகமில்லை.

௮. கன்னி - கன்னிநாடு, கன்னியாகுமரி, அழியாமை.

௯. செற்றம் - பிறரைவருத்துதல். எற்றி - அறைந்து.

௧௧. வாரடா - வாடா; "வாரடாவுனக் கியாதுதானர்தம் மகளடுக்குமோ" (வி. பாரதம், வேத்திர. ௧௨.)

௧௨. காக்கையேறப் பனம்பழம் விழுந்ததென்பது ஒருபழமொழி; இது காகதாலீயமென்னு நியாயம்.

(பி - ம்.) [1]'விளிவிற்' [2]'வாருநற்' [3]'சேரப்'

வேகாவே டுடையா ரீங்கு வென்றவர் போது கென்னப்
பாகாரு மொழியாள் கொங்கைப் பாலமு துண்டோர் மெல்ல
வாகாதோ வென்றி யைந்தாங் கெழுந்தணி முரச மார்ப்பப்
போகாமுன் முருட்டுக் கையர் புறப்பட்டார் புரட்டுப் பேசி. (௧௪)

வஞ்சனை செய்வா னெண்ணி மறைந்துநின் றுதவி செய்யுங்
குஞ்சரந் தாங்கு கோயிற் கூத்தன்வாழ் தேத்தி னுகா
தெஞ்சழல் [1]வடகீழ்க் கோணத் திடுமென வேவல் செய்வோர்
[2] மிஞ்சிட நெருப்பிட் டார்கள் விண்குடி வாங்க வாங்கு. (௧௫)

மானமி லாதோர் தம்மை மதித்துமு னடைந்த தேத்து
ஞானமா முனிவர் தாமு நணுகிடக் கண்ட வீச
னீனமில் புனிற்றி ளம்பாற் கன்றின்பி னிரங்கிச் செல்லுந்
தேனுவே யெனக்க ரந்து சென்றன னிரங்கி யாங்கு. (௧௬)

நீதிசேர் செழியர் கோமா னேசமார் தேவி யோடு
மாதர வமைச்ச ரோடு மளவில்சான் றவர்க ளோடுந்
தீதில்பல் லியங்க றங்கச் சிறப்பொடு விளங்கி மிக்க
வாதினைக் காண்பா னுசை யுடையனு யடைந்தான் வந்து. (௧௭)

சுற்றநற் றவர்க ணெஞ்சந் துயருழந் தென்னு மென்ன
வெற்றியே நமக்கென் றெண்ணி விரைந்தியந் திரங்கண் மற்றுங்
கற்றமந் திரங்க ளெல்லாந் தனித்தனி கனத்த வேட்டி
லெற்றருந் தலைவ ரெண்ணு யிரவரு மெழுதி யிட்டார். (௧௮)

சிரபுரப் பால ரெந்தை திருவுள்ள மறிவே மென்றே
கருதிநின் [3]றொழுங்கி முன்னர்த் திருமுறை வகுந்த காலைப்
பொருவரும் போக மார்த்த பூண்முலை யென்னு மிக்க
வார்புகழ் பதிகந் தோன்ற வாங்கினார் மலர்க்க ரத்து. (௧௯)

கழறுமா மறை[4]வி ளங்கக் கையுறு தூய்ய வேட்டைத்
தழைவுறு பதிக மோங்கத் தளிரிள வளரென் றோதி
யழலிடை யிடவே வாம லாதிமெய் யாத லாலே
பழுதற விளங்கிற் றியாரும் பரிவுறப் பச்சை யாகி. (௨௦)

---

௧௫. "குஞ்சரந்தாங்குக் கோயிற் குழகன்" (௩௪: ௧௬. "கூத்தனே" (திரு நா. தே.) எஞ்சு அழல் - குறையச்செய்கின்ற நெருப்பை.

௧௬. தம்மைமதித்து மானமிலாதோர் அடைந்த.

௧௮. என்னும் - யாதாகுமோ. எற்றுஅரு - பிறரால் வெல்லுவதற்கரிய.

௧௯. ஒழுங்கி - ஒழுங்குபடுத்தி. வகுந்த - வகிர்ந்த; பிரித்த. "போகமார்த்த பூண்முலை" என்பது, திருநள்ளாற்றுத் திருப்பதிகத்தின் முதற்குறிப்பு.

௨௦. 'தளிரிளவளர்' என்பது, திருநள்ளாற்றுக்குரிய வேறொருதிருப்பதிகத்தின் முதற்குறிப்பு. 'ஆதிமெய்' என்றது, தேவாரத்தை; வேதம் சிவபெருமானது திருவுருவமென்பர்.

(பி-ம்.) [1]'வாழ்கீழ்க்' [2]'விஞ்சுயர்' [3]'ஒழுகின்முன்னர்த்திருமுறை' [4]'முழங்க'

தருக்கமார் சமணர் தேர்ந்தெண் [1]ணுயிரர் தகுதி யாக
வரிப்பட வெழுதி யிட்ட மந்திர வேட னைத்து
நெருப்பிடை நணுகா முன்னர் நின்றவர் நகைப்ப வற்றற்
கருப்பிலை போலெ ரிந்து கணத்துநீ றெழுந்த தாலோ. (௨௧)

யாவையும் வேவ வேவா திலங்கிய வேடெ டுத்துப்
பாவமை முறையிற் கோப்பப் பத்தர்க ளெள்ளி யார்த்தார்
காவலன் முதலா வுள்ளோர் களித்தனர் காண்பான் வந்த
தேவரு மதிச யித்தார் செழுமலர் மாரி பெய்து. (௨௨)

தெளிவுறக் கண்டு நீயிற் றெளித்துநீ ரரித்துப் பார்ப்போர்
விளிவிலா துரைப்பா ரங்கித் தம்பனை கொண்டு வென்று
யொளியுறக் காணுங் காலை மும்முறை யுண்டு வாது
களியுற வேண்டா வின்னுங் காண்பமுன் கல்வி யென்றார். (௨௩)

பெருகிமுன் விரைவி னோடும் பெரும்புனல் வையை யாற்றுட்
பரிவுற [2]வெதிர்போ யேறும் பத்திரம் வென்ற தாக
நரபதி சான்ற தாக நானிலத் தேவருங் காண
விருவர்மந் திரத்தை யுஞ்சேர்த் தெழுதியிங் கிடவா [3]காண்பேம். ()

சிறுவரின் னேடெ திர்ந்து சென்றதே லின்று னக்கே
யறிவுடை யாங்க ளெல்லா மடிமையாக் கடவே மற்றும்
பறைதலிங் கொன்றும் வேண்டா பாடைக்குத் தப்பே மென்னப்
புறவமா நகர்வாழ் ஞான பூரண ரருளிச் செய்வார். (௨௫)

அடிமையி லாசை யில்லை யின்றுநீ ரவையிற் சொன்ன
படிபுகழ் வாதுஞ் சொக்கன் பரிவினல் வென்றே மாயிற்
கடிமையி னும்மை முற்றுங் கழுநுதி யேற்று தற்கு
முடியவே யாசை யென்று ரியைந்தனர் வினையான் மூடர். (௨௬)

---

௨௧. வற்றற்கருப்பிலை - காய்ந்த கருப்பந்தோகை.

௨௨. அதிசயித்துச் செழுமலர்மாரி பெய்தார்.

௨௩. நீர்தெளித்து. அங்கித்தம்பனை - அக்கினித்தம்பனவித்தை. வாதுமும்முறை உண்டு.

௨௪. 'விரைவினோடும் பெரும்புனல்வையை' என்பது, வேகவதியென்னும் பெயர்ப்பொருளைப் புலப்படுத்தியது; "தாங்கருந் திறலொடும் வரும்வெம்மை" என்பர்பின்னும்; ௫௪. பத்திரம் - ஏடு.

௨௫. பறைதல் - சொல்லுதல்; பாடை - பாஷை, சபதம்; 'பாடைக்குத் தப்புவராதவன்' என்று உலகில் வழங்கும்.

௨௬. கடிமைஇல் - விளக்கத் தன்மையில்லாத. முடிய - முற்ற. 'ஆசை' என்றது, அவரை அஞ்சுவித்தற்பொருட்டு; இவர்கருத்து இன்னதென்பதை, ௫௩-ஆம் செய்யுளாலுணர்க.

(பி - ம்.) [1]'ஆயிரத்தகுதி' [2]'எதிரேயேறும்' [3]'தோர்ந்து'

உளப்படு மமைச்ச ரைை [1]யுயிர்க்கழு வினவா முன்ன
ரளப்பருந் தயாவு கூர்ந்திங் கையரே கையர் தம்மைக்
களத்தள வேற்றற் கென்றே கருதியான் முன்னஞ் [2]செத்திக்
[3]குளத்துற விட்டு வைத்தே னருளினு லெனக்கொ ணர்ந்தார். (௨௭)

ஆங்கது கண்டு சால வதிசய முற்று மற்றைப்
பாங்கிறீ வினையான் மூடும் பாதகர்க் கருள்சு ரந்தே
யோங்குநன் னலங்கள் கண்டு முணர்விலா மூர்க்கர் நீங்க
ளீங்கிதற் கியைந்த தென்ன காரிய மெடுத்தற் கின்றே. (௨௮)

வேறு.

பவங்க ணீக்கும்வெம் பாதக மாற்றுநற்
றவங்க ணல்குந் தலைமை தருந்தொழுஞ்
சிவந்த தாணிழல் சேர்த்திடுங் காத்திரத்
துவந்து பூணி னுருத்திர சாதனம். (௨௯)

வேறு.

நினைவினை முடிக்குந் தூய்மை யாக்கும்வெம் பாவ நீக்கு
மனவிடர் விடம்பேய் தெவ்வு மறலிவா ராமற் காக்கும்
புனையற மின்பம் வீடு பொருண்முத லெவையு நல்கும்
வினைகடி [4]நால்வே தத்து மிக்கமந் திரவெண் ணீறு. (௩௦)

குலந்தரு நீதி மிக்க குணந்தரும் வேதஞ் சொல்லும்
பலந்தரு முயர்ந்த சாயுச் சியந்தரும் பழுதிலாத
தலந்தரு மெல்லாம் வல்ல சயந்தரு நிறைந்த செல்வ
நலந்தரும் பெருமை குன்று நயந்தரு நமச்சி வாய. (௩௧)

[5] நாணிலீர் மன்னன் முன்னு நல்லசொல் கின்றேன் கண்டி
பூணும்வெண் ணீறு பூசும் போறறியஞ் செழுத்தை யோதுங்
காணுெணு முத்தி யின்பங் காணலா மென்னக் கேட்ட
கோணுறு சமண ரெண்ணு யிரவருங் கொதித்தெ ழுந்தார். (௩௨)

---

௨௭. உயிர்க்கழு - ஒருவகைக்கழு. களம் - கழுத்து. செத்தி - சிவி.

௨௯. காத்திரம் - உடம்பு. உருத்திரசாதனம் - உருத்திராக்கம்.

௩௦. தெவ்வு - பகை.

௩௧. "குலந்தரும் செலவந் தந்திடும்.........நாராயண வென்னு நாமம்" (பெரியதிருமொழி, க. பத்து. க.)

௨௯ - ௩௧. இவற்றல் முறையே உருத்திராக்கம், திருநீறு, பஞ்சாக்கர மென்னும் இவற்றின் பெருமைகள் கூறப்பட்டன.

௩௨. கண்டி - உருத்திராக்கமாலை.

(பி - ம்.) [1]'உயர்கழு' [2]'சேர்த்திக்' [3]'குளத்தளவு' [4]'வேதநான்கின்', 'கங்கைநீரின்' [5] 'காணுவீர்'

முற்றிய சீற்றம் பொங்கி மொழிவன கேட்டுக் கெட்டேன்
வற்றிய தவத்தார் நும்போற் கண்டிலம் வைய கத்திங்
கிற்றைநாட் டோற்பின் யாமே யேறுவ மென[1]வியைந்தீர்
பொற்புடைக் கழுக்க டம்மை வாங்குமி னெனப்பு கன்றார். (கூகூ)

வேறு.

என்று துஞ்சொன்மு குந்த னிறைஞ்சொளி
வண்டு துங்கழல் [2]வாழ்த்தவர் பாத்தொகை
கண்டு தூ[3]தொலிக் காளத்தர் ஞான்றுமேற்
கொண்டு தும்மெனக் காளங் கொடுத்தனர். (கூச)

வேறு.

மெய்யுறக் கேட்டு னக்கிம் மிகையெலா மென்கொல் வேண்டா
வையுறத் தோற்பி னன்றே கழுநுதி யணேவோ மென்று
துய்யவை [4]யங்கை வாங்கித் தோளில்வைத் தங்கை வீசி
வையைமா நதியின் பாங்கர் நணுகினார் மன்னன் காண. (கூரு)

மேவிய [5]திறங்க ளோடு மவரவர் வீரம் பேசித்
தீவினைப் [6]பயத்தி னாலே வரும்வினை தெளியா ராகிக்
காவல்சேர் மந்தி ரங்கள் கற்றயந் திரங்கண் மற்றும்
யாவையுங் காண வேட்டில் யாற்றிடைத் [7]தீட்டி யிட்டார். (கூசு)

வேறு.

காழி நாயகர் கருணேசே ரழகனை நினைந்து
வாழ்க வந்தண ரென்றுயர் வண்டமிழ்ப் பதிகந்
தாழ வோதியே தடமலி யேட்டிடைத் தீட்டி
யாழு மாற்றிடை யிட்டன ரகிலமுந் தழைப்ப. (கூஎ)

கொடிய நெஞ்சுடைக் கூற்றினை யனையவர் [8]வரைவுற்
றடைவின் முந்துற விட்டவெண் ணாயிர வேடு
மிடையி னின்றவர் கிளர[9]நீ ணகையுற விமைப்பிற்
[10]கடுகி நீர்வழி யோடிமுன் புகுந்தன கடலுள். (கூஅ)

---

கூகூ. கழுவேறுவோர் அதனைவாங்கித் தோளில்வைத்துச் செல்லுதல் மரபு.

கூச. தூது - பஞ்சபாண்டவர்க்குச் சென்றதூது; உம்மை: அசைநிலை. இறைஞ்சுகழல். மேற்கொண்டுஞான்று ஊதுங்கள்; ஊதுதல் - உடம்புபுடைத்தல். காளம் - ஒருவகை வாத்தியம், கழு. இச்செய்யுள் திரிபு.

கூரு. மிகை - அளவுகடந்தசெய்கை. கை - செயல். துய்யவை-கூர்மையையுடையவை.

கூசு. ஏட்டில் தீட்டி.

கூஎ. "வாழ்க வந்தணர்" என்பது திருப்பாசுரத்தின் முதற்குறிப்பு.

(பி - ம்.) 1'இயைந்திப்' 2'வாழ்த்தலிர்' 3'தனிக்காளத்தர் வாதுமேற்' 4'இயைந்து' 5'வறங்க' 6 'பயத்தலாலே' 7'நீட்டி' 8'ஐயுற்று' 9'வின்னகை' 10'கடிபநீர்வழி'

மாறி லாமறை ஞானசம் பந்தர்தம் மனத்துட்
டேறி யிட்டவொண் செந்தமிழ் மந்திர வேடு
கூறும் வெம்மொழிச் சமணர்கள் கூரிய கழுக்க
ளேற வேறிய தெழவரு மாற்றிடை யெதிர்த்தே. (௩௯)

வேறு.

இயல்பட வெங்குரு வரசர்[1]ப தம்பெற வெழுதிவ ரைந்திடுமே
டியர்தரு தண்புன னடுவுகி ழிந்திட வுரறெடு நிர்ந்திடவே
நயமலி யன்பர்கண் மறைமொழி யந்தணர் [2]நடமிடு தொண்டருளோர்
செயசெய வென்றன ரரகர வென்றனர் சிவசிவ வென்றனரே. (௪௦)

வேறு.

பொங்கு மங்கைய ரமைச்சனார் பூழியன் முதலாத்
துங்க வைதிகரு சைவமோங் கியவெனத் துதிப்ப
விங்கெ ளுகுமென் றிரங்கிய முனிவர்க ளமரர்
சிங்க [3]நாதங்கள் செய்த[4]லர்ச் செழுமழை பொழிந்தார். (௪௧)

வேறு.

திறங்கள்வே றுய்வி யர்த்து நெஞ்சுலர்ந் தாங்கா ரங்கள்
குறைந்துகை தவமோ வில்லை கைதவ வென்று கூறி
யறம்புரி பால ஞர்த மணிமலர்ப் [5]பாதம் போற்றி
மறம்புரி யமண ரெண்ணு யிரவரும் வணங்கி னால். (௪௨)

நேசமார் ஞான வேந்தர் நெடுங்கழுத் தரித்த போதே
யாசற விருந்தீ ரின்னு மறைகுவ மடிதல் வேண்டா
பூசுமி னினிய நீற்றைப் போற்றுமி னீசன் றாளை
மாசற நீரு நாமும் வாழலாங் கூடி யென்றார். (௪௩)

முன்னையூழ் [6]வினையால் வென்ற முனிவகேண் மடிவ தல்லாற்
சொன்னவெஞ் சாம்பல் சீசீ தொடுவமோ வென்று கொண்டு
நன்மைகள் சொல்லா நின்ற ஞானசம் பந்தர் தம்மைப்
புன்மைகள் சொல்லக் கண்டு பொறுத்திலர் பூதித் தொண்டர். (௪௪)

வேறு.

கையர் தங்களைக் களையுமின் களையுமி னெனவே
துய்ய மன்னவன் சொல்லுமுன் கறுவினர் தொண்டர்
பொய்செய் பாதகக் குழுவெலாந் தொலைந்திமைப் பொழுதில்
வெய்ய நீள்கழு வேறினர் மெலிந்துயிர் பதைப்ப. (௪௫)

---

௩௯. எதிர்த்து ஏறியது. ௪0. பதம் - இன்பம்.
௪௨. "கைதவமோவில்லை கைதவ": மடக்கணி. ௪௩. இருந்தீராயினீர்.
௪௫. கறுவினர் - கோபித்து. தொலைந்து - தோற்று.
(பி - ம்.) [1]'பதந்தொறும்' [2]'நடனவில்' [3]'காதமுஞ்' [4]'அலர்த்திரு' [5]'பாதப்போதில்' [6]'வினையாலேடா'

புகல்வ தேதெதி ரிருந்திடுங் குதவழிப் புகுந்து
பகைகொண் மூட்டுடைப் பட்டினி [1]வயிற்றிடைக் குளித்துத்
தகவில் வஞ்சக நெஞ்சகந் தனினிண மருந்தி
யிகழும் வாய்முகங் காட்டிட [2]வேறினர் கழுக்கள். (சசு)

வேறு.

பவமுறு கையர் வெய்ய பாறுசெங் குடர்பி டுங்கச்
சிவையவை சூழக் காக கிழலிடத் திரண்டோர் தாளிற்
றவமுய லலகை யென்னச் சாலவே வாயங் காந்து
கவடிவெண் பற்கள் காட்டி யிருந்தனர் கழுக்க டோறும். (சஎ)

சாணகம் பூசி யேடா சுட்டிடத் தரியே மென்பார்
கோணில்கன் றெடுத்து நீறு தருந்திருக் கோயி லென்பார்
காணுநீ றின்றி வெள்ளை கண்டன வணிவா ராகி
வீணழிந் தொழிந்த கையர் விலாவொடி யாக்கி னூரால். (சஅ)

தளம்புநெஞ் சுடைய வெண்ணா யிரஞ்சமண் டலைவ ராயோ
ருளம்பரி வொடுகெ ழுக்கண் யோசனை யகல மேற
வளம்பட வாது செய்த வாரண மென்னு நாமம்
விளங்கிய தன்று முன்னு மேதகு தராத லத்தே. (சகூ)

வேறு.

பாசமற நீறணிவான் பாக்கியமில் சாக்கியர்க
ணேசமுற விருந்தகழு நிரைமுடிந்த விடமின்றும்
பூசுரர்கள் பணிந்தேத்தும் பூவணநன் னகர்மருங்கிற்
காசினிமேல் விளங்கியது கழுவர்படை வீடெனவே. (ருo)

வேறு.

உறைத்த மன்னவன் முன்ன ருயர்ந்திடக்
குறித்த சாமரம் பெற்றது குற்றமோ
பொறுத்த தோணி புரத்தவர் தம்மொடுங்
கறுத்த செங்கழுக் காணிச் சமணரே. (ருக)

---

சசு. எதிர் புகல்வதேது. முட்டுடைப் பட்டினி வயிறு - கண்டுமுட்டு, கேட்டுமுட்டுக்களால் பட்டினியிருக்கும் வயிறு. முகம் - கழுவின்முகம்.

சஎ. பாறு - கழுகு. சிவை - நரி. கவடி - பலகறை.

சஅ. சாணகம் - சாணம். கன்று - பசுக்கன்று. விலாவொடி - விலாப் பக்கம் ஒடியும்படி சிரிக்கும் சிரிப்பு; "விலாவிறநக்கு" (மணி. கச: ௩௬.)

சகூ. தளம்புநெஞ்சு - துளும்புகின்ற மனம்.

ருo. சமணர்களுக்குச் சாக்கியரென்றும் ஒருபெயருண்டு; கழுவர் படைவீடென்பது இக்காலத்துக் கழுவேறுமடை, கழுவேறு கடையெனவழங்கும்.

ருக. சாமரம் - சாமரை, கழுமரம். இக்கவி, வஞ்சப்புகழ்ப்பணி.

(பி - ம்.) 1 'வயிற்றினைக்கிழித்து' 2 'ஏறின'

வேறு.

நன்னெறி யேடு காண்பா னாசையாய் நலங்கள் செய்து
மன்னவன் றுதிப்ப நாலு கவிப்[1]பெரு மாண்ம கிழ்ந்து
மூன்னுறக் காட்டு கின்றேம் போகென மூடுகிச் சென்றார்
கன்னல்சூழ் புனலி யாற்றங் கரைவழிக் குடபா லேக்கி. (௫௨)

வேறு.

[2]ஆர்ந்து செல்கதி கண்டுகண் டன்புறு நெஞ்சம்
வாழ்ந்து செல்வுழி மந்திரச் செந்தமி ழேடு
சூழ்ந்த தெண்டிரைக் கடலென வருநதித் துறைக்கட்
சேர்ந்து மூழ்கிய தோசனை யொன்றரை சென்று. (௫௩)

ஆங்குக் காணுமு னிழிந்தன ராதர மூதிர்வா
லோங்கு நாயக னணையா லுணர்வுடைத் தடினி
தாங்க ருந்திற லொடுவரும் வெம்மையைத் தணிந்தே
பாங்க ரிந்துதாள் படிந்தது பாரதி சயிப்ப. (௫௪)

வேறு.

வடகரை யேறி யேறு மேடுகா ணுமல் வாடிப்
புடைவரும் புதல்வர்க் கண்டு புதுமைவே றுண்டோ வென்னப்
படிபுகழ் நிரையான் மெய்ப்போம் யாங்கள்கேள் பழைய தாய்நன்
குடையதோர் சிவலிங் கந்தா [3]னுண்டுகா ணென்றார் காட்டி. (௫௫)

ஞானசம் பந்தர் கண்டு நணுகியா லயத்தி றைஞ்சித்
[4]தேனுற வன்னி யென்று செந்தமிழ்ப் பதிக மோதப்
பானரை பிறங்க மூத்துப் பழுத்தவோர் விருத்த னாகிக்
கூனிவர் துயர்காப் பிட்டான் சேடனூர் நீடு கோமான். (௫௬)

மிக்கபா லகர்கே ளிந்த வேடெதிர் மேவி யாற்றுட்
புக்கியான் மூழ்குங் காலென் காலிடைப் பொருந்தல் கண்டு
திக்கறிந் தெடுத்தேன் மூத்தே னதலாற் றெரிந்த தில்லை
மக்களுண் டவர்க்கு நல்க வாசித்துத் தருதி யென்றான். (௫௭)

---

௫௨. ஆசையாய்த் துதிப்ப.

௫௩. "வாரிதி யுருவா யாற்றின் வருபெருஞ் சலில முற்றும்" என்றார் முன்னும்; ௭: ௮. ஓசனை - யோசனை.

௫௪. தடினி - ஆறு.

௫௬. "தேனுறவன்னி" என்பது திருவேடகப் பதிகத்தின் முதற்குறிப்பு. காப்பு - திருநீறு. சேடனூர் - திருவேடகம்; ஆதிசேடன் பூசித்த தலமாதலின் இஃது இப்பெயர்பெற்றது; ௬௬-ஆம் பாடலைப்பார்க்க.

௫௭. புக்கு - புகுந்து. நல்க - நான் கொடுத்தற்கு.

(பி - ம்.) 1 'பெருமான்' 2 'ஆழ்ந்து' 3 'உண்டுபோ' 4 'தேனுறை'

சித்திர நுதற்க ணிட்ட தெய்வநீ றிலங்க வுச்சி
வைத்தவொண் சிகைவி ளங்கப் பிணங்குநூன் மார்பின் மின்ன
வித்தக வடிவின் வந்த விருத்தவே தியரே நும்மை
யுத்தமச் சிவனே யென்ன வுதிக்கின்ற துளத்தெ னக்கே. (ருஅ)

சிறியனேன் பனுவல் கல்வி சிறந்தநின் றிருமைந் தர்க்கு
முறுவலே தருவ தல்லால் வேறிலே முடுகிக் காண்பான்
மறுவறு தென்னன் வந்தான்[1] வருந்தியோர் கார ணத்தா
லிறையவ காட்டல் வேண்டு மென்றுமெய் யொடுங்கிச் சொன்னார்.()

அவ்வுரை கேளா முன்ன ருமறைக் கிழவ னக்கென்
செவ்விய மைந்தர் கட்குத் தேடிவே றளிப்ப ரேன்ற
மெய்வரு தென்னன் கையின் மேதினி முழுது மெச்ச
விவ்வுரை தீட்டு மேட்டை யீயென வீந்தா னன்றே. (சூ0)

வேறு.

சிறுபா லகனீ சிவபத் தனுமா
யறிவால் விறலா லருளா லுயர்வா
னிறைவா கியிருந் தனைநீள் பகைவென்
றுறவா ழுதிநான் மறையோ தியநாள். (சூக)

எனவாழ்த் தியொளிக் குமுனின் பழுதுந்
தனியா னையியந் துயர்தா னையொடு
மனவா தரவால் வரு[2]மன் கரமீ
தனைவோ ரும்வியப் பவளித் திடவே. (சூஉ)

வேறு.

மன்னவ னதிச யித்து வந்தவா றெங்ங னென்னத்
தன்னிக ரில்லா விந்தத் தலத்திடை நயந்தி ருக்கு
முன்னிகழ் சிவன்[3]மெய் மூத்தோர் முனிவனில் வந்த ளித்தா
னென்னுமுன் பணிந்தான் [4]பல்கா லேத்தினன் கூத்து மாடி. (சூங)

இகலமண் பரிச னத்தா லேறிய பாவ நீங்கச்
சிகரநீள் கோயில் கண்டு சிவனைநா டொறும்வ ழுத்தித்
தகுநதித் தென்பா[5]னன்கு தரும்படை வீடு செய்து
பகையற விருந்தா னங்கண் பாண்டியன் சிறிது காலம். (சூச)

ருக. பனுவல் முறுவல் தருவதல்லால்.
சூ0. மெய் - உண்மை வழி.
சூஉ. தனி யானை - திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்; எழுவாய்.
சூச. பரிசனம் - ஸ்பரிசம்.

(பி - ம்.) 1‘வணங்கி’ 2‘மன்னர்காத்து’ 3‘மேன்மூத்து’ 4‘அன்பால்’ 5 ‘நான்குதரும்படைவீட்டைச்’

வே று.

விரைவோ டிகலா விடுமே டெதிர்போய்க்
கரைசேர் தலினு ழுறைகா ரணனைப்
பரவே [1]டகனென் றிடவே பதியுந்
திருவே டகமென் றுசிறந் ததுவே. (௬௫)

வே று.

உன்னி மாலு [2]மூவணனுஞ் சேடனு
மன்னு சாத்தனு நான்முகம் வாழ்த்தகந்
துன்னு பல்பொரு டோன்றி யொடுங்கக
மென்னை யாளுடை யானுறை யேடகம். (௬௬)

வே று.

அறநெறிக் காழி வேந்த ராதரத் தேடெ திர்ந்த
துறைவயிற் சமணரோடும் பாடித்த தோடந் தீர
வுறவுறத் தமது பேரா வுயர்வுடைச் சிவலிங் கத்தைச்
சிறுமையிற் றெள்ளி யாரென் றருச்சித்தார் செழியன் காண. (௬௭)

வே று.

பொழிலார் மதுரா புரிமே விவியந்
தழகா யதனு ரணநா யகனைத்
தொழுதாய் தமிழ்பா டியபின் றுதியா
லெழிலா லயமற் றுமிறைஞ் சினரால். (௬௮)

புகழ்நீ டியபூ ழியன்மண் டலமும்
மிகநா ளுருமளத் துவிளக் கமுறத்
தகவார் தருமந் தருமீ சனையும்
மகிழ்வா லணிநீ றுமறந் திலதே. (௬௯)

நயமெய் தியதென் னவனு டைவே
வியனீ றுபரப் பியவித் தகனு
ரியலோ டியர்தென் னனிலங் கவிருந்
துயர்கா விரிநா டுறமே வினரால். (௭0)

---

௬௫. இகலா - (சைனரோடு) மாறுகொண்டு.

௬௬. சாத்தன் - ஐயனார்.

௬௭. பாடித்த - பாவித்த, பேசிய.

௬௯. மண்டலமும்: உம்மை, சோழமண்டலத்தையன்றியென இறந்தது தழுவியது; ௩௭: ௪-ஆம் பாடல்பார்க்க.

(பி - ம்.) [1]'அழகன்னெனவே' [2]'அயனுமூவணமும்'

வேறு.

[1] தூண்டுரும் பாக்கி யின்றோர் துரும்புதூ ணாக்கி யேமூன்
றாண்டிலோர் புதல்வ னாலெண் ணாயிரஞ் சமணர் தம்மைக்
காண்டகு கழுவி லேற்றல் [2]கண்டுநீ றணியா தந்தோ
மாண்டகு கடவுள் வேறுண் டென்பரே மதியி லாரே. (எக)

கொல்சுர நீக்கி மன்னன் கூனிமிர்த் தழலி னீரின்
வெல்லவே டெழுதி யிட்டு வெல்லருஞ் சமணர் தம்மைச்
சொல்லினீள் கழுவில் வைத்த தொல்கதை கற்போர் கேட்போர்க்
கெல்லையில் செல்வ மொல்லை யெய்துதற் கைய மின்றே. (எஉ)

ஆகத்திருவிருத்தம் - கoஎசு.

## ஙகூ.—மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.*

பூமகட்கு மணிமுடியா மதுரையந்தண் புரத்தின்கண் முன்னொ
ருகான் மன்னர்க் கென்றுஞ், சேமமுறு படைத்தலைவ னாகும் வென்
றித் தேசுடைய வுயர்கொந்தக் குலத்துட் டோன்றித், தூய்மைதரு
சுந்தரனுக் கன்பு பூண்டு சுந்தரசா மந்தனெனு நாமம் பெற்றுக், காமு
றுபே ராண்மையினோர் தோலா வீரன் கசிந்தன்பர்க் கன்புசெய்து
போது நாளில். (க)

ஆங்குலக மனுநெறிகோ டாமற் காக்கு மடல்வீர மாறனெனு
மரசன் றன்மேற், றேங்குபுகழ் வன்னியர்க டலைவ னாய சேதிபர்கோ
னென்பானோர் கிராதர் கோமா, னோங்குபெரும் பலபடையி னோடுங்
கூடி பொருப்படுவா னெண்ணியவா றொற்றர் கேட்டுத், தாங்கரிய
விரைவினொடும் போந்து வாய்ந்த தருமநெறிக் கவுரியனைச் சார்ந்து
சொன்னார். (உ)

முன்னமது கேட்டலுமே விரைவிற் கூடி [3]மூரணடுபல் படை
[4]யாள்வே மெனக்க ணித்துக், கொன்னுனைவேற் சுந்தரசா மந்தனெ
ன்னுங் கொடுந்திறற்சே னாபதியை யழைத்துச் சொல்வான், செந்
நெறிசேர் வடதிசையாள் கிராதர் கோமான் சேதிபர்கோ னென்பா
னோர் பெரியோ னம்மேன், மின்னுபடை யொடும்பொருவான் வரு
கின் றானும் விளம்புங்கா ரியமொன்று விளங்கக் கேண்மோ. (ங)

(ஙக)

க. கொந்தக்குலம் - கொந்தகக்குலம்; இக்குலத்திற்பிறந்தோர் சேனாபதிக ளாதற்குரியவர். [கவுரியன் - பாண்டியன்.

உ. சேதிபர்கோன் - பெயர்; ங-ஆம்செய்யுள் பார்க்க. கிராதர் - வேடர்.

ங. படை ஆள்வேம் - சேனைகளை வருவித்துப் பாதுகாப்போம்.

* "மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு, தக்கா னொருவ னாகிய தன் மையும்" (திருவா. கீர்த்தி. சுசு-எ.) [மெனத்தனித்துக்'

(பி - ம்.) 1'தூண்டுரும்பாக' 2'கண்டிர்' 3'முரண்டரு' 4'ஆள்வே

பல்படையைப் பல்படையாற் றள்ளல் வேண்டும் பார்புகழ்வீ ராபடையோ மாண்ட தில்லை, யொல்லையினஞ் சரக்கறையிற் புக்கு வேண்டு மொண்கனக மெடுத்திட்டுப் படையா ளென்று, புல்லியரு ளொடுந்திருக்கைச் சிறப்பு மிட்டுப் போவென்று விடைகொடுப்ப விரைவு கண்டு, சொலலிலிவன் றனக்கொப்பிங் கிவனே யென்று சுடர்மணிமா முடிச்செழியன் றுதித்தான் சால. (௪)

அரியபெருஞ் சரக்கறையிற் காவ லோடு மடைந்தடைவிற் பெ ரும்படைக ளாளத் தக்க, பொருள்பலவும் வகைவகைக் கொண்டு நல்ல போர்வீரர் தமைத்[1]தேடி வாரு மென்று, பரிவினொடுந் தன்ன [2] டைந்தோர்ப் போக்கி நோக்கிப் பரிப்பவராற் கொடுபோந்து தனதில லத்து, விரைவினொடும் புகுந்தான்செங் [3]கனகங் கண்டான் விதிர் விதிர்த்தான் சிவனடியார்க் கிடுவா னெண்ணி. (௫)

ு வ று.

மிஞ்சிட வடைந்த கைப்பொருள் கொண்டே மெய்ப்பொரு டேடுவான் விரும்பிச், செஞ்சுடர் மகுடக் கோயிலுள் வேந்தன் செழும்பொரு டன்னொடுஞ் சென்று, பஞ்சின்மெல் லடியா ளங்கயற் கண்ணி பங்கனை யங்கையாற் றொழுது, மிஞ்சுமிப் பொருளுன் னடி யவர்க் கிடுவான் விருப்புறு முளக்கருத் தெனக்கே. (௬)

நம்பனே யும்பர் தம்பதி பரவு நாதனே காத்தரு ளெனக்குன், றம்பமே யல்லாற் பிறிதிலை யென்று சாற்றிமுன் போந்தடி யவரைக், கம்பமா ருடலு மம்புசோர் விழியுங் கசிதரு நெஞ்சுமா யிறைஞ்சிச், [4] சம்புவே யென்ன வமுதுசெய் விததான் றனங்கள்வேண் டுப வெடுத் தளித்தே. (௭)

நட்பொடு மெல்ல[5]மன்னன்பொன் முழுது நாடொறு நாடொறு மெடுத்தாங், குட்பய மின்றி மாதொடுங் கூடி யுவகைகூர்ந் தானடி யவர்தங், கட்பய மெய்தி யாவரா யினுமுட் கருத்தறிந் தமுதுசெய் வித்துத், தட்பமார் மனத்தன் மூவிரு துங்க டம்முளத் தனமெலா மழித்தான். (௮)

---

௪. மாண்டதில்லை - மாட்சிமையுற்றதிலலை. சரக்கறை - பொன்னறை. படையாள் - சேனைகளை ஆள்வாய். திருக்கைச்சிறப்பு-ஏறுதிமோதிரம். விரைவு கண்டு - (சௌந்தரசாமந்தன்) விரைந்து செல்லுதலைக்கண்டு.

௫. விதிர்விதிர்த்தான்-விரைந்தான்; "மெய்தா னரும்பி விதிர்விதிர்த்து" (திருவா. திருச்சதகம், க.)

௭. உம்பர்தம்பதி - இந்திரன். தம்பம் - ஆதாரம். கம்பம் - நடுக்கம். "கம்பமாருடல்.........இறைஞ்சி": "சிந்தை யிடையறா வன்புந் திருமேனி தன்னி லசைவும்.........வந்திழி கண்ணீர்மழையும்" (பெரிய. திருஞா. ௨௭0.)

௮. அடியவர்தங்கண் - அடியவரிடத்து.

(பி - ம்.) [1]'கேடி' [2]'அடைந்தோர்போக' [3]'கனகத்தோடும்' [4]'சம்புநீரெ ன்ன' [5]'மன்னர்பொன்னெனுது'

அரசனுந் திங்க ளாறுசே றலுமே யடற்படைத் தலைவனை யழைத்துப், பரிகர மெவள வாண்டனை யென்னப் பழுதுரை யாதவ னுரைப்பான், திருவரு ளதனுற் சொக்கநா யகனைச் சிந்தைசெய் துள்ளதை யன்றிப், பொருபடை மன்ற வொருபடை யாண்ட திலையிது பொய்யல வின்றே. (௯)

வந்தனை யடியேன் கருத்தினை முடிப்பான் வழிபடு மடியவர்க் கெளிய, சுந்தர னுண்டு வேண்டிய பொழுது படையுமுண் டெனத் துணிந் துரைப்ப, வந்தமன் னவனு மென்கொலா மிங்தன் றதிசயித் துன்னினை யின்க, ணெந்தநா யகனும் வருவனேற காண்பே மின்று போய் நாளைவா வென்றான். (௰)

கருத்துடைச் சேனைத் தலைவகே ளுளைக் காலையி னின்படை மெய்க்காட், டிருப்படக் காண்பேம் போவெனப் போந்த வுத்தமன் புத்தியுட் சால, வருத்தமுற் றென்று மெனத்தனக் கினிய வள்ளலுக் குரைசெய்வா னெண்ணிப், பொருத்தவா லயத்துச் சேர்ந்துபொற் கமலப் பொய்கையு ணண்ணிநீ ராடி. (௧௧)

நீறணிந் தருள்சேர் கடவுளை யடைந்து நியதியெல்ல லுன்கறஞ் செய்வான், கூறனே யடியே னென்செயகே னுமையாய் [1]கொற்றவன் [2]றனமெலா மெடுத்துன், வீழுடை யடியார் தங்கள்பா னிறைத்தே னுளமெய்க் காட்டெனப் போந்தே, குறுபூ மவுலி மாறனுர் தருமு னுன்படை காட்டுமா றென்கொல். (௧௨)

வேறு.

பன்னிய பொருளு மில்லை படையுமோ வாண்ட தில்லை
தென்னன்மு னீயுண் டென்று செப்பினே னெப்பி லானே
மன்னவர் தண்ட மாரே யாற்றுவார் வழிசெய் யாமே
யின்னுயிர் செகுப்ப தல்லால் வேறிலை யெனப்ப ணிந்தான். (௧௩)

வேறு.

நெறியிலே சாத லலாதெனக் கேட்ட நிருமலனிரங்கிநின் விசும்பி, லறிவுற வுரைப்பா னுறுபடைத தலைவ வசைவிலா மனத்தொடு [3]சென்னி, குறைவற வேண்டும் படைகொடு நாளைக் கொறறவன் காணயாம் வருவேம், திறமுறு படையின் றகுதிகண் டிவந்து சேலை யுந் தருவனு னமக்கே. (௧௪)

௯. பரிகரம் - சேனை. [ளியவெம் பெருமான்' கள: ௬.
௰. வந்தனை அடியேன் - பணிதலையுடைய அடியேனது. 'அடியவர்க்கெ
௧௨. நியதி - நியமம். இச்செய்யுள் கருத்துடையடை யணி.
௧௩. தண்டம்-தண்டனை. ஆரே ஆற்றுவார்-ஆர்பொறுப்பார். வழி-வகை.
௧௪. சாதலலாது நெறியிலே; பின், ''இன்றுயிரளித்த கோவே'(௩0) என் பது இதனை வலியுறுத்தும். அசைவு - மெலிவு. நமக்குச் சன்மானமாகச் சேலை யையும் அரசன்தருவன். [மெலாமளித்து' [3]'அடை நீ'
(பி - ம்.) [1]'கொற்றவர்' [2]'தனமெனுதழித்து', 'தனமெலாமழித்து', 'தன

என்னுமத் திருவாக் கதிசய முறக்கேட் டினிமையி னெழுந்து கூத் தாடி, யுன்னருங் களிப்பிற் போர்க்குதன் னுழையி னுற்றதன் மனையவட் குரைப்பத், தன்னுடை யச்சந் துண்ணெனத் தள்ளித் தலைவகே ணிலைமையை விடாது, நின்னுடைத் தருமங் கைதரு நாளை யுதவுவ னேசவெம் பெருமான். (கரு)

வெறிகமழ் குழலா ளாய்க்கன மென்றே மெய்ப்பட வித்திற முரைப்பச், கறைகெழு நெடுவேல் வீரனு மற்று மறைநாட் காலையி லெழுந்து, சிறமுறு படைக்காம் பலகலன் பூண்டு சிறிதுசே வக ரொடுங் கூடிப், பிறைபணி சடையான் றனையுளத் திருத்தி நடந்தனன் பெரியவா ளாங்கி. (கசா)

தன்னுழை கடந்து மன்னவன் வாயிற றலைப்படுங் காலிறை யருளாற், பொன்னக ரமரா முன்னிரு மருங்கும் பூமழை பொழிந்து நின் றார்ப்பச், சின்னமுங் சங்குந் தாரையுங் கொம்புஞ் செம்பொனின் காளமுங் குழலுஞ், மன்னுவங் கியமுந் [1]தம்முனெம் மருங்குந் தொகுபுவி செவிடுறக் கறங்க. (கஎ)

சீர்மணி காளந் தக்கரி தொகசந் சிலம்பமின் றண்ணுமை கடாரி, பேரிகை காடி மத்தளந் தமலி பெருப்பறை [2]துடிகடி முரசம், பார்புகழ் திடக்கை யுடுக்கைகைக் கணியாளம் படகம்வண டியலை [3]தெண் டிண்டிமை, வார்புரி படம் பெருந்தகு ணிச்ச மெங்கணும் [4]வானுற முழங்க. (கஅ)

வில்லொடு கணைவாள் கேடகங் கடகு வேன்மழுக் கடைத்தலைக் கழுக்கோ, லுலகதை [5]பாரா வாரவளை யெறிகோல் சுரிகைபத நிராங் கொடுங் கணிச்சி, பலவிதமுய வத்தந் தண்டுமொண் பிண்டி பாலம்வெஞ் சூலநீள் களைக்கோல், [6]கொலைவெ பூத தண்டு முதலிய வளவில் கோடி பல் படைக்கலம் பிறங்க. (ககூ)

பொருந்துபூங் கொடிக ளாடைக ளாடப் பொருவருஞ் சாமரை யிரட்டத், திருந்துபல கவிகை நிழறவெம் மருங்குஞ் சேர்தரு தோரைகள் வீச, நெருங்கடை யளக்குளங்கமட்பாம்பு நெளியா [7]நண்ணேிவான் முட்டப், பெருங்கட லென்னப் படர்ந்தொலி மிக்கு நடந்தது பெரும்படைச் சாத்து. (உ0)

---

கரு. அச்சத்தைத் தள்ளியவளா மனைவி.

கசா. வீரன் காம் அற்று.

கஅ. தியாளம - ஒருவகைப்பறை.

ககூ. பாராவளை - வளைதடி.

உ0. பூங்கொடி - அழகியதுவசம். தோரைகள் - மயில்றகாற்செய்த விசிறிகள். மட்பாம்பு - ஆதிசேடன். படைச்சாத்து - சேனைத்திரள்.

(பி - ம்.) 1 'தம்பின' 2 'துடியடி' 3 'ஒண்டுடுமை' 4 'வானெழ' 5 'பாரு' 6 'கொல்லெழில்' 7 'வெண்ணேிவான்மூட'

வே று.

இப்பெருங் கொற்றத் தானை யிரும்படைத் தலைவன் முன்னு
மெய்ப்படத் தோன்றக் கண்டு வேந்தனீ தென்கொ லென்று
செப்பரும் பயத்தி னோடுஞ் செல்லவாள் வல்ல வீர
னப்பொழு தடிவ ணங்கி நம்படை யனுசே லென்றான். (உக)

ஓடுவன் மீள்வ னிற்ப னுன்மத்தர் போலே நோக்கி
யாடுவ [1]னணிவன் றண்டி யாகா லென்றொ லிப்ப
னேடவி ழலங்கற் றென்னொ விடுபடை மெய்க்காட் டின்று
கூடிமுன் காண்பா யென்று கூறுவன் றேற வாங்கு. (உஉ)

ஓதரும் பரிவு கூர்ந்து காண்பதற் கொருப்பட் டந்த
மாதவச் செழியர் கோமான் மந்திரத் தலைவர் சூழத்
தீதறு பொலிவிற போந்து சித்திர மண்ட பத்து
மீதுற விருந்தான் சால வியந்தலங் காரத் தோங்கி. (உ௩)

விசையவெம் படையைத் தோன்ற வீரனீ காட்டி டென்னத்
திசைவரும் பரி[2]க ரத்தைச் செல்லகில் வரகில் லென்று
வசையொடுஞ் செறுத்து ரைத்து வகைவகை தொறுநி றுத்தி
நசையுறக் காட்டு வானந் நானில மன்னன் காண. (உ௪)

வே று.

வங்கர் கலிங்கர் தெலுங்கர் கலிங்கிளர் மாளவா கோளர்வெங்
கொங்க ரிலாடர்கள் பாகதர் மாகதர் குச்சரர் பப்பரா[3]துண்
செங்கரு நாடர்கள் காடவர் வேடுவர் சிங்களர் கொங்கணர்மற்
றிங்கிவ ரிங்கிவ ரங்கவ ரங்கவ ருங்குவ ருங்குவரே. (உ௫)

துன்னிய வெய்ய [4]துருக்க ரிரக்கமில சோனகர் சீனர்கண்மா
மன்ன ரிரட்டிய ரொட்டியர் தொட்டியர் வத்தவர் கத்திரியர்
செந்நெறி யாரியர் கோசலர் போசலா சேதுபர் யாதவர்மற
றிங்கிரை யிங்கிரை யங்கிரை யங்கிரை யுங்கிரை யுங்கிரையே. (உ௬)

வே று.

[5] இன்னன வகையிற் கூறி யினப்படை முற்றுங் காட்ட
[6] மன்னனிவ் வீர னைப்போற் கண்டிலே மெனம கிழ்ந்து
கொன்னுற வழைத்து நாமங் கொந்தகப் பெருமா னென்றே
கன்னெறிப் பட்டங் கட்டி நல்கினன் பரிவட் டங்கள். (உ௭)

---

உ௫-ஆ. பரி. ௪: ௯௯-௪-ஆம்அடிகளின் குறிப்பைப்பார்க்க. "அ அவனும் இ இவனும் உ உவனும் கூடியககால், எ எவனை வெல்லாரிகல" (யா. வ.)

(பி - ம்.) [1]'இனைவனண்டி' [2]'கலததை' [3]'மாச்' [4]'துலுக்கரிலககம்' [5]'இன்னணம்' [6]'மன்னிய'

இறையவ னழகு பொங்க விரும்பெரும் பரிமேற் கொண்டு
விறலுடைக் குந்தம் வாங்கி வெண்மதிக் கவிகை நீழன்
மறையவன் றுலாவக் கண்ட மன்னனங் குலாவு கின்ற
வுறுபடைத் தலைவன் [1]யார்கொல் வீரநீ யுரைத்தி யென்ன. (௨௮)

இனிமைகூர் செழியர் கோவே யாவரிங் கறிவார் சூழ்ந்த
மனமுடை யமைச்ச ரோடுங் [2]கேட்டிநீ யுரைக்கு மாற்ற
[3]நினையினிங் கடிய னேற்கா நின்பெரும் பொருட்[4]ட னக்குப்
பணிமதிச் சடையர் காணிப் [5]பரிகாங் கொணர்ந்தா ரென்றான். (௨௯)

[6]நன்றெழில் வீர நீசென் றழையென நயந்து சென்றே
யின்றுயி ரளித்த கோவே யெழுந்தரு டென்னன் காண்பா
னுன்றனை விரும்பா நின்றா னென்றலு முவகை கூர்ந்து
வென்றிகொள் படையை நீக்கி வேந்தனை நணுகிச் சொல்வான். (௩௦)

மன்னகேள் புள்ளி சொல்லிற் களத்திடை மறுவொன் றுண்டு
முன்னிகழ் வடிவுஞ் சொல்லின் முடியில்விற் றழும்பொன் றுண்டிங்
கென்னைமு னெழுது நல்ல சேவக னுனக்கெ னைப்போ
லுன்னரு முலகத் தெய்தா னென்றன னுவகை கூர. (௩௧)

[7]என்னவின் னுடலங் கம்பித் தெழுவதற் குன்னு கின்ற
துன்னரு மிருக ரங்க ளொருவழிக் கொள்ளா நின்ற
வன்னையே போலு நல்ல வருநடைச் [8]சொக்கே யென்ன
நின்னையான் காணுந் தோறு நிகழ்கின்ற துளத்தெ னக்கே. (௩௨)

நின்னெழிற் புரவி யேறற நீதியைக் கண்டா லுன்னை
யென்னதேட் டெழுது கின்றே னெனத்துகி [9]லளிப்ப வாங்கித்
தன்னடி யானை வேண்டிச் சடைமிசைப் புனைந்து கொண்டு
தென்னவ காண்டி யென்று செழும்பரி யுகைப்பன் காண. (௩௩)

வேறு.

அற்புதநி னைப்பவர கத்திலுளி ருப்பவனை னைத்தையும [10]டக்கு
பவனிள், கற்பனைக டப்பவ[11]ன டக்குபுபி டித்துறுக திப்படவு
கைப்ப வடபால், வெற்பின்முது கிற்றிசைமி சைக்கரிமு கத்தினின்மி
தித்ததொழி யப்பி லமதார், சற்பமும்வெ ருக்கொளந டித்ததும
ருத்தைநிகர் தத்துகவ னத்து ரகமே. (௩௪)

---

௨௯. சூழ்ந்த - ஆராய்ந்த.

௩௧. உடம்பில் தழும்புடைய வீரர்கள் சிறந்தவர்களாதலின், இங்ஙனம் கூறினர்.

௩௨. கம்பித்து - நடுங்கி.

(பி - ம்.) 1 'யாவன்' 2'கேநேதி' 3'நினைவினுங்' 4'தனக்கப்' 5'பரிகலம்' 6 'நன்றெனவீரனைச்' 7'என்னநின்' 8'சொக்கன்' 9'நல்க' 10'அடக்கு மவன்' 11'நடத்தப்'

வேறு.

பரிவொடு கண்ட மன்னன் பன்முறை யிசைச மித்துப்
பொருபரி யுகைக்க வல்லா ரிப்படிப் புவிமீ தில்லை
யரிதரி தெனவி யப்ப வைந்துதா ரையினுந் தூண்டி
[1] விரைவிலங் கொளித்தா னந்த வெங்கொடும் படையுட் புக்கு.

அவ்வயின் வருந்தித் தேடு மரசன்முன் விரைவின் வந்தோர்
பொய்வழி யுரையாத் தூதன் புகலுவா னரச ரேறே
தெவ்வுறு படையான் மிக்க சேதிபர் கோமான் றன்னை
வெவ்வலிச் சிங்கங் கொன்ற தென்றனன் வேட்டைக் காட்டில். ()

அத்திறங் கேட்ட வேந்த னென்கொலென் றருளை வாழ்த்திச்
சித்தநன் பரிவு கூர்ந்து திகைத்தறி சமித்தி ருப்ப
வத்தலத் தமைச்ச ராமே ராகரத் தோடுங் கூடி
யுத்தர மற்றி ருந்தா ரும்பர்[2]கோ னருளை யேத்தி. (கஎ)

கொந்தகப் பெருமான் கேண்மின் கொடும்பகை போன திந்த
வெந்திறற் றந்தி ரத்தை வருத்தமே வன்று மேதோ விலலை
தந்தம திடத்துப் போகச் சாற்றுதி தாழா தின்று
சுந்தர னமக்குண் டாக வேண்டுமோ துணையிங் கென்றான். (கஅ)

திறத்துதல் [3]கரும மென்று திரம்பிய படையை [4]வாழ்த்திச்
சிறப்பொடும் போக வேவ வாங்கது சிலைத்தெ ழுந்தே
யிறைப்பொழு தின்க ணாங்கண் மறைந்திட வெழுந்து துள்ளி
யறப்பெருந் தவத்தி னுறு மூழ்கினு ணாந் தத்துள். (கசு)

பொய்யிலாத் தெய்வச் சேனை பொலிவொடு மறையக் கண்ட
வையகத் தோருஞ் சொக்க னருளினை வியந்தார் வாழ்த்தித்
துய்யபே ரன்பன் முன்னிற் சுந்தரற் கன்பு பூண்டு
மெய்யொடு மடைந்தான் றுளில் விண்ணவர் வியக்க வாங்கு. (சO)

அரசனு லயத்துச் சென்றுங் கடியவர் நினைவு தன்னிற்
பரிவொடுஞ் செல்லும் பத்தர் பத்தனை யலலாற் றெய்வங்
கருதின்வே றுண்டோ வென்று களித்தடி துதித்தா னேத்திப்
பெரியவா சிகைமா ணிக்கக் [5]கோளைகள் பிறவு நலகி. (சக)

ஆகத்திருவிருத்தம் - கககஎ.

---

கஇ. தாரை - கதி.

கஅ. தந்திரம் - சேனை. தாழாது - தாமதியாமல்.

கக. சிலைத்து - முழக்கி.

(பி - ம்.) 1 'விரைவினில்' 2 'கோன்செயலைவாழ்த்தி' 3 'தருமமென்ன' 4 'சாற்றிச்' 5 'கோளகை'

## ௪௦.—உலவாக்கிழிகொடுத்த திருவிளையாடல்.

வளமை நீடிய மதுரையின் முன்னொரு தென்னன்
றளர்வில் செல்வமுஞ் சாற்றருஞ் சேனையு மோங்கி
யெளிய சொக்கனை யிறைஞ்சிமுச் சந்தியு மினிதா
வளவில் வெம்பகை கடிந்துல காளுநா டன்னில். (௧)

தெரிய முத்தழ லொன்மறை வேதியர் தேத்துப்
பரிவு செய்திடா திகழ்ந்துயர் பரனையே வழுத்த
வுரிய வேள்விக ளொழுக்கநல் குரவினா லொழிந்து
சருதி யந்தணர் தாழ்ந்துபுன் றொழிலிடை யிழிந்தார். (௨)

வேறு.

ஈனமா றெறிக டம்மி [1]லிழிந்தபி னினிய தேவர்
போனக வேள்வி போகப் போனது பொய்யா மாரி
பானலங் கழனி மேய சென்முதற் பல்வ ளங்க
ளானவை விளைவுபோன போயின [2]வறமூன் றொன்றும். (௩)

வாரிதி யுலகின் மிக்க மதுரைமண் டலத்து வாழுஞ்
சீரிய மனிதர் குன்றித் திசைதிசை [3]போனார் மன்னன்
வாரணம் புரவி குன்று மாதனங் கோதனங்க
ளேர்பொலி யாரா மங்கள் யாவையுங் [4]குறைந்த மன்னோ. (௪)

ஓங்கிய மன்னன் சால வுலைந்துல கேதங் கண்டே
யீங்கிதற் கேது வென்கொ லிலங்கவீ தறிவா னெங்கு
நீங்கருஞ் சொக்க னல்லா லிலையென நினைந்து நெஞ்சத்
தாங்குய ரால யத்து ளணைந்தடி பணிந்து சொல்வான். (௫)

அய்யனே செய்ய கோவே யடியனே னின்னை யென்றும்
பொய்யற வணங்கி [5]வாழ்த்தப் புவிதுய ருறுவ தென்னை
மெய்யுற வுணர்த்தல் வேண்டும் விளங்கவென் றுரைத்துப் போந்து
துய்யபே ரமளியின்கட் டுயரொடுந் துயிலுங் காலை. (௬)

உத்தம னெத்த லத்து முயிர்க்குயி ராகி நிற்கும்
பத்தர்கள் பத்தன் வந்து பகருவா னென்பா லன்பு
வைத்தவ னாத லாலே மாறனே தேற வின்று
சத்திய மாவு னக்குச் [6]சாற்றுவன் புக்க வாறு. (௭)

---

௧. எளிய - அடியார்க்கெளிய. முச்சந்தி - காலை, உச்சி, மாலை.
௨. பரிவு - அன்பு. நல்குரவினால் வேள்விகளும் ஒழுககமும் ஒழிந்து.
௪. மா தனம் - மிக்கபொருள். கோதனம் - பசு. ஆராமம் - சோலை.
௫. உலகு ஏதம் - உலகத்தின் துன்பம்.

(பி - ம்.) 1'இழிந்து' 2'அறங்களொன்றும்' 3 'போக' 4 'சுருங்கிற்றன்றே' 5 'போத' 6'சாற்றுவம்'

வே று.

மேவரு நான்மறை நமக்கு மெய்யதற்
இயாவர்நல் லவரவர் தமக்கி யாநலோ
மார்வுறு மேதினிக் கமர ராகிய
சார்வுறு மறையவர் தமை[1]யி கழ்ந்தனை. (அ)

ஆதலா னல்குர [2]வெய்தி யாங்கவர்
சோதிசேர் மறைவழித் தொழின்ம றந்தனர்
சோதிசேர் மறைவழித் தொழின்ம றத்தலாற்
கூதிர்வான் பொழிமழை குன்றிற் றிம்பரே. (கூ)

நெறிதரு மறையவர் நெஞ்சம் வாழுமேன்
முறைதரு வையக முழுதும் வாழுமா
னெறிதரு மறையவர் நெஞ்சம் வாடுமேன்
முறைதரு வையக முழுதும் வாடுமால். (க0)

பாமறை யந்தணர் தம்மைப் பார்த்திப
நாமவ ராகவே நாளுங் கண்டிடு
நாமவ ராகவே நாளுங் காண்டையேற்
பூமட மாமகள் போவ தில்லையே. (கக)

[3]நன்புடை யறத்தவர் நமக்கு நல்லவர்
துன்பமெய் தாதவர் துன்ப மெய்தலா
லின்புறு மண்டல மினிமை குன்றிய
தன்புடை யாயுனக் கறியக் கூறினேம். (கஉ)

வே று.

இன்புற வழைத்த வர்க்கா மினிமைசெய் விரைவிற் சால
[4]நன்புற நினக்கு மிக்க நலந்தரு செல்வ முண்டாந்
தென்புவி நயக்க நீங்காச் செல்லலை நீக்க [5]வற்றோர்
பொன்பொதி கிழியும் வாழத் தருகுவம் புதுமை கூர. (கங)

அக்கிழி யிற்பொன் கோடி யழிப்பினுந் [6]தொலையா தானம்
மிக்கபே ராணை யாலே வேண்டிபெ வெடுத்த ளித்துத்
தக்கவர் தமக்கு [7]மிட்டுத் தருமமுஞ் செய்து நீயுன்
புக்கிலி லியாரும் [8]வாழ வாழுதி புவிமீ துழி. (கச)

---

க0. நெஞ்சம் வாழுமேல் - மனம் மகிழுமாயின்.

கங. நீக்கவற்று - நீக்கவல்லதாகிய. கிழி - கிழித்த துணியாற்செய்த முடிப்பு.

கச. "கோடிபொன் னெடுப்பினுங் குறைவிலாததோ, ராடக நிதி" என்பர்பின்னும்; உ0. புக்கில் - வீடு.

(பி - ம்.) [1] 'மறந்தனை' [2] 'ஆகி' [3] 'நன்குடையறத்தினர்' [4] 'நன்குகூர்', 'நன்குற' [5] 'மற்றோர்' [6] 'தொலையாதென்றன்' [7] 'மிக்குத்' [8] 'வாழத்தருகுவல்'

வேறு.

அஞ்ச லஞ்சலென் றன்புடைத் தென்னவ
னெஞ்சில் வேண்டிய நல்கிடு கீவியைப்
[1]பஞ்சின் மெல்லிணைப் பான்முடிப் பான்மிசை
வஞ்ச [2]மாசற வைத்து மறைந்தனன். (கரு)

வேறு.

தனமுறுபொற் கிழிகண்டு துயிலுணர்ந்த தார்வேந்த
னெனையடிமை யுடையானை யல்லதுவே றிருநிலத்து
வினையினொரு தேவுண்டோ நேசமுளா ரெனவியந்து
கனவுநிலை யுரைசெய்யக் கேட்டபெருங் களியமைச்சர். (கசு)

வேறு.

கனவிடைக் கண்ட செம்பொன் கண்டதுன் கருத்துட் [3]டங்கு
நினைவதற் கரியவீச னல்கலா னீடு சிங்கா
தனமிசை வைத்துப் பூசித் தருளுதி தணிவ [4]தில்லை
யினியுனக் குயர்ந்த செல்வ மியைவதற் கைய மின்றே. (கஎ)

ஒப்பிலா னுரைத்தல் போல வொண்பெருந் தனமெ டுத்துச்
செப்பரு மறையோர் தம்மைச் சிறப்பொடும் பூசை செய்து
மெய்ப்படுந் தலத்தி ருத்தி வேண்டிவ நல்கி டென்ன
வப்படிச் செய்வ லென்று செய்தன னரசர் கோமான். (கஅ)

நல்லவர் பரவுஞ் சொக்க நாயக னருளி னாலே
தொல்லையா குதிக ளோங்கிச் சுருதியும் [5]வழங்கி யெங்குஞ்
செல்லனல் குரவு நீங்கித் திங்கண்மும் மாரி பெய்து
பல்வித விளைவும் பொங்கி நிறைந்தது பாண்டி நாடு. (கசு)

வேறு.

கோடிபொன் னெடுப்பினுங் குறைவி லாததோ
ராடக கீவிகண் டதிச யதொடு
நாடவர் துதித்தனர் நாடி நாடொறும்
பாடினர் செந்தமிழ்ப் பனுவல் சான்றவர். (உ௦)

வேறு.

செய்தவ முயற்சி யாலே சிவனடி யார்க ளன்பும்
வைதிக நெறிக்க ணன்புங் கண்டமண் டலத்தோ ரெல்லாங்
கைதவன் றனையு மந்தக் கைதவற் கன்பு பூண்ட
மெய்திகழ் சொக்க நாதன் றன்னையும் வியந்தார் சால. (உக)

ஆகத்திருவிருத்தம் - ககஅஅ.

---

கரு. கீவி - கிழி. கஎ. தணிவதில்லை - குறையாது.
கசு. செல்லல் - துன்பம். உ௦. ஆடககீவி - பொன்முடி.
(பி - ம்.) [1]'பஞ்சிமேல்' [2]'மாசற' [3]'தங்கி' [4]'இல்லாத' [5]'விளங்கி'

## ௪௧.—மாமனாகவந்துவழக்குரைத்த திருவிளையாடல்.

தளர்வில் பல்புகழ் மதுரை யம்பதி தன்னின் முன்னொரு காலநீ
ளளவில் செல்வமு முற்ற சுற்றமு மமைவி னோடுவி ளங்கிமற்
றுளம்வி ரும்பிய வாணி கஞ்செய்தொ ழுக்கம் வாய்மை சிறக்குமோர்
வளமை சேர்தன பால னென்றொரு வணிகன் மாசற வாழ்ந்தனன்.

செல்வ முற்றிய வண்மை முற்றிகழ் நீதி லொண்குல மோங்குவா
[1]னல்வி னைத்தணி வால ளித்தவொர் மைந்த னந்தவி லாமையா
லொல்லை யிற்றனு டன்பி றந்தவண் மைந்த னைத்தனு வப்பொடு
மெல்லை யற்றசி றப்பொ டும்மக வாவெ டுத்துவ ளர்த்தனன். (உ)

வளர்த்த நன்புதல் வன்வ யிற்றன்வ ளந்த ரும்பொருள் யாவையு
மளித்தி யைந்தத னத்தொ டும்புதல் வறபெ றப்பெரு காசையா
லுளத்து நல்லன பேர றங்களு வந்து செய்துயர் கங்கைநீர்
குளித்தி யாம்வரு வேமெ னத்தனி கூறி மாதொடு மேகினான். (௩)

வேறு.

ஆங்கவன் போய பின்ன ரங்கிறற் றாயத் தார்க
டாங்கிளர்ந் திறந்தா னென்று மனையொடு தனமுங் கைக்கொண்
டீங்குநீ யேடி யார்கொல் போவென விகழ்ந்து கூறி
யோங்குமா தினையு மைந்தன் றன்னையு மொதுக்கி னரால். (௪)

ஆடைசோ றளவு மீயா தகற்றிட வகன்று ளுள்ளம்
வாடிமுன் றுவர்ப்பி டித்து மறிப்பவு மிலலா ராகி
யாடகம் பலர்க்கு நல்கி யளவில்வா ணிகங்கள் செய்து
நாடரும் வலியைக் காட்டி யிருந்தனர் நடுக்க மின்றி. (௫)

---

உ. வண்மைமுன் திகழ் - கொடை முதலியவைகள் விளங்கப்பெற்ற. நந்த - பெருக.

௪. இறந்தானென்று இளர்ந்து.

௫. துவர்பிடித்து - செம்மைநிறமுள்ள ஆடையைப்பிடித்து; ௧௦-ஆம் பாடல் பார்க்க; துவர்: ஆகுபெயர்.

* "முன்னொரு வணிகன் மகப்பே றின்மையின், மருமான் றன்னை மகவெனச் சடங்குசெய், துளளமுங் காணமு மவனுழி யொருக்கி, முக்கவர்த் திருநதி தன்னுடன் மூழ்கி, யட்புலத் துயிர்கொடுத் தருட்பொருள் கொண்டபின், மற்றவன் றாயம் வவ்வுறு மாக்கள், காணிக்கைக் கொண்டமறுநிலை மைந்தனை, நிரைத்துக் கிளைகொ ணெடுவழக் குய்த்தது, மைந்தனும் கேளிரு மதிமுடிக் கடவுளின், புந்தியொன் றின்றிப் புகல்ல மென்றய, ரவ்வுழி யொருசா ரவன்மாதுலனென, வம்வொளி நிறைவே யோருருத் தரித்தவக், தருள்வழக் கேறி யவர்வழக் குடைத்த, கூட னாயகன்" (கல். ௪௫.)

(பி - ம்.) [1] "நல்வினைக்கனிவாலளித்தவொர் நந்தனந்த விலாமையால்'

மங்கல நாணி ழந்த மடந்தையோர் மதிநி னைந்து
செங்கணீர் வார வாரச் சிறுவனோ டிவ்வி டுக்க
ணங்கயற் கண்ணி பங்கன் றனையலா லாற்று வார்க
ளிங்கொரு கேளி ரிலலை யென்றிறை கோயில் புக்காள். (சு)

மைத்திக முளகஞ் சோர மைந்தனை நிலத்துப் போகட்
டத்தனோ் குவித்து முன்னின் றறநெறி வளர்க்குங் கோவே
சத்தியக் குன்றே மிக்க தயாப்பெருங் கடலே போற்றும்
பத்தர்கள் பத்த னேயான் பகர்வதொன் றுண்டு கேண்மோ. (எ)

வையகத் தோர்கள் காண மருகனை [1]மகன்மை கொண்டு
செய்வன வடைவிற செய்து செலவமுள் ளனவு நல்கித்
துய்யவென் னுடன்பி றந்தான் போயினன் றூரத் தின்று
வெய்யதா யததாா தன்னி மிகைகள்செய் கின்ற ரன்றே. (அ)

பற்றலர் சொல்லும் வெய்ய படிறறுரை பொறுக்க கிலலேன்
மறறொரு கேளி ரிலலை மன்னவ னுனை யிலலை
பெறறதாய் தந்தை நீயே யென்றும்ப ரவசத் தோடு
மற்றவர்க் கறற செலவன் சந்நிதி யாரறி வீழ்ந்தாள். (கூ)

மற்றது கண்டி ரங்கி மாசிலா னுறுகி மாதே
யுறறநின் புதலவ னோடு மெழுந்துசென் றுலகோர் காணப்
பற்றலர் தம்மை நாடிப் பயப்படே றுவர்பழி டித்துச்
சறறுமோ ரடியி டாமற் றடுத்துவா தரும [2]மன்றுள். (க0)

மன்றிடை முன்னோன் றந்த மாசறு பொருள்க ளெல்லா
மொன்றிய வணிக னாகி யுற்றவர் முற்றுங் காண
வின்றியாம் வந்து தோலா நிகலபட வழக்குப் பேசி
யொன்றுமே காமல வாஙகித தருகுவ முண்மை யீதால். (கக)

இன்னநீர்ந் துள்ளந் தேறி யேகென மறையக் கண்டு
தன்னுளே யதிச யித்துத் தாஙகரு மவச நீங்கிப்
பின்னரொன் றுரைய ளாகி யெழுந்துபே ரருளை வாழ்த்திப்
பன்முறை வணங்கிப் போந்தாள் பழுதிலா வணிக மாது. (கஉ)

தெரிவுறச் சென்று மன்றிற் போதுமி னென்னச் சீறி
விரைவொடுந் தடுப்பக் [3]கண்டு மேவலர் சால வைது
மருவிய புதல்வ னோடு மண்மிசை மறியத் தள்ளித்
தரும[4]வா சனத்தி லேறச் சஙகரன் றரித்தா னில்லை. (கங)

---

எ. போகட்டு - இடத்தி. அத்தம் - கை.

அ. மகன்மைகொண்டு-மகனாகக்கொண்டு. மிகை-வரம்புகடந்த செய்கை.

கூ. படிற்றுரை - பொய்யுரை. க0. தரும மன்று - நியாயசபை.

கக. தரும ஆசனம் - நியாயசபை.

(பி-ம்.) [1]'மகன்மைக்கொண்டு' [2]'என்றே' [3]'கண்ட' [4]'மாமன்றில்'

குறைவற மாமன் கோலங் கொண்டுவெண் ணீறு சாத்தி
யறுவையுந் தலையச் சுற்றி யணிமுடிச் சாத்துஞ் சாத்திச்
செறியமோ திரஞ்செ றித்த செழுமலர்க் கரங்கள் வீசி
முறைமையிற் [1]றகுஞ்சி றுக்கன் பின்வர முன்ன டந்தான். (௧௪)

அன்புடை யவள்கண் டைய கோவென வயிற்ற றைந்து
தன்பெரும் புழுக்கந் தீரத் தலையனைத் தழுவிக் கொண்டே
யென்பெருந் துணைநீ போக யாறுமென் மகவு முற்ற
துன்பமோ தொலையா தென்ன வரறறிறாள் கண்ணீர் சோர. (௧௫)

கருணையன் ருனு மேனி கம்பித்துக் கண்ணீர் வார
வொருமரு மகனை யென்ற வுடன்பிறந் தவளை மண்மேல்
வெருவுற வொருவன் [2]சொல்வ தேயென விம்மி விம்மிப்
பொருமினின் றழுதான் யாருந் [3]கலுழமெய் பூண்டு கொண்டு. (௧௬)

வஞ்சகர் தள்ள வீழ்ந்த மைந்தனை யெடுத்து மோந்து
பஞ்சவ னகரி தன்னுட் பழுதுறை பகர்வா ரிலலை
நெஞ்சின்மே லஞ்ச வேண்டா நீங்களிங் கியாம்வந் தேமென்
றஞ்சினோர் தம்மைத் தேற்றி யாறறினான் போற்றி யாங்கு. (௧௭)

வணிகசூ ரியரே வாரீர் வாணிக நன்றே சொல்லீர்
பணிநெடு விலைமா ணிக்கம் [4]விற்றதோ பயனென் போதுங்
குணமுடை யளகைக் கோனீர் [5]மருகனோர் குமா னுண்டே
வணியநீ ரறியீ ரோவென் றவரவர்த் தழுவிக் கொண்டான். (௧௮)

கடம்பரே யுயர்ந்த பொன்னுக் காளுண்டோ [6]காதல் வீதி
விடங்கரே யமரர் கோனார் [7]பணையமீட் டிலரோ மெல்ல
நடந்திரீர் வைத்த மூத்து விற்றதோ நான்முன் வைத்த
குடங்கள்போ யினவோ வென்று கூறியென் னென்றான் றேற.(௧௯)

ஆங்கவை யிருந்தோர் நல்ல வவதரத் தணைந்தான் மாம
னீங்குடன் பிறக்கிற் கெட்டே னிபபடி வேண்டு மென்று
தாங்கருந் தாயத் தாரை நிறுததிநின் றனிவ ழக்கை
யோங்கிய [8]தனபா லாசொ லென்றன ருவகை கூர்ந்து. (உ௦)

---

௧௪. அறுவை - ஆடை. முடிச்சாத்து - தலைபபாகை. கைவீசல், வருந் தாக்குறிப்பு. சிறுக்கன் - சிறுவன்.

௧௭. பஞ்சவன் - பாண்டியன்.

௧௮, ௧௯. இப்பாடல்கள், ஆங்கு வந்துள்ள வணிகர்களை நோக்கிச் சிவ பெருமான் வினவல்: 'வணிகசூரியர்' என்பது முதலியன, வணிகர்களுடைய பெயர் விசேடங்கள். பயன் என போதும் - இலாபம் யாதவரும்? பணையம் - ஈடு. 'என்' என்றது, தம்முடைய பழைய ஞாபகததைப் புலப்படுத்தியபடி.

உ௦. அவதரம்=அவஸரம் - சமயம்.

(பி - ம்.) 1 'கருஞ்சிறுக்கன்', 'தருஞ்சிறுக்கன்' 2 'சொல்வதோவென', 'சொலவதேயென்று' 3 'இரங்க' 4 'விற்றதென்பயனே' 5 'மருகனோ' 6 'கானல்' 7 'பயணமீண்டிலரோ' 8 'தனபாலன்'

மனை குடி யடிமை காணி மாடமா ணிக்க முத்துக்
கனகவொண் கிழிநா றாசு காசுசா தனங்கள் கஞ்ச
மினமுறு பணைய நாம மடையாள மெவையுந் தோன்றச்
சினமுறு தாயத் தாருஞ் சுற்றமுந் தெளியச் சொல்லி. (உக)

என்னுடன் பிறந்தாண் மைந்த னிங்கிவன் றனையெ டுத்து
முன்னமே பிள்ளை யாக வளர்த்தியான் முறைமை தன்னின்
மன்னிய செல்வ மெல்லாங் கொடுத்தனன் மகவி லாமற்
றென்னவன் பெரிய நீதி குன்றுமோ செப்பு மென்றான். (உஉ)

மன்றிடை யிருந்தோ ரெல்லா மாதுல னவின்ற வாறு
நன்றென [1]வியந்து கண்டு ஞாதிக டங்குற் றத்தா
லொன்றுமங் குரையா ராய்விட் டொளித்தனர் தரும மாறன்
றன்றிரு நீதி நாட்டுத் தண்டமுண் டாமென் றஞ்சி. (உ௩)

[2]மாற்றவ ரொளிக்கக் கண்டென் மருமகன் றன்னைக் கொல்வான்
கூற்றென வந்த தாயக் கொடுமைகண் டோர்க ணீங்க
ளேற்றலை செய்தோர் தம்மை யிறைநெறி முறைமை யோங்கச்
சாற்றரும் பெரிய தண்டங் கொள்ளுமின் சான்றோ ராயின். (உச)

தருமமோ வெனக்கம் பித்த சான்றவர் காணுந் தோறு
முருவநீ சொக்க னென்ன விளங்கினை யுளங்க டோறு
மருவலர் விட்டார் விட்ட வகைதொறும் பொருள்கள் கைக்கொண்
டுரியநின் மருகனோடும் [3]போதிநின் னுழைக்க ணென்றார். (உரு)

மன்றுளே வழக்குச் சொல்ல வல்லவ னின்போ லில்லை
யென்றனர் வணிகன் போந்தாங் கிலங்குதன் மருகனோடு
நின்றதன் றங்கை யோடு நேசயார் கிளைஞ ரோடுங்
கன்றினர் விட்டுப் போன கனக[4]மா ளிகையுட் புக்கான். (உசு)

டாங்கொரு பொருள்போ ராமற் காட்டிவெம் பயம கற்றி
யாங்கவர் தமையி ருத்தி யவ்வயி னெவருங் காண
வோங்கிய புகழ்க்கூ டலை சொக்கனு மெனவு ரைத்துத்
தாங்கரு முறுவ லோடு மறைந்தனன் றனிவி சும்பில். (உஎ)

---

உக. காணி - உரியநிலம். கஞ்சம் - வெண்கலம்.

உஉ. மகவிலாமையாற் கொடுத்தனன்.

உ௩. அஞ்சி ஒளித்தனர்.

உச. ஏற்று அலைசெய்தோர் தம்மை - எதிர்த்து வருத்தியவர்களை.

உரு. தருமமோவென - இவர்கள்செயல் தருமமாவென்றுசொல்ல. உளங்கடோறும் விளங்கினை. வகை - இடங்கள். உழை - வீடு.

உசு. கன்றினர் - பகைவர்.

உஎ. 'புகழ்க்கூடலை சொக்கன்': சுஉ: நக.

(பி - ம்.) [1]'உவட்டச்', 'வியட்டக்' [2]'மாற்றலர்' [3]'போக' [4]'மாமனை'

இக்கணக் கிப்ப டிக்கார் வெல்லுவா [1]ரிரங்கி ஈந்தஞ்
சொக்கனே யல்லா லுண்டோ தொழுபவர்க் கெளியா னென்று
மிக்கவீ றியைய மாட்டாக் [2]கைக்தலை விரைந்து நோக்குந்
தக்கபே ரன்பை யுங்கண் டதிசயித் தார்கள் சான்றோர். (உ௫)

மண்மிசை வழக்கு வெல்வான் மாமன்மெய் புனைந்த தன்றி
யெண்மறை யுரைக்கும் வாயா லிகல்வழக் குரைப்ப தேயொண்
[3] கண்ணினீர் சோர வாய்விட் டழுவதே கடவு ளென்றுங்
கெண்ணரும் வணிகர் முற்று மேத்தினா ரருளை வாழ்த்தி. (உ௬)

ஆகத்திருவிருத்தம் - ககசுஎ.

---

## சஉ.—அட்டமாசித்திபகர்ந்த திருவிளையாடல்.*

மல்லலஞ் சிறப்பி னோங்கும் வான்றொடுங் கயிலை யங்கண்
பல்வித மணிபி றங்கு பளிக்குமண் டபத்தி ருந்து
சொல்லரும் பல்க ணங்க டுதிசெய்து விதியிற் கேட்ப
நல்வினைக் கதைந வின்றா னயகன் முன்னோர் நாளில். (க)

முறைமையி னவிலுங் காலை முனைநெடு வேற்ற டக்கை
யறுமுகக் கடவுட் கின்பா லன்பொடு [4]நல்கிச் சற்று
மறுவிலா லியக்க மாத ரறுவரு மகிழ்ந்து வந்து
நெறியொடு சிறந்த நல்கி நின்றடி தொழுது போற்றி. (உ)

கருணைமே னியனே தேவர் தேவனே கயிலை வேந்தே
யரியவை யெவையு நல்கு மட்டமா சித்தி தம்மை
யுரையொடு முறைத்தல் வேண்டு முணர்வுற வெங்கட் கென்னப்
பரமனு முவகை கூர்ந்து பகர்ந்தன னிருந்த வாங்கு. (௩)

வேறு.

இருந்தணி மாமுத லெட்டுச் சித்தியுந்
திருந்திய பொருளொடு செப்புங் காலையில்
விரும்பிய மடந்தையர் வினைவ சத்தினாற்
பரம்பிய பொருள்களைப் பராமு கஞ்செய்தார். (௪)

---

உ௫. கணக்கு - வழக்கு. மாட்டாக்கைக்தலை - வன்மையில்லாதவிதலை. சான்றோர் - நியாயசபைத்தலைவர்.

(சஉ)

உ. இன்பால் - இனியபாலை. இயக்கமாதர் - யக்ஷமகளிர்.

௩. உரையொடு - பொருளொடு; ௪.

* "பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்,கட்டமா சித்தி யருளிய வதுவும்", "இத்தி தன்னின் கீழிரு மூவர்க்க, கத்திக் கருளிய வரசே போற்றி" (திருவா. கீர்த்தி. கஉ-௩; போற்றி. ககஉ-௩.)

(பி - ம்.) [1]'இரங்கு' [2]'கைத்தலை' [3]'கண்கணீர் சொரிய' [4]'சிறக்கநல்கி'

அப்பொழு திறைவெகுண் டவர்க டம்மையாஞ்
செப்பிய சித்தியைத் தெளியக் கேட்டிலீர்
மெய்ப்படு ஞானமுங் குறையு மேலுமக்
கொப்பொடு நவில்வ தொன் றுண்டு கேண்மினோ. (௫)

சிட்டர்வாழ் தென்னவ னாட்டிற் சிருடைப்
பட்டமங் கலமெனும் பதியொன் றுண்டதில்
விட்டகோ டியோசனை [1]போந்து விண்மிசை
முட்டுமோர் வடதரு வுண்டு முன்னரோ. (௬)

ஆங்கதி னீழலி வாறு மாதருந்
தூங்கலில் விசும்பிடைச் சுழன்றெ ழுந்துபோ
யோங்குரு வொழிந்துகல் லுருவ மாகியே
தாங்குத லறவிழு மெனச்ச பித்தனன். (௭)

குன்றிய மனத்தொடும் வணங்கிக் கோதையர்
மன்றுறை யிறைவனே மங்கை பங்கனே
[2] யின்றிரும் பிழைபொறுத் தருளி யெங்கண்மே
லொன்றிய சாபமு மொழித்தி யென்றனர். (௮)

ஓதிய [3]பகுதிகேட் டுவகை கூர்ந்தியற்
போதமின் மாதரீர் புகன்ற நாட்டிடைச்
சோதிசே ரருளுடைச் சொக்க னென்றியா
மேதகு மதுரையி லிருப்ப மேம்பட. (௯)

வேறு.

செறிவொடு மாங்கு நீங்கள் சேருமின் சேர்ந்த வாற்கீழ்
முறைமையின் வெளிப்பட் டுங்கள் சாபமு நீக்கி முன்னி
னெறிபட வறிய வெட்டுச் சித்தியு நிகழ்த்து வேமென்
றிறையருள் புரியப் போந்தா ரிளபமொடு [4]மினிமை கூர்ந்து. (௧௦)

---

௫. மெய்: சிலேடை. மேல - இனி. ஒப்பு - பொருத்தம்.

௬. பட்டமங்கலம்: சிவகங்கையைச்சார்ந்தது; பட்டமங்கையெனவும் வழங்கும். கோடியோசனை போந்து - கொம்புகள் யோசனையளவு நீண்டு.

௭. தூங்கலில் - ஓய்வில்லாமல்; "தூங்க லிலாமல்": உ௮: ௮௮; ௪௨: ௧௧. தாங்குதலற - தடையற. விழும்: ஏவல்.

௯. பகுதி - பகுப்பு, இயல்பு. இயற்போதம் - இயற்கையறிவு.

௧௦. இறை: எழுவாய். சாபானுக்கிரகத்தால் முறையே இளைப்பும் இனிமையும் பெற்றனர்.

(பி - ம்.) 1 'ஓடி' 2 'இன்றரும்' 3 'தகுதி' 4 'ஏதம்'

ஆங்கிறை யிறைவி யோடு மவ்வயி னெழுந்து வெற்பின்
பாங்குறு திருக்கோ யிற்கண் மேவினன் பாவை மாருந்
தூங்கயில் லாமல் வானிற் சுழன்றுசென் றிழிந்து வீழ்ந்து
நீங்கரு நிழலிற் கல்லாய் நின் றனர் நெடிது காலம். (௧௧)

வே று.

மன்னிய குருவடி வாகி வள்ளலும்
பின்னொரு நாணிளைஞ் தனுகப் பேதைய
ருன்னருஞ் சிலைவடி வொழிந்து காணுமுன்
பொன்னுயர் வடிவொடும் போதம் பெற்றனர். (௧௨)

மைப்படு கண்டனே மதுரை வள்ளலே
துப்பமர் மெய்யனே சொக்க நாதனே
யொப்பொடு கேட்பமென் றுள்ளம் பற்றியே
மெய்ப்படு சித்தியை விளம்பென் றேத்தினர். (௧௩)

[1]மஞ்சமை குழலுமை மங்கை பங்கனு
[2]மஞ்சலீ ரப்படிச் செய்வம் யாமென
வெஞ்சலில் சொல்லொடு மெட்டுச் சித்தியும்
விஞ்சிய பொருளொடும் விரித்து ரைத்தனன். (௧௪)

வே று.

அணிமா மகிமா கிரிமா லகிமா
[3]நனுகீ சத்துவம் வசித்துவ நன்குள
வினைசேர் பிராத்திப் பிராகா மியமென்
குணமார் சித்திக ளெங்கக் கூறினன். (௧௫)

வே று.

தெரிவைய ரருளிச் செய்த சித்தியாற் சித்தி பெற்றுங்
குருவொடு மிடையூ றின்றி யுலாவினர் திசைக டோறும்
பொருவில்கல் லுயிர்த்தெ ழுந்து போனது கண்டு மண்ணோர்
பரவயான் சொக்க னென்றே பரமனு மதுரை புக்கான். (௧௬)

ஆகத்திருவிருத்தம் - ௧௧அ௫.

---

௧௨. வடிவும் அறிவும். ௧௩. ஒப்பு - மனப்பொருத்தம்.

௧௪. சொல்லொடும் பொருளொடும் விரித்து.

௧௬. உருவொடும் உலாவினர்.

(பி - ம்.) 1 'மஞ்சமர்' 2 'அஞ்சனீர்' 3 'நனுகும் வசித்துவ மீசத்துவ நன்குள'

## சசு.—தண்ணீர்ப்பந்தர்வைத்த திருவிளையாடல்.*

மருவு முன்னொரு காலமெய் யழகான் மன்மத னிவனெனச் சிறந்து, தருமம் வீரியந் தைரிய முளனாய்த் தனதுயர் மரபினுக் கொத்த, திருவை வேட்டடா தகிலமுந் தழைப்பத் தீதறுசெய்யகோ லோச்சிப், பெருமை மிக்கதென் மதுரையில் வாழ்ந்தான் பின்னுகற் கன்புளோர் செழியன். (௧)

அன்னவ னுடனோர் [1]தொன்னெறி வளவ னருங்குல மரபின் யான் பயந்த, கன்னியைக் கொடுத்தே யுறவுகொள் மேவமென் றெண்ணி [2]யொண் காரியத் தோரை, முன்னுற வேண்டும் பொருளொடு விடுப்ப மொய்ம்புடை வழுதிகண் டுவந்து, மன்னிய வுலகத் துயாவரு மதிப்ப மறுபொரு ளெதிர்செல விடுத்தான். (௨)

### வேறு.

இனிமையுற வித்தகவி னடக்கு நாளி லெதிரிலா வுயர்வழுதிக் கிளையனாய, சினமலியு மொருவயவன் படையி னோடுஞ் சென்னிமக டனைக்கொள்வா னெண்ணி நீங்கி, மனவலியி னுடன்செல்லக் கண்ட சென்னி மற்றவன்ற னுடனெதிர்க்க மாட்டா னாகி, யனநடைசேர் மடமகளைக் கொடுத்தான் மிக்க வறிவுடைய னாயிருந்து மச்சங் கூர்ந்தே.

மன்னுபுகழ்க் கிள்ளிமரு மகனா மந்த மாறனுடன் கூடிமுனம் வெல்லற் கொண்ணாத், தன்னுடைய பெரும்பகைவ னாய மிக்க தானையுடை வடபுடவி யரசன் றன்மேற, முன்னியவெங் கயமுதனாற் படையி னோடேந் தோலாது சென்றுவினை தொலைத்து மீண்ட, பின்னாள வில்லாத சேனை கூட்டி யிருந்தனன்வெந் திறங்கள்பல பிறங்கப் பேசி.

தருமநெறி கோடாத தமையன் றன்னைச் சமரிடைவென் றியாமதுரை கொள்வ மென்றே, யுருநிலத்தோர் பரிவேதா வென்னும் புன்சொற் கிளையாதோ னடலபய னோடுங் கூடிக், கரிபுரவி நெருங்கு பெரும் படையி னோடுங் கடிமதில்சூழ் மாமதுரை மண்ட லத்து, விரைமருவும் வஞ்சிமிலைந் தணுகக் கண்ட விமலனடி மறவாத வீரமாறன். (௫)

---

௪. வினை - போர்.

௫. பரிவேத்தா - தமையனுக்கு விவாகமாகாமலிருக்கும்பொழுது விவாகஞ்செய்துகொண்டவன்; ௧௧, ௨௦. வஞ்சி - பகைமேற் செலவோர் அணியு மாலை.

* "தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து, நன்னீர்ச் சேவக னாகிய தன்மையும்" (திருவா. கீர்த்தி. ௫௮ - ௯.)

(பி - ம்.) [1]'செங்கெறிவளவ' [2]'யோர் காரியத்தோனை'

செம்பியன்றன் னொடும்பெரிய சேனை யோடுந் திறம்பேசித் தானீர னுவிருக்கு,மெம்பிவரு கின்றான்யா மெதிர்க்க மாட்டே மென்செய்கே மெவ்விடத்து முள்ளான் வல்லான், றும்பிவரை யினம்பரிக்கும் பெரிய கோயிற் சொக்கனுக்கு விண்ணப்பஞ் செய்வே மென்று, கம்பமுறு மெய்யினொடும் புளகத் தோடுங் காரியமுள் ளனசொல்லிப் பணிந்தான் போற்றி. (௬)

வேறு.

[1] மற்றவன் கண்டஞ் சாது நன்னெறி மன்னு வொல்லை
யுற்றநின் படையி னோடு மோசனை யெதிர்சென் றேறி
வெற்றியி னணியாம் வென்றி தருகுவ மென்று விண்மேற்
கொற்றவன் றேற வங்கட் கிளர்ந்ததோர் குளிர்ந்த வாக்கு. (எ)

இடமொழிந் திறைவாக் கென்றே யினிமையிற போந்து நொச்சித்
தொடைமிலை யாது பண்டைச் சூழ்ந்ததன் றானை யோடு
மடைவுறக் காஞ்சி சூடி நின்றன னஞ்சா னாகித
தடமலி மதுரை விட்டாங் கியோசனை யெதுரே சார்ந்து. (அ)

மாற்றலர் வெய்ய தானை மற்றது காணு முன்னங்
காற்றென விசையிற் பாயும் புரவியுங் களிறுந் தேருங்
கூற்றன [2]வீரர் தாமுங் குலவுற வாரி யென்ன
வாற்றரு மொலியி னோடும் பரந்ததாங் கவனி யேங்க. (௯)

சென்றவன் கண்டு தேறித் திறத்தெதிர் நடந்து சீறி
யொன்றிய [3]சிங்க நாதஞ் செய்துதன் னுடைததாம் வெய்யா
துன்றிய தானை யோடுஞ் சொக்கனை நினைந்து ளத்து
வென்றிகொண் ஞாட்புச் செய்யத் தொடங்கினன் மிலைந்து தும்பை.

அங்கது காணு முன்ன ரடற்பெருந் தானை மிக்க
வெங்கொடும் பரிமேத் தாவும் வெடிக்கவா னுறச்சி ரித்துத்
துங்கவேன் மாம னோடுந் தோன்றிவெம் பூசல் செய்தா
னிங்கெனோ டெதிர்த்தற் கின்று வலியுனக் கேதோ வென்றே. (கக)

அணிபொலி தேருந் தேரு மலைந்தன வாளு மாளுந்
துணிவொடு நின்ற டார்ந்து பொருதனர் துரகத் தோடு
தணிவிலாத் துரகஞ் சென்று தாக்கின தந்தி யோடங்
கிணையிலாத் தந்தி வந்து மூண்டன வெங்கு மெங்கும். (கஉ)

---

௬. தும்பி - யானை.

எ. ஓசனை - யோசனை. அணி - சேனையை வகுப்பாயாக; ஏவல்.

அ. நொச்சித் தொடை - நொச்சிமாலை; இது தன்மதிலைக் காத்தற்குரிய வீரன் அணிந்து கொள்வது. காஞ்சி - காஞ்சிப்பூமாலை; இது பகைவர்க்கு எதிருன்றி நிற்போர்க்கு உரியது.

க௦. ஞாட்பு - போர். தும்பைமிலைந்து.

கஉ. ஆளும் ஆளும் - வீரர்களும் வீரர்களும். கங. இனன் - சூரியன்.

(பி - ம்.) [1]'நற்றவன்' [2]'வீரருந்திக்கொடுங்கடல் கிளர்ந்ததென்ன' [3]'சங்க'

இந்நெறி யாருங் காலை யிறைதிரு வருளால் வெம்மை
மன்னிய கோடை முற்றி வாயுலர்ந் துதக மின்றிச்
செந்திற லினன்றீ யென்னத் தீக்கதிர் விரிப்ப வாற்றா
தொன்னலர் படையி லோத்த வீழ்ந்தநவ் வுறுக ளாத்து. (கங)

மேவருந் தலத்து மேவி வெஞ்சமர் செய்த பத்திக்
காவலன் சேனை தாறுங் காலதீ நுயிருலை வாடி
யாவிசேர் [1]தண்ணீர் வேட்டங் காவிசேர்ந் தருங்க ளத்துப்
போர்வினை மாட்டா தாகி நின்றது பொலிவ ழிந்து. (கச)

கருணையன் கண்டி ரங்கி [2]கடிதுதற சேர்ந்த பத்தன்
பொருபடை நடுவு சென்று பொருவருஞ சயமுண் டாகத்
திருவுருக் கரந்து மாறோர சேவக னுருபபு னைந்து
தருமநேர் விளங்க வைததான் றண்ணினீர்ப் பந்த ரோங்க. (கரு)

தாதவிழ் கழுநீ ரேலஞ் சந்தன முசீர நோட்டங்
கெதகை யிலவங கருநீண் பகமறு மதுரங் கேடில்
பாதிரி முதற்கற் பூர மனாவாய பரிய ளஞ்சேர்
சீதள வமுதந நலகத் தெவிந்தது குடிதத சேனை. (கசு)

தெளிந்தவ ருயிர்ம ருந்தாய்த் தெள்ளிர் தாய் மணந்து நொய்தாய்க்
குளிர்ந்ததீ ரிவண் டதனா [3]நலமுந னைக்க நாண் டாடிக்
கிளர்ந்தமர் செய்யக் கண்டு கோளர் தாமே பின்னும்
[4]விள்ந்தொரு சாம முன்னிர் மலைந்தது மிலேந்து தும்பை. (கஎ)

வெந்திறல் வீரர் நின்று மடிந்தனா மேல டர்ந்த
சிந்துரப் பட்ட யானை பட்டன துசைப ரந்து
வந்தவெந் துரக வெள்ளம் மறறின மற்ற டர்ந்த
கொந்தவி ழலங்கல வையங் குலைந்தன நலங்கு லைந்தே. (கஅ)

சேயவேற் றடக்கை வீரர் செங்குடர் பிங்கு யேறிப்
பாய்பருந் திட்ட கொட்டைப பவளக்கா றபநதர் நீழ
லாயசெங் குருதி யாறதிற் துளாததவி நயங்கள் காட்டிப்
பேயிருந் கணங்க டம்பற ணைநின நிணங்க டின்று. (கசு)

---

கச. ஆவி - குளம், உயிர். மாட்டாதாகி - வலியிலலாததாகி.

கசு. உசீரம் - விலாமிச்சவேர்.

கஎ. உயிர்மருந்து - உயிரைக்கொடுக்கு மருந்து; மிருதசஞ்சீவனி; "அரும் பெறற் பாவா யாருயிர் மருந்தே" (சிலப். உ: எரு) என்பதனுரையைப்பார்க்க. விளிந்து - வெட்கி. முனனின் - முன்பொருததுபோல.

கஅ. வையம் - தேர்.

(பி - ம்.) [1]'தண்ணீரேர்வேட்டாங்' [2]'கடிதுதரச்' [3]'நல்குவர்' [4]'விளைந்தது சமர'

வன்புறு கவந்த மாட மடிந்தசெங் கொடுங்க ளத்து
முன்புறப் போனார் போனா ரொழிந்தவர் [1]முளிந்து மாண்டார்
மின்பொலி வேற்ற டக்கை வீர னும் வீர மிக்க
தன்பரி வேத்தா வான தம்பியு நிற்பக் கண்டான். (உ0)

இருவரு முகமு கம்பார்த் திளைத்துமு னிற்ப வாகைத்
திருமணி தொடையன் மார்பன் சிரித்துயர் களிப்பி னோடுஞ்
சுராதி பரவுஞ் சொக்கன் கருணையைத் தொழுது வாழ்த்தி
யுரனுடை யோர்க டம்மைப் பிடித்தன னுறுதி கூர. (உக)

திருந்தல ரகப்ப டாமுன் றிண்டிறற் சேனை யுய்யப்
புரந்தர னயன்மா லாதி சயசய போற்றி யென்ன
வருந்திரு மேனி வேர்ப்ப வோடிமீண் டரிய தண்ணீர்
பரிந்தளித் தானொ ளிப்பப் பந்தருங் கண்டா ரில்லை. (உஉ)

எந்தைவல் லனையார் வல்லா ரெனமனத் ததிச யித்து
வெந்திறத் தவர்க டம்மை வெற்றிமா முரசத் தோடுந்
[2]தந்திரத் தலைவ ரோடுஞ் சாற்றரு மமைச்ச ரோடுஞ்
சுந்தரன் றிருமுன் சென்று காட்டினன் றொழுது வாழ்த்தி. (உங)

வேறு.

துய்ய தண்ணீ ரளித்துச் சுவைபட
மைய றீர்த்தெனை வாழ்வித்த வள்ளலே
யைய னேயின் றிவரை யடியனேன்
செய்யு மாறுரை செய்யெனச் செப்பினன். (உச)

சீல மன்ன சிறந்தநின் காரிய
மேல வின்று முடித்தே மிவர்தமை
மேலு னக்கினி வேண்டுப செய்யெனச்
சால நலலவன் சாற்றினான் றேற்றிட. (உரு)

---

உ0. கவந்தம் - தலையில்லாத உடம்பு. போனார்போனார் - தப்பிப்போனவர்கள் பிழைத்தார்கள். முளிந்து - உலர்ந்து.

உக. முகமுகம்பார்த்து - ஒருவர்முகத்தை ஒருவர்பார்த்து; "இளைப்புரவி முகமுகம்பார்த்து" (உகூ: க.)

உஉ. மனிதவுருவங்கொண்டதற்கேற்ப நடித்தருளினரென்பார், "அருந்திருமேனிவேர்ப்ப வோடிமீண்டு" என்றார்.

உங. வெற்றிமாமுரசம் - சயபேரி.

உச. 'வள்ளல்' என்றான், உயிரையும் அரசுரிமையையும் கொடுத்ததுபற்றி.

(பி - ம்.) [1]'முடிந்து' [2]'தந்திரித்'

வேறு.

மெய்ப்பட வுயர்திரு வாக்கு விண்மிசைச்
செப்பிட வடியவர் திறத்து நல்லவுன்
றுப்பமர் வடிவுடைச் சொக்கை யல்லதிங்
கிப்படி யாருள ரெனத்து தித்தனன். (௨௬)

முன்னுற நின்றதி சயித்து முத்தணி
பொன்னணி செம்மணி யிலங்கு பூணணி
பின்னரும் வேண்டுவ பிறங்க நல்கியே
தன்னுடைத் திருமனைத் தலத்துச் சார்ந்தனன். (௨௭)

வேறு.

அருளுடைச் சுந்த ரற்கே யடிமைபூண் டதனா லந்தப்
பெருவலிச் சோழன் செய்த பிழைபொறுத் துவந்து காத்துப்
பொருவரும் புகழ்வி ளங்க வேண்டுப கொடுத்துப் போகத்
தரமொடும் விடுத்தா னோரா ரைந்தினிற் றனது தேத்து. (௨௮)

கயவனூர் தம்பி தன்னைக் காசினி காணத் தாழ்ந்த
நயமிலாத் தொழில்க டம்மி னிறுத்திநா னானெ னென்று
சயமுற மாலை யிட்டுத் தண்டிவந் தெதிர்ம லைந்த
வயமுறு சேனை வெள்ளம் வற்றிடச் [1]செற்ற மாறன். (௨௯)

பகையறக் கூபங் கண்டு பந்தருட் டண்ணீர் வைத்த
புகலருங் கருணை மேனிப் புண்ணியன் றனையு நாளுந்
தகவவன் றனக்கே யன்பு சார்ந்ததென் னனையுங் கண்டாங்
ககமகிழ்ந் தேத்தி னார்க ளவனியோ ரதிச யித்தே. (௩௰)

ஆகத்திருவிருத்தம் - ௧௨௭௩.

---

௨௬. அடியவர் திறத்து நல்லவன்: இப்பெயர் அடியார்க்கு நல்லானென்றும் இந்நூலில் சில இடங்களில் வந்துள்ளது.

௨௮. தாம்-தகுதி. "ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந்துணையும் புகழ்" என்னும் திருக்குறளின் கருத்து இச்செய்யுளிற் காணப்படுகின்றது.

௨௯. நான் நான் என்று - நான் போர்செய்வேன் நான் போர்செய்வேனென்று. மாலை-தும்பைமாலை. தண்டி - அலைத்து.

௩௰. கூபம் - கிணறு.

(பி - ம்.) [1]'செயிர்த்த'

## ௪௪.—இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல்.*

விண்ணகத் தலைவ னாய தேவர்கள் வேந்த னுக்கு
மண்ணகத் தலைவ னாய பாண்டிய மன்ன னுக்கு
மெண்ணறச் சிறிது ளத்துள் வெறுப்புள திமையோ ராலுங்
கண்ணுற வறியொ ணாது காரண மதனுக் கென்ன. (௧)

முனிவர்கள் கேட்பான் வேட்டு முந்திய வுலகத் தெல்லா
வினைவையு முணர வல்ல நிகரிலா மலயக் கோவே
மனமகிழ் வோடு மந்த மறைப்பொரு டன்னை யின்று
வினையற விளம்பல் வேண்டும் விளங்கிட வெங்கட் கென்றார். (௨)

ஆங்கது சொல்ல ஞான வகத்தியன் பகர்வா னீதி
யோங்கிய முன்னோர் கால மொளிவளர் சேர னாடு
நீங்கரும் வளமை குன்றா நிகரிலா வளவ னாடும்
பாங்குடை யறிவான் மிக்க பாண்டியன் பெரிய நாடும். (௩)

ஈனமில் வளங்க ணல்கு மிரும்புனன் மழைம றுத்துத்
தானமுந் தவமுங் குன்றி நென்முத லுணவி யங்க
ளானவை விளைவி லாம லாதவன் கதிராற் காய்ந்து
[1]மானிட ரற்ற முற்று வாடினர் வருத்தங் கூர்ந்து. (௪)

---

க. வெறுப்பு - பகைமை; 'ஆர் வெறுப்பாருவபே', "பிறிவிலா வெறுப்பிவர்க்கிங் கிப்படிப் பிறங்கிற் றென்னை" (௨௭: ௮௨; ௪௪: ௩௨.) கண்ணுற - கருத.

௨. மறைப்பொருள்-இரகசியச் செய்தி; "மறையுரை பகர்தாய்" (௩௨.)

௩. ஒளி - தெய்வத்தன்மை; "மின்னொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி" (பட்டினப். ௨௬௨.)

௪. "தானந்தவ மிரண்டுந் தங்கா வியனுலகம், வானம் வழங்கா தெனின்" (குறள், ௧௯) என்பவாகலின், 'தானமுந்தவமுங் குன்றி' என்றார். அற்றம் உற்று - சோர்வுற்று.

* "அடுபடைப் புரியன் சுடுமுரண் டற்றி, யிட்டவெங் கொடுஞ்சிறைப் பட்ட கார்க்குலச், தலையொரு நிரைநீர் விழ்வன போல" (கல். ௨௪); "திங்கட் செல்வன் திருக்குலம் விளக்கச், செங்கணா யிரத்தோன் திறல்விளங் காரம், பொன்கொளி மார்பிற் பூண்டோன் வாழி, முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென், றிடியுடைப் பெருமழை யெய்தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப, மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க" (சிலப். ௧௧: ௨௩ - ௧); "தேவர்கோன் பூணாரந் தென்னவர்கோன் மார்பினவே" (ஷை. ஆய்ச்சியர்குரவை); "வச்சிரத் தடக்கை யமரர் கோமான், உச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை" (ஷை. ௨௩: ௫௦ - ௫௧); "தேவா ரார மார்பன் வாழ்க வென்றுபக் தடித்தமே", "வானவர்கோனாரம் வயங்கிய தோட்பஞ் சவன்றன், மீனக் கொடிபாடும் பாடலே பாடல்" (சிலப். வாழ்த்துக்காதை.)

(பி - ம்) [1]'மானிடர் முற்றுமுற்ற'

இந்நெறி யொழுக்கங் கண்டவ் விருநிலங் காக்கு மிக்க
பொன்முடிச் சேரன் சோழன் பாண்டியன் புகழ்வி ளங்க
மூன்றுறத் தம்மிற் கூடி முறைமையின் வான நாட்டு
மன்னிய புரந்த ரன்பாற் சென்றனர் மழையை வேண்டி. (ரு)

பைந்தமிழ்ப் பொறையன் கிள்ளி பாங்குதா ழாச னத்து
முந்துற விருப்பக் கண்ட மொய்ம்புடை நிம்ப மாறன்
சுந்தரன் றனைநி னைந்து துதிசெயா தெதிர்சென் றேறி
யிந்திரன் பெரிய சிங்கா சனத்திடை யுடனி ருந்தான். (சு)

அரியபே ரவனி காக்கு மரசர்மூ வருந்தி ரண்டு
பரிவொடும் வருதற் கென்ன பாக்கியஞ் செய்தே மென்று
சுரர்பதி யதுகாட் டாமற் காரியம் வினவத் தோன்ற
வுரைசெய்வா ரவரின் முன்ன ரொளிவளர் சேரன் சோழன். (எ)

எங்கண்மா நிலங்க டம்மு ளெழிலிபெய் யாமல் யாரு
மங்குதல் கண்டி ரங்கி வந்தன மழையை வேண்டிச்
சங்குசெங் கமலஞ் சிந்தா மணிதரு சுரபி யுள்ள
பொங்கெழி லுடை னேயென் றினையன புகழ்ந்து சொன்னார். (அ)

மற்றவர் புகழா முன்னர் வாசவ னினிமை கூர்ந்தாண்
டுற்றெழு மழைக்கு லத்தை யழைத்திவ ரொளிசேர் நாடு
முற்றுநீர் தாழா தெய்தி முழங்கியின் னருள்சு ரந்து
பொற்பமர் புனலைச் சாலப் பொழியுமி னெனமொ ழிந்தான். (கூ)

வென்றிகொள் செழியன் குன்று மேதகு விழுப்ப மிக்க
தன்றலை மானங் காத்துத் தன்னுறு காரி யத்தை
யின்றுநா மொருவன் பாறருழ்ந் திரக்குமா றெங்ங னென்று
சென்றவ னுரையா னாகி யிருந்தனன் றிறமை பூண்டு. (க0)

ஆங்கது கண்டு வானோ ரதிபதி பொறாமை யெய்தி
வாங்கரு நலங்கள் செய்து மறறவாக் கனபு கூர்ந்து
தாங்குபொற் பூணு ரங்க டலமெலா மதிப்ப நலக
வோங்கிய துதியின் வாங்கி யாங்கவ ருவந்தார் பூண்டு. (கக)

---

சு. பொறையன் - சேரன். கிள்ளி - சோழன். நிம்பம் மாறன் - வேப்பமாலையையுடைய பாண்டியன். துதிசெயாது - (இந்திரனைத்) துதியாமல். உடன் - இந்திரன் கூட.

எ. அது - அம்மகிழ்ச்சியை. 'ஒளிவளர்சோழனும்' என்றார் முன்னும்; ௫.

அ. இச்செய்யுள் கருத்துடை யடையணி.

க0. மானம்: "மானிமாறன்", "மானம் வலிசேர்ந்தவாள் வழுதி" என்பர் பின்னும்; உஉ, ௫உ; "மானவருங் கலம்" (நாலடி. ச0) என்னுஞ்செய்யுள் இங்கே அறிதற்பாலது.

கக. அதுகண்டு - குறையிரவாமையைக் கண்டு. தலமெலாமதிப்ப - உலகத்தாரெல்லாரும் நன்குமதிக்க, உலகமெல்லாம் இதற்கு விலையாகு மென்று மதிக்க.

அலைவிலா நெஞ்ச மாற னடல்வலி யறிவா னெண்ணித்
தொலைவிலா [1]விமையோ ராலுஞ் சமக்கொணாக் கனமு டைத்தாய்
விலையில தாயெ வர்க்கும் வேதனை செய்ய வற்றா
யிலகுபன் மணியாற் பொங்கி யிருப்பதோ ரார மீந்தான். (கஉ)

சகமிழ் வெய்த வங்கட் டானது காணா முன்னர்
மிகவதி சயித்து வாங்கி மென்மலர் மாலை யென்னப்
பகையறப் பூண்டான் வென்றி யாயிர முகஞ்சேர் பாரத்
தொகுமணி தரும்பே ராரச் சொக்கனை யகத்துள் வைத்தே. (கங)

சேணுளார் மண்ணு ளார்கீழ்த் திசையுளா ரொருவ ராலும்
பூணொணா [2]மணிப்பே ராரம் பூண்டபே ராண்மை கண்டு
மாணுற வாழ்த்தி னார்கள் வாடிய முனிவர் வானோர்
நாணிய தேவர் கோனு நனிநயந் ததிச யித்தான். (கச)

நேர்வலி கண்டு கொண்டு நெஞ்சுறு வினைம றைத்துப்
பேரியன் மன்னா சாலப் பெரியையா யிருந்தாய் கூட
லாரின்மும் முலையாள் பெற்ற வுக்கிர குலத்து தித்த
வீரனீ யென்னுந் தன்மை கண்டன மெனவி யந்தான். (கரு)

வென்றியா லாரம் பூண்ட பாண்டிய னென்று மேன்மை
துன்றிய வழகான் மிக்க சுந்தர மாற னென்று
நன்றியி னோங்கு நாம நானில மீது னக்கே
யின்றுமுன னாவ ழங்கக் கடவவென் றிலங்கச் சொன்னான். (கசு)

வேறு.

தென்ன மன்னனுங் கண்டவன் செய்திபோற்
பின்ன மற்ற வுறவாற் பெருமையா
லுன்னை யொப்பா ரிலையென் றுயர்புற
மன்னு ளத்தொன் று வைத்துப் புகழ்ந்தனன். (கஎ)

வாய்ந்த கொற்ற மகவான் மழைக்குமுன்
சார்ந்த மூன்று முடிமன்னர் தம்மையுஞ்
சேர்ந்து நல்லன சொல்லிச் சிறந்தன
வீந்து போக விடுத்தாங் கிருந்தனன். (கஅ)

---

கஉ. வற்றாய - வல்லதாய்.

கங. ஆயிரமுகத்தையுடைய பாரம் - ஆதிசேடனாகிய ஆரம். இச்செய்யுள் கருத்துடையடையணி.

கச. கீழ்த்திசை - பாதாளம்; திசை - இடம்.

கரு. நேர்கண்டு - பிரத்தியக்ஷமாகக் கண்டு.

(பி - ம்.) [1]'விடும்பராலும்' [2]'விளைப்பேராரம்', 'விலைப்பேராரம்'

மற்றை மன்னவர் மாசறு மீனவன்
வெற்றி கண்டு [1]புகழலம் மீனவ
னுற்ற காலத் துதவுவ னுய்யவென்
சுற்ற மாகிய சுந்தர னென்றனன். (கூ)

பாரின் மன்னவர் தத்தம் பதியிடைச்
சாரு மன்பொடு சார்ந்தனர் சாருமுன்
சேர னாட்டினுஞ் செம்பிய னாட்டினு
நீர்கொண் மேக நிறையப் பொழிந்ததால். (உ0)

வேறு.

புன்மைதீர் சராச ரங்கள் பொலிவுடை யனவா யோங்கி
தென்முதற் [2]றுனி யங்க ளெங்கணு நிறைய மல்கி
மன்னிய மனித ரெல்லாம் வரவர மகிழ்ச்சி யெய்தி
கன்னய முடைய தத்தம் வேந்தரை நனிவி யந்தார். (உக)

*துங்கமா றனுஞ்சேய் [3]துர்க்கை தும்புரு வாதி போதன்
சங்கமால் கின்ன ராதி சனகாதி கணேசன் வியாழங்
கங்கைமா விதுவென் றேதனுங் கடவுட்டென் கயிலை யென்னுஞ்
சிங்கமா தங்க நீங்காத் திருப்பரங் குன்றைச் சார்ந்தான். (உஉ)

*தருமலி பரங்குன் றத்துச் சரவணப் பொய்கைப் பாரத்
தரசறு பன்னம் வீழ்ந்த தபபுறின மீனு மன்றிக்
கரையுறிற் பறவை யாகுங் கரையினன் னீரி னோர்கான்
மருவுமோர் பன்ன மீனின் பறவையின் வடிவா யிற்றே. (உ௩)

*ஒன்று[4]நீர் மிசையி ழுபப வான்மிசை யொன்றி ழுப்பக்
குன்றியாங் குழலுங் காலைக குழுகிய கீர னோர்ந்து
வென்றியின் விடாத தொன்றை விடுவிப்பான் முயன்று னின்ற
கன்றிய பிரம ராக்க தம்பிடித் தநுக முததே. (உச)

*அங்கது கொடுபோய்க் குன்றோர் முழைஞசினு ளடைத்துப் போகத்
தங்கிய துயரா றாது சரவண பவனென றன்பிற்
றுங்கமர் திரத்தை நூலகள சொன்னதீ தியிற்றியா னித்தோர்
கங்குலும் பகலு மோதக் கண்டருள் சுரந்தா னன்றே. (உரு)

---

கூ. மாசறு - இரத்தக் குற்றமற்ற. உற்ற - துன்பமுற்ற.

உக. "தென்முதற் றுனியங்க ளெங்கணு நிறையக் கண்ட" என்பர்பின்;கே.

உஉ. விது என்று - சந்திரனும் சூரியனும்,

உ௩. பாரம் - கரை. அரசு - அரசமரம். பன்னம்- இலை. அப்பு உறின் - நீரிற் பொருந்தினால்.

உரு. முழைஞ்சு - குகை.

* இவ்வடையாளமுள்ள செய்யுட்கள் சிலபிரதிகளில் இல்லை.

(பி - ம்.) [1]'மகிழ' [2]'பல்வளங்கள்' [3]'கன்னி' [4]'நீரிடை'

*தலமகிழ் தமிழ்க்கு நல்ல தண்டமிழ் முருகன் சென்று
நலமுறு கனவிற சொல்வா னற்றமிழ் முருக னம்பேர்
பலமிகு தமிழி னோலோர் பாட்டாறறுப் படையா நமமை
யுலகமென் றெடுத்துப் பாடென் றுள்ளுறை கொடுத்தா னன்றே. ()

வே று.

*உயர்வுற வுலக முவப்பவென் றெடுத்தாங் கொண்டமிழ்த் தண்டல முவப்ப, வியனுற வுரைப்பக் கேட்டலு மடைந்து வெற்பகந் திறக்கவேல் விட்டு, நயனொடு மெடுத்து வினை[1]கடீர்த் தருளு நன்னனை காட்டிநீ ராட்டி, யயிலுடை நம்மைக் கிழவனென் றனையென் றுலயத் தடைந்தனன் காண. (௨௭)

வே று.

* இனிதொர்கவி குன்றமெறிந் தாயெ னப்பி
னொன்றுமிளை யாயழகி யாயென் னுங்கான்
மனமகிழ்ந்தீ தியார்பகர்வா ரவர்க்கு வேண்டும்
வரங்கொடுப்போ மதுரையிறபோ கென்னப் போந்து
கனமலிசங் கத்துரைப்பக் கேட்டி யாருங்
களிகூர்ந்தார் தமிழ்முருக னருளை வாழ்த்திப்
பனுவறிரு முருகாற்றுப் படையென் றோங்கிற்
றெனநயந்து பாண்டியனென் செய்தா னென்றார். (௨௮)

வே று.

பாண்டியன் கந்தற் போற்றிப் பரமெனப் பரங்குன் றத்துப்
பூண்டபே ராரம் வைத்துப் போந்துய ரால யத்துங்
காண்டநா யகனே நின்ற னருளினு லடைந்தே னென்று
வேண்டியே துதிப்ப வாண்ட விமலனு மஞ்சே லென்றான். (௨௯)

---

௨௬. தண்டமிழ் முருகன - செந்தமிழ்ப பரமாசாரியராகிய முருகர். நம் பேர் முருகனென்பது.

௨௭. தமிழ்த்தண்டலம் - தமிழ்நாடு. "கிழவனென்றனை" என்பதைத் திருமுருகாற்றுப் படையின் இறுதியில, "பழமுதிர்சோலை மலைகிழவோனே" என்பதனாலுணர்க.

௨௮. 'குன்றமெறிந்தாய்' என்னுங்கவி வருமாறு: வெண்பா - "குன்ற மெறிந்தாய் குரைகடலிற சூர்தடிந்தாய், புன்றலைய பூதப் பொருபடையாய் - என்றும், இளையா யழகியா யேறூர்ந்தா னேறே, உளையாயென் னுள்ளத் துறை."

௨௯. பரமென - அடியேனைக்காத்தருளுவது உம்முடைய பாரமென்றுகூறி

(பி - ம்.) [1]'கடிதீர்த்தகன்'

வேறு.

சீத [1]மண்ட லக்கு லத்து தித்த நிதின் மன்னவ
னோது மண்ட லத்தர் மாரி யின்றி யுள்ளம் வாடியே
கோதை மண்ட லத்தி னுங்கு ணம்பொ ருந்து சென்னித
னீதி மண்ட லத்தி னும்ப ரந்து போவர் நித்தலும். (௧௦)

மூண்டம் வெம்ப நெஞ்ச நோவ மூர்ந்த வந்து தானியங்
கொண்டு வந்தி யாவ ருங்கு டிம்ப நீநி செயயமுன்
கண்டு [2]கண்டி ரங்கி நெஞ்ச மிஞ்ச நாணு கைதவன்
பண்டை வெந்தி றத்தி னாலி ருந்த னன்ப கர்ந்திலன். (௧௧)

வேறு.

பிறிவிலா வெறுப்பி வர்க்கிங் கிப்படிப் பிறங்கிற் றென்ன
வுறவுடை முனிவர் ஞான முனிவகே ளுணர வொண்ணு
மறையுரை பகர்ந்தா யந்த வரிசைமா மானி மாறன்
திறமொடு பின்னென் செய்தான் செப்பெனச் செப்பு வான்முன். ()

வேறு.

அந்த மன்னவ னட றபெரு வேட்டைவேட் டொருகாற்
சந்து மேவிய வரையினும் வனத்தினுஞ் சார்ந்து
சிந்தை யின்புறத் திண்டிறல விலங்குகா ணுமை
யுந்து வீரர்க டம்மொடு மெங்கணு முலாவி. (௧௩)

தக்க வேங்கைக டழைசெவிக் கயங்கள்சிங் கங்கண்
மிக்க மாக்கள்கான் மேதிகள் கரடிகள் கலைக
டொக்க மானினம் பன்றிக [3]டுவன்றிய சாரன்
மைக்கு லங்கள்சேர் மலயமாக் கிரியினை யடைந்தான். (௧௪)

வேறு.

வன்பெரு ஞாளி விட்டும் வார்வலை விட்டும் விட்ட
தன்கொடுங் கணையால் வாளாற சத்தியாற் பகைதெ மூர்ந்து
முன்பொரு மாக்க டம்மை முகத்திடை மனமுங் கண்ணு
மின்புற மலைந்தான் குன்ற மெங்கணுஞ் சூழ்ந்த தர்ந்து. (௧௫)

---

௧௦. சீதமண்டலகுலம் - சந்திரகுலம். கோதைமண்டலம் - சேரனுடு; கோதை - சேரன். சென்னிமண்டலம் - சோழநாடு.

௧௧. மூண்டம் வெம்ப - தலைபெரிய. பகர்ந்திலனுயிருந்தனன்.

௧௨. இவர்க்கு - இந்திரனுக்கும் பாண்டியனுக்கும்; 'வெறுப்பு' என்றது முதற்செய்யுளிற் கூறியதை. மானி மாறன - மானியாகிய பாண்டியன்.

௧௩. வரை - பக்கமலை.

௧௪. கயங்கள் - யானைகள். கான்மேதி - காட்டெருமை.

௧௫. சத்தி - வேல். முகத்திடை மலைந்தான்.

(பி - ம்.) 1 'மண்டிலக்' 2 'கண்டிறைஞ்சி மிஞ்சநெஞ்ச' 3 'துன்றிய'

[1] இத்தக வாற்சி றக்கு மெல்லெயி லிரவி யென்ன
லொத்தொளி மணிவி ரிக்கு முயர்ந்ததாள் வரைப்பு றத்துப்
பொய்த்திடா தென்று ஞசேரும் புட்கல மூன்று மின்னும்
வித்தக நான்கு மேக [2]வேந்தரை விளங்கக் கண்டான். (௪௬)

சொல்லரும் பரிவா லெந்தை சுந்தர னருளா லிந்தச்
செலவுய ரரசர் தம்மைக் கண்டன மென்று தேறி
நல்லசே வகரான் மூன்று நாட்டரு மதிச யிப்ப
[3] வொல்லெயி னவரை மெல்லப் பிடித்தன ருறுதி கூர்ந்து. (௪௭)

பிடித்தது நமக்கு வேட்டை வாய்த்ததின் றென்னப் பேசிச்
சடக்கெனப் போந்து கட்டித் தன்னுடை வினைஞ ராலே
துடிப்பற விலங்கு பூட்டித் துணிந்திருஞ் [4]சிறைவைத் தானவ்
விடப்பெயர் கட்டு நல்லூ ரிருஞ்சிறை யென்ப ரின்றும். (௪௮)

கண்டவர் விரைவிற் சென்று ககனநா யகனே யுன்றன்
றிண்டிற லெங்கே கண்டேஞ் சிக்கெனப் பிடித்துக் கட்டி
மண்டலத் திடையி ருக்கு மாறனென் றொருவன் கொண்மூ
விண்டலத் தரசர் தம்மை விலங்கிட்டான் கொம்போ யென்றார். ()

ஆங்கது கேளா முன்ன ரழல்விழித் தெழுந்து சீறி
யீங்கியா னிருப்ப வெண்ணு தொருநா னிருநி லத்துப்
பாங்குவா னரசர் தம்மைப் பருவிலங் கிடுவ தேயென்
றோங்கிய தானை யோடு மெழுந்தன னுயர்ந்த மண்ணில். (௫௦)

சூடுமா லைகட யங்கச் சுடர்விடு மகுட மோங்கச்
சேடுவான் முகடு மம்மச் சிறந்தது ரியங்க றங்க
நீடிய சேட ஞக நெளியமுப் பதது மூனறு
கோடிவா னவரும் வந்தார் குவலயத் திடைக்கொ தித்து. (௫௧)

ஒளிவளர் வீர மாற னும்பர்கோன் வரவு கேட்டுத்
தளர்விலபார் வேந்தர் மொய்ப்பத் தாளவெண் குடைநி ழற்ற

---

௪௬. தாளவரை - அடிமலை; பாதசைலமென்பர் வடநூலார்.

௪௭. பரிவால - அனபோடு. செல உயர் அரசர் - மேகங்களிலுயர்ந்த அரசர். அவரை - மேக வேந்தரை.

௪௮. சடக்கென - விரைவாக. துடிப்பற - அசைவற. கட்டுநல்லூர், இருஞ்சிறையென்னுமூர்கள், மானாமதுரை (வானரமதுரை)க்குச் சமீபமானவை.

௫௦. வானரசர்தம்மை - மேக அரசர்களை.

௫௧. ஒளி - உறங்காநிற்கவும் உலகங்காக்கின்ற அரசரது கடவுட்டன்மை; இதனை, "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகம்

(பி - ம்.) [1] 'இத்தகவ்வினி' [2] 'காதரை' [3] 'ஒல்லெயின்மெல்ல' [4] 'சிறையில் வைப்புவித்தினை'

வளவில்பல் லியங்க ளிங்க வடர்க்கெழு தானை [1]பொங்க
வளனெனும் பொருவான் [2]சென்றான் மதுரைவிட் டெதிரே பேசி.()

வியனுறு சிறப்பாற் பொங்கு மிருவகைத் தானை வெள்ளங்
[3]கயமுறு முழக்கத் தானுங் காகளச் சும்மை யானுஞ்
சயமுறு வீர ரங்கைத் தனுமணி யொலியி னானு
முயர்தரு கடைநாட் பொங்கு முததியிற் கலித்த வன்றே. (சங)

வாசவன் கண்டாண் டேடா வழுதியின் றெதிரே வந்தாய்
பூசல்செய் வதற்கோ நல்லை புரந்தரன் யான்காண் வேண்டா
வீசிய புகழ்கெ டாமன் மேகமன் னவரை விட்டுத்
தேசொடும் போபோ வென்று செப்பிவச் சிரம சைத்தான். (சச)

விருத்திரா சுரனைக் கொன்ற வென்றியா ரறியார் வென்றிப்
பொருப்பெலாஞ் சிறக ரிந்த புகழுடைப் பெரியோன் மண்மீ
துரைப்பின்மா னிடனீ யான்வா னுள்பவ னுன்னை வெல்லல்
பெருத்ததொன் றல்ல வென்று பேசினன் வாசி காட்டி. (சரு)

நரபதி யதுகே ளாமுன் னனிநகை செய்து நானு
துரைசெய்தா யெனக்கி ரண்டு கண்ணுனக் காயி ரங்கண்
பரிகரி தேரா ளீண்டும் படையினை வருத்தல் வேண்டா
விருவரும் [4]பொருவோ நந்த மிகல்வலி யறிவே மின்றே. (சசு)

தொண்டர்கள் பரவுங் கூடற் சொக்கனிங் கிருப்ப வேடா
வண்டர்கோ னேயு னக்கிங் கஞ்சுவா னொருவ னல்லேன்
மண்டலத் தெவருங் காண வலியவென் [5]வளையி னாலுன்
றிண்டிறன் முடிசி ளக்க வெற்றுத லிண்மை யென்றான். (சஎ)

இன்னன பேசிச் சிங்க மிரண்டுபோர் மூண்ட தென்னக்
கொன்னுற முழங்கி நீங்காக் கோடக வமர்செய் காலைப்
பொன்னுல காளு மன்னன் பொன்முடி சிந்த மண்ணாண்
மன்னவர் மன்னன் சேர்ந்து [6]வளையினா லுருத்த டித்தான். (சஅ)

---

காக்குமால்'' (சீவக. உசஅ), ''ஒளியோ டாழுகப்படும்'' (குறள். கஉஅ) என்பவற்றாலுணர்க. வீரமாறன் - வீரத்தையுடைய பாண்டியன்.

சங. தனுமணி - வில்லிற் கட்டிய மணி, ''ஏன வம்மணி யேழரை நாழிகை யாடிய தினிதன்றே'' (கம்ப. மூலபல உஉஅ.)

சச. நல்லை: இகழ்ச்சிக் குறிப்பு. 'புரந்தரன்' என்பதற்குப் பகைவருடைய ஊர்களை அழிப்பவனென்பது பொருள்.

சரு. வாசி - விசேடம்; வேறுபாடுமாம்.

சசு. 'உனக்காயிரங்கண்' என்றது இகழ்ச்சிக்குறிப்பு.

சஎ. வளை - ஒருவகையாயுதம். [டை. உருத்து - கோபித்து.

சஅ. கொன் - அச்சம். கோடக அமர் - குதிரைமேலேறிச் செய்யும் சண்

(பி - ம்.) [1]'இங்க' [2]'வந்தான்' [3]'கயனுற' [4]'பொருதகைநம்' [5]'வளைக்கையானுன்' [6]'வளைக்கையாலுருத்து'

கொத்தலர் முடியிற் சாடக் கோபம்விட் டமர ரோடுஞ்
சுத்தமா தவர்சூ ழெந்தை சுந்தரன் பரிந்தி ருக்கும்
வித்தகன் றனையார் வெல்வா ரென்றுவிண் ணவர்கோன் [1]போனான்
புத்தியாற் றனித்து வென்ற புரந்தனிச் சயம தென்பர். (௪௯)

பொருவரு மறிவான் மிக்க புகழுடைப் பெரியோ ரெல்லா
முறைசெய்வா ரதனை யானு முரைத்தன னுமக்கு மிக்க
வரனுளார் தேவ ரென்று மற்றவர் மனித ரென்றுந்
தெரிதர வேண்டா சத்தி தெய்விக மன்றோ காணின். (௫௦)

சோகநீ யுறேன்முற் சாப மெனநல்லோர் சொல்ல வாறி
மேகநா யகரை யொல்லை விடுவிப்பா னயங்கள் கூற
வாகைவேன் மாற னுக்கு வாசவன் றூழ வோலை
போகயாம் விடுவ மென்றே யெழுதுவான் பூண வோலை. (௫௧)

வேறு.

தேவர் கோனெழுது மோலை மானம்வலி சேர்ந்த வாள்வழுதி காண்கநல், லார்வ மேவுகுல மேக மன்னரைவி லங்கு விட்டருள்க வரவினென், சார்வு நாடுதழை வெய்த [2]நாண்மழைபொ ழிந்தி டக்கடவ தென்றுதன், காவன் மேவுமுயர் தூதர் பாணியுழை கட்டி யோலைவர விட்டனன். (௫௨)

வந்த வோலையி னியைந்த [3]பாசுரமி ருந்து கண்டுளம கிழ்ந்துபின்
முந்தை மன்னர்நெறி நீதி யாய்ந்துயர்மு கிற்கு லத்தலைவர் தங்களைப்
பந்த நீக்கிடவு ளத்து நன்கொடுபு ணைப்ப டும்பெரிய பண்புளா
ரிந்த நல்லவையு ளாரெ னக்கடிதெ ழுந்து முன்சிலரி றைஞ்சினர். ()

---

௪௯. பரிந்திருக்கும் - அன்புவைத்திருக்கப் பெற்ற; "அந்தத் தென்னவற் கன்பு பூண்ட, பொன்முடிச் சொக்கநாதன்" என்பர் பின்னும்; ௪௯. தனித்து வென்றதை, "இருவரும் பொருவோம்", "சிங்கமிரண்டுபோர்மூண்ட வென்ன" (௪௪, ௪௬) என்பவை வலியுறுத்துகின்றன. தனிச்சயமென்னுமூர் மதுரைக்கு மேற்கேயுள்ளது; திருப்புகழ்பெற்ற முருகக்கடவுளின் ஆலயமொன்று அதிலுண்டு; "பச்சிமத் திசைக்குளுத்த மத்தனிச்ச யத்தினிற் பிளைப்பெருமாளே" என்பது திருப்புகழ், ௬௨௦; இவ்வூர் ஐயக்கோட்டை தனிச்சயமெனவழங்கும்.

௫௦. மற்றவர் - மேன்மையில்லாதவர்.

௫௧. சாபம் - துருவாசமுனிவரிட்டசாபம்.

௫௨. இரவாமையால் மானத்தையும், வென்றமையால் வலியையும் உடையாய் என்பான் 'மானம் வலிசேர்ந்த வாள் வழுதி' என்றான்.

௫௩. புணை - ஈடு; இச்சொல் பிணையெனவும் வழங்கும்.

(பி - ம்.) [1]'போக' [2]'ஒண்மழை' [3]'பாயிரம்'

## வேறு.

பரிந்தது காணு முன்னோர் பாண்டியன் [1]சோழற் காய்ந்து
பெருங்கள வேள்வி செய்த பின்னைக் காட்டு நாட்டு
ளூரங்கொளே ழூர்க டம்மி லொருவனு முன்னெனன் றேறி
வரும்பெயர் தம்மைத் தள்ளிப் [2]புணைநின்றான் மண்ணிற் றேறி. ()

விரைவொடு மவன்றன் மாட்டு மேகமன் னவரை விட்டுப்
பரிவுசெய் யாமு னந்தப் பாண்டியன் பாண்டி நாட்டுக்
கருணைகூர்ந் தெழமு முங்கிக் காலங்க டோறும் பொய்யா
[3] தருண்மழை பொழியக் கண்ட வமரரு மதிச யித்தார். (ருரு)

றென்முதற் [4]றானி யங்க ளெங்கனு நிறையக் கண்ட
நன்மறை யோர்கண் மூன்று நானிலத் தெவரும் வாழ்ந்து
தென்னவன் றனையு மந்தத் தென்னவற் கன்பு பூண்ட
பொன்முடிச் சொக்க நாதன் றன்னையும் புகழ்ந்தார் போற்றி. (ருசு)

தொழுதுமுன் னெழுந்தா ரென்று துவரைநன் னாட்டிட் டோன்றிப்
பொழின்மிசை நம்மைத் தேறிப் புணைநின்றா னன்று டென்றாங்
கெழில்கொ ளூன்றிப் பெய்யு மிருங்கள வேள்வி நாட்டு
மொழிகுவ ரவனூர் [5]நாமுன் னெனலிறு முன்னூரென்றே. (ருஎ)

[6] வந்திருந் தாரம் பூண்டு மலைவலி தொலைத்த வென்றி
யிந்திரன் முடிமேன் மிக்க வினவளை புடைத்து மற்றைக
கந்தர வரசர் தடமைக் கனவிலங் கிடவுங் கண்டு
ரெந்தையை நினைவார் தங்கட் கியாதுசெய் திடவொண் ணாதால். ()

ஆகத்திருவிருத்தம் - கஉஎக.

---

ருச. ஒருவன் நாமுன்னென் றேறிப் புணைநின்றானென்க. 'வரும்பெயர்' என்றது, துவரை நாட்டாரை. காட்டு நாடென்பது பாண்டிவள நாட்டிலுள்ள சிறநாடுகளில் ஒன்று; இது களவேள்வி நாடெனவுங்கூறப்படும்; ருஎ. இளையடு மூவரையன்வண்ணத்தற் டாராட்டப்பெற்றுள்ளது. மதுரைக்குக்கிழக்கே யுள்ள வீரசோழ னெனனுமூர் இதன்கணணதென்று தெரிகின்றது; ஏழூர்கள் மேகத்துக்குப்புணைகொடுத்த உபகாரிகளுடைய ஊர்கள்; இவற்றுள் நாமுனூ ரென்பது ஒன்று.

ருரு. 'கருணைவான்' என்பது மரபாதலின் 'அருண்மழை' என்றார்.

ருஅ. பூண்டு புடைத்து விலங்கிடவென்க.

(பி - ம்.) 1'சோழ்' 2'பிணை' 3'அருமழை' 4 'பல்வளன்கள்' 5'நாமுன்னூ ரெனவின்றமுன்னோர்' 6'வந்திகலாரம்'

## ௪௫.—பொன்னனையாளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.*

தென்னவனாட் டினியமனோ கரமாந் தொல்லைத் தென்றிருப்பூ
வணநகர்வாழ் பதியி லாரிற், பொன்னனையா ளென்பாளோர் பூவை
யாடற் பூவையர்தந் திலகமத வேள்பண் டார, மன்னியநா முகர்கொ
டுக்கும் பொருளனைத்தும் வருந்தொண்டர்க் கறுசுவையி னமுதுசெய்
வித், தின்னல்கெட முன்னொருநா ளிருக்கு நாளி லிறைவனுருத்
தாபிப்பா னெண்ணி னாளால். (௧)

நித்தனரு ளானமது நினைவிந் தொல்லை நிறைவுறுமென் [1]றுறுதி
பட நினைந்து கொண்டு, சித்தம்[2]வருஞ் சிற்பர்களான் மெழுகு சாத்தி
யிருந்தவ டான் வரும்பொருள்கள் சிவனை நீங்காப், பத்தருயர் பூச
னைக்கே போதி னல்லாற் பரமனுக்குப் போதுகின்ற தில்லை யென்று,
[3] புத்தியழுங் குறநாளுங் கண்டி ரங்கிப் புகழ்ச்சொக்க னருட்சித்த
னாகி வந்தான். (௨)

வேறு.

மனையிடை யமுது செய்வான் [4]வந்தவொண் டொண்டர் நாப்பண்
டினியுற வணைந்த சித்தன் றொண்டரைப் பூசை செய்வான்
றனவட வரைசு மந்து தனியிடை யிடைய வந்த
வனநடை மாதை நோக்கி யருள்பட முறுவல் கூர்ந்தான். (௩)

ஆங்கவ டானுந் தன்க ணணையமேல் வைத்த கண்ணி
னீங்கருங் கருணை கண்டெட் புகுந்தன ணிறைவு செய்தே
பூங்[5]கழற் றொண்டர் துய்த்துப் போகவும் போகா னாகி
யோங்குகூ டத்தி ருந்தா னுயர்ந்த[6]மாத் திரைக்கோ லூன்றி. (௪)

தேற்றுதா தியர்கள் கண்டு சென்றுநா யகியே யாரும்
போற்றவீற் றிருந்த சித்தர் போயினா ரில்லை யென்ன
வேற்றருங் கண்ணாண் மிக்க [7]விருப்பொடுஞ் சார்ந்தி றைஞ்சிச்
சாற்றுவா ளிறைவன் றானே வறிகிலேன் நமியே [8]னென்றாள். (௫)

---

௧. பதியிலார் - உருத்திரகணிகைமார்; "உருத்திர கணிகைமாராம், பதியிலார்" (பெரிய. தடுத்தாட். ௧௩௧.) இறைவன் - திருப்பூவண முடையார்.

௨. பரமனுக்கு - சிவபெருமான திருவுருவமைத்தற்கு. நாளும் புத்தி அழுங்குற.

௩. தனி - பொன்னனையாளுடைய தன்பம்:௧௦. ௪. துய்த்து-உண்டு.

* "பூவண மதனிற் பொலிந்திருந் தருளித், தூவணமேனி காட்டிய தொன்மையும்" (திருவா. கீர்த்தி. ௫௦ - ௫௧.)

(பி - ம்.) 1'அறுதிபட' 2'முறுவற்பியான்' 3'புத்தியழுங்குதல்கண்டன் றரக்கமிக்க புகழ்' 4'வந்தசித்தன்' 5'கழற் றொண்டர் வந்து' 6'மாத்திரையு மூன்றி' 7'வியப்பொடும்' 8'னும்மை'

கொல்லுமை நீல வொண்கட் கொவ்வையஞ் செவ்வாய் மாதே
நல்லணி மெய்வி ளங்க நாசிகா [1]பரண மாகச்
சொல்லருங் குன்றி தேடிச் [2]சூடிய தென்னை யென்ன
வல்லிவாய் புதைத்தி மைப்பிற் றொழுமகிழ்ந் துயர்முத் தென்றான். ()

கண்ணிலா னென்ப துண்மை காமனைப் [3]பெரிய நீரு
மெண்ணிலா வென்னை யெண்ணா தென்னபுண் ணியஞ்செய் தேன்மற்
றண்ணிய கரும மில்லை யடியவர் கரும மல்லா
லுண்ணிறை விருப்பிற் றுழா துள்ளமுந் தருளு மென்றாள். (எ)

நற்றவன் கண்டு மெல்ல நகைத்துமா னிகர்த்த மாதே
முற்றிய பத்தி யுள்ளார் கண்டில முனைப்போன் முன்னர்
மற்றுநின் வருத்தங் கேட்டே மதுரையி னின்று வந்தேங்
கொற்றரு மிருப்பு முட்டு முட்டறக் கொடுவா வென்றான். (அ)

கேட்குமுன் [4]பழைய வாள்வேல் கிடந்தபே ராசு சிரா
வீட்டிநீள் கொழுக்கு டார மினையம்வன் டுபெகொ ணர்ந்து
காட்டவோர் மருந்து பூசிக் கரத்தினாற் பரிசஞ் செய்து
கூட்டின னயங்கள் கூரக் கூறுவான் றேற வாங்கு. (கூ)

மெந்திய தழலிற் [5]றாழச் செருகிவை விடியு முன்னம்
பத்துமாற் றினிற்சி றந்த பசும்பொனா மெழுகு பூண்ட
வுத்தம நாய னாரை யுயர்ந்தசெங் கனகங் கொண்டே
சித்திர மாவ மைத்துக் கும்பிடன் றுயரந் தீர. (கo)

---

கூ. நாசிகாபரணம் - மூக்கணி. குன்றி - குன்றிமணி. இமைப்பு - இமைமூடல். இவள் மூக்கணியாகியமுத்து, கண்ணொளியால் மேற்பாற் கருமையையும் வாயொளியாற் கீழ்ப்பாற் செம்மையையும் பெற்றுத் தோன்றினமையின், குன்றி யென்றும், வாயைப் புதைத்துக் கண்ணை மூடிக்கொண்டு இவள் அஞ்சலித்த பொழுது அது முத்தென்றும் நினைக்கப்பெற்றது; "இவண் மூக்கணிமுத் திதழொளியாற் பெற்ற, துவண் பதுமராகத் தோற்றம்" என்பர் (அணிநூல்.)

எ. காமனைக்கண்ணிலா னென்பது உண்மை யென்க; 'காமனுக்குக்கண்ணில்லை' என்பது ஒருபழமொழி. எண்ணிலா என்னை - அழகுடையவர்கள் வரிசையிற் சேராத என்னை. நீரும் எண்ணாதென்க; சித்தர்தன்னை விரும்பியதாகக் கருதி இதுகூறினள்.

அ. கொல்லரும் இருப்புமுட்டு - கொல்லர்களால் செய்து தரப்பெற்ற இரும்பாலாகிய பொருள்கள்.

கூ. ஆசு - கவசம். சிரா - தலைச்சீரா. மருந்து - பச்சிலை.

கo. நாயனாரை - சோமாஸ்கந்தரை; "நாயகர்" என்பர்பின்னும்; கஎ.

(பி - ம்.) [1] 'பரணம்பொல்லாச்' [2] 'சூட்டுமோவென்னக்கண்ட' [3] 'பெரிய தோன்றுவெண்ணிலா' [4] 'பணையவாளவேல', 'மழையவாள்வேல' [5] 'சூழச்செரு கிடு', 'செருகிவை'

என்றது மேத நீங்கி யின்றிரா விங்குத் தங்கி
வென்றிகொ ளாய னீரே விடிந்தெழுந் தருளு மென்ன
வொன்றவஞ் சினர்போ லின்று நன்றுநன் றுரைத்த தென்று
[1] சென்றவன் விசும்பிற் காண மறைந்தனன் சித்தனெ ழுந்து. (௧௧)

உயர்தரு சித்தர் கைவிட் டொளித்தன ரென்று சால
வயருவாள் விரைவிற் [2]கூட்டி யறைந்தவா றடைவிற் செய்யப்
[3] புயறவழ் மேரு வென்னப் பொன்னிருங் குவையைக் கண்டா
ளயனுற வதிச யித்தாள் விடியுமு [4]னடிதமைத் தூர்ந்தே. (௧௨)

வேறு.

அந்த ணாளர் [5]தபதிய ராங்கது
வந்து கண்டு மனமகிழ்ந் தன்பர்கள்
சிந்தை யாகுலந் தீர்க்கவல் லானருட்
சுந்த ரன்னல துண்டோ வெனச்சொனார். (௧௩)

காய்ந்த செங்கன கங்கொடு காமுற
வேய்ந்த நாயகர் மேனி யமைத்துயர்
வாய்ந்த வாகம மந்திரத் தானெறி
சேர்ந்த நல்லபி டேகமுஞ் செய்தனள். (௧௪)

வேறு.

பணிபல ளழகு கண்டே பரவுமெம் பெருமா னுக்கிங்
கணிபொலி வடிவ மச்சோ வழகிய வாவென் றன்பி
னிணையிலா வருங்க போலத் துருகையான் மாறி யள்ளித்
தணிவற முத்த முண்டாள் சம்புவி னருளை வாழ்த்தி. (௧௫)

அள்ளியுண் டிடக்கு ழைந்த வங்குலிச் சுவடு கண்டே
தெள்ளுமெய் யர்க்கு மெய்யன் சுவணலா லுண்டோ வென்று
வள்ளலை யன்பு பூண்ட வல்லியை வியந்தா யாரு
மொள்ளிழை விழாவுங் கறங்கத் துரியன சிறக்கச் செய்தாள். (௧௬)

மணமலி பெருமாற் கச்சோ வழகிய தெனலான் மண்மீ
தணிதிரு நாம மின்ற தழகிய பெருமா னென்றே
யுணர்வுளா ளுளஞ் சித்தர் சித்தரென் [6]றொழியா ளாகி
பிணையிலா வடிவத் தோய [7]மேகினள் சிவலோ கத்து. (௧௭)

---

௧௧. நாயனீரே - தலைவரே.   ௧௩. தபதியர் - ஸ்தபதியர்.

௧௫. அச்சோவழகியவா; ௧௫. கபோலம் - கன்னம்.

௧௬. அங்குலிச்சுவடு - விரற்றழும்பு.

௧௭. வடிவமழகியதென ஒருசொல் வருவிக்க; ௧௫-ஆம் செய்யுளைப்பார்க்க. அழகிய பெருமானென்பது, திருப்பூவணமுடைய நாயகரது திருநாமம்.

(பி - ம்.) [1]'சென்றுவாழ்' [2]'கூடி' [3]'புயல்வரை' [4]'கடித்தாள்வாழ்த்தி', [5]'யெத்தெழுந்தே' [5]'தபத்திய', 'அதிபதியாங்கது' [6]'லையாளாகி' [7]'ஏகினன்'.

அற்புதன் மேனி கும்பிட் டருளினோர் கணிகை மாதும்
பொற்சிவ லோகத் தியாரும் போற்றவீற் றிருப்பக் கண்டு
ஏற்றரும் பிரமா ணத்தோ டியாவரா யினும்பி றைஞ்சி
னற்சிவ லோகத [1]தின்று நணுகுதற் கைய மின்றே. (கஎ)

ஆகத் திருவிருத்தம் - கஉஅக.

---

## சஉ.—சோழனைக் கொண்டாழியிற்றாழ்த்த திருவிளையாடல்.*

முந்தையோர் காலத் தின்கண் முதுவலித் திறத்தோர் சோழ
னந்தமில படையான் மிஞ்சி யாயிரம் பரிக்கி யானோர்
வெந்திறற் பரியா ளென்று விளம்பியோர் நாமம் பூண்டு
[2] சந்தமா மறைக்கன் பின்றி வாழ்ந்தனன் றனைவி யந்து. (க)

வேறு.

ஆங்கவன் றிசைவிச யஞ்செய யாதர
நீங்கரும் பெருவிளை யாட்டி னெஞ்சுவைத்
தோங்குமுத் திசைமுடி வுலாவி மீண்டியற்
றேங்கிய பெரியதென் றிசையை நோக்கினன். (உ)

மன்னவர் மன்னவன் மாசி றேசுடைக்
கன்னிநன் [3]னாட்டில்வாழ் கருணைத் தென்னவன்
றன்னைமுன் வெல்லுவான் றானை யொடுசூழ்
பொன்மனையின் மதுராபுரத்தை நண்ணினன். (ங)

---

கஎ. பிரமாணம் - ஆஸ்திகபுத்தி; சக: ஙக.

(சஉ)

க. மிஞ்சி - மிகுத்து. ஆயிரம்பரிக்கு-ஆயிரம் குதிரைவீரருக்கு. பரியாள்-குதிரை வீரன். சந்தம் - சந்தஸ்.

உ. திசைவிசயம் - திக்குவிசயம். முத்திசை: தெற்கல்லாதன. இயல் - இலக்கணம்.

* "வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு, காடது தன்னிற் கரந்த கள்ளமும்" (திருவா. கீர்த்தி. சஎ - ௯); "மணிமுடி வேடுப பஞ்சவற் பொருத, ஒளியுடை யிளையுடை வார்படை காவலுர, திண்மையுரு மெசருக்குத் தேற்றமும் பொன்றட, வெரிவா யுரக ரிருளுட் டுருவக, கொலைகொண் டாழி குதிபுடன் படைத்து, மற்றுய புதைத்த மதவேழ்ப் பெருமான்" (கல். அரு.)

(பி - ம்.) 1 'அவர்யைத யாவையு முடிததே' 2 'சந்தையாமறைக்' 3 'னாடு'

வேறு.

மற்றவ னணைய விப்பால் வழுதிவாழ் சொக்கன் மாட்டுப்
பற்றிய பத்தி பூண்டு படையினை நிந்தை செய்தே
யுற்றகா லத்துத் தெய்வ மலாதிலை யுதவி யென்று
நற்றவர் சொல்வா ரென்று நவின்றுளத் துணர்ந்து தேறி. (௪)

புரவியா யிரமி யானை நூறுபோர் புரியும் வீர
ரொருபதி னாயி ரந்தே ருற்றன வமையு முண்மைக்
கரியனீ டுலகாள் வேந்தர்க் கீதொழிற் றளவில் சேனை
பெருமைகா ரணம தன்றாற் பிறிதுவே றிலை காணின். (௫)

ஈதொழிற் றெமக்கு மிக்க விரும்படை யாருந் தற்கோ
ராதர மில்லை நெஞ்ச மமைவுடைத் தான தொண்பூ
மீதினிச் சேனை கொண்டே வெல்லரும் பகையும் வெல்வே
[1] மேதகுஞ் சொக்குண் டாக வேணுமோ வுயர்ந்த தானை. (௬)

மன்னுநம் மறையுட் பட்ட [2]வான்பொரு டன்னை நோக்கி
மின்னுமிப் படைவா டாமல் வேண்டுப விட்டு நின்ற
பொன்னைநஞ் சொக்க னுக்கும் பூசுரர் தமக்கு மிக்க
வின்னருட் டொண்டர் கட்கு மீயுமி னிரங்க லென்றே. (௭)

இத்தக வமைச்சர் தங்கட் கியம்பவாங் கவர்க டம்முட்
சித்தநன் குறுதி யைந்தார் சிலர்சில ரியைந்தா ரில்லை
பத்திசேர் நிலைமை யோடிப் பகுதியி னடத்திக் கொண்டாங்
கொத்தவெம் படையி னோடு மிருந்தன னுவப்புண் டாக. (அ)

இந்நெறி யிருப்போன் [3]றன்மே விகலஞ்செய்வா னடைந்த சென்னி
தன்னுடை வலியும் வெற்றித் தலம்புகழ் விருது மிக்க
துன்னிய [4]படையும் வலவ சூழச்சியுங் கேட்டுச் சற்றுந்
தன்னுள மிளைத்தா னில்லை சங்கர னமக்குண் டென்று. (௯)

வேறு.

உன்னரு மிறைவனுக் குணர்த்து வேமென
[5] மின்னமர் கோபுர மிண்ட லத்தமர்
பொன்னெயி லாலயத் தணைந்து பொங்கருண்
மன்னிய சொக்கனை வணங்கிச் சொல்லுவான். (௧௦)

---

௪. உற்றகாலத்து - ஆபத்துவந்தகாலத்தில்; 'ஆபத்திற்குத் தெய்வமே துணை' என்பது ஒருபழமொழி.

௫. அமையும் - போதும். ௬. பூ - பூமி. உயர்ந்த - மிக்க.

௭. அறை - பொன்னறை. நின்ற பொன் - எஞ்சிய பொன். இரங்கல் - இரங்கற்க; வியங்கோள்.

௯. சென்னி - சோழன். சங்கரன் - சுகத்தைச் செய்பவர்.

(பி - ம்.) [1]'ஓதருஞ்' [2]'வண்பொரு' [3]'றன்கண்' [4]'வலியும்' [5]'மின்னுமி'

வேறு.

புக்கவா யிரம்ப ரிக்கோர் புரவியா ளவனை மக்கோ
மிக்கவா யிரம தல்லா வில்லைவெம் புரங்க டந்த
சொக்கனே யடிமை செய்யுங் காரிய மருள்செய் தோன்றத்
திக்கெலாம் வென்று நம்மேற் செம்பிய னடைந்தா னென்றான். (கக)

விரிவுடைப் பகைவன் வெய்ய படையையும் விளங்க முன்ன
மொருதனக் குள்ள வைய படையையு முள்ளவாறும்
பொருவிலா னுண்ணி னைத்துப் [1]புறம்புடைத் தீர னாகி
புரைசெயக் கண்டு விண்மீ துரைசெய்வா னன்பர்க் கன்பன். (கஉ)

மனாநல முடைய பத்தி வழுதியே யுனக்கே நல்லை
மினியநம் முறைமைத் தேரி யிளைக்கிடா தெதிர்சென் றேறி
நினைதுறு படையி னோடு மமர்செய்நீ டுலக வேந்த
ரனைவரு மெச்ச [2]வென்றி தருதுவ மைய மின்றே. (கங)

விரைவொடு மென்னு முன்னம் வேந்தனு மிதமெ ழுந்து
பெரியவ னன்பர்க் கன்பன் பேரருட் டிருவாக் கென்றே
தருமநீ டுரையைச் சேலைத் தலைமிசை முடிந்து கொண்டு
பொருவருந் துதியி னேத்திப் போந்துதன் கோயில் [3]புக்கான். (கச)

வேறு.

மற்ற வன்செய லின்ன தன்மையின் மன்ன வைந்துதி னத்தியா
முத்தி [4]வெஞ்சமர் செய்வ மென்றுமொ ழிந்து முன்னம டைந்தவக்
கொற்ற வன்றறு கட்பெ ரும்படை கொண்டு மண்டல மசையவே
வெற்றி மாமுர செற்றி யநகண டார்ந்து வந்தனன் மேலெழ. (கரு)

வளமை யோங்கிய செழிய னங்கது கண்டு [5]மாறற நீறிடா
வுளந யந்தெதிர் சென்ற ணிந்தன னும்பர் நாதனை நம்பியே
களம்வி ரும்பிய பின்ன ரன்புறு காவ லன்சிறு தானையு
மனவில் வெம்படை யாய்வி ளங்கிய தப்பெ ரும்படை தன்னினும்.()

---

கக. புரவியாள அவன் - புரவியரன் அச்சோழன். அடிமை - அடியேன். செம்பியன் - சோழன்.

கஉ. ஐய - சிறிய. புறம்புடைத்தீரனாகி - வெளியே தைரியமுடையவனுகப் புலப்படுத்தி. "அன்பர்க்கன்பன்": எச.

கச. ஆலித்து - முழங்கி. உரையைச் சேலைத்தலைமிசை முடிந்து கொண்டு - ஆகாயவாணியை ஆடையின் தலைப்பில் முடிந்து கொண்டு; இங்ஙனம் செய்தல் மரபு.

கசு. நீறிடா - திருநீறிட்டு. அணிந்தனன் - சேனையை வகுத்தனன். களம் - போர்க்களம். அப்பெரும்படை - சோழன்படை.

(பி - ம்.) 1'புறம்பிடைத்' 2 'வென்றுதருகுவல' 3 'சேர்ந்தான்' 4 'வெம்பகை' 5 'மாசற'

வே று.

வெந்திறல் பேசி யங்கண் மேவரும் வினைக்க ளத்து
வந்தமர் செய்யுங் காலை மாறனார் சிறுதா னைக்குச்
சுந்தர னருளால் வெய்ய தொலைவிலா வலிய தானை
முந்துற வாற்ற தாகி முதுகிட்ட தமர்விட் டாங்கு. (௧௭)

என்னுடை விருதை வையத் தியாரறி யார்கொ லென்று
மின்னெழ விழித்து மூல பலத்தொடும் வெகுண்டு கிள்ளி
முன்னெதிர் நடப்பக் கண்டு மொழிந்தது கொண்டெ திர்ந்தே
யென்னையா ளுடையா யென்னைப் பொறுத்தில னெங்கு முள்ளான்.()

வே று.

திருந்தியபொற் பீலிமுடி முடியிற் சாத்தித் திங்களென வெண்ணீற்றுத் திலக மிட்டுச், கருங்களத்து வெண்சவடித் தாமஞ் சேர்த்துக் [1]காதின்க ணிபமருப்புத் தோடு பெய்து, மருங்கெங்கு மயிற்கழுத்து நாற்றி வேங்கை வரித்தண்டை யுத்தரியம் விளங்க மார்பிற், றருங்கவன மாவேறி நெடுவேலை வாங்கித தந்தமணித் தொடைபிறங்கத் தாண்ட விட்டான். (௧௯)

வே று.

விரைவின்வெங் களத்துத் தோன்றி வேட்டுவப் பரியா ளாகித்
திரள்கொளா யிரம்ப ரிக்கோர் திண்டிறற் குதிரை யாணி
குரைகழ லபயா நூறு குதிரைக்கோர் குதிரை யாள்யான்
[2]பொருவது நினக்கு நன்றே புகலென [3]நகைத்தெ திர்ந்தான். (௨௦)

வே று.

சாற்றரு மிடும்பையன் றனைம றைத்துயர்
வேற்றருஞ் செழியன்யா னென்ன வெய்யகால்
போற்றிகழ் கோரமா முகத்துப் போயப்புகக்
கூற்றென வெறிந்தனன் கொடிய வேலினை. (௨௧)

---

௧௭. வினை - போர்.

௧௮. மூலபலம் - மூலப்படை. கிள்ளி-சோழன். 'எதிர்ந்தேன், என்னை யாளுடையாய்' என்றது, பாண்டியன் வார்த்தை.

௧௯. பீலிமுடி - பீலிததொகுதி. களம் - கழுத்து. சவடித்தாமம் - பல சரமாலை. இபமருப்புததோடு - யானைக் கொம்பாற் செய்ததோடு. மயிற் கழுத்து - மயிற்கழுததாலாகிய கோவை. வேங்கை வரிததண்டை உத்தரீயம்- வேங்கைத்தோலாகிய கோடுகளையும் வாலையுமுடைய மேற்போர்வை; தண்டை- வால். தந்தமணித்தொடை - யானைத்தந்தத்தாலாகிய மணிகளையுடையமாலை. மார்பிற் பிறங்கவென்க. "மார்பிற் சிறந்த மணிததிரண மாலைதாழ" (பெரிய. கண்ணப்ப. ௯௦.) வாங்கி - கைக்கொண்டு. [சோழா.

௨௦. வேட்டுவப் பரியாள் - வேடராகிய குதிரைச் சேவகர். அபயா -

௨௧. இடும்பையன்றனை மறைத்து - துன்பத்தையுடைய பாண்டியனைப் புறத்தே தோன்றாமற் செய்து. செழியன் யான் என்ன - யானே பாண்டியன் என்று. கால் - காற்று. கோரம் - சோழன் குதிரை.

(பி - ம்.) [1]'காதின்கணணிமருப்பு' [2]'பொருவரு' [3]'அறைந்தெதிர்'

வேறு.

கூசமுன் விட்ட வேல்வாய்க் குருதிகொப் புளிப்பக் கண்ட
வாசையான் வளவ னண்ணி யவனிமீ தொருவ னென்முன்
பூசலென் றெதிர்க்க மாட்டான் புகுமிடம் புகுந்து சேர்ந்து
வாசியோ டென்னை நாடிப் பிடிப்பன்மா வேந்தர் மெச்ச. (உஉ)

விளங்கயா னெனவி ளம்பி மேல்விட வென்றிச் சொக்கன்
றளர்ந்தவர் போன டித்துத் தளர்ந்தமன் னனைமுன் போக்கிக்
களந்தனை விட்டுவிட்டுக் கடிதுவெண் ணிட்டுக் காணத்
துளங்குமா வோடும் போகத் தொடங்கினான் மதுரை நோக்கி. (உ௩)

தாதகித் தெரியன் மார்பன் றன்விதி வசத்தா லின்று
தீதில்வேற் றுருவங் கொண்டு தென்னவன் புறமிட் டானென்
றூதரித் தவனி கொள்ளா வடுபடை வெள்ளத் தோடுந்
தாய்தரு சிங்க நாதஞ் செய்துபின் றொடர்ந் துற்றான். (உ௪)

வம்பவி ழிதழிச் சொக்கன் வன்கனை வட்டத் தூங்க
வெம்பரி காட்டிக் காட்டி விளிவுறக் கொண்டு போந்து
[1]நம்புறு நகருண் மேல்பா லாகமீ தளவுந் [2]தாழ்ந்து
பம்புறு மலர்த்த டத்துட் பாய்ந்தன னபயன் காண. (உ௫)

சுந்தர னகைமி னோடுந் தூண்டிவெம் பரிமா வோடும்
வந்துபாய் வதன்முன் றீரத் தேறினான் வருத்த மின்றி
வெந்திறற் சோழன் செல்லும் விசையினிற் குதைதாங் காம
லந்தவொண் டடத்துப் பாய்ந்தா னெறிநெறி னில்லை யாழ்ந்தான். (உ௬)

பண்டாழு மொழியாள் பங்கன் பத்தர்கள் பகதன் மண்ணிற்
கண்டார்க ளதிச யிப்பக் கடறபெருஞ் [3]சேனை யோடுந்
தண்டாம வளவன் றன்னைத் தாழ்த்திட வன்று முன்றைக்
கொண்டாழி யென்னு நாமம் பெறறது குடபா லோடை. (உ௭)

---

உஉ. ஆசை - விருப்பம், திகரு. வாசி - குதிரை.

உ௩. மேல்விட - மேலே குதிரையைச் செலுத்த.

உ௪. தாதகித் தெரியல மார்பன் - ஆத்திமாலையை யணிந்த மார்பையுடைய சோழன். சிங்கநாதம் - சிங்க முழக்கம்போன்ற முழக்கம்; வில்லி பாரதம், வாரணாவத. சுக.

உ௫. இதழி - கொன்றை. கனவட்டம் - பாண்டியன் குதிரை. விளிவுற - அவமானம் அதிகரிக்க. மேல்பால - மேற்றிசையில. நாகம் - நாகருலகம்.

உ௬. வருத்த மின்றித தீரத்து ஏறினான்; தீரம் - கரை.

உ௭. கொண்டாழி: கொண்டு தன்னுடை சோழன முதலியோரை ஆழ்த்தினமையால், இவ்வோடை இப்பெயர் பெற்றது; "மலையடுத்து வேட்டுப பருந்தவத் பொருத இன்னியும் இனையும் இளர்படை நான்குடன், திண்மையுஞ் செருக்குந் தேற் றமும்பொன்றிடஎரிவா யுரக ரிருளுடை யுலக, மெகாலகவெகாண டாழி குறியுடன் படைத்து மறியப் புதைத்த மறவிகழு பெருமான்" (கல்லாடம், அ௯.)

(பி-ம்.) [1]'நம்பெரு' [2]'தாழ்ந்த வம்புறு' [3]'படையினோடும்'

வேறு.

துன்று பல்படைச் சோழனை யாழ்த்திய
கொன்றை மாலைக் குதிரை [1]யிராவுத்தன்
வென்றி நீள்குரல் காட்டி விளங்குபொன்
மன்று ளாலயம் புக்கு மறைந்தனன். (உஅ)

ஒளித்த சென்னிமற் றுய்ந்த படையினைக்
களித்த மன்னவன் கைக்கொண்டு காத்துயி
ரளித்த நாதவென் றாலயத் தெய்தியே
விளித்துக் காட்டினன் மெச்சவ மைச்சர்கள். (உகூ)

வேறு.

மின்னுயிர் கோயின் முற்றும் விளங்குசெம் பொன்னான் மேய்ந்து
பொன்முடி யாடை மற்றும் பூடண முதலா நல்கித்
தென்னவர் கிளைக்கு நல்ல செல்வனே யுய்ந்தே னென்று
பன்முறை யிறைஞ்சி யேத்திப் போந்தனன் பரிவிற் கூடி. (நூ0)

ஓதரும் பிரமா ணத்தோர்க் கேதுசெய் திடவொண் ணாது
வேதநன் னெறிகோ டாமல் வழுவின்றி விளங்க நாளு
[2]மாதரஞ் செய்வோர்க் கேது சாதிப்ப வரிதி ரண்டு
ளேதுமொன் றிலாதா ரன்றோ விடுக்கணுக் கிரையே யாவார். (நூக)

தொழுதுதே வர்க்குத் தேவன் சொக்கனை யல்லா லில்லை
பழுதின்மன் னவர்க்கு மன்னன் பாண்டிய னல்லா லில்லை
யழிகலி யுகத்துங் காணி லறுதியீ தென்று கொண்டு
விழுமிய மனித ரெல்லாம் வியந்தன ரெங்கு மென்றும். (நூஉ)

ஆகத்திருவிருத்தம் - கநூஉக.

---

உஅ. குதிரை இராவுத்தன் - குதிரைத்தலைவன்.

உகூ. விளித்து - அழைத்து. ஆலயத்து எய்தி, 'உயிரளித்த நாத' என்று விளித்துக் காட்டினனென இயைக்க.

நூ0. பூடணம் - ஆபரணம்.

நூக. பிரமாணத்தோர் - ஆஸ்திகர். இச்செய்யுள், பாண்டியனது வெற்றிக்கும், சோழனுடைய கேட்டிற்கும் காரணங்கூறியது.

(பி - ம்.) [1] 'இராகுத்தன்' [2] 'ஆதரவுடையோர்க்கேது சாதிப்பதரிது வைபத்து

# சஎ.—திருவாலவாயான திருவிளையாடல்.*

முன்னமோர் பிரம கற்ப முடிவினின் முடிவி லாத
செங்கிறப் பரிதி விட்ட திக்கிர ணங்க ளானும்
மின்னிடி மேகம் விட்ட வெங்கொடுந் துளியி னானுந்
தன்னிக ரில்லா மண்ணிற் சராசர மாண்ட வன்றே. (க)

ஒண்சரா சரங்கண் மாண்ட வுலகினை யொளித்தெ ழுந்து
திண்கடல் கொள்ளக் கண்ட [1]செந்தமிழ்ச் சுந்த ரன்றன்
வண்பெருஞ் [2]சமாதி யாலே மண்மகட் குயிராந் தொல்லைப்
பண்புடை யால யத்தைக் காத்தனன் பழுது றாமல். (உ)

ஒன்றிய பெருவெள் ளத்து நசிச்சிதை யாம லோங்கி
[3] நன்றிய வுலகுக் கெல்லாம் [4]படிமமா நலஞ்சேர் வெள்ளி
மன்றுடன் விளங்க லாலே யண்மிசை நகர்க்கு நாம
மன்றுமுன் னடுவூ ரென்று விளங்கிய தமரர் மெச்ச. (ங)

பிரளய காலஞ் சென்று முடிந்தபின் [5]பெருகி வந்த
திரைபொருங் கடலு முன்போற் சேர்ந்துதன் னிலையி னிற்பச்
சுரர்பர னருளால் வையந் தோன்றிடு மடையின் முன்னோர்
தருமமார் வடிவ மன்னன் றோன்றினன் சசிகு லத்து. (ச)

தேனலர் நிம்ப மாலைத் தென்னவன் பிரள யத்து
மாநில முழுதுங் குன்ற வடிவுகுன் றாம னின்ற
வீனமி லால யஞ்சே ரிருந்திரு நகரி கண்டு
தானுள மதிச யித்துத் துதித்தன னருளைச் சால. (ரு)

நன்குறு மித்த லத்து நயம்பெற விருப்ப மென்று
தன்குறி யறிவா லாங்கு நகர்செய்து சயமுண் டாக
வின்புறச் சிறிதி யாண்டாண் டிருந்தவ னிடம் பெருமற
பின்புதன் புறப்பு குந்தான் பெருங்குடி நெருங்கக் கண்டு. (சு)

உ. சமாதி - சங்கற்பம்.

ங. படிமம் - ஒப்பு வடிவம்.

ச. சுரர் பரன் - தேவர்கள தலைவர்; மகாதேவர்.

சு. குறியறிவு - குறித்தலையுடைய அறிவு.

*. "பகுவாய்ப் பாம்பு முடங்க லாக, வாலவாய் பொதிந்த மதிமுடித் தனிமுதல்", "வடதிரு வால வாய்திரு நடுவூர்" (கல். சஅ, சுக.)

(பி - ம்.) [1]'தென்றமிழ்' [2]'சத்தி' [3]'நன்றிகொளுலகுக்கு' [4]'படிவமாய்' [5]'பெருமைமிக்க'

அன்பொடு விளங்கு மெந்தைக் கறிவிப்ப மென்று சென்று
நின்படை வீடு காணி னீள்பெரும் படைவீ டாகு
மன்சிறி தறிவால் வாழு மனிதரு ளறிவா ரில்லை
யின்புற வறிய வல்லா யெல்லையை [1]யுரைத்தி யென்றான். (எ)

பத்தர்கள் பத்தன் பத்தன் பத்தியைக் கண்டு பூண்ட
வுத்தம நாகந் தம்மு ளொருபெரு நாகந் தன்னை
யித்திரு நகரி னெல்லை காட்டெனக் கன்பு பூண்ட
வித்தக மாறற் கென்று விளம்பினன் விளங்க வாங்கு. (அ)

விளம்புழு னெழுந்து றைஞ்சி வெய்யவெந் செலவு சொல்லி
னெளிந்திடு நேர்போ காது பொறுத்தரு ணேர்குன் றூத
விளம்பிறை மவுலி யானே யெனத்திரு வுள்ளம் வாழ்ந்தே
யுளம்படும் விருப்பத் தோடும் புறப்பட்டா னுரக [2]நாதன். (௯)

வாலினைச் சுந்த ரேசன் வலத்திரு மருங்கு வைத்துக்
கோலமா ருடலை நீள நிமிர்த்தெல்லை குன்று வாறு
சாலமுன் வலம தாகத் தன்னுடைச் செலவி னாற்சூழ்ந்
தாலவாய் வைத்துக் காட்டி ற [3]திடத்திரு மருங்கி னுங்கு. (௧0)

[4] ஓசனை யகல நீள முத்தரத் திசைபு றம்பாத்
தேசுடைத் [5]தான தாதத திருப்பதிக் கெல்லை நாம
மாசற வன்று முன்னா வாலவா யெனவ ழங்க
வாசற வாயை முன்னிட் டாலவா யெனவுஞ் சொன்னார். (௧௧)

உளமகிழ்ந் தரவு போன நெறிமிசை யோங்க மன்னன்
வளைமதில் கண்டா ராம மறுகுகோ புரந்த டாகமு
மிளரொளி மாடங் கூட மண்டபங் கெருடி மற்று
மளகையம் புரமே யென்ன வாக்கினு [6]னோக்கி யாங்கு. (௧உ)

பொருவரு மால யத்தைப் பொன்னினான் மேய்ந்து வேண்டும்
பரிவுசெய் தளவில் வாழ்ந்தோர் பணிதிரு வால வாயான்
றிருவடி மறவா தங்க ணிருந்தனன் சீரார் பேரூர்
பிரளய காலத் திற்கு முன்னையிற் பிறங்கிற் றன்றே. (௧௩)

---

எ. படைவீடு - அரசிருக்கை.

அ. நாகம் - பாம்பு.

௯. 'நேர்குன்றூத' என்பது சிவபெருமானுக்கு அடை.

௧0. தன்னுடைச் செலவு - தெளிந்து செல்லுதல்.

௧௧. வாலம் - வால்.

௧உ. ஆராமம் - சோலை. கெருடி - ஆயுதப்பயிற்சி செய்யும் சாலை.

(பி - ம்.) [1]'உணர்த்தி' [2]'ராசன்' [3]'இடத்தினினமருமாங்கு' [4]'யோசனை' [5]'தானத்தாத', 'தானதாத' [6]'நோக்கினனங்கு'

நன்மறை யோரைப் போற்றி நவையற வறனெ திக்கண்
மூன்வரு மன்னர் மன்னன் முறைமையான் மனுவே யென்ன
மன்னுல கனைத்துஞ் செங்கோல் செலுத்தவு மதிற்றி ருக்காற்
பின்னரும் பதியை நல்லோர் பெயர்திரு முடங்க லென்றார். (௧௪)

* உருகாத நீசராயினும்......... ..ஆணையால்.

ஆகத்திருவிருத்தம் - ௧௬௬௫.

## சஅ.—வரகுணனுக்குச் சிவலோகங்காட்டின திருவிளையாடல்.

இதமுற முன்னோர் கால மிருபவ மடைவிற் காத்துச்
சுதையெயின் மதுரை தன்னுட் சுந்தர நகன்பு பூண்டு
முதுவலி கூர்ந்து வாழ்ந்தான் முறைமென்றிந் தானோர் சூழ
மதிகுல திலக னாய வரகுண னென்பான் மன்னோ. (௧)

ஆங்கவ னொருகால் வேட்டை யாடுவான் கவச முன்னோ
வோங்குபல் கலன்கள் பூண்டு போகிவெவ் வனத்து லாவிப்
பாங்குறு மாக்க ளோடு பகலொழிந் துழையை நோக்கி
நீங்கரும் விரைவிற் கூடி நிசியிடை மீண்ட காலை. (௨)

மின்னும்வெம் புரவி நோன்றாள் விசையினிற் றுகையுண் டாங்கே
மன்னிமுன் விதிவ சத்தால வழியிடைக் கிடந்து றங்கு
நன்னெறி மறையோ னொருந்து நாவெழக் குழறி யாற்றா
தின்னுயிர் விட்டான் விட்ட தறிந்தில னினிய தென்னன். (௩)

வேறு.

உன்னான் மறையோ னுயிர்[1]விட் டனனிங்
கென்னா மிதுவென் றறியே [2]மினியாய்
நன்னீ தியனே நந்தா வருள்சேர்
மன்னா முறையோ வென்றார் மறையோர். (௪)

அந்நாண் முதலா வறநீ தியின்வாழ்
முன்னோ வலவா முறையோ முறையோ
தென்னா முறையோ செழியா முறையோ
மன்னா முறையோ வென்றார் மறையோர். (௫)

---

௧௪. மதிற்றிருக்கால - மதிலின முடக்கத்தால்.

(சஅ)

௨. உழை - மான்; வீடுமாம்.

* இச்செய்யுளின் முழுப்பாகத்தை ௫-ஆம் பக்கத்திற்பார்க்க.

(பி - ம்.) [1]'விட்டனன்மே லென்னா' [2]'இனியா'

வேறு.

வெறிகமழ் தாரான் கேட்டு வாயிலில் விடியு முன்னர்
முறையிடு வானே னென்ன வேவினன் முறைசெய் வோர்கண்
மறையவர் தமைவ ணங்கி மரித்தவற் கினிய செய்வா
னுறுபொரு ணல்கி மீண்டாங் குரைத்தவா றுரைப்பார் மெல்ல. (சு)

னென்னனின் குதிரைத் தாளி னெறியிடைக் கிடந்தோர் பார்ப்பான்
முன்னுற விறந்தா னென்று முறையிட்டார் மறையோர் விம்மி
யென்னுமுன் றென்ன னேங்கா வெண்ணிது விளைந்த [1]தென்று
மின்னெழ விழுவன் சோர்வன் விதிவச மிதுவோ வென்பான். (எ)

அந்தண ரமைச்சர் நீங்காப் புரோகித ரதுகண் டஞ்சிச்
சிந்தையா குலமி தறுத் தீர்வையன் றபாயத் தான்மேல்
வந்தவிப் பிரம கத்தி யுபாயத்தான் மாறும் வேதச்
சந்தைக ளறைந்த வாறுற றணிப்பமித் தரும மாகும். (அ)

பொன்பரி திலமி யானை தாறுயர் புவிபே றில்ல
மூன்பெருங் கொடித்தோ கன்னி பசுவென மொழிந்த பத்து
நன்பெருந் தான மாக நலகிமா முனிவர் தம்மை
யின்புறு தலதந் லேற்றி யினியசெய் திறைஞ்சி யேத்தே. (கூ)

அன்றியும் விசேட மிக்க வகமரு டணங்க ளான
வென்றிமந் திரங்கள் கொண்டு விழுமிய குருக்க டம்மா
லின்றுய ரோமஞ் செய்வித் திடங்தொறுந் தண்ணி னீர்வைத்
தொன்றிய வதிதி கட்கு முணவுநல் கென விதித்தார். (கo)

ஆங்கவர் விதித்த தூய[2]வருமறைத் துறத்தி னுள்ள
வோங்கிய வறம்பி றங்க வொல்லையிற் செய்த பின்னும்
பாங்குறு பிரம சாயை பழுதறு குணத்தான் மிக்க
தேங்கம ழலங்கன் மார்பச் செழியனை விட்ட தில்லை. (கக)

---

சு. முறைசெய்வோர்கள் - வேலையாளர்.

எ. விம்மி முறையிட்டார்.

அ. தீர்வை - பிராயச்சித்தம். அபாயம் - ஆபத்து; "அம்புனிற்றுவின் கன்றே ரபாயத் தினூடு போகி", "வகதநிகத பாய மன்று" (பெரிய. திருவா ரூர்ச். கக, உச.)

கூ. திலம் - எள்.

கo. அகமருடணங்களாகிய மந்திரங்கள் - ஒருவகை வேதமந்திரங்கள் (பெரிய. திருஞான. சுo.) தண்ணினீர் வைத்து - தண்ணீர்ப்பந்தர்வைத்து. விதித்ததற்கு எழுவாய் அந்தணர், அமைச்சர், புரோகிதர்; அ - ஆம் பாட்டிற் காண்க.

கக. பிரமசாயை - பிரமஹத்தி. கஉ. குஞ்சி - தலைமயிர்.

(பி - ம்.) [1]'என்பன்' [2]'அறநெறித்தவத்தில'

எரிந்தசெங் குஞ்சி வெண்பற் கருநிறத் [1]துடனி ருப்புப்
பெருந்தடி யதிர வூன்றிப் பின்றொடர்ந் துணவு முன்னைப்
பொருந்திய கைக்கொண் டஞ்சப் பூணித்துப் பறக டித்துத்
திரிந்தது பிரம சாயை சிரித்தவி னயங்கள் காட்டி. (கஉ)

அப்பெருந் துன்பந் தன்னா லலைந்துட னளர்ந்த மூங்கிச்
செப்பரும் பயத்தி னோடென் செய்வமென் றிருப்ப விப்பாற்
றுப்பமர் திறத்தோர் சோழன் றொகுபெரும் படையி னோடு
மிப்பொழு திவனை வெல்லக் காலமென் றெண்ணி வந்தான். (கங)

ஆங்கது கண்ட தென்ன னலையத் நீணைந்து சென்னி
பாங்குற வடைந்தான் செய்வ துனையெனப் பாவுங் காலைத்
தூங்கிடா தெதிர்சென் றோட்டிச் சோழனை யோடி யேகாத்
தீங்கொழித் [2]தெய்தென் றீசன் விண்மிசைச் செபயத் தேறி. (கச)

வேறு.

இந்து நாயிறு தாரகை வந்திளைப் பாறுஞ்
சந்து மேவிய தண்டலை மதுரையம் புரத்து
வந்த தெவ்வின்மேல் வலம்படு படையொடு மெதிர்சென்
றந்த மெய்யொடும் பொருதன னவன்வலி தொலைய. (கரு)

மற்று நேரொவ்வா வரகுணன் பெருவலி வளவன்
முற்று சேனையுஞ் சுந்தர னருளினாற் றொலைத்து
வெற்றி பூண்டபின் மகிழ்ந்தவன் மேதகு நாடுந்
கொற்ற மேன்மையுங் கொண்டனன் மண்டல மதிக்க. (கசா)

பொன்னி நாட்டிய ராலயம் போறுமுவ மென்றே
மன்னு மாலய முள்ளன வணங்கிமுன் வருநாள்
வின்ன தீருவா [3]னிருடிக ளமரர்க ளறைநெஞ்சந்
சென்னெ னீள்வயற் றிருவிடை மருதினை [4]யடைந்தான். (கஎ)

ஆதி நாதனை யன்பொடு வணங்குவான் விரும்பிச்
சோதி யாலயத் தணுகுமுன் றொழு மிரட் டஞ்சி
நீதி வாயிலி னின்றது நீண்மதிற் புறத்தாங்
கேத மேதர வருந்துற விரும்பிர மகத்தி. (கஅ)

---

கங. இப்பால் - மேலே.

கச. தூங்கிடாத - தாமதியாமல். ஏகாத்தீங்கு - நீங்காத பிரமகத்தியை.

கரு. நாயிறு - சூரியன். சந்து - சந்தனமரம். தெவ் - பகை. வலம்- வெற்றி. அந்தமெய்யென்றது சிவ பராமருடைய திருவாக்கை.

கஎ. பொன்னி - காவிரி. திருவிடைமருது - திருவிடைமருதூர்.

கஅ. 'ஜ்யோதிர்மய மஹாலிங்க மூர்த்தி' என்பது அத்தலத்தில் ஸ்வாமி திருநாம மாதலின், 'சோதி' என்றார்.

(பி-ம்.) [1]'இருப்புப்பாரப்' [2]'தேகென்' [3]'அமரர்களிருடிகள்' [4]'சென்றான்'

வெய்ய சாயைவிட் டகன்றபின் விரைவினுட் புகுந்து
நொய்ய மேனியு நோக்கருங் குளிர்ச்சியுங் கண்டே
யைய னேயருள் வாரியே யடைந்தவர் துணையே
தையல் பாகனே சரண்சரண் சரணெனத் துதித்தான். (௧௯)

வேறு.

வெம்பெருந் துயரா லின்னாண் மெலிந்தனன் மேல்வா ராம
லெம்பிரான் காத்தல் வேண்டு மின்றுனை யடைந்தே னென்று
செம்பொன்வேண் டுபவ முங்கிச் செய்யதாள் பரவி நிற்ப
வும்பர்கோன் றிருவாக் கங்க ணோங்கிய துயர்வா னத்து. (௨௦)

வேண்டிய தருமெம் மாட்டும் விசேடித்து மறையோர் மாட்டும்
பாண்டியர் தலைவா வென்றும் பரிவுளை யாயி ருப்ப
[1]வீண்டிமுன் வினைவ சத்தா லேறிய பிரம சாயை
பூண்டவிங் குன்னை விட்டுப் போனது போனதின்றே. (௨௧)

என்றுகொண் டிலங்கத் தேறி யிறைஞ்சிய மன்னன் முன்ன
ரொன்றிய பயத்தால் வேறோர் வாயிலாற் போந்தாங் கோங்கப்
பொன்றிகழ் தருவி மானப் புரிசைசெய் தகர மேற்றி
நன்றிகொ [2]டேவ தான நல்கியாங் கிருக்கு நாளில். (௨௨)

மிஞ்சிடை மருதர் கோயிற் பதக்கணம் வரும்வீ திக்க
ணஞ்சிநாய்க் கட்டங் கண்டீ தெடுத்தவர்க் கவனி பாதி
நெஞ்சினற் கொடுப்ப லென்றே நினைந்தன னெடுப்பக் காணான்
பஞ்சவன் [3]பகுதி யில்லென் றெடுத்தனன் பரிவட் டத்தால். (௨௩)

தேம்படு பழனஞ் சூழ்ந்த திருவிடை மருதி னெல்லைப்
பாம்பொடு மதியஞ் சூடும் பரமனை ருருவ மென்னக்
[4]காம்பவிழ்ந் துதிர்ந்த செய்ய கனியுருக் கண்டாங் கெல்லாம்
வேம்புகட் குயர்வி மானஞ் சாத்தினான் வேந்தர் வேந்தன். (௨௪)

பரிந்திடை மருதர் நன்னீ ராடமுன் பரப்பு மெள்ளைக்
கரந்தொரு கள்ளன் றின்னக் கண்டவர் கொடுசெ லுங்கா
லருந்திய தென்னை யென்ன வரன்றமர்க் கடிமை யாக
வரும்பிற வியின்க ணென்றான் மன்னவ னயின்றான் வாங்கி. (௨௫)

---

௧௯. நொய்ய - கனமற்ற. ௨௧. பரிவு - அன்பு.

௨௨. வேறோர்வாயில் - மேற்குவாயில்; அதிலுள்ளகோபுரம் பாண்டியன் கோபுரமென்று இன்றும் வழங்கும். விமானப்புரிசை - கொடுமுடிமதில். அகரம் - அக்கிரகாரம்.

௨௩. பதக்கணம் - பிரதக்ஷிணம். நாய்க்கட்டம் - சாம்மலம். அவனி பாதி கொடுப்பலென்று நெஞ்சினல் நினைந்தனன். பகுதி - பகுப்பு.

௨௫. வரும்பிறவியின்கண் அடிமையாக.

(பி-ம்.) [1]'ஈண்டியவினை' [2]'தெய்வத்தான' [3]'பகுத்தி' [4]'காம்புவீழ்ந்து'

சோதிசேர் மருதர் தேர்போம் வீதியிற் றொழுவான் செல்லும்
போதின்முன் கிடந்த பொல்லாப் புன்றலை யோடு கண்டு
நாதவித் தலைபோ லென்ற றைந்தலை யோடு மிந்த
வீதியிற் கிடக்க வென்றே மிலைந்தன னிலங்கு தென்னன். (உசு)

கள்ளனைக் கட்டிச் செல்லுங் காலையிற் கள்ள னீமத்
தெள்ளிய நீற்றின் வீழ்ந்து சிரித்தர காவென் றெய்த
வுள்ளம்வாழ்ந் தெதிர்கொள் வேந்தன் விடும்விடு முயர்பா னிக்க
வெள்ளரைக் கள்ள ரென்றே விளம்புவ தெனப்ப ணிந்தான். (உஎ)

கேடருஞ் சிறப்பின் மிக்க திருவிடை மருதி னெல்லைக்
காடிடை நரிகள் விட்ட கடுங்குர லோசை கேட்டுப்
பீடுடை யிறைவன் றன்னைப் பேசரும் விருப்பத் தோடும்
[1]பாடிய வென்று தென்னன் பலபெரும் படாங்கொ டுத்தான். (உஅ)

நேசமார் தேவி தன்னை [2]நின்னுடை யடிமைக் காமென்
றாசைகூர்ந் [3]தளித்தவ் வேந்த னுவியிற் றவளை பல்காற்
றேசுற வொலிப்பக் கேட்டுச் சிவனையே பாடிற் றென்று
காசொடு பொன்னு மின்னக் கலந்துதூ வினன் கசிந்து. (உகூ)

இன்னன பலவுஞ் செய்தவ் வெல்லையைத் தொழுது போந்து
கன்னிநா டடைந்து கூடற் கடவுளா லயத்துப் புக்குச்
சென்னிநாட் டுளவி சேடஞ் செப்பிடக் கருணைச் சொக்கன்
முன்னுற விசும்பிற் றோற மொழிந்தன னறிந்தோ மென்று. (௩0)

---

உசு. தலையோடு - மண்டையோடு. கிடக்க: வியங்கோள். மிலைந்தனன் - அத்தலையோட்டைச் சூடிக் கொண்டான்.

உஎ. விடும் விடும் - முன்னிலைப்பன்மை. வெள்ளரை - திருநீற்றால் வெண்ணிறமுடையாரை. பணிந்தான் - அக்கள்ளனைப் பணிந்தான்.

உஅ. படாம் - ஆடை. உகூ. ஆவி - தடாகம்.

உசு - கூ. இச்செய்யுட்களிற் கூறப்பெற்றுள்ள சரித்திரத்தை "வெள்ளை நீறு மெய்யிற் கண்டு, கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும், ஓடும் பன்னரி யூளைகேட்டரனைப், பாடின வென்று படாம்பல வளித்தும், குவளைப் புனலிற் றவளை யரற்ற, ஈசன் றன்னை யேத்தின வென்று, காசும் பொன்னுங் கலந்து தூவியும், வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய, செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு, பிடித்தது மவனிப் பிறப்புக் கென்ன, இறைத்தது கொண்டவ னெச்சிலை நுகர்ந்தும், மருத வட்டத் தொருதனிக் கிடந்த, தலையைக் கண்டு தலையுற வணங்கி, உம்மைப் போல வெம்மித் தலையுங், கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும், கோயின் முற்றத்து மீமிசைக் கிடப்ப, வாய்த்த தென்று நாய்க்கட்ட மெடுத்தும், காம்பவிழ்த்த முதிர்ந்த கனியுகக் கண்டு, வேம்புகட் கெல்லாம் விதானம் அமைத்தும், விரும்பின கொடுசைகை பரம்பரற் கென்று, புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய அன்பின் வரகுண தேவரும்" (திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, உஅ) என்பதனாலுமறிக.

(பி - ம்.) 1 'பாடுவ' 2 'நின்னுடைத் தமராக்கொண்மென்று' 3 'அளித்தத் தென்னன்'

மன்னவன் கேட்டுச் சால மனமகிழ்ந் திறைஞ்சி வேண்டும்
பொன்னணி யாடை நல்கிப் பொலிவொடும் போந்தி லங்குந்
தன்னுழை யிருந்து வேதந் தருமநூல் சிவபு ராண
நன்னெறி யாக மங்க ளுடொறுங் கேட்கப் புக்கான். (கூக)

ஒத்ரு முலகுக் கெல்லா முயர்ந்துள துணர்வுக்கெட்டா
வாதிநா யகனி ருக்கு மருஞ்சிவ லோக மென்று
வேதநூல் விளம்பக் கேட்ட வேந்தர்புங் கவனு மிக்க
காதல் கூர்ந் ததனைத் தன்னூன் கண்ணிறைற் காண்பான் வேட்டு. ()

நேய வடியார் தங்க ணினைவினை முடிக்க வல்லான்
மாணெழிற் சொக்க னல்லால் வல்லவ ரில்லென் றெண்ணிச்
சேணுய ரால யத்துச் சென்றருட் டேவே நின்றன்
காணரு முலகங் காண்பான் கருதுகின் றதாக ருத்தே. (கூங)

வேறு.

நின்றம ரடியனே னினைவு தீரவே
யொன்றிய வுகங்கலி யுகம தாயினு
மின்றிகழ் பெருஞ்சிவ லோக மேம்பட
வின்றுகாட் டாயெனி னிறப்ப லென்னுமுன். (கூச)

குளிர்ந்தருள் புரிபவன் கோடி நாயிறு
கிளர்ந்தன வெனவிடு கிரணம் வானெழ
விளங்கிய வொளிவளர் விமான மெங்கணுந்
துளங்கிய வுலகினைத் துலங்கக் காட்டினன். (கூரு)

நடநவி றும்புரு நார தாதிகள்
படிபுகழ் [1]துந்துபி யார்த்துப் பாடினர்
சுடர்விடு கறபக மலர்க ளேவியே
வடிவுடை யரம்பையர் வாழ்த்தெ டுத்தனர். (கூசு)

விண்ணுல கெவற்றினு மேல தாகிய
நண்ணரு முலகமு நண்ணக் கண்டனி
ரெண்ணிய மதுரையை யொப்ப தேதிறை
கண்ணுறி லெதுமுடி யாத காரியம். (கூஎ)

---

கூஉ. சிவலோகம் உலகுக் கெல்லாம் உயர்ந்துளதென்பதை கூஎ - ஆம் பாடலாலுமுணர்க.

கூச. நின்றமர் - நின்னடியார். நினைவு - கவலை.

கூரு. கோடி நாயிறு - கோடி சூரியர்கள்.

கூஎ. கண்ணுறில் - நினைத்தால்.

(பி - ம்.) [1]'துந்துமி'

வேறு.

இருகரங் குவித்தி றைஞ்சி யெழுந்தெழுந் தருளா னந்தத்
திரைபொருங் கடலு ளாடித் திளைத்தனன் கண்ட தென்னன்
விரைகமழ் மலர்சொ ரிந்து வெண்பொரி சிந்தித் தொண்ட
ராகரா வென்று துள்ளி யார்த்தன ரதிச யித்தே. (ஙஅ)

நெறிப்படக் கண்டு ளங்க ணிறைந்தன நிறைந்த வெந்தாய்
மறைத்திடு மறைத்தி டென்ன மஞ்ஞைகா வுலக மங்க
ணிறைப்பொழு திடைவா னுச்சி மறைந்திட விறைஞ்சி மண்ணோர்
சிறப்பொடுந் துதித்தார் சொக்கன் றிருவிளை யாடல் கண்டு. (ஙகூ)

மறுவறு தென்ன னுண்டென் றேகிவந் தாமனைக்க
ணறிவுறு புதல்வன் றன்னை யிழந்ததன் மனைவி யாற்று
துறைதரு கிணற்றில வீழ வுதவிய மறையோன் றன்னை
யிறையினில் வெட்ட முட்ட வெழுந்ததென் பாரு முண்டால். (சo)

உறுபிர மகத்தி யாலே யூண்முதற சுகங்க ளான
[1] பிறவெலா மொழிந்த மன்னன் வரகுணன் பெருந்துன் பத்தை
யிறையினின் மாற்றிக் காணு வினியதன் னுலகங் காட்டு
மறைநெறி குலவு மால வாயனை வாழ்த்தல் செய்வாம். (சக)

ஆகத்திருவிருத்தம் - கஙபகூ.

## சகூ.—விடைக்குறியம்பெய்த திருவிளையாடல்.

வரகுண மன்ன வற்கு மனமகிழ் மைந்தன் வென்றிப்
பொருவிலா வறிவி னும்மேறூர் பூழியன் மதுரா தன்னுட்
சுராதி பரவு [2]மேன்மைச் சொக்கனுக் கன்பு பூண்டே
யுரனொடும் வாழ்ந்தான் முன்ன முலகினை யடைவிற் காத்து. (க)

நம்புற வாழ்வோன் றன்மே னவையிலா வறிவான் மிக்க
செம்பிய னொருவன் பேசித் தெறுங்கரு நாடர்க் கூட்டி
வெம்பெரும் படையி னோடும் வினைசெய்வா னடைந்தா னாரு
மும்பர்சூழ் மதுரை மூதூர் யோசனை யெல்லை வாங்கு. (உ)

---

ஙஅ. மகிழ்ச்சியடைந்தோர் மங்கலப் பொருள்களாகிய பூவும் பொரியும் சிந்துதல் மரபு.

ஙகூ. உளம் கண்நிறைந்தன - உள்ளமும் கண்களும் நிறைந்தன.

சo. இராவில்வந்து. உதவியமறையோன்றன்னை - கிணற்றினின்றும் எடுத்த மறையோனை. 'மறையோன்' என்றது, கணவனை.

சக. பிரமஹத்தியாலே ஊண் முதலியவற்றை இழந்ததை, கஉ - ஆம் செய்யுளாலு முணர்க. (சக)

உ. பேசி - போர்செய்ய வருதலை முன்னே தெரிவித்து; சூளுரைத்தெனினுமாம். கருநாடர் - கருநாட தேசத்துவீரர். வினை - போர்.

(பி - ம்.) 1 'பிறவையுமொழிந்த தென்னன்' 2 'அன்பர்'

## வேறு.

[1]தடங்களை யுடைத்து மாணிரை கவர்ந்துந் தானிய நனுகிடா வாழு, தொடர்ந்ததர் [2]மறித்தும் பொழில்களைச் சிதைத்தஞ் சூழ்தரு பலகுடி நடுங்க, வடர்ந்திடை விடாம விகல்செயக் கண்டாண் டனை யவுஞ் சுருங்கவாற் றாது, மடங்கலே யனைய [3]வடித்திறன் மாற னமைச் சரை வரவழைத் துரைப்பான். (௧)

புத்திரன் குள்ளி ரொன்செய்கேப் வேறு புகலிலே யிரவொடு பகலு, மெத்திய படையால் வரும்பெருஞ் சோழன் மேலெழ வினை செயா நின்று, ஞெத்துடன் பொருதற் கிரும்படை யில்லை யொல்லை நம் மாலவாய் மெய்ய, [4]னத்தியன் றெய்த சேவகன் றனக்கின் றடைக் கலம் புகுவமென் றறைந்தான். (௬)

நின்றது சொல்லக் கண்டமக் திரிக ணிலேமைகண் டிசையித் தேத்தத் தென்றல்வந் துலவுங் கோயிலட் டாலைச் சேவகன் சந்நிதி யடைந்து வென்றிசேர் வீர செம்பொன்மா மன்ற வெள்ளியம் பலவநீ புகலென் றொன்றிய வடியார் தந் துயர் [5]தீர்க்கு மொருவகே ளடிமைவிண் ணப்பம்.

பின்னமில் குணஞ்சே ரொக்கதபு மடியேன் பேதையாம் யாண் டினி யினது, மன்னிய வுலக தலைகதனன் கிடந்த வரைபுரை காஞ்சன மனைத்து, மன்னிய ஞாநி கொளாலா விளைததே னடைந் தனன் பெரும்படை யபய, னின்னுடைப் பதிக்கோர் தாழ்வுறி னின க்கே தாழ்வது நிச்சய மீதால. (௯)

அற்றவர்க் [6]கேற்ற சிவனென வென்னை யறைகுவ ரடைக்கல முனக்கே யறமெரு பற்று மில்லையென பதினை யறிந்தனை மாற நாடிக் கற்பனை யொழிப்பாய் நீயலா துண்மோ காத்தருள் காத்தரு ளென்று கொற்றவ னிலைந்தெழ நின்றமை சாலக் குறைந்துகண [7]ணிறைந்தநீர் ததும்ப.

நிருபகே ளஞ்ச னிலேமை யை விடாது நின்னுள படையொடு மெ திர்சென், றூரனெடு மமர்செய் விரைவுடன் யாம்வந் துதவுவ முதவுவ மென்றென், றிருநில மன்னன் செவிப்புல நிறைய யாவருந் தெளி வுற வங்கண், வாமவி விசும்பிற் பறங்கிட வருளான் மலர்ந்தது பெருந்திருவாக்கு. (௮)

---

௯. ஆனிரை - பசுக்கூட்டங்கள். அதா மறித்தும் - வழிமறித்தும்; இச் செய்யுளின் பொருளை, பு - வெ. வஞ்சிப்படலம், ௨௧ - ஆம் செய்யுளாலும் வி. பாரதம் நிரைமீட்சிச்சருக்கம், ௨௫ - ஆம் செய்யுளாலும் உணர்க.

௪. அத்தி அன்று எய்த சேவகன் - அட்டாலைச் சேவகர்; அத்தி - யானை.

௭. அற்றவர்க்கற்ற சிவன் (௪௦: ௧); "அற்றவர்க்கற்ற சிவனுறைகின்ற வாலவாயாவது மிதுவே" என்பது தேவாரம். நீ யலாத புகலுண்டோவென ஒருசொல் வருவிக்க.

(பி - ம்.) 1'தடக்கரை' 2'மறைத்தும்' 3'வெத்திறன்' 4 'அத்தியேன்று' 5 'நீக்கும்' 6'உற்ற' 7'திறைத்து'

அவ்வுரை [1]கேட்கு முனமகிழ்ந் திறைஞ்சி யதிசய மனத்தொ
டும் போந்து, மெய்யிடு கவசம் பூதியென் றிட்டு மேதகு நாமமுச்
சரித்துச், செவ்விய [2]நெறிசேர் பல்சிறப் புறுந்தன் சிறுபடை தன்
னொடும் விரைவிற், பௌவநோ் படைமுன் சென்றெதி ரணிந்தான்
பத்திசேர் [3]பார்த்திபர் தலைவன். (கூ)

வறுவிய படையா னெதிர்வதே யென்று வருபெரு நேரியன்
சிறித், திறமுடைச் செழியன் [4]வெருவுற வடர்த்துச் சிங்கநா தஞ்செ
யச் செழியன், நிறைதரு கருணைப் பெருமைய வெங்கு நிறைந்தவ
நிறைந்தவ வெனுமுன், முறைபடு மிறைவ னுதவின னிரங்கித் தும்
மினுர் சிவாயபோற் றொடர்ந்து. (கo)

பொருவில்வில் லாளாய்த் தோன்றிமுன் னிளைத்த பூழியன் சரி
படை நடுவு, தெரிவுற நின்று விடையினைப் பொறித்தோர் திண்டிற
லேவினை யேவக், கரிபரி யடர்ந்த படையுட னணிந்து [5]கணத்திடைக்
களத்திடை விழக்கண், டிரனுடை வளவ னறிஞரை தவினு னுளத்ததி
சயத்தொடு முரைப்பான். (கக)

துப்பமர் மெய்ய னெப்பிலா வறஞ்சேர் சொக்கநா யகன்பெருஞ்
செய்தி, செப்பிடிற் பத்த ராவினிற் காம தேனுவென் றியாவரு
மறைவர், மெய்ப்பட [6]விவனு மவனைமுன் னிட்டே வென்றனன்
மற்றியார் வெல்வார், தப்பில யிவன்றன் றந்தையன் றனக்கு முதலி
னன் றூரணி வியப்ப. (கஉ)

விடைக்குறி யம்பொன் றளப்பருஞ் சேனை விழத்தனி துளைத்
தது களத்துத், தொடைச்செயல் கண்டோர் மனிதரோ வஸ்லர் சொக்க
னென் றுணருமின் றெரிய, வடாததறி வின்றிப் பொருவமேல் யாமு
மழிகுவம் விடைதரப் பெற்றூம், பசைதமை தொழில வேண்டா நமக்
கெனப் பிழைத்த படைக்[7]குளந் தெளிவுறப் பகர்ந்தான். (கங)

கேட்டவெஞ் சேனைத தலைவர்தாழ்ந் திறைஞ்சிக் கிளர்ந்தவெங்
கொடும்[8]பகைப் படைக, ளோட்டிய தானை வீரனே யாராய்ந் துரைத்
தவா றெக்கு மென் றுவந்து, நாடியா படையை மீட்டிட வங்க
னணுகிய [9]காரிய முணரா, வேட்டுவர் யவனர் கருநடர் முதலா வேற்
றுருத் தானையர் வெகுண்டு. (கச)

ஒள்ளிய கிள்ளி தன்னுளம் விளிய வுறுபடைக் கஞ்சினை யென்று
தள்ளிமுன் சொலவிச் செல்லமுன் கண்டு தனக்குவந் துதவுபே ரான்

---

க. பூதி - விபூதி. கo. நேரியன் - சோழன்.

கஉ. தந்தையன் - தந்தை. கங. விடைதரப் பெற்றூம்: சிலேடை.

கச. சேனைத்தலைவர் மீட்டிட.

கரு. கிள்ளி - சோழன். விளிய - அவமானமுற.

(பி - ம்.) 1'கேட்டு' 2'நிறை' 3 'பாத்திபர்' 4'மெலிவுற' 5 'களத்திடைக் கணத்திடை' 6'வவனுமிவனை' 7'குலம்' 8'பெரும்' 9'காரணம்'

மைத், தெள்ளிய வில்லி யழகனட்டா லேச் சேவகன் றனையுளத் திருத்தித், துள்ளிமுன் சிங்க நாதமுஞ் செய்து தோன்றினன் வென்றுயர் செழியன். (௧௫)

வேறு.

குன்றமர் தெரியா தென்று சுந்தரன் முன்போற் றேன்றி
வன்றிற விடப மிட்ட வாளியை யேவ வாளி
யொன்றள விலாத தாகித் துணித்ததாங் குறுக ளத்து
வென்றிகள் பேசி வந்த வெந்திறற் றனை வீழ. (௧௬)

வேறு.

தரமுற்றெதிர் வரும்வெற்றிகொ டணிவீரர்கள் வலிகூர்
சிரமற்றன புயமற்றன வதுவோதிறன் முகமோ
டுரமற்றன குரமற்றன வுடலற்றன துரகங்
கரமற்றன சரணற்றன களமற்றன விபமே. (௧௭)

வேறு.

நெற்றியிற் பாய்கோ னேக்கு வித்தைகாட் டுநரை நேரு
முற்றவாய் தைத்த வாளி [1]யொற்றையூ துநரை யேய்க்கு
முற்றுமெய் புகுந்த பாண [2]முட்பன்றி நிகரு மூடிச்
சற்றிடை விடாது பெய்த சரமழை தன்னி லன்றே. (௧௮)

[3] திரைபடுங் குருதி வெள்ளச் செங்கொடுங் கடலு ளாடிப்
பெரியவான் முகடு தோயும் பிணப்பெருங் குன்றத் தேறிப்
பொருவருங் கணங்கள் கூளி பூதசா லங்கண் மற்றும்
வரிசையி னுடிப் பாடி யிருந்தன [4]மண்ட வுண்டு. (௧௯)

பெருமைசேர் சென்னி [5]பின்னும் பிணம்படக் கொன்று வீழ்த்த
சரமுகத் திடபங் கண்டு [6]தன்னுளத் ததிச யித்திங்
கரனயந் திருப்ப வெல்வா ராரென விரைவின் வாங்கி
முரணுறு பிழைத்த சேனை பின்வர முன்னர்ப் போனன். (௨௦)

நலங்கொள்பே ராண்மை வில்லி நயந்துயர் கோயின் மேவ
வலந்தரு மன்னன் கண்டு மகிழ்ச்சிமாக் கடலின் மூழ்கிக்
கலந்துபோ காது நின்ற கருநடர் [7]முதலோர்க் கூட்டித்
தலம்புக மூல யத்துச் சார்ந்தனன் பரவ யாரும். (௨௧)

---

௧௬. வாளி - அம்பு. ௧௭. துரகம் - குதிரை. இபம் - யானை.

௧௮. நோக்குவித்தை உடையோர் தம்வித்தை காட்டுகையில நெற்றியிலே ஒருகம்பை நிறுத்திக்காட்டுதலியல்பு. ஒற்றை - ஒருவகை வாத்தியம்.

௧௯. பூதசாலம் - பூதக் கூட்டம். ௨௦. வாங்கி - பின்வாங்கி.

௨௧. வில்லி - அட்டாலேச் சேவகர்.

(பி - ம்.) 1 'பொத்தை' 2 'எகினமாநிகர்க்கும்' 3 'திரள்' 4 'மன்ற' 5 'மன்னும்' 6 'தானுளத்து' 7 'முதலாக்'

வேறு.

இந்து மன்னர் குலத்துக் கினியவன்
சந்த ரன்னல துண்டோ வெனச்சொலி
மூந்த வேண்டுப நல்கி முறைமையிற்
பந்த நீங்க வணங்கினன் பன்முறை. (உஉ)

வேறு.

திருமதிற் புடையட் டாலைச் சேவகன் றன்னை யன்பிற்
பொருவரு [1]மமைச்ச ரெல்லாம் புகழ்ந்துதி சயித்தார் போற்றி
வரகுணன் மைந்த [2]னென்று வந்தித்தா னன்று முன்னைப்
பரவுபாண் டியர்க ளெல்லாம் வந்தித்தார் பனைகக டீர. (உ௩)

செழுமைசேர் புரத்தி ருந்து சென்னிமண் டலமே யன்றி
யழுகுறு நிலைமை மாற னளவின்மண் டலங்கள் கொண்டு
விழுமிய யானை முன்னு வெம்பெருந் தானை யாண்டு
தொழுபுவி யடைவிற் காத்துத் துயரொழிந் தூழி வாழ்ந்தான். (உ௪)

ஆகத்திருவிருத்தம் - க௪௦௦.

---

# டு௦—உலவாக்கோட்டைவைத்த திருவிளையாடல்.

மூதுரை வாணர் போற்று மதுரையம் பதியின் முன்னந்
தூய்தகு குணத்தான் மிக்க சூத்திர குலத்தோர் பத்தன்
றீதிலா வுழவான் மல்குஞ் செலவத்தான் மிகவு நீடிக்
காதல்கூர் நினைவின் மேவுங் காதலி யோடும் வாழ்ந்தான். (க)

பூதிசா தனங்கண் டாலங் கியாவரா யினும்பொ ருந்திப்
பாதநே ரிறைஞ்சி யில்லுட் பரிவொடுங் கொண்டு புக்குத்
தீதிலா சனத்தி ருத்திச் சிறந்தசே வடிவி ளக்கிக்
கோதைதூ பாதி மற்றுங் கொடுத்தருச் சனைகள் செய்து. (உ)

முருகெழ வமைத்த வன்ன முறைமையிற் படைத்து நான்கு
மருவிய விதத்தி னறு சுவையினுண் மகிழ்ச்சி கூரக்
கருதிநின் றமுது செய்வித் தவரவர் கசிந்து வைத்த
பரிகல சேட முண்டு வாழுவன் பத்தி கூர்ந்து. (௩)

---

உ௩. என்று வந்தித்தான் - எந்த நாள்வந்தித்தானே.

(டு௦)

க. தூய்தகு-தூய்மை பொருந்திய. ஒருமனமுடையாளென்பார் 'காதல் கூர் நினைவின் மேவுங் காதலி' என்றார்; "காதலிருவர் கருத்தொருமித் தாதரவு, பட்டதே யின்பம்" என்றார் ஔவையாரும்.

உ. பூதிசாதனம்-விபூதியும் உருத்திராக்கமும். கோதை-மாலை. [படும்.

௩. உணவு: உண்பன தின்பன நக்குவன பருகுவன என நான்குவகைப்

(பி - ம்.) [1]'அமைச்சர்முற்றும்' [2]'னென்றும'

உருத்தகு மனைவி யோடு மொருவழிப் பட்ட நெஞ்ச
னிறைத் [1]தெழு தொண்டர் கொண்ட நினைவினிற் பூசை செய்யுஞ்
சரித்திரங் கண்டு நாளுஞ் சம்புவுங் கருணைகூர்ந்து
திருத்தகு மங்க யற்கட் டேமொழிக் கருளிச் [2]செய்வான். (ச)

இந்நெறி [3]யொழுகுவோனல் குரவினு மிலிமை கூர்ந்து
மன்னுமிச் செய்தி செய்ய [4]வல்லனென் றறிவித் தற்கே
நன்னெறிச் செல்வ மெல்லா நாடொறு மாற்றி மற்றும்
பன்னெறி விளைவுங் குன்றப் பண்ணின னெல்லாம் வல்லான். (ரு)

பல்பெருஞ் செல்வ மெல்லாஞ் சுருங்கவும் பத்தி மிக்கோன்
சொல்லரும் பெரிய நெஞ்சஞ் சுருங்கிடான் பெருங்க டன்கள்
செல்வர்பால் வருபோ கத்துத் தருதுவ லென்று சென்று
நல்லன சொல்லி வாங்கி நாடொறும் பூசை செய்தான். (சு)

வீறு[5]சான் மழைம றுத்து விளைதலில் லாமை யாலே
மாறரும் விருப்பத் தோடும் வாங்கிய பெருங்க டன்கள்
கூறிய நாட்க டம்மிற் கொடாதது கண்டி யாரும்
பேறிலை யென்றுங் கெண்ணிக் கொடுத்திலர் கடன்கள் பின்னர். (எ)

களக்கமில் லாதோன் மண்ணிற் கடன்கொடா ததுகண் டாரு
துளத்துறு துயரத் தோடுங் கடன்றரு வாரை யோங்கல்
வளைத்தவன் காட்டி ஞனேற் காண்கின்றே மென்று வாடி
யிளைத்தயர் மனைவியோடு மெண்ணியா லயத்த டைந்தான். (அ)

வேறு.

ஆத ரத்தொடு பேணி நின்னடி யாரை முன்னயில் வித்தபின்
கோதி லாதவர் வைத்த சேடம ருந்தி யோர்குறை யின்றியெப்
போது நின்னரு ளேக்கி நான்முனி ருந்த னன்புகழ் குன்றவே
வாதை யேதரு [6]மாய மாமிடி வந்த டைந்தத றிந்திலேன். (கூ)

வேறு.

நினைப்பினிங் கிறுத்தற் கொண்ணு நீள்கடன் கொண்டு பின்னு
மனைக்கணு லாறு திங்கண் மன்னநி னருளி னாலே
யனைத்துப சாரத் தோடு மமுது செய் வித்தேன் வையத்
தினிக்கடன் றருவா ரில்லை யிளைத்தனன் காட்டி டின்றே. (கய)

---

ரு. செய்தி - செய்கை. சு. வருபோகத்து - பின் உண்டாகும் விளைவில்.

எ. வீறு - வேறொன்றற்கில்லா அழகு. பேறு - இலாபம்.

அ. களக்கம் - களங்கம், குற்றம்; கலக்கமுமாம். ஓங்கல் - மேருமலை.

கூ. வாதை - துன்பம்.

கய. இறுத்தற்கு - கொடுத்தற்கு. இன்றுகாட்டிடு.

(பி - ம்.) [1]'உறத்' [2]'செய்தான்' [3]'ஒழுகுவோர்' [4]'வல்லரென்று' [5]'சார்' [6]'மாரையாமிடி'

கடந்தரு வாரை யொல்லைக் காட்டிடா யாயி னிங்கே
மடிந்திட லல்லான் மற்றோர் கதியில்லை யென்று மண்ணிற்
படிந்துவீழ்ந் தழுது விம்மிப் பழிச்சுதல் கண்டி ரங்கி
யிடும்பை[1]நீக் கிடுவா னங்க ணிலங்கிய துயர்ந்த வாக்கு. (௧௧)

வேறு.

தொல்லுலகி னம்மடியார்க் கன்பு செய்த சூத்திரசூ ளாமணிகே ணின்னைப் போனின், மெல்லியலா டன்னைப்போற் கண்டே மில்லை மெல்லியதா யடுசோறு பொலிய வற்றாய்க், கல்லிலதாய் வெள்ளியதாய்ப் புதிதாய் நல்ல கந்தமலி பந்தமுறு மரிசிக் கோட்டை, நல்லவர்க ளதிசயிப்ப நின்னிடத்து நணுகுவித்தே நல்குரவுநீங்க வென்றே.

அப்பெருமை தருமுலவாக் கோட்டை தன்னை யருச்சனைசெய் தரிவையொடு நினைக்கு வேண்டு, மொப்பருந்தண் டுலமெடுத்தொண் டொண்டர்க் கெல்லா மூட்டுவித்து நயந்தபொருள் விற்றுண் டாக்கித், தப்பறமற் றுயர்ந்தபெருந் தருமஞ் செய்து தணியாத பெருங்க டன்க டணித்து வாடா, திப்படியில் வேதஞ்சொ லியாண்டும் வாழ்ந் தாண் டிருந்துவா னம்முலகத் தெவரும் போற்ற. (௧௩)

வேறு.

அவ்வுரை கேளா முன்ன ராதரங் கூர்ந்து வாழ்ந்து
கொவ்வையங் கனிவாய் மாதுங் கும்பிடு மன்பன் றானு
மெய்விதிர்ப் போடு நின்று மிகவதி சயித்துச் செங்கை
நவ்விய னருளை வாழ்த்தி நடமொடு தொழுது போந்தார். (௧௪)

[2] வணங்கியே தொண்டர் துன்று மனைபுகா நேர்தாங் கண்டாங்
கணைந்தபே ரார்வத் தோடு மதிசயித் துள்ள ரங்கிற்
பணிந்துய ராசனத்துப் பற்றிவைத் தருச்சித் துள்ளத்
துணர்ந்துசெல் வத்தின் வாழ்ந்தா ருரைத்தவா றடைவிற்செய்து. ()

௧௧. இடும்பை - துன்பம். உயர்ந்தவாக்கு - அசரீரி.

௧௨. சூளாமணி - முடிமணி; 'சூத்திரர் தலைவன்' என்பர் பின்னும்; ௧௭; சூத்திர சூளாமணி என்பதைப் பெயராகவே கொண்டனர், பயகரமாலை யுரையாசிரியர். வற்றாய் - வல்லமையுடையதாய். கந்தம் - மணம்.

௧௩. உலவாக்கோட்டை - எடுக்க எடுக்கக் குறையாத அரிசிக் கோட்டை. தண்டுலம்-அரிசி. விற்றுப் பொருளையுண்டாக்கி யென்க. வேதஞ்சொல் யாண்டும்-நூறுவருடமும்; "வேதநூற் பிராயநூறு" (திவ்ய. திருமாலை, ௩) என்பதனாலுமுணர்க.

௧௪. மெய்விதிர்ப்பு - உடம்பு நடுக்கம். செங்கை நவ்வியன் - செவ்விய திருக்கரத்தில் மானையணிந்தவர்.

௧௫. புகா - புகுந்து. உள் அரங்கில் - அரங்குள்ளில்; என்றது அறையின் உள்ளே உள்ள மற்றோர் அறையை; "எழினிவாங்கிய வீரறைப் பள்ளி" (முல்லைப்பாட்டு, ௬௪.)

(பி - ம்.) [1]'நீங்கிடுவான்' [2]'மணங்கமழ்'

மன்னிய செய்தி கேட்ட மதுரையம் பதியோ ரெல்லாந்
துன்னிய செல்வ மீந்த தொலைவிலாக் கோட்டை கண்டு
முன்னுற வதிச யித்து வாழ்த்தினார் முற்றும் வல்ல
சென்னெறிச் சொக்க னல்லாற் றெய்வம்வே றுண்டோ வென்றே. ()

சூத்திரர் தலைவன் வேதநூ சொல்லுநல் லியாண்டும் புக்குக்
கோத்திர மனைவி யோடுங் குவலயத் தெவருங் காணப்
பார்த்திப ரதிச யிப்பப் பல்பெருஞ் சிறப்பி னோங்கி
யேத்தருஞ் சிவலோ கத்தி லேறினா னிமையோ ரேத்த. (௧௭)

பத்தியான் மிக்க வேளாண் டலைவன்றன் பத்தி காண்பா
னத்துயர் மிடியை யேவி யம்மிடி யினும வன்றன்
சத்திய பத்தி கண்டு தண்டுல வுலவாக் கோட்டை
வைத்தவ னெவன வன்றன் மலரடி வாழ்த்தல் செய்வாம். (௧௮)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௧௮.

## ௫௧.—மூர்த்தியார்க்கு அரசளித்த திருவிளையாடல்.*

வளமை நீடிய மதுரையின் முன்னொரு கால
மளவி லன்புடை மூர்த்தியென் றறையுமோர் வணிகர்
தளர்வில் சுந்தரற் கானது சந்தன மென்றே
யுளவி ருப்பொடு சாத்துவா ரொழிவற நாளும். (௧)

துன்னு சேனையிற் றுளங்கிய வொருகரு நாட
மன்ன னன்னாள் வந்தருட் டென்னனை யோட்டிக்
கன்னி மண்டலங் கொண்டமண் கையர்கை விழுந்து
முன்ன நீடிய வைதிக முறையையு மொழித்தான். (௨)

---

௧௭. மனைவியோடும் சிவலோகத்தில ஏறினனென்க.

(௫௧)

௨. கருநாட மன்னன் - கருநாடக தேசத்தரசன்; ௪௧: ௨; "வடுகக்கரு நாடர்காவன், மானப் படைமன்னன்" (பெரிய. மூர்த்தி. ௧௧.) கையர் - கீழ் மக்கள்.

* "படைகொண் டுடன்று பஞ்சவற் றுரந்து, மதுரை வவ்விய கருநட வேந்து, னருகர்ச் சார்ந்தவின் றருட்பணி யடைப்ப, மற்றவன் றன்னை செறிந் தயில் வருத்தி, பிறையவன் குலத்து முறைமையின் மையினாற், குருதித் தாரை கல்லொடு பிறக்க, மெய்யணி யளறுக் கைமுழக் தேய்த்த, பேரன் புருவப் பசுக்கா வலனை, புலகினிற் றமது முக்குறி யாக, மணிமுடி வேணியு முருத்திரக் கலனு, நிலவுமிழ் புண்ணியப் பானிறச் சாந்தமு, மணிவித் தருள் கொடுத் தரச னுக்கி, பமோ லகற்றி செங்கோள் புரக்க, வையக மளித்த மணி பொளிக் கடவுள்" (கல். ௫௭.)

சாற்று மீசனை யல்லது சமணரை வணிகர்
போற்றி டாதது கண்டுதன் புன்னிய முடிவால்
வேற்று ளோர்களுஞ் சந்தனம் விற்றிடா வாறு
மாற்றி முன்னது வரும்பெருந் துறைகளு மடைத்தான். (௪)

மிறைகள் செய்யவும் விடாதவ ராங்கது கண்டு
பறித லைச்சமண் பாதகன் மாண்டுயர் வேத
நெறிவி ளங்குவ தென்றுகொ லென்றுணர்ந் தொருநாள்
வெறிகொள் சந்தனந் தேடினர் பகலெலா மெலிந்து. (௫)

ஏங்கி முன்கிடை யாதது கண்டிருட் போதிற்
றூங்க ரும்பயத் [1]தோடிறை கோயிலுட் சார்ந்து
தேங்கொள் சந்தன முட்டிய தாயினுந் தேய்க்கு
மோங்கு செங்கையு முட்டுமோ வென்றுறத் தேய்த்தார். (௬)

வட்டப் பாறையின் முழங்கையை மணங்கொள்சந் தனமா
முட்டப் பாடற வூனையுஞ் சோரியுஞ் சோர
விட்டுத் தோறசை தேய்வுறத் தேய்க்குமுன் [2]விரைவிற்
கிட்டிச் சார்வுறக் கிளர்ந்தது பரன்றிரு வாக்கு. (௭)

வேறு.

அரிய[3]சந் தனம ணிந்தே மையனே விடுவி டன்பின்
பெருமை[4]கண் டனஞ்ச லஞ்செய் பேரமண் குண்டர் மன்னா
னிரவிடை மாள்வன் வேந்தா [5]யிவ்வுல கடைவிற் காத்து
மருவிய பணியுஞ் செய்து வாமகிழ்ந் தென்று கொண்டே. (௮)

இந்நெறி யாகா யத்தி லெழுந்திடா முன்ன ரென்பு
முன்னுறு நரம்பு மூனுஞ் [6]சொரிந்தபுண் ணூறி மேனி
மன்னொளி பெறறு ரேவு மண்மழை தன்னு ளில்லுண்
[7]மினனுயக் கங்குற் போதே மாண்டனன் வடுக வேந்தன். (௯)

மற்றது கண்ட மைச்சர் வள்ளலை வியந்து பாண்டிக்
கொற்றவன் வழியோ ரில்லை யென்செய்கேங் கோவி லாமை

---

௫. மிறை - கடுககம்; "அத்தமிலவா மிறை செய்யவும்" (பெரிய. மூர்த்தி. கரு.) பறிதலை-உரோமங்களைப்பறித்துக் கொளளும் தலை; ஷை புராணம், கஅ - ஆம் திருவிருத்தத்தைப்பார்க்க.

௬. "கட்டம் புரிவா ரணிகற்றிரு மெய்ப்பூச் சின்று,முட்டும் பரிசாயி னுந் தேய்க் குங்கை முட்டாது" என்பது ஷை புராணம், ௨௦.

௭. வட்டப்பாறை - சந்தனக்கல்; "வட்டகதிகழ்பா றையின்வைத்து முழங்கை தேய்த்தார்" என்பது ஷை புராணம், ௨௦.

௮. சலம் - துன்பம்; என்று கொண்டு கிளர்ந்ததென முன்னே கூட்டுக; ஷை புராணம், ௨௨-ஆம் திருவிருத்தத்தைப் பார்க்க.

(பி - ம்.) [1]'தோடேற்' [2]'விசையிற்' [3]'சந்தணிந்தேமஞ்சேலையனே' [4]'கண்டஞ்சலஞ்சல்' [5]'இலகுலகு' [6]'சேர்ந்த' [7]'மன்னும்'

யுற்றதோன் றல்ல வென்று புலருமுன் னோடைக் குன்றை
விற்றரு கண்ணைக் கட்டி விட்டனர் பூசித் தாங்கு. (௯)

பாய்விடை யிறைவன் சொன்ன பருதியை நினைந்து [1]கொண்டு
கோயிலின் பாங்கர் நின்ற குணப்பெருங் குன்றைத் தாழ்ந்து
போயுல கெங்குஞ் சூழ்ந்து புரவலற் றேடி [2]மீண்ட
காய்தழ லுமிழ்கட் குன்றங் கண்டிகைக் கொண்ட தன்றே. (௧௦)

பிடர்மிசை யெடுத்து வைத்துப் பிறங்கமுற் செல்லக் கண்ட
[3]நடமலி யமைச்சர் முன்ன நகர்வலங் கொண்டி ழிச்சி
முடிபுனை மண்ட பத்து முழவொடு புகுந்தி யாரு
மடிதொழு தார்க ளங்க வரிகொளா சனத்து வைத்து. (௧௧)

தடமணிக் குடம்பூ ரித்துத் தந்திர விதியின் முற்றக்
கடவபி டேகஞ் செய்வா னணைவது கண்டு மூர்த்தி
முடிசடை முடிபூ [4]ணென்னின் முக்கணன் சாத னங்கள்
சுடரபி டேக நீற்றுத் தூளன மல்லா லுண்டோ. (௧௨)

வன்சம ணிருள்விட் டேக வைதிகத் தீப மேற்றி
யின்பர சாள்வ லென்ன வியைந்தியா வருமுன் சொன்ன
வன்புறு பகுதி மூன்றுஞ் செய்தருச் சித்தார் போற்றி
முன்பருள் சுரந்த சொக்க [5]மூர்த்தியின் மூர்த்தி வேந்தை. (௧௩)

சடைமுடி [6]முடியா வந்து தமக்கருள் சுரந்த செம்பொற்
சுடர்முடிச் சொக்க வேந்தைத் தொழு[7]தெழின் மதவே ழத்துத்
தடமுழ வொலிப்பக் கற்றைச் சாமரை யிரட்டக் கொற்றக்
குடை[8]நிழ னிழற்றப் போந்து குவலய நெறியிற் காத்தார். (௧௪)

மம்மர்சேர் சமணர்க் காய்ந்து வைதிக நெறிவி ளக்கி
வெம்மைசேர் தெவ்வை மாதர் விருப்பையைம் புலனை வென்று
செம்மையி னூழி வாழ்ந்து சிவனுல கத்த டைந்த
மும்மையா லுலகை யாண்ட மூர்த்தியை வாழ்த்தல் செய்வாம். (௧௫)

ஆகத்திருவிருத்தம் - ௧௪௩௩.

---

௯. ஓடைக்குன்று - யானை. வில் - ஒளி.

௧௦. குணப்பெருங்குன்றை - மூர்த்தி நாயனாரை.

௧௧. இழிச்சி - இறங்கி யருளச்செய்து; "வெங்கட் களிற்றின் மிசை நின்று மிழிச்சி" என்பது பெரிய. மூர்த்தி. ௩௭.

௧௨. தந்திரவிதியின் - நூல் விதியால். முடிசடை முடி - கிரீடம் சடைமுடியாக; ஷை புராணம் ௪௧ - ஆம் திருவிருத்தத்தைப் பார்க்க.

௧௩. யாவருமியைய. மூன்று - சடைமுடி, உருத்திராக்கம், திருநீறு.

௧௫. "மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்" என்பது திருத்தொண்டத்தொகை, ௩.

(பி-ம்.) [1]'சென்று' [2]'போந்து' [3]'நடவியவமைச்சர்முன்னு' [4]'எண்ணின்' [5]'மூர்த்தியை வியந்தவேந்தை' [6]'யாக' [7]'எழு' [8]'னிநிழற்ற'

## ருஉ.—காரியார்நாரியார்பாப்பகுந்த திருவிளையாடல்.

கற்பமார் முன்னோர் நாளிற் காரியார் நாரி யாரென்
றற்புதப் புலவர் நீதி யரசனைக் கவிதை பாடி
யுற்றபல் சிறப்பி னோடு முயர்வட நாட்டினின்றும்
வெற்றியி னணைந்தார் கொற்ற வியன்றமிழ் மதுரை நோக்கி. (க)

வருபவர் நெறிம யங்கி வனத்திடைப் புகுந்து சாலத்
தெருமர லுறுங்காற் கண்டு செந்தமிழ்க் கினிய சொக்க
னிரைதரு காலி மேய்த்தோ ரிடையனாய் நேயங் கூர்ந்து
பொருவரும் புலவர் காணத் தோன்றினான் புகழை வேட்டு. (உ)

கனகவொண் குழைசேர் காதிற் களங்கனிக் கொத்த ணிந்து
புனையும்வெண் பாசி பூண்டு பூதிமெய் பூசி யாவு
மனமுரு கிடவாய் வைத்து வரைநெடுங் குழலு மூதித்
தனிநெடுந் தண்டு மூன்றி நின்றனன் றானுந் தெற்றி. (௩)

ஆங்கவர் காணு முன்ன ரதிசயித் தச்ச நீங்கி
யோங்கிய மதுரை யூர்க்குப் போம்வழி யுரைத்தி யென்னப்
பாங்குடைப் புலவீர் நீங்கள் பலசிறப் பொடும டைந்தீ
ரீங்குரை யீர்நு மக்குக் காரிய [1]மென்கொ லென்றான். (௪)

என்றுமன் றாடி சொல்ல வேடநீ யென்ன சொன்னா
யொன்றிய காரி யந்தா னுன்றனக் குரைக்க வற்றோ
வன்றுகாண் பெரிய வெங்கட் கதர்சொலென் றடாக் கண்டு
நின்றவ னுவளைத்து நெறிசொலே னென்று நக்கான். (ரு)

வேறு.

மென்புலவ ரதுகண்டு வழிவிருப்பான் மீனவனை
யின்புறுநற் கவிபாடி வருகின்றே மெனக்கேட்டு
வன்புலவ ரிருக்கின்ற விடமஃதான் மதியாது
நன்கவிதை சொன்னேமென் றுரைத்தீரே நாணாது. (சு)

---

உ. காலி - பசுக்கள்.

௩. களங்கனிக் கொத்து - களாப்பழக்கொத்து. வெண்பாசி - துருவகைமணி. பூதி - விபூதி. யாவும் - எல்லாம்; 'ஆவும்' எனப்பிரிப்பினும் பொருந்தும்; ஆ - பசு. வரைநெடுங் குழல் - வேய்ங்குழல்; வரை - மூங்கில். தெற்றி-பின்னி.

ரு. மன்றாடி யென்பது சிலேடை; சபையில் ஆடுபவனென்றும், எருமன்றத்தில ஆடுபவனென்றும் பொருள்படும்; பசுமந்தையை எருமன்றமெனறல் மரபு. அதர்சொல்-வழியைச் சொல். காவளைத்து-சீழ்க்கையொலியைச் செய்து; நிரையவன் ஆவளைத்தெனப்பிரிப்பினும் பொருந்தும்.

சு. வன்புலவர் - சங்கப்புலவர். மதியாது நாணாது உரைத்தீரே.

(பி - ம்.) [1]'ஏதோ'

அளந்தபுல வீரான தாகவவற் றொருகவிதை
விளம்பிடுமி னெனவிடையன் கொச்சையல னதிவிடமன்
றுளங்கியநங் கவிதைசொ லொழியவழி சொல்லானென்
றுளம்படுமோர் [1]கவிபகர்ந்தா ருயர்புலவர் தாழாது. (எ)

அக்கவிதை கேட்டலுமே யழகியது நமதென்று
சொக்கனுமங் கணரிட்டுத் தொடைதட்டிச் சிரித்தருளி
யிக்கவிதை யோநவின்றீ ரேழையீர் யாரறியார்
மிக்கவிது தனைமாடு மேய்ப்பவர்வாய்க் [2]கேட்டிடுமின். (அ)

கேட்டிடுமி னெனவடைவிற் கிளர்வுறவெங் கணுநிறைந்த
காட்டிடையன் பாட்டினைத்துங் கற்றுரைப்ப மற்றவரு
நாட்டிடைய னல்லனிவ ஞர்கொலென நனிநாணி
மீட்டுரையா ரொன்றையுமுள் வெருவுற்று ருடல்வியர்த்தார். (கூ)

நல்லவடி வனுமாகி யிருக்கின்றாய் நான்மறைகள்
சொல்லரியான் சொல்லினலலான் [3]மற்றொருவர் சொல்வாரில்
வல்லவுனக் கிதுவந்த வாறுரைப்பை யேன்மன்னன்
செல்வமுறத் தந்தவெலாந் தருகின்றே மெனச்செப்ப. (கo)

மட்டவிழ்பூம் பொழில்புடைசூழ் மாமதுரை யூர்ப்பொதுவன்
சிட்டர்புகழ் தருமண்டன் சிறறிடைச்சி மணவாளன்
விட்டபசு முட்டாமன் மேய்த்தடக்கிப் பாசத்தாற்
கட்டிவிடு மன்றாடி கான்மாறி யாறுவேன். (கக)

பெரும்பொருளி னுசையிலே பெயர்பெரிய சொக்கக்கோன்
[4] பரிந்திடுநுங் கவிதைகளிற் பாதி[5]பகுந் தின்றென்மேற்
றிருந்தநவின் றிடுவீரேற் சேர்ந்தவழி யானுமக்குப்
பொருந்தவுரை செய்வலெனப் புலவர்களு மியைந்தனரால். (கஉ)

---

எ. கொச்சையலன் - இழிந்தவனல்லன்; "அறக்கிழவன் மனிதன்விர கில்லாக் கொச்சை" என்பது ஆனந்தலகரி, கஅ. விடமன் - விஷமன்.

கூ. ஒன்றையு மீட்டுரையார். கo. இல் - இல்லை.

கக. ஊர் பொதுவன் - ஊர்ப்பொதுவிலுள்ளவன்; பொது - சபை; பொதுவன்-இடையன். அண்டன்-தேவன், இடையன். சிற்றிடைச்சி - சிறிய இடையையுடைய உமாதேவியார், சிறிய இடைச்சாதிப் பெண். பசு-உயிர்கள், பசுக்கள். முட்டாமல் - குறையாமல், முட்டுதல் செய்யாமல். பாசம் - ஆணவ முதலிய மலங்கள், கயிறு. மன்றாடி - சபையில் ஆடுபவன், எருமன்றத்திலாடுபவன். கால்மாறி- கால்மாறி ஆடுபவர், கால்மாறிநிற்கும் இடையன். இச்செய்யுளும் "பாச நீக்கிமூ வகைப்ப சுக்களை, மாசின் முத்தியாம் வனத்தின் மேய்த்திடு, மீசன் மினனேகே ரிடைச்சி காதல, ஓசில் பால்வணத் தண்டர் காதலே" (திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி, எக) என்பதும் ஒருவாறு ஒத்திருத்தல் காண்க.

கஉ. கோன் - அரசன், இடையன். பகுந்து - பங்கிட்டு.

(பி - ம்.) [1]'கவிதைசொல்வார்' [2]'கேட்டருளீர்' [3]'மற்றொருத்தர்' [4]'பரிந்தன' [5]'பகுத்து'

ஆங்கவர்க ளியையாமு னதர்காட்டி யொளித்தருள
வீங்கிவனும் பாங்கருள்சே ரியற்சிவனே யெனத்தெளிந்து
தேங்குபுகழ் தருமதுரை சேர்ந்துயரா லயத்தணைந்து
தாங்கருமன் பொடுபெருந்து சாத்தினர் தமிழ்மாலை. (கங)

சாத்திய[1]நற் றமிழ்கொண்டு தமிழ்ச்சொக்கன் புவிபோற்றும்
பார்த்திவரே யெனப்பாத்து விடைகொடுப்பப் பாவலர்கள்
சேர்த்ததமிழ்ப் பாதிகொடு தென்னனையுங் கண்டறிஞ
ரேத்துசிறப் பொடுங்களித்துப் போயினர்த மியனாட்டு. (கச)

ஆகத்திருவிருத்தம் - கசசஎ.

---

## ருக.—புலிமுலை புல்வாய்க்கருளின திருவிளையாடல்.*

தலமிலங்க முன்னொருகாற் றண்கடம்ப வனத்தின்கட்
புலிநெருங்கி வரும்புல்வாய் பொலிவின்றி [2]யுலவுங்காற்
பலமிலங்கோர் நிலைப்புல்வாய் பயந்தபுனிற் றிளமறியை
நிலைதுவன்று முதுதூற்றின் புடையொதுக்கி நீர்வேட்டு. (க)

போயெங்கும் புக்குழன்று புற்றீந்த கோடையின்கண்
வாயுலர்ந்தோர் வாவியின்கண் வந்துபுனல் பருகுங்கா
னேயமி[3]லா வொருவேட னீங்காம லொளிநிற்பான்
காய்பசியா லதுகண்டு களிகொண்டு படவெய்தான். (உ)

கணைபடுங்கான் மறியைநினைந் தழுதுகனி கசிந்துவிழுந்
திணையிலுயிர் நீக்கியபின் யாவுக்குந் தாயாகித்
தணிவறவெங் கனுநிற்பான் றரியாது பிரியாத
வணியதொரு புலியைமுலை யூட்டென்ன வருள்சுரந்தான். (௩)

---

கங. இயற்சிவன் - சுந்தரேசர், இலக்கணத்தையுடையசிவன்; இயல் - அழகு, இலக்கணம்.

(ருக.)

க. புல்வாய் - ஒருவகைமான். ஓர்நிலை - ஓரிடத்தில். பயந்த - பெற்ற. புனிற்றிளமறியை - ஈன்ற அணிமையையுடைய கன்றை. [இறக்க.

உ. புல் தீந்த - புற்கள் கரிந்த. ஒளி நிற்பான் - ஒளித்துநிற்பவன். பட -

௩. பிரியாத - பகைமையினின்றும் நீங்காத.

* "புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி" (திருவா. போற்றி. உ0எ); "தழல்விழிப் பேழ்வாய்த் தரக்கின் றளிமுலை, பைங்கட் புல்வாய் பாலுணக் கண்ட, வருணிறை பெருமான்" (கல். சஉ); "புல்வாய் புலியின் முலையுண்ணும்" (திருநாட்டு. ௩); "பொன்னெயிற் கடம்ப வனத்தபுல் வாய்க்குப் புலிமுலை யளித்த புண்ணியம் போல்" (திருகாளத்தி. பாத்து. ருக); "கொல்வாய்ப் புலிமுலை புல்வாய்க் குதவிய, தொல்லினை யென்ன" (மதுரை மும்மணிக்கோவை, உஅ.)

(பி - ம்.) [1]'நற்கவிதை' [2]'புலர்ந்ததாற்', 'உலவியதாற்' [3]'இலாதொரு'

பாய்புலியு மிரங்கிமனஞ் சுரந்துமுலை பாலளிப்பா
னேயமொடு வரக்கண்டு வால்குழைத்து நேர்வந்து
தாய்வரவு காணுமற் றளர்ந்தமறி பயந்தணிந்து
தூயமுலைப் பாலுண்டு துள்ளிவிளை யாடியதால். (௪)

வேறு.

மலரய ஞணி முன்னர் வரும்விதி மாற்றல் கண்டு
சிலைமலை வில்லா னல்ல தியார்வல்லா ரென்று சென்று
தலையினால் வணங்கி வாழ்த்தச் சசிபதி யதிச யிப்பப்
புலிமுலை புல்வா யுண்டு பொலிவுற வளரு நாளில். (௫)

பொருளினு மொழுக்கத் தானும் பொருவரும் போதத் தானு
மருளினுஞ் சிறந்து நீடோ ரருங்குல வணிகன் பொங்கர்
மருமலி மலர்த்த டஞ்சூழ் மாமண வூரி னின்றுங்
கருதிய பொருள்கண் மேலுந் தேடுவான் கருதிப் போனன். (௬)

பச்சிம திசையை நோக்கிப் பரிவொடும் போகி நன்கு
நச்சின தேயம் புக்கு நன்பொரு டேடி மீண்டாங்
கிச்சையி னடந்து மெல்ல விலங்குதன் பதியை நோக்கி
[1]யச்சமற் றெல்லு மல்லு மதரிடை வருத லுற்றான். (௭)

வேறு.

வழிவசத்தினி ருங்கடம்ப[2]வ னத்துவந்துழி வணிகனும்
பொழுதுபுக்கது கண்டுவெம்பியு ளம்புலம்புறு காலையி [னே
லெழிலார்மிகுத்ததொ ரொலியொலித்திட வேதம்விட்டதன் வழியி
ரொழுகவற்புத மாவிருப்பதொ ருத்தமப்பதி கண்டனன். (௮)

கண்டவந்நகர் தன்னுளன்பொடு கண்டனன்களி றெட்டும்வாழ்
பண்டையாயத லத்தையும்பழ தொன்றிலான்படி மத்தையு
மண்டர்நாயக தொண்டர்நாதவெ னத்துதித்தரு ளாலருந்
தொண்டுசெய்துவ ணங்கியங்கொரி டத்தமர்ந்து துயின்றனன். (௯)

---

௫. விதிமாற்றல் - புலி மான்கன்றுக்குப் பாலளிக்கச் செய்தல். சிவபெருமானுடைய ஆச்சரிய சக்தியைப் பிரமதேவர் வியந்ததாக இங்கே கூறியிருத்தல் போல, ௯௦: ௧௫ - ஆம் செய்யுளிலும், ௯௨: ௧௭ - ஆம்செய்யுளிலும் கூறியிருத்தல்காண்க. சிலைமலைவில்லான் - மலையின்ற வில்லாக மேருவையுடையவன்; சிலை - மலை. சசிபதி - இந்திரன்.

௬. சிறந்துநீடிய. மணவூர்: பாண்டியர்களின் பழைய இராசதானி; மணற்புரமெனவும்வழங்கும்; மதுரைக்குக்கிழக்கே யுள்ளது. மேலும் - பின்னும்; பொருள்களைப் பின்னுந்தேட.

௭. பச்சிமதிசை - மேற்றிசை. எல்லும் அல்லும் - பகலும் இரவும்.

௯. படிமம் - திருவுருவம். தலத்தையும் படிமத்தையும் கண்டனன்.

(பி - ம்.) [1]'அச்சமுற்று' [2]'வனத்தின்வந்துறு'

துயில்கொளுந்தனி வணிகனுஞ்செறி தொலைவிலாவிரு டொலையவே
வெயில்விரிந்தபி னனுகரும்பெரு வனமதாகவெ ருண்டெழுந்
தெயிலிலங்கிய கோயில்கண்டுதி கைத்திதென்கொலெ னத்தெருண்
டயிலிலங்கும ணற்புரத்தர சற்குவந்தறி வித்தனன். (கo)

வேறு.

மன்னிய வமைச்ச ரோடும் வணிகன்முன் னவின்ற வெல்லா
முன்னுற நவின்று காண்பா ஞசையான் முடுகி யாங்கட்
டென்னவ னடைந்தா னென்றுஞ் சித்திரைச் சித்தி ரைக்குப்
பொன்னகர் மகவான் வந்து போற்றுமா நகரி தன்னுள். (கக)

வேறு.

[1]குணமோ டடைந்திந் திரன்பரவுங் குளிர்ந்த கடம்ப வனத்தினையு
யணிசே ரந்த வனத்திலங்கு மழபா ருயரா லயத்தினையுந்
துணைசே ரந்த வாலயத்து ளிருக்குஞ் சொக்க நாதனையும்
[2]பணிகோ யிற்றென் கீழ்பாற்பொற் பதுமத்[3]தினையுங் கண்டிறைஞ்சி.

மற்றும் புதுமை [4]பலகண்டு வருவோர் சொக்கன் றிருவருளாற்
புற்றின் புல்வாய் புலிமுலைப்பா லுண்டு பொருந்தி விளையாடல்
கொற்றந் தருநெஞ் சுறக்கண்டு விசேட நிலமீ தெனக்[5]குறித்துச்
சற்றுந் தாழா தித்தலத்தி விருப்ப லென்றான் சயங்கூர. (கஙு)

இந்தத் தெய்வப் பதிக்கெல்லை யாதோ வென்று மயக்குற்றாச்
சிந்தைக் கினிமை தரும்பரம சிவனை யடைந்து துதிசெய்ய
முந்தைக் கியைந்த மயனூலின் முறையே சித்த ருருக்கொள்ளா
வந்திப் பிறையோ னெழுந்தருளி நடந்தா னெல்லை யடைவாக. (கச)

எல்லை நடவா [6]வொளித்தருள வேத்தி யருளை யதிசயித்துத்
தொல்லை மரபின் மணிமாடங் கூட மஞ்சு தோயிஞ்சி
மல்லல் வீதி [7]மடங்கழக மற்றுந் திருத்தி மாறின்றி
[8] நல்ல குடியும் பல்படையு நயப்ப வியப்ப வீற்றிருந்தான். (கரு)

வேறு.

செங்நெறித் தானை சூழத் திறைகொணர்ந் தரச ரேத்த
மன்னம ரேசன் சால வாழ்த்திட வேத்தி நாளுங்

---

கo. மணற்புரம் - மணவூர். அரசன் - பாண்டியன்.

கக. சித்திரைச்சித்திரைக்கு - சித்திரை மாதத்துள்ள சித்திரை நக்ஷத்திரத்தில் (திருவிளை. இந்திரன். கச); "சித்திரைச் சித்திரைத்தினத்து" (க: ஙஙு); "சித்திரைச் சித்திரைத்திங்கள்" (சிலப். ரு : கச.)

கச. மயனூல் - சிற்பநூல்களுள் ஒன்று. எல்லை அடைவாக நடந்தான்.

கரு. கழகம் - கல்விச்சாலை. நயப்ப - விரும்ப.

(பி - ம்.) 1'கணமாவிழிக்திந்திரன்' 2'பணிசேர் கோயிற்றென்பாற்' 3'தடமும்' 4'கண்டருகு' 5'குறுகி' 6'ஒளித்தலுமே' 7'தடங்கழனி' 8'நல்லபடையும் பலகுடியும்'

கன்னிமால் காளி யீசன் காக்குமா நகரி தன்னு
ளின்னதீர்ந் திருந்து தென்ன னெண்டிசை விசயஞ் செய்தான்.(கசு)

ஆகத்திருவிருத்தம் - கசகரு.

## ருச.—சாதாரிபாடின திருவிளையாடல்.*

ஓங்கிய முன்னோர் கால முயர்விஞ லறிவான் மிக்க
தேங்கமழ் நிம்ப மாலைத் தென்னவ னொருவன் றெண்ணீர்
வாங்கிருங் கடல்சூழ் வைய மதுரையி லிருந்து காப்பப்
பாங்குடன் சிறந்தா னங்கட் பத்திர னென்றோர் பாணன். (க)

கண்ணுத லழக னுக்குங் காவலன் றனக்கு மிக்க
பண்ணியல் பாடி யீசன் பத்தர்கட் கன்பு செய்தாங்
குண்ணெகிழ் நெஞ்ச நீற்றி னொளிதிகழ் மெய்யு மாகி
மண்ணவர் விருப்ப மெய்த வளம்பட வாழு நாளில். (உ)

பலர்புகழ் சென்னி மன்னும் பண்புடை நாட்டி னின்று
மிலகிய பரிசில் வேட்டங் கிசைவல்லா னென்றோர் பாணன்
றலமதி சயிப்ப வந்து தண்டமிழ் மதுரை புக்கு
வலியுடை மன்னற் கண்டு பாடினன் மதுர மாக. (ந)

வேறு.

மின்னும் புகழ்க்கு நல்லோனே வீரா கரனே வியனுலகின்
மன்னர் பரவு மன்னவனே மலயா நிலஞ்சேர் நாட்டரசே
முன்னை நெறிநூ லியலிசைகண் முழுது முணர்ந்த பெருமானே
யென்னை யொழிய விசைவல்லா ரில்லை யுலகி லெனவுரைத்தான்.(ச)

பாணன் பகரு மதுகேட்டுப் பழுதில் வழுதி யுளம்பெருக
நாணி யதனைக் காட்டாம லலை சொல்லி யணியாடை
பூணின் பயனு மினவெல்லா மொருங்கே கொடுத்து நாளும்வர
வேணும் பாண போவென்று விடுத்தான் விடுத்தற் கிடங்கூறி. (ரு)

---

கசு. கன்னிமால் காளி ஈசன் காக்கு மாநகரி - மதுரை; (திருநகர. கஉ - கரு; பயன் முதலியன, ரு.) ஏத்த வாழ்த்திட இருந்தென்க.

(ருச)

க. நிம்பமாலை - வேப்பமாலை. ச. மலயாநிலம் - தென்றல்.

ரு. நாளும் வரவேணும் - தினந்தோறும் வரவேண்டும்; "வேணுமாகில வேணும்" (பாரத. சூதுபோர் கசுரு.) விடுத்தற்கு - தங்குதற்கு.

* "முரன்றெழு கான முயன்றுவா நியைந்த, வடபுல விஞ்சையன் வைகிடத் தகன்கடைத், தென்றிசைப் பாண னடிமை யானெனப், போகா விறகுடன் றலைக்கடை பொருந்தி,............சாதாரி, யுலகுயி ருள்ளமு மொன்றுபட் டொடுங்க, விசைவிதி பாடி யிசைப்பகை துரந்த, கூடற் றிறையோன்"(கல். சச.)

பீடொன் றியவன் றனைமதித்துப் போய பின்னர்ப் பிரிவின்றி
[1]மாடு நின்ற முறைசெய்வோர் தம்மைப் பார்த்து மதியுடைநம்
பாடும் பாண பத்திரனை யழையு மழையும் பரிவினென
வோடுந் தகைமை யவர்விரைவி னோடி யழைப்ப வுடன்வந்தான். (௬)

பதறு வந்த விசைப்பாணன் பட்டுச் சட்டை யிட்டணியின்
புதுமா மணிகள் கதிர்வீசப் பொன்மண் டபங்கள் பொலிந்திலங்கு
மதிதோய் கோயி லுட்புக்கு மன்னர் பெருமா னனைக்கண்டு [னவே
துதிசெய் திறைஞ்சி வாய்புதைத்துச் சொன்னா னழைத்த தென்னெ

வளவன் பொன்னி நன்னாட்டில் வரிசை கூர வொருபாண
னளவில் பாணர் புடைசூழ வரிவைக் குழாத்தி னொடும்வந்து
விளரி முதலா நல்லிசைகண் மேன்மை பயக்கப் பாடியுளங்
களிகொண் டகத்துப் போனதுகொண் டழைத்தே னிங்குக் கழறுவனே.

இன்று பூசை குடமுழக்கம் [2]பருந்து மூங்கி லிலைவீழ்ச்சி
யொன்று முயர்சிச் சிலிபறவை யுச்சி மலைநீர் விழுக்காடு
நின்ற வோசை யிசையனைத்து நெறியிற் பாடு கேனென்று
வென்றி கூறி வந்தவனை வெல்ல வல்லையோ வெனக்கேட்டான். (௯)

கேட்ட மாறன் றிருமுன்பு கீத நாத னுரைப்பான்வான்
நீட்டும் புகழாய் நீயிருப்பச் சேர்ந்த வடியார்க் குயர்புகொடுத்
தேட்டை நீக்கு மிசைச்சொக்க னிருப்பக் கேட்ட தென்னையிசைப்
பாட்டின் றகுதிக் கெனையொப்பப் பாடற் குண்டோ படிமீது. (௧௦)

அஞ்சே னஞ்சே னொருவர்க்கு மஞ்சா திங்கு வந்தவனை
மிஞ்ச வஞ்சம் படிபாடி வென்றே யோட்டி விடக்கடவேன்
செஞ்சொல் வல்லாய் தோற்றவர்கள் செயுங்கா ரியங்க ளுரையென்னப்
பஞ்ச வனுநன் பரிவெய்தி வியந்தா னுயர்ந்த பணிநல்கி. (௧௧)

---

௬. பீடு ஒன்று இயவன் - பெருமைபொருந்திய வாத்தியத்தையுடையவன்; எழுவாய்.

௭. பதறு - பதறி. பெருமான் - பெருமையையுடையவன்.

௮. விளரி - ஒருபண்.

௯. பூசை - பூனை. சிச்சிலி - மீன்குத்திக் குருவி. பறவை-குயில், வண்டு முதலியவை. உச்சிமலை நீர்விழுக்காடு-அருவியின்வீழ்ச்சி, விழுக்காடு-விழுதல். இச்செய்யுளின் பொருளை, "சிச்சிலி பூனை குட முழக்கஞ் செம்மைத்தா, முச்சி மலை நீர்விழுக்கா டொண்பருந்து-பச்சைநிற, வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை, யேயுங்கா லோசை யியல்பு" (இசைமரபு) என்பதனாலுமுணர்க; "வண்டின் றாரியுங் கஞ்ச நாதமுஞ், சிரலவா னிலையுங் கழையிலை வீழ்வதுமருவி யோசையு முழவின் முழக்கமும், வலம்புரிச் சததமும் வெருகின் புணர்ச்சியு, மின்னுமெல் லிசைப்பப் பன்னிய விதியோடு" என்பது கல்லாடம், உறு.

௧௦. கீதநாதன் - பாணபத்திரர்; "கானநாதர்" என்பர்பின்னும்; ௧௨. ஏட்டை - இளைப்பு. உண்டோ - யாரேனும் உளரோ.

௧௧. பணி - ஆபரணம். ௧௨. காயகன் - இசையில் வல்லவன்.

(பி - ம்.) [1]'பாடுநின்ற' [2]'சக்குமூங்கிலிலை வீழ்ச்சி'

## வே று.

நல்மலி கான நாதா நல்லிசை காண்பே ணுளைப்
பொலிவுடை நின்னி டத்துப் போவென விடைகொ டுப்பக்
கலைமுழு துணர்ந்த செல்வக் காயக னினிமை கூர்ந்து
தலையினால் வணங்கி வாழ்த்திப் போயினான் றனது தேத்து. (௧௨.)

இத்தக வறியா ராகி யெதிரிலை யென்று பேசி
யொத்திய ருளம் வல்ல பாடுவா னுடனே வந்த
வித்தகப் பாடு வார்கள் வரவரா வீதி யேறிச்
சுத்தசா ளரசங் கீதம் பாடிடத் தொடங்கி னார்கள். (௧௩)

சுந்தர வணிய ணிந்து தொகு[1]முடிச் சுற்றுஞ் சுற்றிச்
சிந்துரப் பொட்டு மிட்டுச் சிறந்தகுப் பாய மிட்டுச்
சந்தன மிட்டு வீணை தண்டியாழ் கையின் வாங்கி
வந்ததந் திரிதி ருத்திப் பாடினார் மயங்க வெங்கும். (௧௪)

மற்றவர் பாடக் கண்ட பத்திரன் மனங்க லங்கி
யுற்றது நமக்குக் [2]குன்று வுயர்புடைக் கான நன்னூல்
கற்றிசை வல்லே மல்லேங் காவலன் றிருமு னின்று
சற்றல வுரைத்தே மென்னாய் முடியுமீ தெனத்த ளர்ந்தான். (௧௫)

மிஞ்சநெஞ் சஞ்சி னேனு மெல்லிசை வல்லா னெல்லார்
நெஞ்சையுங் கடந்த செல்வ னேசர்கட் கென்று நேசன்
குஞ்சரந் தாங்குங் கோயிற் குழகனிங் கிருப்பக் கொன்னே
யஞ்சுவ தென்கொ லாமென் றாலவா யரன்பாற் சென்றான். (௧௬)

வேண்டிய தடியார்க் கீயு மெய்யனே கருணை வாழ்வே
பாண்டிநன் னுட னேயிப் பகையினை யடிமை வேண்டிப்
பூண்டிது கழித்தல் வேண்டும் புகலிலை யென்று வீழ்ந்து
மாண்டக விறைஞ்சி யேத்திப் போந்தனன் வருத்தத் தோடும். (௧௭)

---

௧௩. சுத்த சாளர சங்கீதம் - சுத்தமும் சாளரமுமாகிய ஸங்கீதம்; சுத்தம் - இயல்பான நடையுள்ள இசை; சாளரம் - வேறோர் இராகத்தின் நடையைத்தழுவி இனிமையை யுண்டாக்கும் இசை; இது சாலகம் எனவும் சாயாலகம் எனவும் வழங்கும்; "சுத்தசா ளரசங் கீதம் பாடுதற்கு" (௪௦.)

௧௪. முடிச்சுற்று-தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை. வீணையையும் தண்டையுடைய யாழையும்; வீணைவேறு, யாழ்வேறு; "குழலும் வீணையும் யாழு மென் றினையன குழைய" (கம்ப. ஊர்தேடு. ௬.) தந்திரி - தந்தி.

௧௫. நமக்கு குன்று உற்றது - நமக்கு ஓரிடையூறு மலையாகவந்துவிட்டது. வல்லேம் அல்லேம் - வல்லமையுடையேம் அல்லேம்.

௧௬. "குஞ்சரந்தாங்கு கோயிற் கூத்தன்" (௩௮: ௧௫); "குழகனே" (திருநா. தே.)

௧௭. பாண்டிநன்னுடனே: "பாண்டிநன் னுடைய யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே" (திருவா. திருப்படையாட்சி. ௧.) இப்பகையினைக் கழித்தல வேண்டும். இது பூண்டு. மாண்தக - மாட்சிமை பொருந்த.

(பி - ம்) [1]'முடிச்சாத்துஞ்சாத்தி' [2]'நன்று'

செப்புறு மிவன்ற னன்பைத் திருவுளத் தடைத்தி ரங்கி
மெய்ப்படு மாது மின்றி விரைவொடு மெவருங் காண
வொப்பருந் துயரந் தீர்ப்பா னும்பர்கட் கரச னாய
வப்பெருந் தலைமை யோனு மடிமையாம் வடிவு கொண்டான். (௧௮)

வேறு.

கடிகமழ் சடையையுங் கங்கை யாளையும்
படமுடை யரவையு மொளித்துப் பாண்மைசேர்
முடிமிசை நிறைவுற மூடினா னதோர்
செடிபடுந் துணியுடைச் சீரை சுற்றினான். (௧௯)

நெற்றியிற் றிலகநீ றொழித்து நீளரா
வெற்றுமென் குண்டல மிலங்கு காதிடைக்
குற்றமில் குறிஞ்சிலிக் கொத்து மன்றியே
துற்றிய [1]விடத்தாரங் காயுந் தூக்கினான். (௨௦)

தாவில்வெண் கவடியுந் தரித்துத் [2]தோண்மிசைக்
கோவையிற் சதங்கையுங் கோத்துக் கட்டினான்
காவியந் தார்பொலி மெய்யிற் காந்தளம்
[3]பூவினோ டாவிரைப் போதுஞ் சூடினான். (௨௧)

வெறிகமழ் நீறுமெய் பூசி வீதியி
லுறுமவர் தங்களை விலாவொ டிப்பமென்
கறைமலி கச்சையு நழுவக் கட்டியே
குறைவற நீள்பெருங் கொடுக்கு நாற்றினான். (௨௨)

துறைச்சிறு விரன்மரு தோன்றி தோன்றுகிர்
சிறக்கவிட் டஞ்சன மலர்க ணிறகவிட்
டிறைக்கழற் பெருவிர லிருப்பு மோதிர
மிறுக்கிவிட் டிரண்டினை யாண்டி பாடினான். (௨௩)

---

௧௮. திருவுளத்தடைத்து - திருவுளங்கொண்டு. இச்செய்யுளின் காலா மடி முரண்.

௧௯. செடி - நாற்றம்; செடிகளுமாம். துணி - துண்டம். சீரை - கந்தை.

௨௦. குறிஞ்சிலி - ஒருவகை மரம். விடத்தாரங்காய் - விடத்தேரை மரத்தின் காய்; இம்மரப்பெயர், விடத்தரை, விடத்தேரெனவும் வழங்கும்.

௨௨. விலாவொடிப்ப - சிரித்தலால் விலாவை ஒடிக்க; "கையர் விலாவொடி யாக்கினரால்" (௯௮: ௪௮.) கறை - அழுக்கு. கொடுக்கு - ஆடைத்தொங்கல்; "பேதித் தறுதற் கச்சைபுக்கத் ததிலே விட்டான் பெருங்கொடுக்கு" என்றார் முன்னும்; ௯௦: ௧.

௨௩. துறை - இசைத்துறை. மருதோன்றி - மருதாணி; இதன் இலையை அரைத்து நகங்களிற்பூசினல் அவை சிவக்கும். கையாண்டி - ஒருவகை இசைப்பாட்டு.

(பி - ம்.) 1'விடத்தலங்' 2'தோண்மிசை' 3'பூவிணையாவிரைபபோதிற்'

வேறு.

பரிவினான் மிக்க பாண பத்திர னடிமை யானென்
றுரனுடை விறகு வெட்டி யூன்றுகட் டாகக் கட்டி
யரியமென் முடிமேல் வைத்தாங் கம்பலஞ் சந்தி மற்றுந்
தெருவினு முலாவிப் பாணர் தெருவிடை முடுகிச் சென்றான். (உச)

மறுவறு முயர்மென் றோளின் வலிய[1]கோ டாரி மன்ன
முறுவல்செய் தாகம் வேர்ப்ப மொய்ம்பமர் தடக்கை வீசிப்
பொறை[2]யடி யானை வேண்டி யிழிதொழில் பூண்டு கொண்டாண்
டுறவொடு நின்று மெல்ல வுலாவினா னுலக நாதன். (உரு)

மாலையங் குழல்சேர் [3]பாணர் மாலையர் மாலை யெய்திக்
கோலவெள் வளைகள் சோர்வா ரவரவர் கோத்து டுத்த
சேலைகள் சரியநிற்பார் திருந்திய நாணி ழப்பார்
மேலுறு பசலைகொள்வார் [4]விரும்புசூல் கொள்வார் வீழ்வார். (உசு)

கந்தரம் வேர்ப்ப வேர்ப்பக் கட்டிய விறகு கூறி
வந்தவன் குமர வேளோ மதனவே ளோவெ ளித்துச்
சந்தைகள் பாட மண்ணிற் றனிவிளை யாடல் வல்ல
சுந்தரன் றானே யோமற் றியாவனோ வெனத்து தித்தார். (உஎ)

வேறு.

அருடங்கிய வடிவந்திக ழசலந்தரு முமைபங்கனும்
வரமொன்றும துரையம்பதி வரமங்கல விசைமங்கைய
ரிருகுன்றிரு தனமொன்றிடை யிடையும்படி கொடுவந்தனர்
தெருவென்செயு மினியிங்கர சிவசங்கர சிவசங்கர. (உஅ)

வேறு.

உரவிது நெடிதுநின் றெரியு மொன்றுபோ
லரிதிது கொடுவரு மடவி தூரிது
தருமொரு விறகொரு காசு தையலீ
ரெரிவிழுங் கொண்மினென் றினைய [5]கூறுவன். (உகூ)

---

உச. உரன் - வைரம்; "உரவிது" (உகூ.) ஊன்றுகட்டு - ஒருவகைக் கட்டு.

உரு. மொய்ம்பு - வலி.

உசு. மாலையங்குழல் - பூமாலையணிந்த கூந்தல். பாணர் மாலையர் - விறலியர்; விறலியரை மாலையரென்று வழங்கல் மரபு; ருஎ: ௬௫. மாலை எய்தி - மயக்கமுற்று. காட்சியாற் சூல் கொள்ளுதலை, "சொக்கனைக் கண்ட வீதி மங்கையர்.........பொங்கிய பெருஞ்சூல் கொள்வார்" (உஅ : ௬எ) என்பதனாலுமுணரப்படும்.

உஎ. கூறி - விலைகூறி. சந்தைகள் - வேதங்கள்.

உஅ. இடை இடையும்படி இருதனங் கொடுவந்தனர்: இடைதல் - மெலிதல்.

உகூ. உரவிது - வன்மையையுடையது. எரிவிழும் - தணல்விழும்.

(பி - ம்.) 1'கோடாலி' 2'அடியாரை' 3'மாதர்' 4'விரும்புமால்' 5'கூறினான்'

ஆடுவன் விறலிய ரருக ணேர்துபண்
பாடுவன் வளஞ்சொல்வன் பார்ப்ப னிற்பன்முன்
னோடுவ னிப்படி யுலாவிப் பாணர்தம்
வீடெலா நடித்தனன் விறகு விற்றிலன். (௩௦)

வேறு.

கூறிய பின்னர் முன்னர்க் குறுகிய பாண னில்லத்
தேறரும் புறத்துத் தெற்றி யேறல்கண் டிரவி போக
மாறிலா விறகு மூன்றி வைத்துல கங்க டோறும்
வேறற நின்றான் யாவுங் கடந்தவன் கிடந்தான் மெல்ல. (௩௧)

வேறு.

பாதார விந்தஞ் [1]சோதி நீண்முடி நேடிப் பண்பார்
வேதாவு மாலுங் காணா விண்ணவ னுலகுக் கெல்லா
மாதார மாகி நின்றா னரையிருட் போதின் மெல்லச்
சாதாரி யென்னுங் கானம் பாடினான் றரணி யுய்ய. (௩௨)

வேறு.

ஒடுக்குள் ளாளம் விந்துநாத மொலியு ருட்டுத் தூக்கெடுத்தல்
படுத்த னலிதல் கம்பித்தல் குடில மென்னுந் தொழில்பத்து
மெடுத்துக் [2]காட்ட நாதாதி யிமையோர் முதலா வதிசயிப்பப்
படைத்த விசையைத் தனிப்பாடப் பதினா லுலகு முருகியவால். ()

வேறு.

மருவிய விறலி யோடு மஞ்சமீ டலத்து வைகு
மரியசொற் பாணன் கேட்டீ தென்கொலென் றச்சங் கூர்ந்து
[3]விரைவொடு மெழுந்து சென்று வியன்சரா சரங்கள் யாவு
முருகிடப் பாடுவோய்நீ [4]யாரெனக் குரைத்தி யென்றான். (௩௪)

அத்திறங் கேட்டிளைத்தார் போனடித் தொடுங்கி யையா
கொத்திசை வல்லே னல்லேன் கொண்டிலார் விறகொ ருத்தர்
மெத்திய பயத்தால் வந்தேன் மெல்லிசைக் காச னைய
பத்திரற் கேவல் செய்யும் பண்ணறை யடிமை யான்காண். (௩௫)

---

௩௧. தெற்றி - திண்ணை. மாறு - மலாறு; ஒப்புமாம்.

௩௨. சாதாரி-ஒருவகைப் பண்: இது வடமொழியில் தேவகாந்தாரி யென்றுகூறப்படும்.

௩௩. இதிற்கூறிய இசைத்தொழில் பத்தினையும், "உள்ளாளம் விந்துவுடனாத மொலியுருட்டுத், தள்ளாத தூக்கெடுத்த லன்படுத்தல் - மெள்ளக், குருதி னலிதலகம் பித்தல் குடில, மொருபதிற் றென் றுரை" என்னும் இசைமரபு வெண்பாவாலும் உணர்க.

௩௪. மஞ்சம் - கட்டில்.

௩௫. கொத்து இசை - தொகுதியாகிய இசைகளில். பண்ணறை அடிமை - இசைபற்றவனுகிய அடிமை.

(பி - ம்.) [1]'சொக்கன்' [2]'காட்டினாதாதி' [3]'விரைவினினெழுந்து' [4]'யாரெனவுரைத்தி'

என்றிறை கூற முன்ன மென்கொலா மெனக்க லங்கிச்
சென்றுதன் னுழையுட் புக்குச் செறிதரு கிளைஞர்க் கூட்டிப்
புன்றலை யடியான் [1]பாடற் கொப்பிலை போற்று நாயன்
வென்றிகொள் பாடல் கேட்க வேண்டுமோ வேண்டா வின்றே. ()

[2] இத்திறப் பாடல் யாரே யறிகுவார் யாவும் வல்ல
வுத்தமன் பாடி னல்லா லொருவராற் பாட வொண்ணா
தெத்தலத் தோருங் காணப் பரிபவப் படுமு னின்றே
புத்திர ரோடுங் கூடிப் போவதே கரும மென்று. (௩௭)

வரையறு சிவிகையோடு மடிதரு கவிகை யோடு
முருவுடை மாத ரோடு முதவிய கிளைஞ ரோடு
[3] மரையிரு ளிடையின் மெல்ல வெழுந்தடற் பரியி னோடு
நிரைகளி னோடும் போனா னெஞ்சறை பறை[4]முன் னாக. (௩௮)

வேறு.

ஒக்குமொக்குமெ னக்கலங்கிடு மொக்கலோடும்வி ரைந்துதன்
மிக்கபேர்வலி கெட்டுமுட்டொடும் விட்டவூரில்வி டாதுளந்
துக்கமெய்திய கன்றுபோனது கண்டுதாய்தரு நகையொடு
மிக்கபத்திர னுக்கான்கன வின்கண்வந்துவி ளம்பினான். (௩௯)

வேறு.

பத்திரன் புலரு முன்னம் பரிவினா லயத்துச் சென்று
சத்தியக் குன்றே யுய்ந்தேன் றருமமாக் கடலே யுய்ந்தே
னெத்தலத் தினுமெ னக்கிங் கெதிரியார் நீயி ருப்பச்
சுத்த[5]சா ளரசங் கீதம் பாடுதற் கெனத்து தித்தான். (௪௦)

முன்புரந் தரனை மாலை யடிமையா வுடையாய் முற்று
மன்பிலா வடிய னேனுக் கடிமையென் றுரைப்ப தேகின்
[6] மென்பசுங் காஞ்சி வப்ப விறகினை வெட்டிக் கட்டித்
தன்புறச் சுமப்ப தேயென் றழுதுகை தொழுது சொன்னான். (௪௧)

வழுதிபால் விரைவின் வந்து மனவலி சாலப் பேசிப்
பழுதறு பாடு வானைப் [7]பண்ணியல் வாது பாட
வழுமுடி மன்ன ரேறே [8]யென்னுமுன் னாங்கு நின்ற
தழைவுடை முறைசெய் வோரை யேவினான் றரணி வேந்தன். (௪௨)

---

௩௬. இறை - விடை, தலைவன். நாயன் - தலைவன்.

௩௭. பரிபவப்படுமுன் - அவமானப்படுமுன். புத்திரர் - மாணாக்கர்கள்.

௩௮. மடிதருகவிகை - மடக்கிய குடை. மிக்க அச்சமுண்டான பொழுது நெஞ்சம்துடிக்குமாதலால் அதனைப் பறையறைதல் என்று கூறுதல் மரபு; "தீத்தரு முளம்பறை யறைய" என்பர்பின்னும்;குஎ:உரு;"இருவர்மா மனமும் பறையறைந் தயர்வுட னடுங்க" (வி. பாரதம், இராச. உ௪.)

௩௯. முட்டு - வாத்தியங்கள். ௪௩. விட்ட - தங்கிய.

(பி-ம்.) [1]'பாட்டுக்கு' [2]'இத்திறப்பாடலாரே' [3]'அரையிருளோடும்' [4]'கறங்க' [5]'சாளகசங்கீதம்' [6]'மென்றிருக்காம்' [7]'பண்ணிசை' [8]'என்னமுன்'

மற்றவர் சென்று வந்த பாணனை மனைக்கா ளுமற்
கொற்றவன் றிருமு னெய்திக் கூறுவா ரறியாப் பாண
னுற்றபே ரச்சத்தோடு மொருவரு மறியா வாறு
முற்றிர வின்கட் கெட்டுப் போயினன் முட்டுங் கட்டி. (௪௩)

[1] என்றவர் சொல்லத் தென்னன் வென்றவா றெங்ங னென்ன
நின்றபத் திர னுரைப்பான் யானல னொருனற் கங்குற்
றன்றிரு மிடற்றான் மெல்லச் சாதாரி பாடிச் சென்று
வென்றிகொள் கருணைச் சொக்கன் வென்றன னிறகா ளாகி. (௪௪)

வித்தக மன்ன வென்ன வேந்தனு மொருனற் போது
பத்திர னடிமை யென்று பண்பட விறகு கூறி
யுத்தமத் தெருக்க டோறு முலாவினேன் றன்னை யானுஞ்
சித்திரச் சொக்க னென்றே கண்டனன் செய்தி [2]கொண்டு. (௪௫)

பேசவ தென்கொல் காணப் பேரருள் கூர்ந்து காணு
வீசனுன் னினைவின் வந்தா [3]னெஃ:னினி வேண்டு மென்று
தூசணி முதலா நல்கித் தும்பிமீ தெருத்தத் தேற்றி
யோசைசேர் நகரி தன்னை வலம்வரு வித்தா னேங்க. (௪௬)

தன்றிருக் கரங்கள் கூப்பி யாவர்க்குந் தலைவர் நீரிங்
கின்றெழுந் தருளு மென்ன வின்னிசைப் பாணன் வாழ்த்திச்
சென்றுதன் னுறையுட் சார்ந்து சேர்ந்தவர்க் [4]கியன்ற நல்கி
மன்றுளு தனையே பாடி யிருந்தனன் மகிழ்ச்சி கூர்ந்து. (௪௭)

பாண்டியன் பல்கா லீசன் [5]பரிவுகண் டதிச யித்து
வேண்டிய செய்ய வல்லான் வெல்லவல் லான ருட்சேர்
காண்டகு சொக்க னல்லாற் கண்டதுண் டோத லத்து
மீண்டொரு தெய்வ மென்றான் சென்னியும் வியந்தான் கேட்டு. ()

கனத்திறை சொல்லக் கண்ட கருணைமே றிறைவி சென்று
பனிப்பற நகைத்து வாங்கிப் பாணர்தம் மடியார் சாலத்
தனிப்பர தேசம் போனால் விறகையுஞ் சுமந்து தாமே
நினைப்பற வருவ ரென்ற வளனுரை நின்ற தென்றும். (௪௯)

ஓதரு மனத்தால் வாக்கா லுணரொணுன் கருணை கூர்ந்து
தூய்தகு மடிமை வேண்டி யடிமையாய்ச் சுமத்தல் கண்டு
மாதலா லடியார் தங்கட் கெளியவ னரன லாது
வேதவாய்க் கண்ட துண்டோ வேறொரு தெய்வ மெண்ணின். (௫௰)

ஆகத் திருவிருத்தம் - ௧௫௧௩.

---

௪௬. நீடு தும்பி எருத்தத்து - நீண்டயானையின் பிடரியில்.

௪௮. பல்கால் அதிசயித்து. சென்னி - பாணபத்திரன்.

௪௯. கனத்திறை - விறகின் சுமையையுடைய சிவபெருமான். சொல்ல-தாம் பாணர்க்காகச் சென்றுவந்ததைச் சொல்லியருள. பனிப்பு அற - நடுக்கம் நீங்க. வாங்கி - விறகுகட்டை வாங்கிக்கொண்டு; வாங்கி என நிறுவினை இயைக்க.

(பி - ம்.) 1'என்றது சொல்லத்' 2'கண்டு' 3 'ஏதினி' 4 'இனியநல்கி, மன்றுளுயனையே' 5'பத்திகண்டு'

## ருரு.—திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.*

மின்னுபுகழ்ப் பத்திரன்றென் னவன்க ளூரு மேவாது சுந்தா ன்பான் மேவி யன்பி, னன்னெறியிற் பாடுங்கா ளுத மெய்ய [1]ளுதா ந்த ளுதத்துக் கினிய நாத, னின்னிசைக்குத் தானரசா யிருப்பப் பாடு மிவன்கண்டத் திசைக்கினிமை கூர்ந்து பாங்கர், மன்னுமைமா தொடுநீங்கா துருக்க ரந்து வந்திருப்ப வந்தரத்து வானோர் [2]வாழ்த்த.

கானநெறி பாடிமுடித் தேகுங் காலைக் காசொருகா [3]லணியொரு கான் மணிக ளோர்கா, லீனமிலா சனமொருகான் மவுலியோர்கா லின் னதெனு தெடுத்தடைவே யிலங்க வைத்து, ஞானமுதல் வன்போகக் கண்டு [4]வாழ்ந்து நாளுமகிழ் மிகவிரைவிற் கொண்டு போந்து, தீன மற [5]வுண்டுடுத்து வந்தோர்க் கிட்டஞ் செய்தருள்சிந் தனைசெய்வன் திறத்துச் சேர. (உ)

இத்தகவு தனிநடந்து செல்லுங் காலை யிறைவனுக்குந் தனக்கு முத லில்லை யாகச், சித்தமகிழ் பொருள்வேட்டோர் மன்னர் மாட்டுஞ் செல்லாதங் கிரவுபகல் சிவனைப் பாடி, மெத்துமிடி யினுமிருப்போ [6]னொருநா ளுடி விறலியர்பா டகர்பாணர் புகழக் கண்டு, புத்தியிலைத் தென்செய்கே னிறைவா வீவான் பொருளில்லை யென்றறையிற் றுயி ன்றான் புக்கு. (௩)

[7] அறியுமிவன் கொடைத்தகவுந் தன்பால் வைத்த வன்புங்கண் டின்பங் கூர்ந் தறையிற் சென்று, மறுவறுநல் வினைசப்பாண கொடுத்த லாலே வறுமையடைந் தனைநந்தம் பொருளு னக்கே, பிறரொருவ

௧. தான் அரசாய் இருப்பவும். அந்தரத்து - ஆகாயத்தில்.

உ. ஞானமுதல்வன் - சிவபெருமான். தீனம் - வறுமை. அருள்சிந்தனை செய்வன் - திருவருளைச்சிந்திப்பன்.

௩. ஈவான் - புலவர்களுக்கு ஈதற்கு; உசு: ௩௩.

* "தார முய்த்தது பாணற் கருளொடே" (திருஞா. திருவியமகம், திரு வாலவாய்); "பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" (திரு ஞா. தே. கோளிலி); "குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதி மலி புரிசைத் திருமுகங்கூறி, யன்புருத் தரித்த வின்னிசைப் பாணன், பெற நிதி கொடுக்கென வுதவிடுத் தருளிய, மாதவர் வழுத்துங் கூடற் கிறைவன்" (கல். ௪௫.)

(பி - ம்.) [1]'நாதாந்தத்துக் கினியநாத ளுதம்' [2]'போற்ற' [3]'அணியொரு கா லமணி யோர்கால்' [4]'நாளு நாளு மவாவற விரைவிற்' [5] 'உண்டுடுத்தும் வந் தோர்க் கிட்டுஞ் சிறந்தருள் சிந்தனை செய்வன்' [6]'ஒருநாளுடி' [7]'அறியுமவன்'

ரறியாமற் றருத லாலே பிறங்குபொரு ளறைகாப்போர் முதலா யாரு
ங், குறைவிலுயர் பண்டாரப் பொருள்க டம்மிற் குறித்தனகண் டில
மென்னக் கொதித்தெ ழுந்தே. (௪)

வேறு.

எப்பெரும் பொருளுஞ் சாலக் களவு [1]போ கின்ற வென்றுந்
தப்பிய முரிவா யிலலே தாளுறு கதவஞ் சென்று
கைப்படத் திறந்தா ரில்லே கள்ளர்யா ரியாவும் வல்ல
வொப்பருஞ் சொக்கன் றன்னை யொழியவே றில்லை யென்று. (௫)

இன்னல்கூர்ந் தைய கோவென் றிரப்பக லையுற் றென்னை
முன்னுற நாடி நாடி முறையிடத் தொடங்கா நின்றார்
மின்னிய பொருள்க டம்மை மீளவுந் தருவே மாயின்
மன்னிய மனிதர் முற்று [3]நோகுவர் வழக்கு மன்றே. (௬)

[4]உனக்கினி யளித்தற் கென்பா லுறுபொரு ளில்லை யென்றன்
மனத்தினுக் கினியான் றூயான் மகிழ்ந்துநம் மடியார்க் கென்று
நினைத்தன கொடுக்க வலலா [5]னிலத்துயிர் கழறுஞ் சொற்க
ளனைத்தையு மறிந்தி ரங்கு மன்புடைச் சேர மான்காண். (௭)

விதமுறு [6]தனங்கண் மிக்க வேண்டிப வளிப்பன் றூழா
[7] ததர்வுற விரைவிற் சென்றிவ் வோலையை [8]யளித்தி யென்று
மதிமலி புரிசை யென்றோர் வரைதரு திருமு கத்தை
முதிர்தரு கனவிற் காணக் கொடுத்தனன் முக்கட் சொக்கன். (௮)

௪. பண்டாரம் - பொன்னறை; "பலலாரும் கொள்கவெனப் பண்டாரத் தனைத்திறந்து" திருவிளை.

௫. முரிவாய் - கன்னவாயில.

௬. வழக்கு - நீதி.

௭. எல்லாவுயிர்களுஞ் சொல்லுகின்ற சொற்களை அறிந்துகொள்பவராத லால் அவருக்குக் கழறிற்றறிவார் என்பது திருநாமமாயிற்று; பெரிய. கழறிற் றறிவார். கஉ - ஆம் திருவிருத்தம்பார்க்க.

௮. "மதிமலிபுரிசை" என்னும் திருமுகப்பாசுர அகவல் வருமாறு:—"மதி மலி புரிசை மாடக் கூடற், பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை, யன்னம் பயில் பொழி லால வாயின், மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம், பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க், குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ் குரு மா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச், செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க, பண் பால யாழ்வல பாண பத்திரன், றன்போ லென்பா லன்பன் றன்பாற், காண்பது கருதிப் போந்தனன், மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

(பி - ம்.) [1]'போகின்றதின்றும், தப்பியமுரிவாய்' [2]'வேறேகா தென்று', 'வேறுகாதென்று' [3]'கோவர்கள்' [4]'உனக்கினியெனக்களித்தற்கு' [5]'நிலத்துவாழு யிர்த்தாக்கள்' [6]'தனங்கள்வாழ' [7]'இதமுற' [8]'கொடுநீ'

துய்யநன் னெஞ்சன் வாங்கி முடிமிசைச் சூடிக் கொண்டிங்
கையனே பொருளை வேண்டி [1]யன்புடை யின்னை விட்டு
வையகங் காப்போர் தம்பான் மன்னவோ வென்ன நந்த
மெய்யுரை மறுத்தல் வேண்டா [2]மேவென மறுத்தா னில்லை. (௯)

பழுதிலா நாயன் சொல்லை மறுத்திடல் பாவ மென்று
தொழுதுமுன் றுயிலு ணர்ந்தான் சொக்கனைக் கண்டா னில்லை
யெழுதிய திருமு கங்கண் டதிசயித் திறைஞ்சி யொல்லை
யுழைகடந் திரவிற் போனா னொருவரு மறியா வாறு. (௧௦)

மல்லலஞ் சிறப்பி னோங்கு மாமலை நாட்டு ளன்பார்
வில்லவன் விரும்பி வாழு மேதகு மணிக்கு டங்கள்
சொல்லரு மிரவி யென்னச் சுடர்விடு முயர்மா டத்துச்
செல்லமர் கொடுங்கோ ளூரிற் சென்றனன் சிறிது நாளில். (௧௧)

தாங்கரும் பசியா னைந்து தளர்வுறும் வறுமை யாள
னீங்கிவ னொருவ னென்றே யாவரு மிகழ்ந்து கூற
வோங்கிசை யுருவமெங்கு மொளிகொள்வெண் ணீற்றான் மூடி
யாங்கொரு தண்ணீர்ப் பந்தர் மூலையி லமர்ந்தான் மெல்ல. (௧௨)

இன்னதன் மையினி ருப்ப விரவிடைச் சேர மான்கட்
பன்னிசைச் சொக்கன் சென்று பாடுநம் பத்தன் காண்பா
னின்னக ரடைந்தான் றேடி நிறைவுசெ யென்னக் கேட்ட
மன்னவன் றுயிலு ணர்ந்து மந்திரி களைவி டுத்தான். (௧௩)

நயந்துறு கனவின் செய்தி நவின்றுமுன் விடுப்பப் போனோர்
[3] பயின்றநீண் மறுகு தோறும் [4]பரந்துறு நவமு தாக
வியைந்தவோர் பத்தர் மேவக் கண்டிரோ வென்று நாடி
யுயர்ந்தவன் றன்னை யந்த வுழையிடை யிருப்பக் கண்டார். (௧௪)

அரியமா தவத்தீர் காண்பா னாசையா யிருந்தா னும்மை
யுரைகெழு மரசன் றன்பா லுவந்தெழுந் தருளு மென்னக்
கருதிநீ ரழைப்ப மேவேன் காவலற் கிறையிற் சென்று
பெரியகா ரியத்தின் வந்தே னுரைத்திடும் பிறங்க வென்றான். (௧௫)

---

௧௧. நாயன் - தலைவன். வில்லவன் - சேரன். செல் - மேகம்.

௧௨. பசியும் வறுமையுமுடைமையை, "பசிவ்வால் குரவலைப்பப் பசியொரு புறத்தலைப்ப" (௧௮) என்பதனாலு முணர்க; "இசையுருவம்" என்றது அவருக்குள்ள ஸங்கீதப்பயிற்சியின்மிகுதி கூறியவாறு.

௧௩. நிறைவு - மகிழ்ச்சி.

௧௪. அந்த உழை இடை - தண்ணீர்ப் பந்தரிடத்தே.

௧௫. அரசன் உம்மைக்காண்பான் ஆசையாயிருந்தான். உரை - புகழ். பெரியகாரியம்: "பெரியகாரியமுள" (கம்ப. வேள்வி. ௫௬.)

(பி - ம்.) [1]'அன்புறு' [2]'மேகென' [3]'பயின்றநீண்' [4]'பகர்ந்துறு'

பணிவிடை யமைச்சர் போந்து பகர்ந்தது சாற்றப் போற்று
மணிமுடி யரசன் சால மகிழ்ந்துவா கனத்தி னேரு
னணிபொலி மணிகள் சிந்த வடியிணை நோவச் சார்ந்தாங்
கிணையிலா தவனைச் சொன்ன வெல்லையி லிருப்பக் கண்டான். (௧௬)

நின்றமன் னவனைப் பாரா னிறைந்தபே ரருளைப் பார்த்தாங்
கொன்றிய புளகத தோடு மொழியிலாக் கண்ணீ ரோடுஞ்
சென்றவ ரதிச யிப்பச் சிறப்புடை யிசையெ டுத்து
மன்றினு ளாடுஞ் சொக்கைப் பாடினான் மதுரைப் பாணன். (௧௭)

அரசனுஞ் சிவன்பால் வைத்த வன்புகண் டுருகி யந்தோ
பரிவினல் குர[1]வ லைப்பப் பரியொரு புறத்[2]த லைப்ப
வுரைகெழு கானம் பாடு முறுதியைப் பாரீ ராதிப்
பரமனே யிவர்வே றல்ல ரென்றுபன் முறைது தித்தான். (௧௮)

பத்தரெங் குள்ளீர் வந்த காரியம் பகரு மென்ன
வுத்தம மதுரை நம்மூ ருன்றனக் கென்று நல்ல
சித்திரச் சொக்கன் றந்த திருமுகங் கொணர்ந்தே னென்று
பத்திரங் கொடுத்[3]தொ துங்கிப் பத்திரன் பணிந்து நின்றான். (௧௯)

வேறு.

இருமைசேர் திருமுக மிறைஞ்சி யீடுகொண்
டரிதிகழ் தவிசின்[4]மீ திருத்தி யாதரித்
துரைகெழு பாசுர வுரையைக் கண்டெழும்
பரிவொடு சூடினன் பாடி யாடினன். (௨௦)

தன்வயிற் சுந்தரன் சால வைத்துள
மன்னிய பரிவினைக் கண்டு [5]கண்டுவாழ்ந்
தின்னிசைப் பாணனை யெடுத்த ணைத்தன
னுன்னரு மவன்செய லொன்றும் பார்த்திலன். (௨௧)

---

௧௬. விரைந்து வந்தமையால் மணிகள் சிந்தின. சேர நடந்து சென்றமை, ௩௦-ஆம் பாடலாலும் வலியுறுகின்றது. சொன்ன எல்லை - தண்ணீர்ப் பந்தர்; ௧௨.

௧௯. பத்திரம் - திருமுகம். உன்றனக்கென்று தந்த திருமுகமென்க; உன்றனக்கு என்றும் நல்ல சொக்கன் என இயைத்தலுமாம்.

௨௦. இருமை - பெருமை. ஈடுகொண்டு - மனங்களித்து. சூடினன் - தலைமேல் வைத்துக்கொண்டான்.

௨௧. திருமுகப் பாசுரத்தில், "தன்போலென்பா லன்பன்" என்றதனால் தன்வயின் வைத்துள்ள பரிவு காணப்பட்டது.

(பி-ம்.) [1]'அசைப்ப' [2]'அசைப்ப' [3]'ஒடுங்கி' [4]'மீதேற்றி' [5]'வாழ்ந்தனன்'

வேறு.

ஓடை யானைப் பிடர்மிசை யோங்குற
நாடு காண நகர்வலங் கொண்டுபோய்க்
கூட நீடுதன் கோயிலுட் புக்கல
1 ரேடு தாங்கு தவிசி லிருத்தினன். (உஉ)

வேறு.

இருந்தவன் றன்னை யீச னாகவே பாவித் தெண்ணெய்
வருந்துமெய்ம் முழுதும் பெய்து மஞ்சன மாட்டிச் சூட்டிச்
சுரும்புசூழ் மாலை சாத்தித் தூசுதன் கலவை பூசிப்
பரிந்தறு சுவையி னூட்டிப் பணிந்தனன் கரங்கள் கூப்பி. (உ௩)

பேணுற்ற காவற் றோல்லைப் பெரும்பொரு ளறையுட் பட்ட
வாணிப்பொன் காசு தூசு தேசுடை யணியா ரங்கள்
மாணிக்க முத்து மற்றும் வகைவகை பொதிசெய் தோங்கப்
பாணற்கெண் ணிறந்த கோடி பரிப்பவர்க் கொண்டு கட்டி. (உ௪)

திரள்பரி கயங்க டிண்டே ரவனிகள் சிறக்க நல்க
வருளுடை யன்பன் கோதை யன்புகண் டதிச யித்துக்
கருதிய தனம னைத்துங் கண்டுகைக் கொண்டு மன்னர்க்
குரியன கொள்ளேன் சொக்க னுயர்திரு வாணை யென்றான். (உ௫)

மன்னது கண்டு சால வாடிமுன் றெளிந்தி றைஞ்சி
யென்னபுண் ணியஞ்செய் தேன்மற் றிங்கிறை யருளின் வந்து
மின்னுபா வலர்க்கு நாளும் விதரணஞ் செய்ய வேண்டும்
பொன்முழு தையுங்கைக் கொள்ளப் பெற்றதே போது மென்றான்.()

முன்புற நின்று போற்றி யின்னன மொழியக் கண்ட
வன்புடைப் பாண னஞ்சி யடிதொழு தவனி காக்கு
நன்குல வரசே யென்னை யிப்படி நவிலா நின்ற
தென்கொனன் கிலாத யானோ ரிழிகுலப் பாண னென்றான். (உஎ)

---

உஉ. ஓடை - யானையின் நெற்றிப்பட்டம்.

உ௩. மெய்முழுதும் எண்ணெய். பய்து மாலை சூட்டித் தூசுசாத்தி.

உ௪. பொருளறை - பொன்னறை.

உ௫. கோதை - சேரர். ஆணை - கட்டளை.

உ௬. அதுகண்டு - திருவாணை கூறியதைத் தெரிந்து, முன்வாடிப் பின் தெளிந்து. "என்னபுண்ணியஞ் செய்தனைநெஞ்சமே" (தே.) விதரணம்-கொடை.

உஎ. என்னை - அடியேனை.

(பி - ம்.) 1 'ஏடிலங்குதவிசிலிழிச்சினன்'

வியந்தனன் பொறையர் கோமா னிலங்கெறும் பீறு தாக
நயந்துல கனைத்துந் தந்த நான்முக னாதி யாக
வுயர்ந்தபல் பிறப்புந் தோறு முயிர்க்குயி ராய்நம் மீசன்
சயம்பெற நிற்றல் கண்டீர் தாழ்ந்ததே துயர்ந்த தேது. (௨௮)

இரந்திது பல்காற் சொல்வ தெம்பெரு மக்க ளென்னை
பொருந்திய சிவனே யாகக் கண்டனன் புதுமை கூர
வருந்தவ னாணை யாலே நிற்பதற் கறைய மாட்டேன்
விரைந்தெழுந் தருளு மென்று விடுத்தன னல்லாட் கூட்டி. (௨௯)

நற்றவன் போகப் பின்னர் நடந்துபோய் மீண்ட வஞ்சிக்
கொற்றவன் கோயில் சேர்ந்தான் கோதைதன் பரிச னத்தா
லுற்றொளி யுடம்பு பெற்றாங் குறும்பரி சனங்க ளோடும்
பற்றிய தனங்க ளோடும் பாணனு மதுரை புக்கான். (௩௦)

வம்பவி ழலங்கற் றென்னன் வரிசைகண் [1]டதிச யிப்பத்
தும்பிநீ டெருத்தத் தோங்கித் தோரைசா மரைகள் வீசப்
பைம்பொன்வெண் குடைநி ழற்றப் [2]பார்மக ளொளிய மிக்க
செம்பொனோ டணைந்த [3]செலவன் சொக்கனா லயத்துச் சேர்ந்தான்.

ஐயனே நினக்கு நல்லா னன்புடைச் சேர மான்போல்
வையகத் தில்லை செம்பொன் வரைபுரை தனம னைத்துங்
கையினின் றிருமு கத்தைக் காணுமு னளித்தா னென்று
பொய்யறக் காட்டிக் கொண்டு போயினா னருள்பெற் றாங்கு. (௩௨)

---

௨௮. பொறையர்கோமான் - மலைநாட்டார் அரசர். நான்முகனாதியாக எறும்பு ஈறாக வென்க; "அயன்முதலாகத் தன்னித் தப்புற வெறும்பீறாகத் தனுத்தொறு நிற்பேம்யாமே" என்பரின்னும்; நிக: ச; 'பிரஹ்மாதிபிபீலிகா பரியந்தம்' என்பது வடமொழிவழக்கு.

௨௯. இது - இழிகுலப்பாணன் என்பது. சொல்வது என்னை-சொல்வது யாது. எம்பெருமக்கள்- எமது பெரியோராகிய தேவரீர். அருந்தவனாணையாலே- சோமசுந்தரக்கடவுள் 'வரவிடுப்பதுவே' என்றருளிச்செய்தகட்டளையால். அருந்தவன் - சிவபெருமான்; "அருந்தவத்தோற்கே" (புறநா. க.) என்பதன் அடிக்குறிப்பைப்பார்க்க. நல்லாட்கூட்டி - நல்லவீரர்களைச்சேர்த்து; "ஆட்கொளாஞ் செப்பினான்" (சீவக. கஅ௨க.)

௩௦. வஞ்சிக்கொற்றவன் - சேரர். கோதைதன் பரிசனத்தால் - சேரருடைய ஸ்பரிசத்தால். பரிசித்ததை, ௨க - ஆம் செய்யுளாலுணர்க. பரிசனங்களோடும் - பரிவாரங்களோடும்.

௩க. வரிசை - சம்மானம். தென்னன்கண்டு அதிசயிப்ப. தோரை - பீலியாற் செய்தவிசிறி.

௩௨. தாமதிக்காது அன்றைத்தினமே அளித்த விரைவுதோன்ற, 'காணுமுன்' என்றார்.

(பி - ம்.) [1]'அதிசயித்து' [2]'பாரரசொளிய' [3]'செல்வச்சொக்கன்'

வந்தநா வலர்சுற் றத்தார் வறுவியோர் வாழ வென்றுஞ்
சிந்திய பொன்னு முத்துஞ் சேலையுங் கொண்மூ வென்ன
[1] முந்துறப் பொழிந்து நாளு முறைமையி னூழி வாழ்ந்து
சுந்தரன் றனையே [2]பாடி யிருந்தனன் றுதிப்ப யாரும். (௬௩)

ஆகத்திருவிருத்தம் - ௩௰௪௬.

## ௫௬.—பலகையிட்ட திருவிளையாடல்.

அன்பு மிக்க வறிவுடைப் பத்திரன்
றுன்ப மற்றுத் தொலைவி றனத்தொடு
நன்கு மிக்கவர் நாளும் வியப்புற
மன்சி றக்க மதுரையில் வாழுநாள். (௧)

நீடு செல்வ நிதியினைக் கண்டிசை
பாடு பாணர் பொருமையைப் பற்றியே
நாடி யென்றிவ னல்குர வாவனென்
றாடி யாரு மிருப்ப ருரைத்திடார். (௨)

மெய்ம்மை யற்ற வெறுப்புடைப் பாணர்தம்
பொய்ம்மை யைக்கண்டு புண்ணிய னின்றுமுன்
னையல் கோவைமுச் சந்தியு மன்றியே
மையி ராவும் [3]வழுத்துவ லென்றனன். (௩)

வேறு.

இப்பெரு விரதம் பூண்டாண் டியாமினி நடுவு சென்று
பொய்ப்பற யாரும் போற்றப் பாடுநாட் புகழ்க்கு நல்லோன்
றுப்புடை நெஞ்ச னேசஞ் சோதிப்பான் கருதி யோர்நாண்
மைப்படு மழைக்கு லத்தை விட்டனன் வருத்து கென்ன. (௪)

பல்வித விலங்கு நாற்காற் பறவைமா னிடர்கண் மற்று
மில்லடைந் தச்சங் கூர விருண்டுற விடித்து மின்னி
மல்லல்வான் முழுது மூடி வாளரா ஞான்ற வென்னச்
சொல்லருந் துளிக டேங்கச் சொரிந்தன சோனை மாரி. (௫)

௬௩. வறுவியோர் - தரித்திரர். என்றும் பொழிந்து நாளும் வாழ்ந்து பாடி யாருந்துதிப்ப இருந்தனன்.

(௫௬.)

௨. ஊடி - வெறுத்து.

௩. பொய்மை-மனம்வேறு வாக்குவேறு. முச்சந்தி-காலை, உச்சி, மாலை.

௪. யாமினி-இரவு. "புகழ்க்கு நல்லோன்" (௬௪: ௬.) துப்பு-தூய்மை. நெஞ்சன் - பாணர்.

௫. நாற்கால்விலங்கு. இல்-இடம். ஞான்றவெனவ-தொங்கின வென்ன.

(பி - ம்.) [1]'முந்தையினளித்து' [2]'நாடி' [3]'வழுத்துவம்'

அரும்பெரு விரதம் யானின் றழியினு மொழியே னென்று
சொரிந்திடு மழையை நல்ல தூமலர் மழையாக் கொண்டு
வருந்தியா லயத்துக் காலாற் குறிவழி தடவி வந்து
தெரிந்திசை யிசைத்தான் வல்லான் செயலென வுணர்ந்து தேறி. ()

முன்னிகழ் புங்க வத்தின் பின்னுற முதிர நின்று
தென்னிசை பாடும் பாணன் றிறத்தினைக் கண்டு பின்னு
மன்னுகன் மழையை யேவ வாங்கது மருத்தோ டொன்றிப்
பன்மலை யருவி யென்னத் திகழ்ந்தது பயம்வி ளைத்தே. (எ)

மைக்குல மெற்றுங் கல்லா லம்பினுன் மாம ருத்தாற்
றக்கமெய் சால நோவோன் றந்திரி யாழ்ந னைந்து
மிக்கக ருகிர்ந னைந்து விரனடிக் குறவும் போகான்
[1] சிக்கன வுடனே நின்று பாடினுன் சிவனை யுள்ளி. (அ)

அயன்றலை யறுத்தல் பாடி [2] யருக்கனை யடர்த்தல் பாடிக்
கயந்தனை யுரித்தல் பாடிக் காலனை யுதைத்தல் பாடி
வியன்புர மெரித்தல் பாடி வேள்கெட விழித்தல் பாடிச்
சயந்தரு புகழ்கண் மற்றும் பாடினுன் சால வாழ்த்தி. (கூ)

முற்றவெங் கையைநி னைப்பார்க் கெதுமுடி யாது முன்னர்
மற்றது கண்டி ரங்கி வருந்திடா திருந்து பாடென்
றுற்றமே ரிசைக்குச் சென்றுங் குவந்துயர் பலகை யிட்டான்
பற்றியப் பலகை முன்னம் பாவலர் வரக்கொ டுத்தான். (௧௦)

கங்குலி னிறைவன் மேனி காந்திடக் கண்ட பாண
னிங்கிது செய்தற் கெந்தை யெழுவகை யிசைக்கு நல்ல
சங்கர னல்லால் வல்லா ரியாரெனத் தாழா தோங்க
வங்குயர் பலகை யேறி யிருந்தன னருளை வாழ்த்தி. (௧௧)

---

௬. யான் இன்று அழியினும் விரதம் ஒழியேன். வல்லான் செயல் - சிவன் செயல்.

எ. புங்கவம் - இடபம். தென் - அழகு. மருத்து - காற்று. மழைகன் மழையாதலின், மலையருவி அதற்கு உவமையாயிற்று.

அ. அம்பு - நீர். சிக்கனவு - உறுதி.

கூ. அருக்கன் - சூரியன்; அரக்கன் என்றபாடத்திற்கு இராவணன் என்று கொள்க. கயம் - யானை. சயந்தரும் புகழ் - பிரதாபம். இச்செய்யுள் "அயன்றலை கொண்டுசெண் டாடல் பாடி யருக்க னெயிறு பறித்தல் பாடிக், கயந்தனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக் காலனைக் காலா லுதைத்தல் பாடி, யியைந்தன முப்புர மெய்தல் பாடி யேழை யடியோமை யாண்டு கொண்ட, நயந்தனைப் பாடிநின் றாடி யாடி நாதற்குச் சுண்ண மிடித்துமே" (திருவாசகம், திருப்பொற்சுண்ணம், ௧௮) என்பதைத்தழுவியது; பெரிய. திருநீலகண்ட. ௫-ஆம் திருவிருத்தமும் இவ்வாறேயுள்ளது.

௧௦. இயற்பலகை-சங்கப்பலகை. பாவலர்-சங்கப்புலவர். முன்வரக்கொடுத்தான், இப்பொழுது சென்று இட்டான்; இச்செய்யுள் கருத்துடையடையணி.

(பி - ம்.) [1] 'சிக்கென' [2] 'அரக்கன்'

வேறு.

காண்டகு குரலொடு துத்தங் கைக்கிளை
வேண்டிய வுழையிளி விளரி தாரமென்
றீண்டிய நெறியினே ழிசையு மின்புறப்
பூண்டதந் திரிகளிற் புரிந்து பாடினான். (கஉ)

மூன்றிக ழிசைத்துதி முடியப் பாடுமு
னான்றிய வருத்தமு மொழிந்த தொல்லையின்
[1]வன்றிறன் மாரியு மருத்து மற்றன
மின்றிகழ் வானமு மீனம் பூத்ததால். (கங)

வேறு.

பல்வி தப்பொற் பலகையைக் காணவே
மல்ல லோங்கு மிரவியும் வந்தனன்
சொல்ல ருஞ்செயல் கண்டு துதித்தெழுந்
தொல்லை சென்றுதன் னுற்றவர்க் கோதினான். (கச)

ஆல யத்து [2]ளணைந்துற் றவரொடு
மேல வந்திறை யிட்ட பலகையின்
கோல மீதெனக் காட்டக் குறித்தவர்
கால காலன் கருணையை யேத்தினார். (கரு)

னுலகு கன்றுக் கிரங்கும் பசுவென
வலைவு கண்டெனக் கல்லிடை வந்திசைப்
பலகை யிட்டருள் பண்ணிசைச் சொக்கனை
யலது வல்லவ [3]ராரெனப் போற்றினார். (கசு)

வெய்ய பாணர் வெறுப்புவிட் டுன்வயிற்
செய்ய சொக்கன் றிருவருள் கண்டன
மைய னேகினக் காரொப் பவரென
மைய றீர வணங்கினர் வாழ்த்தினர். (கஎ)

வேறு.

மின்றிகழ் தென்னன் முன்னா மேதினி வியப்பப் பாணன்
சென்றுதன் னுழையுட் புக்குச் செந்தமிழ்ச் சொக்க னைப்போ
லின்றியா [4]ரெமக்கு நல்லா ரெனத்துதித் திருந்தான் செல்வ
மொன்றிய மதியங் கண்ட வுததியின் விளங்கிற் றன்றே. (கஅ)

சிந்தைசெய் துலகின் மிக்க தென்றிரு வால வாய்வாழ்
சுந்தரன் றன்னை யாவர் துதிசெய்தா ரவர்கள் வேதச்
சந்தைசொல் வி[5]யாண்டு புக்குத் தகும்பெருஞ் செல்வத் தோங்கி
வந்தவெந் துயர நீங்கி வாழ்ந்துவா னுள்வ ரன்றே. (ககூ)

ஆகத்திருவிருத்தம் - கருகரு.

---

கஎ. வெய்யபாணர் - அழுக்காறுற்ற பாணர்; எழுவாய்.

(பி-ம்.) [1]'வன்றிறல்வாரியும்' [2]'அணைந்திட்டவரொடும்' [3]'ஆரெனச் செப்பினார்' [4]'எனக்கு' [5]'யாண்டும்புக்கு'

## ருஎ.—இசைவாதுவென்ற திருவிளையாடல்.

தரையிற்பழு தில்லாநெறி தருபத்திரன் மனையாள்
பரிவுற்றிடு தன்காதல னளவிற்பரி வினுமுன்
ளுருகிப்புகழ் தருசுந்தர னளவிற்பரி வுற்றே
பெருகப்புண ரிசைபாடுவள் பிரியாதொரு [1]நாள்போல். (க)

பாலேமொழி சூதேமுலை பணையேதிர டோண்மேல்
[2] லாவேரிலை தானேவயி றரவேயக லல்குல்
சேலேவிழி காரேகுழல் சிலையேநுதன் மலராள்
போலேதிகழ் வாணேரிடை பொய்யேயிது மெய்யே. (உ)

வேறு.

இரதியு மொவ்வா வடிவின ளுருக்கொண் டிசையுலா வுவதெனச் சிறந்தா, டரைபயில் சாதித் தருமநீ தியினற் சசிகுல வேந்தையுங் கண்டு, பரிவொடு போது நாடனி லொருநாட் பார்த்திபன் றனிவரக் கண்டு, பொருவில்வேள் கணையான் மெலிந்துமெல் லணையிற் புல்லவா வென்றனன் மெல்ல. (ங)

மையிலாள் கடைதொட் டுயர்கரங் குறைத்த மாசறு தேசுடை நீதி, யையனே நந்தஞ் சுந்தர னுனை யவ்வுரை [3]யிங்கெனக் கடாது, பொய்யிலா வுண்மைப் பத்திர னொழியப் புவியுளோ ருடன்பிறந் தவரென், றையநுண் ணிடையாண் மறுத்தனண் மருத்தா லசையுமென் கொடியென நடுங்கி. (ச)

மறுத்தது கண்டு நெஞ்சக நாணி வலிசெயா தாணையை நினைந்து
கறுத்தவ டன்னைப் போவென விடுத்துக் கற்றவ ரவைநடு விளிய
முறித்திடக் கடவ மெனப்புற நாட்டோர் முற்றிசை பாடுவாட் டேடிச்
சிறப்புட னழைத்து வாருமென் றுரைத்துத் தெரிந்தயர் தூதரை விடுத்தான்.

அருமையா வொருவ ரறிந்திடா வாறங் ககற்றியோர் சார்ந்துபோய் விரைந்து, தரைமுழு தெங்குந் தேடிமுன் கொணர்ந்த சயந்தரும் வல்லிசை வல்லாள், பரிவொடுங் கூடி நல்லிசை மாதர் பாணர்தற் சூழவொண் சிறப்பிற், கரிபரி நெருங்கு மதுரையுட் புகுந்து கண்டன டிண்டிறல் வேந்தை. (சு)

---

ங. அருவமாகிய இசையானது உருக்கொண்டு உலாவுவதென, விறலியர்கள் அரசனிடஞ்சென்று பாடிவரவேண்டியது மரபாதலின், 'சாதித்தருமநீதியினல்' என்றார்.

ச. கைகுறைத்தகதை, சிலப். உஉ-ஆம் பக்கத்தாலறியலாகும்.

ரு. வலிசெயாது - பலாத்காரஞ்செய்யாமல். கறுத்து - கோபித்து. விளிய - அவமானப்பட.

சு. அகற்றியோர் - நீக்கிய வேலைக்காரர்.

(பி - ம்.) [1]'நாட்போல்' [2]'சூலேலிலை' [3]'இன்றெனக்'

பல்வித மாக மெல்லிசை பாடிப் பணிந்துமு னிருந்திடுங் காலை,
முல்லைசேர் மாலைப் பத்திரன் றேவி முன்னமாங் கிருந்தவ டன்னை,
யெல்லையில் புகழா னிங்கிதத் தாலிங் கிவளுடன் பாடுதற் கின்று, வல்
லையோ வென்ன வவளுமிங் கிதத்தான் மண்ணிலா ரெனக்கெதி ரெ
ன்றாள். (எ)

அங்கது கேட்டு வந்தவட் கிரங்கி யணிமுத லாடைகள் வழங்கித்
தங்குதற் குரிய நல்லிடங் கூறித் தரத்தொடும் விடுத்தபின் றொழுத
பொங்குகற் பினளை வியந்துநீ தோற்பிற் புகலினந் தோல்வியா யிருக்கு
மங்கைகே ளவளை வெல்வதற் கான வழியுணர் பழுதுவா ராமல. (அ)

என்னுமுன் னணங்கு பன்முறை வணங்கி யானுமோர் கற்புடை
யாளேன், முன்னது தானே காத்திடும் வறிதே முற்றவோர் குற்றம்
வா ராது, மன்னநீ யிருப்ப வென்னையார் வெல்வா[1]ரென்றனண்
மன்னவன் கண்டு, நன்னெறி நெஞ்சி னென்றுவைத் தொன்று நவின்
றுபின் போவென விடுத்தான். (௯)

வேறு.

இரவிடை மறைத்து முன்ன ரெய்திய மாலை தன்பாற்
பரவுதற் கரிய சீர்த்திப் பத்திரன் றேவி தன்னை
[2]வெருவுறு தென்முன் வந்தாற் பன்முறை விளிய வைது
வரையறப் பாடச் சொல்லென் றேவியோர் மாதை விட்டான். (௧௦)

வரன்முறை மற்றை ஞான்றோர் மண்டபத் திருந்து முல்லைத்
தெரிவைநல் லிசைபா டுங்கால் சென்றவள் சொல்லக் கேட்ட
வரிவையு மதுயா ளாகி யரசன்முன் பேசி வந்து
கருவிட வைது கீதம் பாடினாள் கற்பி னாளை. (௧௧)

வாதுற வைதல் கண்டு மனமிக மகிழ்வோ னென்றன்
மேதகு கீத மாதை விளியநீ வைவ தென்னை
யோதகு மவைக்க ளத்துங் குயர்புடை நீங்கள் பேசிச்
சோதிசேர் கானம் பாடுந் தோற்றவா சுமக்க வென்றே. (௧௨)

இப்படிச் செய்த லின்று தகுமென விகல்சேர் மன்னன்
செப்புமுன் [3]ஞங்கி யைந்து சீறியாழ் திருத்தி வந்த

---

எ. முல்லை சேர்மாலை - முல்லைப் பூமாலையையணிந்த; இம்மாலை கற்பிற்கு உரியது. இங்கிதம் - குறிப்பு.

அ. தரம் - தகுதி. புகலின் - சொல்லுமிடத்து.

௯. அது - அக்கற்பு.

௧௦. எய்தியமாலை - வந்தவிரவில். மறைத்து ஒருமாதை விட்டானென்க.

௧௧. முல்லைத் தெரிவை - பத்திரர் மனைவி. முன்பேசி வந்த - முன்பு சபதஞ் செய்துவந்து; முன்பு ஏகிவந்து என்றுமாம். கருவிட - கோபிக்கும்படி. கற்பினாளை வைது.

(பி - ம்.) [1]'என்றனுமன்னவன்' [2]'பரிவுறுதென்முன்' [3]'ஆங்கிருந்து'.

துப்பிலா மாது பாட [1]வியைந்துமென் சுருதி மாது
மொப்பிலா யாழ்தி ருத்திப் பாடினா ளுயர்புண் டாக. (கங)

காதிவர் தவடன் பாட்டைக் காகவெஞ் சுரம தென்றுங்
கோதில்கற் புடையாள் பாட்டைக் கோகிலச் சுரமதென்றுந்
தீதற வவையி ருந்தோர் செப்பிடக் கேட்டுந் துப்பின்
மாதினை வியந்தான மாறன் மாறிமுற் செற்றங் கொண்டே. (கச)

நெறிகெட வாரம் பட்டு நீதிமன் சொல்லக் கண்ட
வறிவுளோர் களுமி ராசா [3]வனுமதி தருமம் மென்னு
மறைமொழி தனைநி னைந்து மாதுர மாக வந்த
விறலியே பாடி னாளென் றறைந்தனர் வியந்து சால. (கரு)

மறமது கண்டு வந்த விறலியுள் களிப்ப மன்னன்
கறபுடை யாள்வ ருந்தக் கலமெலாம் வருந்தேன் மண்ணிற்
சொற்றரும் வெற்றி தோலவி சொல்லிடி னியாவர்க் கில்லை
யெறறிகழ் மாதே வித்தை செயுமிடத தென்றான் மெல்ல. (கசு)

மன்றிடை யின்று போகி நாளைவந் தேறும் வாதி
லென்றுபி னிசைத்துப் [4]போக்க வேந்திழை போந்து சாலக்
கன்றுமன தோடு நந்தங் கணவனுக் குதவி செய்த
வென்றிகொள் சொக்க னுக்கு விண்ணபபஞ் செய்வ மென்றே. (கஎ)

வேறு.

கருணைசேர் [5]கடவு ளாலயத தணைந்து கண்ணினீர் சோரவீழ்ந் தாற்றித, தரைமிசை யெவர்க்கும் வைததவன் பொழியத் தனியொ

கங. துப்பிலா மாது - வகதவிறல்; 'துபபின்மாது' என்பர்பின்னும்; கச.

கச. காகசுரம-காகம் கதறுதற் போலபபாடுவது; அஃது இசைத்தொழிற் குற்றம் எட்டினுள் ஒன்று; இதனை, "பெருக்குரல் கட்டை கழுவல் விலகை, யொருகதி யாதுககம் புரைததல் - விருபபிலாக, காகுளி காக சுரமென்னு மிவ்வெட்டும், ஆகாவெனச சொனனா ராயகது" என்னும இசைமரபு வெண பாவால் உணாக. 'மாதவை' எனபதறகு மாறுதலையுடையவனென்னும் பொருளபுலபபடக கூறியிருததல் ஆராயததபாலது.

கரு. வாரம்-பக்ஷபாதம்; "ஓரஙகூாகது" எனபர் பின்னும்; உப; "வாரம் பட்டுழித தீயவு நலலவாக, தீரக காயநதுழி நலலவுந தீயவா, மோரும் வையத தியறகையனறேவெனு, வீர வேமெனுமவ கண்ணி விளம்பினான்" (சீவக. அஅஅ) எனனுஞ்செயயுள் ஈணடு உணாறபாலது. இராசா அனுமதிதருமம் - இராசாவுடைய அனுமதியேதருமம்; "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என் னும் பழமொழியும, "மன்னவன் சொன்ன வாறே சொலவது வழக்காறன்றோ" (திருவிளை. இசைவாது. கஅ) என்பதும் இங்கே அறியறபாலன. மாதுர மாக - இனிமையாக.

கசு. சொல் - புகழ். எல - ஒளி. கஎ. ஏறும்: முன்னிலைப்பன்மை.

கஅ. எங்களென்றது கணவரையுமுளப்படுத்தி.

(பி - ம்.) 1'வியக்துபின்' 2'தீதறமவை' 3'அனுமதோதருமம்' 4'போக' 5'சொக்கன்'

ரன் பெங்கண்மேல் வைத்தா, யுரைகெழு மாசை னுளக்கருத் தறிவை யுய்யுமா றறிகிலே னரசே, திருவரு ளொழிய வொருவழி யில்லை காத் தருளெனத் துதி செய்தாள். (க௯)

வேறு.

அன்புடை யாளே நெஞ்சக மஞ்சே
னன்பரி வோடு முதவுவ னுனை
மின்பொலி மாறன் றன்புலம் விட்டே
யென்புலம் வாபோ [1]வென்றன னெம்மான். (க௯)

வேறு.

நின்றதிரு வுரைவிசும்பிற் கேட்டு நீங்கா நேசமொடு நனிவாழ்ந்து போந்த பின்றை, வன்றிறன்மன் னவனவரை மற்றை ஞான்று வரவ ழைத்தின் னிசைவாது கண்ட வைக்க, மொன்றியவர் தம்மொடுமுன் னையினுஞ் சால வுண்மைமறைத் [2]தோரங்கூர்ந் தினிய நெஞ்சங்,குன்ற நவின் றிடத்தோலாக் கற்பு மாது கூறுவாள் சீறியுளங் கொதித்து விம்மி. (உ௦)

கைதவகேள் கைதவமா காதி யானுங் கழறுமொரு விண்ணப்பங் கைக்கொ ளொப்பின், மைதிகழுங் கண்டத்தன் சொக்க நாதன் மண் டபத்துப் பாடியக்கா லிருந்தோர் தம்மு, ளெய்தியவா றொருத்திதனை வென்று ளென்றங் கியாரொருவர் சொல்கின்று ரவளே வென்ற,மெய் தருநா யகிமற்றிங் கென்மு கதது விளம்புமது [3]செற்றங்கொண் டெ ன்றாண் மெல்ல. (உக)

ஒள்ளியவ டள்ளியுரை செய்யா முன்ன ருயர்புடைய வுலகத்தைப் பேணி யொன்றும், விள்ளுதலசெய் யாதஙகண் மேவி னுலயாம் வே றொருவ ராவேமோ வெனப்[4]போ தென்ன, வள்ளலெளி யவர்க்கெ ளிய சொக்க நாதன் மண்டபத்து ளெண்டிசைமண் டலிகர் போற்றத், தெள்ளுதமிழ் வாணரிசை வாணர் சூழச் சேர்ந்திருந்தான் போந்தெ வரும் வியப்ப வேந்தன். (உஉ)

புகழ்தருபத் திரன்றேவி யுண்மைக் கின்று புவிகாண நமைச்ச மப்ப ளென்று கொண்டே, யகமகிழ்வி னுடும்வந்தாங் கறிவி லாதா ளவையேற வறிவுடையா ளெங்குந் தானுஞ், சகமுதல்வன் றனைநினை ந்து மெல்ல வொல்கிச் சார்தலுமற றுஙகிருந்த வேந்தற் சார்ந்தோர், முகமுகம்பார்த் தனரென்னுய் விளையு மிந்த முன்னவன்றன் செய றெரியா தென்று கொண்டே. (உ௩)

---

உ௦. ஓரங்கூர்ந்து - பக்ஷபாதமிருந்து. உக. கைதவம் - வஞ்சனை.
உஉ. என - என்று தன்னுட்கருதி. தமிழ்வாணர் - தமிழ்ப்புலவர்கள்.
உ௩. முகமுகம்பார்த்தனர் - ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தனர்; "கண்மலகு நீரார் முகமுகங்க ணோக்கினரே" (சீவக. க௮௦௮.)

(பி - ம்.) [1]'என்றனனிறைவன்' [2]'ஓரம்பட்டு' [3]'செற்றமகோளென்றான்' [4]'போதென்று'

வேறு.

பரந்தவன் கண்டு பாடும் பாணனு யுருக்க ரந்து
பொருந்தவர் திருந்தா[1]னப்பாற் போதயின் மாது முன்னர்
நிரைந்ததந் திரிதி ருத்தி நேசமன் னவனை வாழ்த்தித்
தெரிந்துதான் வல்ல பாடல் பாடினு டீரம் பேசி. (உ௪)

வேறு.

வேர்த்தன ணடுங்கினள் விதிர்வி திர்த்தனள்
வாய்த்தில விசையென வாயு லர்ந்தன
ளுத்தரு முளம்பறை யறையத் தென்னனைப்
பார்த்தன ளவையவை கண்டும் பாடினாள். (உரு)

வேறு.

புனைவுபெருக் குரல்க டத்தல் புரைத்தன்மே லொருக்கன் மிக்க
வினைபடு காக வோசை காகுளி விலங்க னீங்காத்
தனிபடு கட்டை யெட்டின் றகுதியிற் றிகழும் பொல்லா
வினிமையில் சுரத்தைக் கண்டாங் கிருந்தவர் வியந்தா ரில்லை. (உசு)

முத்தவெண் ணகைது ளங்க முறுவல்செய் திறையை வாழ்த்திச்
சித்திர யாழ்தி ருத்தித் திருமலி களந்தி ருத்தி
மெத்திய மடப்பத் தோடு மெல்விரல் சிவப்ப வொற்றிப்
பத்திரன் றேவி மெல்லப் பாடினாள் பண்ணி னோங்க. (உஎ)

ஆங்கரி முரற்சி யென்ன வருங்குயி லோசை யென்ன
வாங்கிருங் கடலுள் வாழும் வலம்புரி முழக்க மென்ன

---

உ௪. பரந்தவன் - சிவபெருமான். போதயில்மாது - வந்த விறலி.

உரு. உளம்பறை அறைய-நெஞ்சுநடுங்க; ருச: ௬அ-ஆம் பாடலின் குறிப்பைப்பார்க்க.

உசு. பெருக்குரல் - வெடித்தகுரலாகிய வெள்ளோசை. கடத்தல் - ஓர் இசையான தன்மைநீங்கிப் பலவோசையாய் வருதல். புரைத்தல் - ஒருதானத்தே பாட ஒருதானத்தே நழுவுதல். மேலொருக்கல் - ஒதுக்கிப்பாடுதல். காகவோசை - காகம் கத்தினாற்போலப் பாடுதல். காகுளி - பேய்கத்தினாற் போலப் பாடுவது. விலங்கல் - ஒருபண்ணைப்பாட வேறொருபண்ணிலே விலகின்று இரட்டல். கட்டை - நிறமும் தானமுங்குறையுங் கீழிசை. இவற்றை, "பெருக்குரல் கட்டை........சொன்னாராய்ந்து" என்னும் இசைமரபு வெண்பாவாலும், "நாசிகாகுளி வெடிகுரல் வெள்ளை, பேசாக் கீழிசை யொருபுற மொட்ட, னெட்டுயிர்ப் பெறித லெறிக்குமின் றிரட்ட, லோசை யிழைத்தல் கழிபோக் கெனப்,பேசுற குற்ற மசையொடு மாற்றி" (கல் உரு) என்னும் செய்யுளாலு முணர்க.

உஎ. இறை - சிவபெருமான். மடப்பம் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

உஅ. அரிமுரற்சி - வண்டின் நாதம். மூவிசை- - மூவகை இசை; "தப்பமொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டினமும், வைய முழங்கும்

(பி - ம்.) 1'இப்பாற்' 2'பெருங்குரல்'

வோங்கிய சராச ரங்க ளுருகிடப் பாடு நீதி
தூங்குழு விசையைக் கண்டு துதித்தன ரிருந்தோர் யாரும். (உஅ)

தணிவின்மாத் திரையொன் பானுந் [1]தானங்க ளெட்டி னுனு
கனுகிய கிரியை பத்து நண்பதின் மூன்றெ ழுத்தா
லனுகிய தொழிலா றேங்கு மைந்திறல் விளங்கு மும்மைத்
திணையெழு பாடல் கண்டு தேவரு மதிச யித்தார். (உகூ)

வேந்தனுர் செவிப்பு லத்து விளைபட வாங்கி விட்ட
வாய்ந்தமென் சரம்ப டாமுன் மாண்டது செற்ற மேனி
சோர்ந்தது நெகிழ்ந்த துள்ளந் தும்புரு நார தாதி
வாய்ந்தவர் பாடும் பாட லென்றது வாக்கு வாழ்த்தி. (௩௦)

பரிந்தது புதுமை யேயோ [2]பகைத்தவ னெஞ்ச மெங்கு
நிரம்பியோன் முன்னின் றூலெங் நெஞ்சக முருகா தங்க
ளுரம்படச் செவிப்பு லத்தி லொண்டொடி பாடு மென்மைச்
சரங்கொடுஞ் சரம்போற் றைப்பச் சரங்கொண்டாள் சரமி லாதாள்.

மற்பொலி திண்டோட் டென்னன் வன்பிழை பொறுத்தி வென்ற
கற்புவீ றுடையாய் தோற்றாள் கழுத்திடை வளைத்தே றென்ன
விற்பொலி நுதலாள் கேட்டு மெய்த்தவ னருளை வாழ்த்திப்
பொற்புறு கழுத்தி லேறி யிருந்தனள் [3]பொலிவுண் டாக. (௩௨)

மாலையைக் கழுத்தி லிட்டோர் மாலெயின் றுலாவக் கண்ட
ஞாலமீ துள்ளோர் மிக்க நகையொடுங் கூடி வாழ்த்தி
யேலவர் திறைஞ்சிற் கூட விறைவனை யிறைஞ்சி னல்லான்
மேலொரு தெய்வ முண்டோ விதியிலீ ரெனவி யந்தார். (௩௩)

---

வலம்புரியும் - கைவைத்துத், தும்புருவு நாரதரும் பாடியழு வோசை யென, கம்புகீர் நால்வேதத் துள்" என்பது இசைமரபு.

உகூ. தானங்கள் எட்டு - இடங்கள் எட்டு. இச்செய்யுட் பொருளை, "மாத்திரைக ளொன்பானு மன்றான மோரெட்டு,மேத்துங் கிரியையென் றீரைந்தும்- கோத்துப்,பதின்மூன் றெழுத்தாற் றெழிலைந்தும் பண்ணின்,மதியோர்க ளைந்து திற மாம்" என்னும் இசைமரபு வெண்பாவால் ஆராய்க.

௩௦. சரம் - ஸ்வரம்; அம்பென்பது மற்றொருபொருள்; அடுத்த செய்யுளாறு முணர்க.

௩௧. பகைத்தவனெஞ்சம் பரிந்தது புதுமையேயோ. 'எங்கும் நிரம்பியோன் முன்னின்றால் எந்நெஞ்சக முருகாது' என்பது, "யார்க்கு முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுளதோ" (பெரிய. திருவாரூர்ச். ௪௭) என்பதைத்தழுவியது. சரம் - ஸ்வரம், அம்பு. சலம் - தணியாக்கோபம், சலனம்; லகரத்திற்கு ரகரம் இங்கே போலியாகவந்தது.

௩௨. மெய்த்தவன் - சிவபெருமான்.

௩௩. மாலையை - விறலியை; பூமாலையை யென்பது மற்றொரு பொருள்; "வாடிய மால வாடா மாலைதாள் வீழக் கண்டே" என்பர்பின்னும்; ௩௫.

(பி - ம்.) [1]'தாளங்கள்' [2]'பகைத்தவர் நெஞ்சோ' [3]'பொலிவுகூர்ந்து'

மறுவில்சந் தரனைப் பாடு மதுரைவாழ் விறலி வந்த
விறலியை வென்றா ளென்றல் புதுமையோ வெனவி யந்து
செறிமணிக் கவிகை தூசு சிவிகைமற் றெவையு நல்கிக்
கறைகெழு வேற்கண் ணாளைக் [1]கழுத்தினின் றிறக்கி விட்டான். ()

வாடிய மாலை வாடா மாலைதாள் வீழக் கண்டே
யாடரும் பெரிய நாம மாலவாய் மாலை யென்று
சேடுறக் கொடுத்துத் தெய்வச் செயலல்லான் மனிதர் செய்யு
நீடிய செயல்கள் சற்று நிலைநில்லா நிலைநில் லாவே. (௩௫)

கண்டன மெங்ங னென்னிற் கருணைசேர் சொக்கன் றன்னை
யுண்டென விருந்தாள் வென்றா ளுலகினை யாளு கின்ற
வெண்டரு நம்மை யுண்டென் றிருந்தவ டோற்றாண் மற்றென்
பண்டுறன் மொழிவ தென்று பன்முறை யதிச யித்தான் (௩௬)

மற்றவர் தம்மைத் தத்த மனைவயிற போக வேவிக்
கற்றைவார் சடிலச் சொக்கன் கருணையை விறலி கற்பைப்
பொற்புற வாழ்த்தி வேந்தன் போயின [2]னினிய நல்கி
நற்றமி ழிறைவன் றானு நகையொடுங் கோயில் புக்கான். (௩௭)

பத்திரன் றானு மிக்க பழுதில்கற் புடையா ளோடும்
வித்தக னருளா லங்கண் வீற்றிருந் தளவில் கால
முத்தம விமானத் தேறி யும்பர்கோன் முதலோர் வாழ்த்த
வெத்தலத் தோருங் காண வேகினான் சிவலோ கத்தே. (௩௮)

ஆகத்திருவிருத்தம் - ௧௧௦௩.

---

௩௫. சேடு - பெருமை.

௩௬. பண்டுறல் - பழைய செய்தி.

௩௭. 'சொக்கன்': ''ஆலவாய்ச் சொக்கனே'' (திருஞா. தே; மதுரைக் கலம். ௫, ௧௦, ௩௩, ௩௬, ௮௨; மீனாட்சி இரட்டைமணிமாலை, ௨,௧௦.) நற்றமிழிறைவன் - சிவபெருமான்.

௩௮. அளவில்காலம் வீற்றிருந்து.

(பி - ம்.) [1]'கழுத்தினினிறக்க' [2]'உயர்புனல்வி'

## ரு அ.—பன்றிக்குட்டிகளுக்குத் தாயான திருவிளையாடல்.*

முன்னமோர் காலம் வெய்ய முரணடு படையான் மிக்க
வின்னெறி பயக்கும் வேளாண் மரபினி லிலங்கு வானோர்
வன்னியர் தலைவன் றூன்றி மாசறு குலத்துக் கொத்த
கன்னியை மணந்த றத்தின் வாழ்ந்தனன் காட்டு நாட்டு. (க)

ஆங்கவன் றனக்கு முன்னை யரும்பெருந் தவத்தா னன்மை
[1] யோங்கிய விராறு மைந்த ரவள்வயிற் றுதித்து நீங்காப்
பாங்குறு செல்வத் தோடும் பழுதற வளர்ந்தி யாருந்
தாங்கரு மிளமைத் தன்மை யடைந்தனர் சால வன்றே. (உ)

விழைதரு நாளி னல்ல மேம்படு தந்தை தாய
ருழையிடை [2]யிறப்ப மிக்க செல்வமு மொழிந்து தூய
வழகினல் வலியா லோங்கு மருங்குல மைந்தர் முன்னைப்
பழவினை யிழுப்ப வாடிப் போயினர் பரதே சத்து. (ங)

தொல்லையம் பதிவிட் டொன்னூர் துரப்பமற் றியாவும் விட்டு
நல்குர வலைப்பப் [3]போனோர் நாடொறும் வருந்த மேனி
பல்வித நிலங்க டோறு நாஞ்சிலாற் பகலு மல்லும்
புல்லற வுழுது [4]கொண்டு புன்பயிர் விளைத்துண் டாரால். (ச)

அடைவினித் தகவிற் போது மரும்பெரும் புதல்வ ரங்கண்
படிபுகழ் வேட்டை வேட்டுப் பாசவெஞ் ஞாளி விட்டுத்
தொடர்விடா விதிவ சத்தாற் சுழன்றுழன் றுளத்தன் பின்றிக்
கடியபல் விலங்கு கொன்று காட்டிடை யுலாவு நாளில். (ரு)

---

க. முரண் அடு - பகையை வெல்லுகின்ற. இன்னெறி - இனியநெறி; இல்லறநெறியுமாம். வன்னியர்-ஒருவகைச் சாதியார். காட்டு நாடு-பாண்டிய நாட்டின் கண்ணதாகிய சிறியதொரு நாடு; அது களவேள்வி நாடென்றும் பெயர்பெறும்; "முன்னோர் பாண்டியன் சோழற் காய்ந்து, பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு நாட்டுள்" என்பதனாலு முணர்க; சச: இச.

உ. அன்று, ஏ: அசைநிலைகள். ங. உழை - வீடு.

ச. துரப்ப - ஓட்ட. மேனி வருந்த. நாஞ்சில் - கலப்பை. புன்பயிர் - நெற்பயிரல்லாதவைகள்.

ரு. ஞாளி - நாய்.

* "ஏனக்குருளைக் கருளினை போற்றி" (திருவா. போற்றி. கஅஅ); "கோலமேனிவராகமே" (ஷை. திருக்கழுக்குன்றப் பதிகம், ரு); "ஏவுண்டபன்றிக் கிரங்கி யீசனெந்தை பெருந்துறையாதி யன்று, கேவலங் கேழலாய்ப் பால் கொடுத்த கிடப்பறி வாரெம் பிரானவாரே" (ஷை. திருவார்த்தை. அ); "தாயாய் முலையைத்தருவானே" (ஷை. ஆனந்தமாலை. ரு.)

(பி - ம்.) [1] 'ஓங்கியபுதல்வீராறு' [2] 'இறந்தகல்ல' [3] 'போனாட்டிடை' [4] 'நாளும்'

மெய்ப்படு சாபம் வல்ல மேதகு முனிவ ரானோ
ரொப்பிலா முனிவன் றானறி துறைபுகுந் திருந்து மிக்க
செப்பருந் தவஞ்செய் காலைச் சென்றவர் திரண்டு சூழ்ந்து
தப்பென வங்கை [1]கொட்டிப் பாடினார் சால நக்கு. (சு)

வே று.

மற்றது கண்டு முற்றிய தவஞ்செய் மாமுனி சிறியாங் கவரைப், பற்றியெந் நிலமு முழும்பழ மையினாற் பரிவுடைத் தழுந்தொழி லுமக்கே, யுற்றதோர் பன்றி வயிற்றகத் துதித்தின் முழுமின்வெங் குருளைக ளாகிப், பெற்றதா யினையு மிழந்திடக் கடவீ ரென்றுமுன் பிழையறச் சபித்தான். (எ)

முனிவரன் சபிப்ப நெஞ்சக மஞ்சி முதிர்தரு பத்தியிற் கூடி, யினையடி தொழுதே மாசிலா தவனே நீள்பிழை பொறுத்தருள் ளின்றென், றனைவரும் வணங்கக் கண்டுதா யிறந்தா லருளுடைச் சொக்கனின் னருளான், மனிதரா யுதித்துத் தலைவரா கென்று மறுபெருஞ் சாபமுங் கொடுத்தான். (அ)

வே று.

இந்நெறிச் சபிப்பப் போந்தாங் கெல்லைசூழ் முதிய வெற்பில்
வன்னியர் நெடுமு கத்து மைந்நிறக் கூனற் கேழ
றன்வயிற் றுதியா முன்னந் தாயையொண் புவியாண் மாறன்
மின்னிய கணையா லெய்து கொன்றனன் வேட்டை யாட் டில். (கூ)

வே று.

யாயிழந்த போதகங்கள் யாய்வரவு காணுமற்
காய்துயரங் கொண்டழுங்கல் கண்டுகரு ணைச்சொக்க
னேயவுரை யாவு முணர்வா னியைந்தவற்றின்
றாய்வடிவங் கொண்டான் றவத்தோ ரதிசயிப்ப. (௧௦)

---

சு. துறு - புதர். தப்பு - ஒருவகைப்பறை.

எ. உழுந்தொழில் உமக்கே பரிவுடைத்து. குருளைகளாகி - குட்டிகளாகி. முன்பிழை - தப்பெனக்கையைக் கொட்டிப் பாடியது.

அ. சொக்கன் இன்னருளால் - சொக்க நாயகரது இனிய அருளினால். மறுபெருஞ் சாபம் - சாபவிமோசனம்; இதனைப் பிறிது சாபமென்றார் முன்; உ: கஉ.

கூ. வன்னியர் - மேற் கூறிய பன்னிரு மைந்தர்கள்; எழுவாய்.

௧௦. யாய் - தாய்ப்பன்றி. போதகங்கள் - பன்றிக்குட்டிகள். அழுங்கல் - வருந்துதலை. உரையாவும் உணர்வான் - சொக்க நாயகர்.

(பி - ம்.) [1]'கொட்டியாடினார்'

வட்ட முறிமதிய மென்ன வளைதுண்ட
கெட்டை முகமிலங்க நேர்ந்ததனி வாறுடிப்பக்
குட்டிபரிந் துண்ண விருபாலுங் கூர்முலைப்பால்
விட்டொழுக வோடி நடந்ததால் வெவ்வேனம். (கக)

படியிடந்த கோலம் பரவுகின்ற கோல
முடையபெருங் கோல முறுமிக் குறுகி
யடிபரப்பி யாவு மலைப்பப் படிந்தே
மடிசுரந்து காட்டிமுலை யூட்டியதால் வாழ. (கஉ)

வேறு.

அருள்சுரந் தெழில்சேர் மடிசுரந் தளித்த வமுதபா னத்தினு லன்றே
குருளைபன் னிரண்டு மெழிறர வளர்ந்து குஞ்சர நிகரவப் பொருப்பி
னூராறு கோட்டாற் றழல்விழி யுமிழ [1]வொண்டல மேடவ லாகப்
புரையற வுழுது திரிந்தன வினையந்த பொலிவுறு வலியினு லோங்கி.

வேறு.

பொருவி லாத பொதியின் முனிவகே
ளரிய நாத னருள்கூர் திருமுலை
வரிசை கூர்வாய் மடுத்துக் குடித்தநற்
பெரிய கோலங்கள் பின்னரொன் செய்தன. (கச)

ஆகத்திருவிருத்தம் - கஙகஎ.

## ருக.—பன்றிக்குட்டிகளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.*

அருள்பொழியுந் திருமேனி யங்கயற்க ணுமைமங்கை
தரைபுகழு முதுகேழற் றனுக்கொண்ட தலைவனைப்பார்த்
துருகியபே ரருள்கண்டாண் டதிசயித்தன் புறத்துதித்துத்
தெரிதரநின் றுரைசெய்வாள் செய்யதிரு வாய்மலர்ந்து. (க)

கக. வட்டமுறி மதியம் -வட்டம் முறிந்த சந்திரன்; என்றது பிறை மதியத்தை. துண்டம் - மூக்கு. இருபாலுமுண்ண - இரண்டுபக்கத்தும் உண்ணும்படி.

கஉ. படியிடந்த கோலம் - ஆதிவராகம். கோலம் - வடிவு, பன்றி.

கங. அன்றே - அக்காலே. அவல் - பள்ளம்.

கச. இச்செய்யுள் அகத்தியமுனிவரை நோக்கி முனிவர்கள் வினவியது.

* "கருமுகிற் கனிந்தத் தழநகட் பிறையெயிற், நரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச், செங்கோன் முலையிட் டருணீர் தேக்கிச், கோலைகள வென்னும் படர்களை கட்டுத, நிப்பட ராகின வேலி கோலித், தருமப் பெரும்பயி ருலகு பெத விளைக்கு, காரப்படை வன்னிய ராக்கிய பெருமான்" (கல். சo.)

(பி - ம்.) [1]'ஒண்டலமிடம்வலமாகப்'

வேறு.

விலங்குகள் கொன்று காட்டு வேட்டையா டுதலைப் போதுந்
தலம்புகழ் மன்ன வர்க்குத் தருமமா மதனாற் பாவ
மிலைந்தவர் மேற்செல் லாது வறிதுவெவ் விலங்கு சாக
கலந்தத னுருவங் கொண்ட தென்கொலோ நாய னீரே. (௨)

அன்றியும் பெருமை மிக்க வலகிலா யோனி களிற் றோயா
தென்றுமே லாக வோங்குந் தலைவர்நீ ரிழிந்த பொல்லாப்
பன்றியு நாற்கா லுள்ள பல்பெருஞ் சாதிக் கெல்லா
மொன்றிய கடைய தன்றோ வுளத்திடை யோருங் காலே. (௩)

அப்படி யிருப்ப விந்த வங்கங் கொண் டுலாவு கின்ற
தெப்படி யருளிச் செய்யுங் காரண மென்றி றைஞ்சத்
துப்பிதழ் மாதே கேளா யயன்முத லாகத் துன்னித்
தப்பற வெழும்பி றப்புத் தனுக்தோறு நிற்பேம் யாமே. (௪)

அவ்வவ யோனி தோறு மவ்வவ வுருவங் கொண்டே
யெவ்வுயி ரையும்வ ளர்ப்பே மிரங்கியா மீது நிற்க
வுய்வுற வளித்த மக்க ளியாவரு மொத்தி ருப்பச்
செவ்விய வன்பு தாயர்க் கொருவர்மேற் செல்லக் கண்டேம். (௫)

வேறு.

ஆதலா லெமக்கு மீங்கித னாவி லன்புமிக் கதுவது பிறங்க
வோதுவா மதற்குக் காரண முன்ன மொருபெருந் தவமுனி சபிப்ப
வேதமில் வராக வயிற்றுறுத் திடுமு னிறந்தது தாயுமப் போதே
வேதனை யுறுதல் கண்டியாம் வளர்ப்பான் கொண்டன மிரக்குதாய் மேனி.

ஈங்குமுன் வளர்த்த தருமமா மவைதா மிக்கொடுங் காட்டிடைச் சின்னா
டுங்கற வுலாவி யிவ்வுடல் விட்டோர் தீதிலா வினியகுத் திரனுக்
கோங்கிய புதல்வ ராகிநல லொழுக்க முயர்புக ழறிவுற வுதித்தே
யாங்குதென் னவற்குச் சேனைநா யகராக ளாகுதம் மாணையா லென்றான். (௭)

வேறு.

துப்பிதழ்ப் பச்சை மேனிச் சுருள்கருங் குழலா ளங்குச்
செப்பிய மாற்றங் கேட்டுத் திருவுளங் கண்டு வாழ்ந்து
மெய்ப்புழுப் பிரம னாகப் பிரமன்மெய்ப் புழுவ தாக
வொப்புட னாக்க வலலீ ருமக்கிது புதுமை யன்றே. (௮)

---

௨. கலந்து - விரும்பி.

௪. இதந அங்கம் - பன்றிவடிவம். காரணத்தை அருளிச் செய்யும். துப்பு - பவழம். தனுத்தோறும் - உடம்புதோறும். இச்செய்யுளின் பின்னிரண்டடியின் கருத்து, ௫௨: ௨௮ - ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.

௫. யாம் எவ்வுயிரையும் வளர்ப்பேம்.

௬. இதன் அளவில்-இப்பன்றிக்குட்டிகளிடத்தில்; இது சாதியொருமை.

௭. நம்மாணையால இவைதாம் சேனை நாயகர்களாகும்.

வேறு.

அடைந்தது சிறிய தாயினு மருள்கூர்ந் தளப்பரும் பெருமையை யளிக்கும், கடம்பமா வனத்திர் நும்பெரு முலைப்பாற் கடல்குடித் தவைகளி கூர்ந்து, மடங்கல்போல் வலியுஞ் செல்வமு மோங்கி மன்ன வர்க் கமைச்சராய் வாழ்ந்து, நெடும்பெருங் கால மிருப்பதிங் குரைக்க வேணுமோ நினைத்திடி னென்ன. (கூ)

வேறு.

[1] திருந்துநா யகன்ம கிழ்ந்து தேவர்பூ மாரி பெய்யப்
பொருந்திய கோலக் கோலம் பூண்டது விட்டு நீண்ட
வரந்தரும் பெரிய துங்க மதுரையம் பதியிற் போந்தாங்
கரும்பெருங் கோயில் புக்கா னங்கயற் கண்ணி யோடும். (௧௦)

கனலுமிழ் செங்கட் டிங்கக் கடும்பிறைக் கோட்டு மாக்கள்
வினையறச் சிறிது கால முலாவிமீண் டருளால் வெற்பிற்
புனையுரு விட்டுப் போந்து புனிதவே ளாண்கு லத்தோர்
தனியுயர் தலைவ னுக்கு மைந்தராய்ச் சார்ந்த வன்றே. (கக)

[2] பிறந்தபின் றாய்மார் தந்தை பேசரு முவகை கூர்ந்தாங்
கறம்பல செய்து போற்றி யடைவினின் வளர்ப்ப யார்க்கு
மிறங்களும் வலியும் வாக்கு நீதியு மறிவு மற்றெத்
திறங்களு மொப்பக் கண்ட தேவரு மதிச யித்தார். (கஉ)

மண்ணவ ரதிச யிப்ப வளர்ந்தவா றுயர்ந்தோர் சொல்லத்
தண்ணளிச் செழியன் கேட்டுத் தன்னுழை வரவ ழைத்துப்
புண்ணிய வடிவீர் நும்போற் கண்டிலே மென்னப் புல்லி
யுண்ணிறைந் ததிச யித்தா னொருவர்போ லுருவங் கண்டே. (கங)

[3] இந்தவெண் டிறஞ்சேர் மைந்த ரெழிலினு லறிவா னந்தஞ்
சந்தரன் குமாரர் போலு மிருந்தன ரெனத்து தித்துத்
தந்திர முற்றும் போற்றத் தனித்தனிப் பட்டங் கட்டி
மந்திரித் தலைவ ராக வைத்தனன் வரிசை கூர. (கச)

மழைமதப் புழைக்கை யானை வாம்பரி தேர்ப தாதி
செழுமையிற் பொங்கு நான்கு சேனைக்குந் தலைவ ராகிப்
பழுதிலா நினைவா லோங்கும் பன்னிரண் டமைச்சர் கட்குந்
தழைகதிர் மதிம்தாய் மாடந் தனித்தனி யிருப்ப வீந்தான். (க௫)

---

கூ. அளித்தல், கடம்பவனத்திற்கு அடை. வேணும் - வேண்டும்.
௧௦. கோலக்கோலம்: மடக்கு.
கக. பிறைக் கோட்டு மாக்கள் - பன்றிக்குட்டிகள். மாக்கள்சார்ந்த.
கச. அறிவால் நந்தம். தந்திரம்-சேனை. போற்ற-பாதுகாக்க. பட்டம்-சேனாபதிப்பட்டம். சேனைத்தலைவர்,மந்திரிகளாக இருத்தலும் உள்ளதாதலின்
(பி - ம்.) 1'திருந்தநாயகன்' 2'பிறங்குபன்னிருதாய்தந்தை' 3'இந்தவோர் பருவமைந்தர்'

அதிப்படி மதுரைத் தென்ன னீள்பெருங் கோயில் வாயில்
சிறப்புற விருந்து நாளுஞ் செய்தியா ராய்ந்து சால
1 வறத்தினே டொழுகிச் சொக்க ஞாணையால் விளங்கி யெங்கு
முறப்புகழ் கொண்டார் சேனை யோட்டுசா மந்த ராகி. (௧௬)

நலமலி சிறிது காலஞ் சென்றபி னவையொன் றில்லா
வலியினு லறிவா லோங்கி வன்னியத் தலைவ ராகிச்
சிலைபொலி தடக்கை வேந்தைத் திசைவிச யஞ்செய் வித்தார்
தலமெலா மதிச யிப்பச் சாற்றரும் 2பகைக டந்தே. (௧௭)

வேறு.

கொன்றைச் சடில முடிச்சொக்கன் கொற்ற மாறற் கிரவின்க
ணென்றிப் புகுந்த செய்தியெலா முணர்த்தச் சொக்கன் குமாரரல்லா
லின்றிப் புதுமை வல்லவரா ரென்று தெளிந்தா னன்றுமுதற்
பன்றிக் குறும்பர் பன்னிருவ ரென்னச் சிறந்தார் படிமீது. (௧௮)

கருணை கூர்ந்து கேழலுருக் கொண்டு கருதி முலையூட்டி
வரிசை புனைவன் னியராக்கி மஞ்ஞமேல வளர்த்து வாழ்வித்தாங்
கரிய சிவலோ கமுமளித்தோன் சீர்த்தி விளங்க வவைவளர்ந்த
கரிய மலையைப் பன்றிமலை யென்பா ரின்றுங் காசினியில். (௧௯)

ஆகத்திருவிருத்தம் - ௧௬௩௬.

## ௬௰.—கரிக்குருவிக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.*

விரும்பி யுயரமுனம் விண்ணிற் பறக்குங்
கருங்குருவி யெந்நாளுங் காக்கைக் கொளித்தே
நெருங்கு வனத்தொதுங்கி நீள்பதங்க முன்னு
வருந்த லொழிந் துலர்ந்தாங் கசியுழல் காலம். (௧)

---

"மந்திரித் தலைவராக வைத்தனன்" என்றார்; இதனை, வருஞ்செய்யுட்களோடு முணர்க. போலும்: உம்மை, அசைநிலை.

௧௬. மந்திரிகளும் சேனைத்தலைவர்களும் அரசனுடைய அரண்மனைவாயிலிலிருந்து தத்தம் தொழில்களை இயற்றுதல் இயல்பு; ௬௧: ௪௦ - ஆம் செய்யுளைப்பார்க்க. சாமந்தர் - சேனைத்தலைவர்.

௧௭. வன்னியத்தலைவராகி - சேனாபதிகளுக்குத்தலைவராகி; இந்நூற் பதிகம், ௬-ஆம் செய்யுட் குறிப்பைப்பார்க்க.

௧௮. முன்பு, "சுந்தரன் குமாரர் போலுமிருந்தனர்" (௧௪) என ஐயுற்றவன், இப்பொழுது தெளிந்தானென்றுணர்க.

௧௯. அவை - அப்பன்றிக்குட்டிகள்.

(௬௰)

௧. பதங்கம் - விட்டில்.

* "கருங்குருவிக் கன்றருளினை போற்றி" (திருவா. போற்றி. ௨௦௧); "இவ்வுல குயிரளித்த, பஞ்சின் மெல்லடிப் பாவைகூ றுடைக், கருங்குரு விக்குக் கன்னருள் கொடுத்த, வெண்டிரு நீற்றுச் சொக்கர் மேனியன்" (கல். எ.)

(பி - ம்.) 1'அறத்தினினோங்கிச் 2'பகைகடிந்தே'

ஆங்கவற்றுண் மிக்க வறிவுள்ள தோர்குருவி
யோங்கு மொருகா லருளா லுணர்ந்தபடி
யிங்கிவ் வுலகி லியாவர்க்கு முண்டுபகை
தீங்ககல வெல்லாரு முண்டதனைத் தேருங்கால். (உ)

வென்றிப் புரம்வென்றோன் வேகா முடியறுத்தோன்
குன்றக் கரியுரித்தோன் கூற்றங் கெடவுதைத்தோன்
மன்றற் பதம்பணிந்தே வானோ ரதிசயிப்ப
வின்றிப் பகைவெல்ல வல்லே மெனத்தேறி. (௩)

காணி னினியிதற்கோர் காரணமுண் டெந்நிலத்தும்
பூணு முருக்கொண்டு பூசைகொளு மீசர்களிற்
சேணிமிருங் கோயிற் றிருவால வாயனல்லாற்
பேணுங் கருணை யுடையா ரிலைபிறங்க. (௪)

என்று கருதி யிரணியத்தண் டாமரையிற்
சென்று விரைவின் முழுகிச் சிறகடித்துத்
துன்றுபுகழ் கொண்டானைச் சூழ்ந்துலகோர் கொண்டாட
நின்று பரவப் புகுந்ததுமுன் னீங்காது. (௫)

வேறு.

அருந்தவ னதிச யித்திங் கருங்கருங் குருவி நெஞ்சிற்
பொருந்திய நினைவு கண்டு பொருவின் மூன் றெழுத்தா லோங்கி
விரைந்துயர் பலத்தை நல்கு மிருத்தியுஞ் சயம தென்னுந்
திருந்திய மந்தி ரத்தைச் செவிப்புலத் துபதே சித்தான். (௬)

[1] வழிபடு வோரி னின்போன் மண்மிசைச் சொல்லற் கில்லை
பிழையிலை விடியு முன்னம் பிரமமா [2]முகுத்தத் துன்ற
[3]னுழையினிம் மந்தி ரத்தை யுவணரா சனுமுள் ளஞ்சும்
பழுதற வோது னக்குக் காக்கைபாற் பயமோ வில்லை. (எ)

---

உ. உணர்ந்தபடியாவது.

௩. வென்றிப்புரம்-முன்பு வெற்றியையுடைய புரங்கள்; "வென்றிக்களிற்றை விரிதாரவன் வென்ற வாறும்" (சீவக. க௪.) சிவபெருமானுடைய செயற்கருஞ் செய்கைகளுள், பெரும்பகைகளை வென்றமை பகையை வெல்லக்கருதிய கரிக்குருவியாற் கருதப்பட்டது.

௪. சேண் நிமிரும்.

௫. இரணியத்தண்டாமரை - பொற்றாமரைத் தீர்த்தம்.

௬. அருந்தவன் - சிவபெருமான்; "தாழ்சடைப் பொலிந்த வருந்தவத்தோன்" (புறநா. கடவுள்) என்பதன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

எ. முகுத்தம் - முகூர்த்தம். பிரமமா முகூர்த்தமென்பது, இரவில், இருபத்தைந்து நாழிகைக்குப் பிற்பட்டகாலம். இம்மந்திரத்தை ஓது. உவணராசன் - கருடன்.

(பி - ம்.) 1'வழிபடுவோர்களின்போன்' 2'முகிழ்த்தத்' 3'உழையில்'

அரும்பெரும் புத்தி யுள்ள வன்புடைச் சடக மேநின்
பெருங்குலக் கிளைக்கு மப்பாற் பெறும்பெறு மிளம்பார்ப் பிற்கும்
பொருந்துமிம் மந்தி ரத்தைப் போதிப் புவன மெச்சப்
பரிந்தவை யாவு முய்ந்து பயமறத் திரிவ தற்கே. (௮)

அயர்வறு சிறப்பின் மிக்க வவனிமீ தென்று நந்த
முயர்விளை யாடல் காண வும்பரு மதிச யிப்பச்
செயிரறு பறவைக் கெல்லாந் தீபமே யனைய வுன்றன்
[1]பெயரது வலியா னென்று பேசிடக் கடவ தென்றே. (௯)

கருணையிற் பரிசஞ் செய்து கருதியித் தகவுஞ் சொல்லிப்
பொருவரு நின்னி டத்துப் போவென விடைகொ டுப்பக்
குருவியு மாலித் தன்பு கூர்ந்துபோய் விடியு முன்னர்
விரைவொடும் புகுந்து காட்டில் வெல்லுமந் திரமோ திற்றால். (௰)

மறுவறு சிகரம் பன்னுள் வலஞ்செய்து சிறகு நோவ
நெறியினின் வணங்கிப் பெற்ற நிகரிலா மந்தி ரத்தைப்
பிறிவருஞ் சாதிக் கெல்லாம் பின்னுக னருளாற் கூடி
யறிவுற வுபதே சிப்ப வப்படி யோதிற் றன்றே. (௧௧)

நன்பரி வெய்தி யாவு நவையற வோது முன்னர்
வன்பெரும் பகையை வெல்ல வல்லநன் வலிவு தோன்ற
முன்பது கண்ட பின்ன ரவையவை முடுக்கிக் காக்கை
யின்புறு தலையி லெற்றப் புகுந்தன வெங்கு மெங்கும். (௧௨)

[2]கோக்கய நோக்கை நீக்கிக் கூர்க்குமூக் குடைய யாக்கைக்
காக்கைக டலையி ளக்கக் கத்தமுற் பகைகி ளைந்து
மேக்குநீஇ யொன்றுக் கொன்று விரைவொடு மாறி மாறிப்
போக்கறத் தொடர்ந்து குட்டப் புகுந்தன வெங்கு மெங்கும். (௧௩)

ஆங்கது கண்ட போதே யதிசயித் தவனி யோர்கள்
பாங்குடைச் சொக்கன் வல்ல வல்லபம் பாரீர் பாரீ

---

௮. சடகம் - கரிக்குருவி. இளம்பார்ப்பு - இளையகுஞ்சு. போதி - உபதேசஞ்செய். பரிந்தவையாவும் - தன்புறத்தவைகளெல்லாம்; பரிந்து - நீ யன்புற்று என்றுமாம். திரிவதற்குப் போதி.

௧௧. நிகரிலா மந்திரம் - பகையில்லாமைக்குக் காரணமாகிய மந்திரம்; "நிலமொடு செய்த நிகர்க்கு மூரன்" (ஐங்குறு.௨); "நிகரடு விலையே" (சிலப். பக்கம், ௧௨௧.)

௧௩. கோக்கயம் - தலைமையாகியகரிக்குருவி. நோக்கைநீக்கி - கண்ணோட்டத்தை யொழித்து. மேக்குஉநீஇ - மேலேசென்று.

௧௪. பாரீர் பாரீர் - பூமியிலுள்ளவர்களே பாருங்கள்; "பகராங்கக் கலம் பகத்தைப் பாரீர் பாரீர்" (அரங்கக்கலம். தனியன், ௨); அடுக்குமாம். இறைஞ்சினபின்னரே வன்மையுண்டாயிற்றென்று வருவிக்க.

(பி - ம்.) [1]'பெயரையும்' [2]'கோக்கை நீணோக்கை', 'கோக்கிய நோக்கை'

ரீங்குமுன் கண்ட தன்றிங் கிறைஞ்சின பின்ன ரென்றே
வாங்கரு முவகை கூர்ந்தார் பெயரையும் வலியா னென்றார். (கச)

வேறு.

செந்நெறி நாயன் றேவர்க டேவன்
முன்வரு நீதி முடித்தன னென்றே
தொன்னெறி மலரோன் வந்து துதித்தான்
றன்னுடை யுள்ளஞ் சால வெருண்டே. (கரு)

வேறு.

சொற்ற ரும்பெரிய சுந்தர னருளா
னற்க ருங்குருவி நாமிசைத் தோன்றும்
விற்பொலி மந்திர [1]மித்திஞ் சயத்தின்
கற்ப னையின்றுங் காணப் படுமே. (கசு)

ஆகத்திருவிருத்தம் - ஈசஉ.

## ௬௧.—மாமேருவிற் கயல்செண்டுபொறித்த திருவிளையாடல்.*

தேர்பரி கரியா ளீண்டுந் திறற்பெரும் படையான் மிக்குப்
போர்புரி தெவ்வர்க் காய்ந்து புனிதனுக் கன்பு பூண்ட
சீரிய புகழான் முன்னோர் தென்னனுக் கிர[2]கு லத்து
வாரிகு முலக முற்று மதுரையி லிருந்து காத்தான். (க)

மன்னுயிர் காப்போ னோர்கான் மறையவர் தமையி கழ்ந்து
தொன்னெறி யருள்சே ரெந்தை சொக்கனுண் டென்றி ருப்ப
நன்னெறி மறையோ ரெல்லா [3]நல்குர வுற்றே யெங்கு
மின்னல்கொண் டுழலப் புக்கா ரியாகமுஞ் சடங்கும் விட்டே. (உ)

கரு. நா.: ரு; நாயன் - தலைவன்.

கசு. இத்தலத்தில், சோமசுந்தரக்கடவுள் உபதேசித்தருளியபின்பு, ஒவ்வொருதினத்திலும் விடியற்காலத்தில், கரிக்குருவிகள் மிருத்தியுஞ்சய மந்திரத்தை ஜபித்துக்கொண்டு வருகின்றன வென்பது ஐதிஹ்யம்; "ஆற்றல் வேண்டேரெலா மரனை யன்பினால், போற்றியிம் மனுப்புகல் கென்னல் போன்றமுன், சாற்றிய மந்திரந் தன்னைக் கார்க்குரீஇ,வீற்றுவீற் றுவிருந் துரைத்தன் மேயின" (காஞ்சிப்புராணம், பன்னிரு.சுப௪: விடியல்வருணனை)என்னுஞ் செய்யுளாலுணர்க. மித்திஞ்சயம் - மிருத்தியுஞ்சய மந்திரம்; "சத்தியஞான மித்திஞ்சயத்தினையுபதே சித்தான்" (திருவிளை. கரிக்குருவிக்கு.கஉ.)

(௬௧) [விக்க.

க. ஆள் - காலாட்கள். உக்கிரகுலத்துத் தோன்றியென ஒருசொல்வரு

உ. சடங்கு என்றது யாகமல்லாத கர்மங்களை.

* "சேனுடன் சென்றிட்டுமேருப் பொன்வாங்கி" (பயகா. சுக.); "கயலெழுதிய விமய நெற்றியின்" (சிலப். ஆய்ச்சியர் குரவை.)

(பி - ம்.) [1]'மிருத்தியுஞ்சயத்தின்' [2]'குலத்துள்' [3]'நல்குரவாகியெங்கும்'

ஆங்கவர் நீங்க [1]இல்லா வரும்பெரு வேள்வி மூன்
றோங்கிய தருமம் யாவு மொழிதலா லொழிவி லாத
தாங்கரு மழைம றுத்து தென்றுதற் றூனி யங்கள்
பாங்குற விளைவில் லாமற் படைகுடி தளர்ந்த வன்றே. (ரு)

மாநிலந் தளர்தல் கண்டு வழுதிவெந் துயருற் றோர்நாட்
டானிருந் தரைக்கி டந்து தனிமனத் தோர்வான் யாமின்
றீனமின் மறையோர் தம்மை யிகழ்தலா லிறைவி ரும்பு
மூனமில் வேள்வி குன்ற வொழிந்தது பொழிந்த மாரி. (சு)

இன்றியா மறிந்தோ முண்மை யெங்ஙன மென்னி னல்லோர்
சென்றுதே வரையும் வேள்வித் திறத்துளோர் தமையும் பூசித்
தொன்றுவ ரதனாற் பெய்யு முயர்மழை காலத் தென்று
நன்றிகொள் பழையோர் சொல்வ ரென்றுநள் ளிருட்டு யின்றான். ()

கருணைசேர் சொக்கன் கண்டு கனவிடைச் சென்று சொல்வான்
றெரிவுற நமக்கே நல்ல தென்னவ வருந்தே லின்று
பெருகிய படையு முன்றன் [2]பீடுடைக் குடியு மற்றோ
ரொருவரும் வாடா வாறிங் குரைப்பனீ யுணர்ந்த தொக்கும். (சு)

விண்படர் துங்கச் செம்பொன் மேருவைச் சென்று ணர்த்தித்
தண்பெரும் பொன்னு னக்கு வேண்டுப தறித்தெ டுத்தாங்
கொண்கிரி நின்ன தாக வுனதுறு குறியு மிட்டுப்
பண்பொடு கொண்டு போதி பகட்டிலொட் டகத்தி னன்றே. (எ)

நின்னுடைத் தானைக் கெல்லா நிறைவுற யாண்டொன் றிற்கு
மன்னுமப் பொன்னிற் செம்பொன் மழையென வெடுத்துப் பெய்து
செந்நெறித் தேவர் கட்குந் தீதிலா வொழுக்க மிக்க
நன்னெறி மறையோர் கட்கு நல்கிடு நயங்கள் [3]கூர. (அ)

பொழிமழை மறுத்த நந்தம் புரமதா மறையோர் தம்மைத்
தொழுதெழா திகழ்ந்த லான்மேற் றுதிசெய்து நம்மேல் வைத்த
பழுதிலா வன்பு போல வவர்கடம் பாலும் வைத்து
[4] வழிபடின் யாண்டொன் றிற்குள் வையகந் தழைக்கு மன்றே. (கூ)

---

ரு. அரசருக்குரிய ஆறங்கங்களுட் சிறந்தமையின், படையும் குடியும் கூறப்பட்டன; "பெருகிய படையுமுன்றன் பீடுடைக்குடியும்" (சு.)

சு. காலத்துப் பெய்யுமென்க. சு. நமக்கே: ஏகாரம், பிரிநிலை.

எ. தறித்து - வெட்டி. உனதுறுகுறி யென்றது, மீனமுத்திரையை. போதி - வா. பகடு - யானை. நன்று - மிகுதியாக.

அ. இச்செய்யுளின் கருத்தை கக-ஆம் செய்யுளும் புலப்படுத்தும்.

கூ. நந்தம் புரமதாம் - நம்முடைய வடிவமாகிய; புரம் - உடம்பு. இக ழ்தலால் மறுத்த.

(பி - ம்.) [1]'இல்லா' [2]'பீடுசேர்குடியுமற்றும்' [3]'கூர்ந்தே' [4]'வழிபடீ'

வேறு.

துணைவன் யானெனச் சொல்லிமுன் மறைந்திடக் கனவை
யுணர்வு ளானெழுந் ததிசயித் தொருவருக் குரையா
னணைய வாயில்வா யமைச்சர்கள் குறிப்பறிந் தளவி
றணிவில் சேனையை விடியுமுன் சாற்றினர் கிளர. (௧௦)

அடர்ந்த தானையோ டாங்கவன் வடதிசை நோக்கி
நடந்து பல்பெருங் காதமூ நாளிடைப் போக்கி
[1] மடங்கல் யாளிகள் வானவர் தானவர் மற்று
மிடைந்த காஞ்சன மேருமால் வரைமருங் கடைந்தான். (௧௧)

மற்றதன் சாரன் மாட்டோர் வளநகர் மேவி யங்க
ணுற்றதா னையை[2]யி ருத்தி யோங்குதன் றிறலி னோடு
முற்றிர விற்சென் றீசன் மொழிந்தன மொழிந்து நிற்பச்
சற்றுணை ராமை கொண்டு சாடினான் பாணிச் செண்டால். (௧௨)

அங்கது கண்டு கம்பித் தமரர்மெய் புனைந்து வந்து
செங்கணே றனைய மன்னன் [3]றிண்மையை யதிச யித்தின்
றிங்கியா னுரைப்ப தொன்றுண் டென்னுடை யுருவஞ் சாற்றிற்
சங்கம மென்றொன் றுண்டு தாபர மென்றொன் றுண்டால். (௧௩)

வேறு.

மன்னிய சங்கம வடிவம் யானிது
முன்னிகழ் தாபர வடிவ முன்னரிம்
மின்னிய வெற்பகத் துனக்கு வேண்டுசெம்
பொன்முறித் தேகெனப் புகழ்ந்து சொன்னதால். (௧௪)

முற்றிகழ் தச்சரான் முறித்தி லங்குசெங்
கற்படு வரையென வெடுத்துக் காஞ்சன
வற்புதச் சிகரிபண் டார மாகவே
கொற்றவன் றன்கயற் குறிபொ றித்தனன். (௧௫)

சென்றுகந் துகமென மறுகச் செண்டினாற்
கன்றின்மு னடித்தவன் பரவக் கண்டு வாழ்ந்
தொன்றிய சங்கம வுருக்கொண் மேருவும்
வென்றநீ போகென விடைகொ டுத்ததால். (௧௬)

---

௧௦. கனவை ஒருவருக்கும் உரையானாகி அணைய. [பொன்.
௧௧. மடங்கல் - சிங்கம். யாளிகள் - யானையாளிகள். காஞ்சனம் -
௧௨. செண்டு - ஒருவகையாயுதம்; "செண்டுகொண்டு கரிகாலனொருகாலி
மையச் சிமயமால் வரைதிரித்தருளிமீள" (கலிங்க. இராசபா. ௧௬.)
௧௩. சங்கமவுருவம் தாபரவுருவமென எனக்கு இரண்டுவடிவங்கள் உள்
௧௪. 'யான்' என்றது, தன்னுருவத்தை. இது - இம்மலை. [ளன.
௧௫. சிகரி - மலை. கயற்குறி - மீனமுத்திரை; "வழுதிக்கொடிச்
சேலெழுதிய மால்வரை" (கூ. ம. சம்பு. ௧௦.)

(பி - ம்.) [1]'மடங்கலாளிகள்' [2]'இருத்தியோங்கிய' [3]'திண்மைகண்டு'

வேறு.

ஒருவரா லணுக வொண்ணு வுயர்வட கிரியிற் செம்பொன்
கரையறத் தறித்தெ டுத்துக் கயலொடு செண்டுந் தீட்டிப்
பெரியவ னருளை வாழ்த்திப் பெருங்கடற் படையி ருப்பின்
விரைவொடும் வந்தான் வந்தா னிரவியும் வென்றி காவல. (௧௭)

மன்னிய மனிதர் முற்று மற்றுமோர் மேரு வென்னக்
கொன்னுறு நாவற் செம்பொற் குன்றினைக் கண்டு வாழ்ந்து
பொன்வரை யடித்து மீனம் பொறித்துயர் பொன்கொ ணர்ந்த
தென்னவ னினக்கா ரொப்பா ரென்றனர் செய்தி கேட்டு. (௧௮)

பெரும்படைக் கியாண்டொன் றிற்குப் பெரும்பொருள் விரும்பாலி
யிருங்கிரி மச்ச மாக்கி யீழங்கொண் டொட்ட கங்கள்
பரும்புழைத் தடக்கை நோன்றாட் பகடியர் சகடு முன்னு
வருந்தவோர் வருத்த மின்றி வந்துமா மதுரை புக்கான். (௧௯)

வந்துதன் னுழைபு காமுன் வள்ளல்பொற் கோயில் புக்கிங்
கெந்தையே யடைந்தே னின்ற னருளினு லென்று வாழ்த்திச்
சுந்தர மாக முன்னர் வழங்குவ யாவுந் தோன்றச்
சந்திர மாவ ளித்தான் சந்திர மாகு லத்தான். (௨௦)

தங்குயர் வேள்வி யோங்கத் தவிசிடை யிருத்தித் தெய்வ
மங்கல மறையோர் தம்மை மகிழ்ந்துப சாரத் தோடு
பொங்குசெங் கனக நல்கிப் பூசனை செய்தான் வையந்
திங்கண்மும் மாரி பெய்து சிறந்தது செல்வத் தோங்கி. (௨௧)

ஆண்டியாண் டொன்றிற் குள்ளீண் டகிலமுந் தழைப்பக் கண்டோர்
காண்டகு புதுமை யீது கண்டில மென்று வாழ்த்திப்
பாண்டியன் றனையு மந்தப் பாண்டியற் கன்பு பூண்டு
வேண்டிய தளிக்குஞ் சொக்க வேந்தையும் வியந்தார் சால. (௨௨)

மாநிலங் காப்போர் வேள்வி மறையவர் தேத்துந் தூய
வானிரை மாட்டு மீச னளவிலு மடியார் கண்ணு
மீனமி லன்பு பூண்டாண் டினியன செய்வ ரேன்மற்
றானமேல் வருமோ வாரா துண்மையீ துண்மை யீதால். (௨௩)

ஆகத்திருவிருத்தம் - ௧௬௭௫.

---

௧௭. பெரியவன் - மகாதேவர்.

௧௮. நாவற்செம்பொன் - சாம்பூநதமென்னும் தங்கம்.

௧௯. மச்சம் - வெட்டியெடுத்துக்கொண்டு வைத்திருக்கும் மிச்சப்பொன். ஈழம் - பொன்; மேருவை மீனுகச்செய்து அதிலுள்ள பொன்னையெல்லாங் கொண்டென்பது மற்றொருபொருள்.

௨௦. முன்னர் வழங்குவ - திருமஞ்சனக் கலசமுதலியவை. சந்திரமா - பொன்னுக; சந்திரம் - பொன். மடக்கணி.

௨௨. ஆண்டு - அப்பொழுது.

## ௬௨.—சான்றழைத்த திருவிளையாடல்.

ஓங்குதன முடையானோர் வணிகன் வையத் துயர்புளதோர் பட்டினத்து முன்னோர் நாளி, னீங்கரிய சுற்றமுட னிருப்ப முன்னை [1] நீள்வினையின் வசத்தாலோர் புதல்வ னின்றி, யீங்குலகி னுணமட மச்ச முன்னா வெத்தகவு மிவட்கல்லா தில்லை யென்னும், பாங்குதிகழ் வுறுமொருபெண் ணருமை யாகப் பயந்துசிறப் பொடுவளர்த் தான் பரிவு கூர்ந்தே. (க)

வருத்தமற [2] வளர்கின்ற கன்னி தன்னை மதுரைநக ரிருப்பானோர் மருமகற்குப், பொருத்தமுறக் கொடுப்பலென வறுதி யிட்டுப் பொருவிலருங் குலவணிகன் விருத்த னாகித், திருத்தமுடை மனைவியொடு மரித்த பின்னர்ச் செட்டிகளாங் கவற்கான கடஞ்செய் தஞ்சி, விரித்துநிகழ் செய்தியெல்லாந் தோன்ற வோலை [3] விரைவினவன் றனக்கெழுதி விட்டார் கட்டி. (உ)

உன்னுடைய மாமனெழிற் பிள்ளை வேண்டி யுயர்தருமத் தொருப்பட்டாங் தவங்கள் செய்து, [4] பின்னரொராண் மகவின்றி யருமையாகப் பெறற்கரிய பெற்றியினோர் பெண்ணைப் பெற்றிங், கென்னுடைநன் மருமகற்கே கொடுப்ப லென்று யாருமுணர் வுறவுரைத்து விருத்த னாகித், தன்மனைவி யொடுமிறந்தான் விரைவின் வந்தித் தையலையுங் கைப்பிடித்துத் தனங்கைக் கொள்ளே. (ங)

இந்தவா சகவோலை செல்லா முன்னாங் கிருங்குலமா தொடும்புதல்வர்ப் பெற்று வாழ்வோன், முந்தவெதிர் வாங்கிவா சித்துக் கண்டு முதிர்ச்சியினாற் சிறிதழுங்கி மகிழ்ந்து சாலச், சிந்தைவரு நல்லுற்றோர் சிலரோ டொன்றிச் சின்னாளிற் பல்காதங் கடந்து சென்றே, யந்தநக ரடைந்தளவில் சிறப்பாற் பொங்கு மன்புடைமைத் துனியிருக்கு மகத்துட் புக்கான். (ச)

நீதியுடை வணிகனுநல் வடிமை முன்னா நிதிகளுங்கண் டெதிர்வரவு பார்த்தி ருந்த, மாதையுங்கண் டிரும்பதியோர் விரும்பச் சின்னாண் மனைக்கணிருந் தறநெறியை மனத்தி னோர்ந்தின், றேதுமணஞ்

க. பட்டினத்து - காவிரிப்பூம்பட்டினத்தில்; "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்" (பட்டினப்பாலை, உகஅ.)

உ. அறுதியிட்டு - நிச்சயித்து. மரித்தபின்னர் - இறந்தபின்னர். கடம் - அபரக்கிரியை. ஓலையிலெழுதி அதனைக்கட்டி விட்டார். [கூட்டுக.

ங. கைக் . காள் என்று ஓலையெழுதிக்கட்டி விட்டாரென முன்னதனோடு

ச. 'சின்னாளிற் பல்காதம்': முரண். மைத்துனி-அம்மான்மகள்; "மைத்துனி டைக்கமாட்டே னினைத்தன னென்ன" (எ.)

(பி - ம்.) 1 'நீள்விதியின்' 2 'வளர்க்கின்ற' 3 'விரைவில்வணிகனுக்கெழுதி' 4 'பின்னொரான் மகவின்றி யினிமைகூரப்'

செய்வதுநம் மதுரை மேவு முற்றவர்முன் னுவென்றே யுரைத்து வான்றோய், போதுதிகழ் பொழின் மதுரை நகரை நோக்கிப் புறப்பட்டா னொருப்பட்டான் றனக்கட் டோடும். (௬)

வேறு.

செந்துவர் வாய்க்க ருங்கட் செப்பிளங் கொங்கை மங்கை
யிந்திரை யனையா ளோடு மினிமைகூ [1]ரடிமை யோடு
நந்துபல் பொருள்க ளோடு நண்ணிய சுற்றத் தோடும்
வந்தன சொல்லி யொல்லை வழியிடை நடக்குங் காலை. (௭)

மைத்துனி நடக்க மாட்டே னிளைத்தன ளென்ன வாய்ந்த
வுத்தமன் பொருள னைத்து முற்றவர் கைக்கொ டுத்து
மெத்தென மாதைக் கொண்டு வருகுவல் விரைவி னீங்கண்
[2] முத்தெயின் மதுரை தன்னிற் போமென மொழிந்து விட்டான். ()

மற்றவர் போய பின்னர் வல்லியை மெல்லக் கொண்டாங்
குற்றநல் லடியா ரோடு மோசனை காதம் வந்து
சிற்பரன் விரும்பி வாழுந் திருப்புறம் பயம தென்னும்
பொற்பமர் திருப்ப திக்கட் பொருந்தியொண் கோயில் புக்கான். (அ)

[3] ஆங்கொரு புடையிற் றங்கி யடிசினன் குறவ மைத்துத்
தீங்கற வுண்டு முன்னர்த் திகழ்விதி வசத்தா லாங்கட்
டாங்கருங் கண்ப டுப்பத் தையலு மரபை நோக்கி
நீங்கவோர் புடைத்து யின்று ளொருங்கடி யார்கள் சூழ. (௯)

நிறைவினு லறிவால் வாழ்வா னீதியா னிளமை யாலோர்
குறைவிலா மரபாற் பொங்குங் [4]குலப்புகழ் வணிகன் றன்னைக்
கறுவிவா ளரவு சென்று கடித்தலு நிசிக்கட் கண்டே
முறையிடா வீழ்ந்தார் சூழ்ந்த வடியவர் முதிர வாங்கு. (௧௦)

விரைவின்மின் னசனி யன்னூர் வெவ்வலிக் கருட னொப்பா
ருரனுடைக் கேழல் போல்வா ரொப்பிலா மயூர நேர்வார்

---

௬. தனக்கட்டு - பணப்பொதி. ௲. இந்திரை - திருமகள்.

எ. மெத்தென - மெல்ல. முத்தெயில் - முதியமதில்.

அ. அடியார் - அடிமை வேலைசெய்பவர்; "அடிமை முன்னு" (௫.) ஓசனை யுக்காதமும். சிற்பரன் - பரமசிவன். திருப்புறம்பயம் - சோழநாட்டுத்திருப் பதிகளுள் ஒன்று; பிரளயகாலத்தில் ஊழிவெள்ளம் சிவாஞ்ஞையால் இதன் புறத்தே சூழ்ந்திருந்ததுபற்றி, இஃது இப்பெயர் பெற்றதென்பர்; "பாஹ்யாம்பு புரம்" என்பது இத்தலத்தின் வடமொழிப்பெயர்.

௯. மரபு - முறைமை. ௧௦. கறுவி - கோபித்து. நிசிக்கட்கடித்தலும்.

௧௧. மின் - மின்னல். அசனி - இடி; மின்னுதலையுடைய இடியுமாம். கேழல் - பன்றி. மயூரம் - மயில். கருடன் - கிரி. எண்கு - கரடி. இச்செய்யுளில், பாம்பிற்குப்பகையாய் உள்ளவைகள் கூறப்பட்டிருத்தல் காண்க.

(பி - ம்.) [1]'அடியாரோடும்' [2]'முத்தையின்மதுரை' [3]'ஆங்கான்றனைப்பணிந்தே பருகுறுமனையிற்றங்கித், தீங்கறவருந்தி முன்னர்த்' [4]'குலப்பெரு'

பொருநகு லத்தை யெய்வார் பொருவிலெண் குக்க டிப்பார்
கருதிமுன் பார்த்துஞ் சாகக் கண்டனர் கைவிட் டார்கள். (௧௧)

செங்கயற் கண்ணாள் பாம்பு தீண்டவுந் தீண்டா னாகி
யெங்குல வரசே யாற்றே னின்றெனை யிங்குத் தள்ளிக்
கங்குலி னொளித்தா யென்று கண்ணினீ ரொடுமே ரற்றி
யங்கொரு மதிநி னைந்து புலம்புவா ளரனை நோக்கி. (௧௨)

வாளரா வேணி யானே வாரிநஞ் சுண்ட கோவே
காளமார் கடல்போய் மீண்ட கலங்கவிழ்த் தவர்போ னின்றேன்
வேளுரு விரதி வேண்ட மீண்டளித் திலையோ வின்றென்
னாளரி யுயிர்தா ராயே லவன்வழி யடைவேன் யானே. (௧௩)

என்றவ ளடியா ரோடு [2]மிரவிடை யரற்ற முன்ன
நன்றியிற் றெழுவான் வந்த ஞானசம் பந்த ரொல்லை
வென்றியி னுணர்ந்தெ ழுந்து மெலிவதிங் கென்னை யென்னை
நின்றவ ருரையு மென்ன வுரைசெய்வா ளிலனை நோக்கி. (௧௪)

வேறு.

எந்தையுயர் [3]பட்டினத்தோர் பெரிய செட்டி யெனைத்தவத்தாற் பெற்றழகார் மதுரை மன்னு, முந்தியநன் மருமகற்குக் கொடுப்ப லென்றே மொழிந்தவா னுலகெய்த வணிகர் கூடி, நொந்தெழுதி யோலை விடக்கண்டு வந்து நானெறியிற் போய்மன்றல் செய்வ மென்றே, யந் தமில்பல் பொருளையுங்கொண் டென்னை யுங்கொண் டணைந்திரவி லிவன்மாண்டா னரவு தீண்டி. (௧௫)

வேறு.

என்பெருந் தவத்தா லெந்தை யிங்கெழுந் தருளப் பெற்றேன்
றுன்பமு மகன்ற தென்று சொல்லுமுன் பெரிதி ரங்கி
மின்பொலி யங்க மென்பூம் பாவையாப் பாடும் வென்றி
நன்குறு கருணை மேனி ஞானசம் பந்த ராங்கு. (௧௬)

வென்றிகொ ணஞ்சுண் டானை விதிமுறை யிறைஞ்சி யிந்த
மன்றலங் குழலா ளுற்ற வருத்தநீக் கிடுவ மென்றே
நன்றிகொ டிருக்க ளேக்கா ணுண்முகன் மறலி யஞ்சப்
பொன்றிய வணிகன் றன்னை யெழுப்பினார் புதுமை கூர. (௧௭)

---

௧௩. காளம் - கருமை. ஆளரி - ஆண்சிங்கம்; என்றது வணிகனை. இச் செய்யுளில் விடத்தின் கொடுமையையும், கணவனையிழந்த மகளிர் துன்பத்தை யும் எளிதில் மாற்றியருளும் ஆற்றலுடையவரென்பது புலப்படச் சிவபெரு மானைத் துதித்திருக்கும் அழகு மிகப்பாராட்டற்பாலது.

௧௪. நின்றவர்: விளி. ௧௫. மன்றல் - கலியாணம்.

௧௬. எந்தை - தேவரீர். அங்கம் - என்பு; திருஞானசம்பந்தர் அங்கத் தைப் பூம்பாவையாகப் பாடியதலம்: மயிலாப்பூர்.

௧௭. வென்றிகொள் - மற்றைத்தேவர்களைவென்ற. 'நஞ்சுண்டானை' என்பது கருத்துடை அடையணி. அஞ்ச எழுப்பினார்.

(பி - ம்.) [1]'நகுலேயம்' [2]'இறைகடையரற்று' [3]'பட்டணத்தோர்'

துயின்றவ ரெழுமா போலத் துண்ணென வெழுந்தி றைஞ்சும்
வயங்கொளி வணிகற் கண்டு வாடிய தொண்ட ரெல்லாம்
வியந்துற வேத்தி னார்கண் மிகமிக வதிச யித்து
நயந்திதார் வல்லா ரென்று ஞானசம் பந்தர் தம்மை. (௧௮)

மற்றுமே ரொவ்வா நீதி வணிகனைப் புகழ்ந்த தன்றிச்
சொற்புக ழுணங்கை நெஞ்சங் களிப்பவுந் தொடாது [1]நின்ற
பொற்பையு மவன்பால் வைத்த வன்பையும் பொருவி லாத
கற்பையுங் கண்டு சால வாழ்த்தினார் காழி வேந்தர். (௧௯)

வேறு.

தொன்மை நீதி வணிகற்குச் சொல்லுவார்
நன்மை தீமை பயப்பினு நற்சிவன்
வன்னி கூவம் வருநடு வாகவே
கன்னி மாதினைக் கைப்பிடி யென்றனர். (௨0)

முறைமை மன்னிட முன்ன முணக்கிவள்
குறைவி றந்தையுங் குற்றமி றுயரு
முறவி னல்கின துண்டே மருண்டினி
யறையும் வார்த்தையை யைய முறுயென. (௨௧)

இணையில் வைதிக வாரண மிப்படித்
துணிவு சொல்லத் துணிந்து வணிகனுந்
தணிவி லாத விருப்பிற றயாவுடை
வணிகன் மாதை விதிப்பின் மணந்தனன். (௨௨)

தெய்வ நீதித் திறங்கண் டதிசயித்
தய்ய வந்தெ னுயிர்தரும் வள்ளலே
யைய னேநல் லருமருந் தேயெனத்
தைய லாளொடும் வீழ்ந்தனன் றாண்மிசை. (௨௩)

மற்ற வன்றனை வைதிக வாரணங்
கற்பி லங்குநின் காதலி தன்னொடு
முற்ற நல்லடி யாரொடு மொலலிந்நின்
பொற்ற நன்னகர் போகெனச் செப்பினர். (௨௪)

---

௧௮. இது - இவ்வதிசயச்செயல். ஞானசம்பந்தர்தம்மை ஏத்தினார்கள்.

௨0. சிவன் வன்னி கூவம் - சிவலிங்கப் பெருமானும் வன்னி மரமும் கிணறும். நடுவாகவரும்.

௨௨. வைதிகவாரணம் - திருஞானசம்பந்தர்.

௨௪. பொற்ற - பொலிவுபெற்ற.

(பி-ம்.) 1'நீங்கி, நிற்பது கண்டு சால நிறைவுளோர் போற்றுதைய, கற்பியாங் கண்டி லேமென் றேத்தினார் காழி வேந்தர்'

வேறு.

மாண்டுகன வெனவெழுந்த வணிகன் கற்பின் மாதினொடு நல்லடியார் போற்றப் போந்து, காண்டகுசெகன் மதுரைநக ரடைந்து பொற்பிற் கருணையுட னெதிர்கொண்ட கிளைஞர் கட்கு, மூண்டபெருஞ் செய்தியெல்லாந் தோன்ற வங்கண் மொழிந்தெவரு மதிசயிப்ப மகிழ்ந்து மாம, னீண்டியநன் பொருளொடுந்தன் பொருளுங் கொண்டாண் டிருந்தனனன் னயம்படவா ணிகஞ்செய் தோங்க. (௨௫)

மன்னு[1]முய ரற்பொடுவாழ் நாளி னல்ல வடிவுகுண முடையானோர் மதலை தோன்றிப், பொன்னணியா லிலதுபெருஞ் சிறப்பினோங்கிப் பொலிவினுடன் வளருங்காற் பொருமை மிக்க, முன்னமவன் கொண்டகுல மாதின் மைந்தர் முநிராத சிறுபுதல்வ ரோடுங் கூடி, மின்னியபாஞ் சாலிகமுன் னான நல்ல விளையாட்டி னொருப்பட்டார் வீதி யேறி. (௨௬)

வேறு.

தகவிளை யாடு நாளிற் றகவிலாப் புதல்வ ரோர்நாட்
புகலரும் புதல்வன் மேனி புடைத்திட வடிப்பச் சென்று
மிகவெருண் டழுது சொல்லக் கேட்டலும் விம்மி யாற்றாள்
பகைபட வடித்த தென்கொல் கெடுவிர்கா ளெனப்ப கர்ந்தாள். (௨௭)

வேறு.

ஆங்கது கேட்டு விரைவின்வந் தேடி யார்மக ளார்கொலென் கணவ, னோங்கிய விதியிற் கைப்பிடித் தவளோ வொண்பொருட் பரத்தைய ரனைய, தீங்குள நீயோ மைந்தரைச் செறுப்பாய் செப்பிய வாறுநன் றென்று, பாங்குடை யாளை யெழவெழ வைதாள் பன்முறை பரிபவ மாக. (௨௮)

இன்னன விளிய முன்னவ ளேச விளையவள் சாலநொந் தழுது, பின்னுற நவில்வா ளறிவிலா தவளே பேசருஞ் சிறப்புட னடைவின், வன்னியுங் கிணறும் புறம்பயத் திறையு மருவிய பெரியசான் றாச, வுன்னுடைக் கொழுந னெனைமணஞ் செய்தா னுனக்கெனோ வுரைப்பதிங் கென்றாள். (௨௯)

இப்படிச் சொல்ல மற்றவ ணகையா வியம்பிய திறமெலா நன்றின்
றொப்பிலாச் சிவனும் வன்னியாங் கிணறு மோதிய சான்றுனக் குண்டேற
செப்பவா தாரச் சான்றது சான்றோ சிறந்தநம் முற்றவர் முன்னு
மெய்ப்பட வந்து நவிலுமேற் கற்பார் மெல்லிய லல்லவேற் கணிகை.

௨௬. பாஞ்சாலிகம் - மரப்பாவை விளையாட்டு. [பம்; அவமானமுமாம்.
௨௮. செறுப்பாய் - கோபிப்பாய். எழஎழ - மிகமிக. பரிபவம் - துன
௨௯. சான்று - சாட்சி. [லாவாயின்.
௩௦. கற்பார்ந்த மெல்லியலாக ஆவாய். அல்லவேல் - அவைகள் சொல்
(பி - ம்.) [1]'உயிரற்பொடு'

வேறு.

ன்றவள் சொல்லக் குன்றி யிளையவ ளெங்குந் தானுந்
துன்றிய புகழ்க்கு நல்ல சொக்கனை யறிவ னென்று
சென்றுபொற் கோயில் புக்குச் செங்கணீர் வார வார
மன்றலங் குழல்கள் சோரப் புரண்டன ளன் மண்ணில் வீழ்ந்து. (௩௧)

மன்னுபுன் குணத்தான் மிக்க மைந்தனைப் பயந்த பொல்லாப்
புன்மைசேர் மடந்தை சொன்ன வார்த்தையை யாபொறுக்க கில்லே
னென்னுடை நாளை முன்ற யானையு மழிந்த வின்றே
யுன்னையல் லாலெ னக்கிங் காருள ருற்றார் மற்றே. (௩௨)

மறுவினீ யறிய யானோர் பத்தினி மாதே யாயி
னறிவுளோ ரெவருங் காண வன்னிபீ தன்னைச் சான்றின்
றிறையிலவந் துமைத்தல வன்டு பின்னருட் சண்பை வேந்தர்
துறைபட நவின்ற சான்று பொய்க்குமோ சொக்கே யென்றாள். ()

ஆங்கது சொல்லா முன்ன மரும்பழிக் கஞ்சு சொக்கன்
பாங்குளாள் செயல்கண் டுள்ளங் கசிந்துமுன் பரிப வஞ்செய்
தீங்குசேர் மாதி னுள்ளந் தெளிதலகா ரணம தாக
வோங்கிய சான்று மூன்று மொவ்வொவ்வயின் வரவ ழைத்தான். (௩௪)

வேறு.

வந்து தோன்ற வணிகர் நூரண்டுவந்
தெந்தை யலவதுஞ் டோவென் றிறைஞ்சின
ரந்த ரத்த ரதிசயித் தேத்தினர்
சிந்தை யாகுலந் தீர்ந்தன டேமொழி. (௩௫)

வேறு.

வற்றமார் பெரிய கோயி லீசான நடைசயின் மீது
[1]தோற்றிய தன்றி யாங்க ளறிவமென் றன்று சொலலச்
சாற்றரு மூவகை கூர்ந்து மூத்தவ ளிளையா டாளிற
போற்றிவந் திறைஞ்சி நின்றாள் பொறுததருள் பிழையென் றஞ்சி. ()

உத்தமத் தலைவன் கண்டான் டுளங்களித் தறிவி லாத
புத்திரர் தமையு மந்தப் புன்மைமா தையுமி கழ்ந்தே
யத்தனை நாளு மேத்தி யறிவுடைப் புதல்வற் பெறற
பத்தினி மாதி னோடும் வாழ்ந்தனன் பரிவு கூர்ந்து. (௩௭)

---

௩௧. 'புகழ்க்கு நல்லசொக்க ன்': சுக: உஎ. பொற்கோயில்: "பசும்பொனு லிலக்குவான்றேய், திருக தமாலயம்" என்பாரின்; கூ௪: க.

௩௩. "பத்தினிமாது" என்றது கற்புடையவளென்னும் பொருளில் வந்தது; "பத்தினிமாதினோடும்" என்பர்பின்னும்; ௩௭. சண்பை - சீகாழி.

௩௭. பரிவு - அன்பு.

(பி - ம்.) [1]'தோற்றுதல் கண்டி யாங்க ளறிவமென்று'

முல்லைசே ரணங்கு நெஞ்ச முண்டக மலரிற் பொய்யா
நல்லருட் சொக்கன் றன்னை நாடொறும் வைத்து வாழ்த்தி
யில்வினை விட்டு முன்றி லேகிடா திருந்து மிக்க
பல்பெருஞ் சிறப்பி னோங்கி வாழ்ந்தனள் பழிச்ச யாரும். (௩அ)

மருத்தயில் பாப்புக் காப்பு வள்ளலை மனத்து வைத்துத்
தருக்கமார் காழி வேந்தர் சடையெனும் யாப்பெ டுத்து
விரைத்திரு மருக றன்னில் வெவ்விடந் தீர்த்த தன்றித்
திருப்புறம் பயதத லத்திற் றீர்த்தனர் முருக்கண் சாததி. (௩௯)

ஆகத்திருவிருத்தம் - ௩௭௩௪.

## ௬௩. —நாரைக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

முந்தியகா லத்தொருகான் முதுநாரை வடதிசைக்கட்
கந்தமலி செங்கமலங் காவிதிகழ் வாவிதொறுஞ்
சிந்தைகளி கூரவுகள் சேல்கள்வரால் [1]வரிவாளை
வந்தனயா வையுமருந்தி வாழுங்கான் மழையின்றி. (௧)

ஆழியுரு வனையபெரு வாவியினீ ரறக்கண்டே
யூழுடைநல் விதிவசததா னுழன்றுநுக ரிரைதேடித்
தாழுவகல [2]நயாநதறஞ்சேர் தவமுனிவர் நிறைந்திருந்து
வாழுமொரு வனத்தணைந்த தயகுளந்தோர் மலர்வாவி. (௨)

தேங்குபெரும் புனறதும்பிச் சிறந்திலங்கத் தனிகண்டு
தாங்கரிய பசியினொடுஞ் சென்றிருப்பச் சலசரங்க
ளோங்குமுயர் வடிவினவா யளவிலவா யுகண்டெழுந்து
பாங்கணைந்து விளையாடிப் பயமின்றி யுலவினவால். (௩)

வேறு.

தவவள வலியி னூலே சார்ந்துமுன் விளங்கக் கண்ட
நவமுறு நாரை வாழ்ந்து நனிமனத ததிச யித்திங்
கிவைதமி லொன்றே காம விரும்பசி தீர வின்று
சுவைபட நுகர்வ மென்று சொல்லிமுன செல்லுங் காலை. (௪)

---

௩அ. முல்லை - கற்பு.

௩௯. மருத்து அயில் - காற்றை யுண்ணுகின்ற. பாபபுக் காப்பு - பாம் பாகிய காப்பையுடைய. சடையெனும் யாபபு: "சடையாயெனுமால்" என்னு முதற்குறிப்பையுடைய தேவாரம். திருமருகல-ஒருதிருப்பதி; அதில் விடந்தீா தததை, திருஞானசம்பநத மூர்ததிநாயனாா புராணததுள்ள ௪அக - ஆம் திரு விருதத முதலியவற்றாலுணாக.

(௬௩)

௩. சலசரங்கள் - நீர்வாழ்வன.

(பி - ம்.) [1]'வெல்வாளை' [2]'வுத்தறஞ்'

வேறு.

மரவுரி [1]யுடையினர் மார்பி னூலினர்
தரும[2]குண் டிகையொடு தண்டு தாங்கிய
பொருவருங் கரத்தினர் புனலுண் மூழ்குவான்
விரைவொடு நணுகினர் விடியு முன்னரே. (௫)

அங்கவர் தங்களைத் துளவு நீரினுட்
பங்குற விழித்தது கண்டு பான்மைமீன்
பொங்குமெய் நலிந்திடா தன்பு பூண்டருட்
டுங்கமா முனிவரைச் சூழ்ந்து கொண்டவால். (௬)

வேறு.

உருகிமுன் கண்ட நாரை யதிசயித் துறையை யுண்டு
பெரியகா யம்ப டைத்தும் பிறிவரும் புதல்வர்ப் போல
நிரையின் மெய்ந் நலியா வாழு மின்றனை வறிக்குங் கெட்டே
னருவினைப் பாவி நாமே யயின்றனை மறிவி லாமல. (௭)

இனியுயிர் செகுத்துண் ணேமென் றெண்ணிவெங் கொலைத விர்ந்து
புனலையே யுண்டு சூழ்ந்து பொய்கையுள் வாழு நாளில்
வினைதரு முன்னம் போகா வெம்பசி போகக் கண்டு
மனமகிழ்ந் ததுசி றந்த முனிவர்கள் வார்த்தை வாழ்த்தி. (௮)

மருவிய கிளைகள் கண்டு வந்துயிர் செகுத்துண் ணாது
பெரியநீ மெலிவ தென்கொல் பேதையை யுளத்துச் சற்றுங்
கருணையில் லாதீர் நுங்கள் காரியத் தேகு மென்று
பரிவுற நவின்று போக்கி யிருந்தது பத்தி பூண்டு. (௯)

வேறு.

சந்தி [3]யாமடத் தேகித் தபோதனர்
புந்தி நம்பு புராணம் படித்திட
வந்து கேட்கப் புகுந்தது மாசறன்
முந்து வேட்டியா முத்தியை வேட்டது. (௧0)

வேறு.

மற்றொரு தெய்வ மன்னின் மதுரைநா யகன்போ லில்லை
முற்றிய கருணை கூர்ந்து முத்தியை யளிக்க வல்லா
ருற்றுறை செய்யி னன்று முயர்தவ முனிவ ரோர்நா
ணற்சிவ புராணஞ் சொல்லக் கேட்டது நயந்து நாரை. (௧௧)

---

௬. சூழ்ந்துகொண்டவைகள், மீன்கள்.
௭. உறை - நீர்த்துளி. [விசேடத்தை.
௮. சூழ்ந்து - சுற்றிக்கொண்டு, ஆராய்ந்து. வினைதருபசி. வார்த்தை -
௧0. நம்பு - விரும்புகின்ற. மாசு அறல் - குற்றம்நீங்குதலை.
(பி - ம்.) 1'இடையிலர்' 2'கண்டிகை' 3'மாமடத்து'

வரமுடைச் சொக்கன் றன்னை வழுத்துவ மென்றெ ழுந்து
தரைபுக ழோடை விட்டுத் தவத்துளோ ரதிச யிப்ப
விரைவொடும் பாண்டி நாட்டு மேதகு மதுரை யந்த
ணருளுடைச் சொக்க நாத னாலயத் தணைந்த தன்றே. (௧௨)

உத்தமக் கனகப் போதா ரோடையின் மூழ்கி யேறிப்
பத்தியிற் பறந்து நாளும் பகலுட னிரவுஞ் சித்தம்
வைத்துடல் வருந்தச் சூழ்ந்து வலஞ்செயக் கண்ட மண்ணோர்
புத்தியு ளதிச யித்தார் புதுமையீ தென்ன வாழ்த்தி. (௧௩)

எங்குமோ ரிரைதே ராம [1]லினியதன் னுடலம் வாட
மங்கைபா ரின்று நம்மேன் மண்ணிலோர் பறவை வைத்த
பொங்குபே ரன்பு தன்னை யென்றிறை புகலக் கேட்ட
வங்கயற் கண்ணி மங்கை யகமகிழ்ந் ததிச யித்தாள். (௧௪)

கொன்னுறு தடத்தி லோர்காற் கடுங்குரற் கொடுங்கூர் மூக்கு
மின்னெடுங் கழுத்துப் பார வெண்சிறைச் செங்கா னாரை
மன்னிய கயல்சேல் வாளை வரிவரா லுளுவை யார
முன்னிய பனைமீன் முள்ளித் துறைவிளை யாடல் கண்டு. (௧௫)

சாதிவா தனையி னாலே தருமநா னெறிம றந்தே
யாதர வுடனே கூடி யயிலுவா னலகங் காந்து
மீதெழச் சென்று கௌவி மீண்டயி லா[2]து மிழ்ந்து
நீதிகண் டருவ ருத்து நெஞ்சக மஞ்சி யோரும். (௧௬)

முன்னைவா தனையை விட்டு முற்றிய வறிஞர் நெஞ்சிற்
பின்னொரு விகார மின்றி யிருப்பரிப் பிணைப்பு லாலே
நன்னெறி யறிந்த நாமு நாவழி யொழுகிக் கெட்டேன்
றின்னவே நயந்தே நம்போற் றீங்குளா ருண்டோ வின்றே. (௧௭)

வல்லவன் வாவி மீனை மாற்றுமே லொன்றோ வென்னப்
புல்லிய பறவை யாகி யிருப்பவும் பொருவி லாத
நல்லறி வுடைய தாகி யிருந்ததிங் கெனாந யந்தே
யொல்லையவ் வாவி மீனை யொழிவித்தான் விழியா லாங்கு. (௧௮)

---

௧௩. கனகப்போதா ரோடையில - பொற்றாமரையில்.

௧௪. அன்புதன்னைப்பார்.

௧௫. செங்கானாரை: "நாராய் நாராய் செங்கானாராய்" (தனிப்பாடல்.) உளுவை, ஆரல், பனை என்பன மீன்விசேடங்கள்.

௧௬. வாதனை - பழக்கம். அலகு - மூக்கு.

௧௮. வல்லவன் - சிவபெருமான். ஒன்றோ - ஒருவகையான நலந்தானோ.

(பி - ம்.) 1'இனியதோருடலம்' 2'தெறியதியாகாமும்'

நலமலி யறிவான் மிக்க நாரை[1]வந் தணைய வேண்டித்
தொலைவிலா மீனை யெத்துந் தொலைவிக்க புதுமை கண்டு
பலகலை வல்லான் வல்ல வல்லபம் பாரீ ரென்றே
யலகிலா மனித ரெல்லா மேத்தினா ரதிச யித்தே. (௧௯)

வேறு.

உடலி ளைத்த பறவைக் குவகைகூர்ந்
தடைவி னிற்சிவ லோகத் தடையென
விடர கற்றி யிருங்கண நாயகர்
வடிவு பெற்றங் கிருந்தது வான்றொழ. (௨௦)

வேறு.

[2] பிரிவறக் கொன்று தின்னுங் கடைப்படும் பிறப்பு நாரை
வானுறு தேவ ராகி வான்றொழ விருப்பக் கண்டீர்
[3] கருதினிங் கின்றும் பொலலாக் கடையரா யினும்[4]கொல் லாதிங்
கானைவந் திப்ப ரேல்வா னாவதற் கைய மின்றே. (௨௧)

ஆசத்திருவிருத்தம் - ௧௪௩௫.

---

## ௬௪.—வேதம் உணர்த்திய திருவிளையாடல்.*

நந்தலி லாத கால நான்குக வடிவ மாக
வந்தமில் கற்பந் தோறு மடைவினில் வாரா நிற்ற
திந்தவொண் பிரம கற்பத் தியைந்தவைந் தாவ தான
மூந்திய வுகங்க ளொன்கின் முதலுகத் தாதி தன்னில். (௧)

கண்ணுவன் முதலா வுள்ள காரண முனிவர் யாரு
மண்ணிலோ ரிடத்துக் கூடி மனத்துடை யோர்வா ரங்க
ளெண்ணுமுற் கலியு கத்தி னிருக்குமுன் வேத நான்கும்
பண்ணமை நெறியி னோதா தொழிந்தனர் பார்ப்பார் யாரும். (௨)

ஒருமைநெஞ் சகமு முன்னை யிருபிறப் பொழுங்கு மோங்கும்
பெருமைமுத் தழலு நான்காச் சிரமமும் பீடி லங்கு
மரியபால் வேள்வி யைந்து மாதிநா லங்க மாறுந்
தருமவே ழிசையு மற்றுந் தவிர்ந்திழி தொழிலிற் சார்ந்தார். (௩)

௧. காலம்: எழுவாய்.

௩. வேள்வி ஐந்தாவன: பிரமயாகம், தேவயாகம், மானிடயாகம், பிதுர் யாகம், பூதயாகம் என்பன. ஆறங்கங்களாவன: நிருத்தம், வியாகரணம்,

* "வேத நூல்பயில் கின்றது வாயிலே", "மறையிலங்கு பாடலாய்", "நால் வேதமும் பொருள்களரு மருளி, யங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே" (திருஞா. தே. திருவாலவாய்); "வேதியா வேதகீதா" (திருநா. தே. ஷை.)

(பி - ம்.) 1'வந்தணையை' 2'பரிவற' 3'கருதுதிரென்றும்' 4'கொல்லாமல்'

தொன்மைநன் கிலாத கால சுபாவத்தா லோரோர் நாட்டு
நன்மறை [1]யோதி னேரு நயந்தரும் பொருடேட ரார்கண்
மன்னிய பொருடேடோர் தோரு மனத்திடை யழுக்கு வைத்துப்
பின்னொரு வர்க்கு நல்கார் பெரியபா வியர்க ளாகி. (௪)

வே று.

மறந்திக ழுவ்வுக மறைந்த தொப்பிலா
நிறந்திக ழிவ்வுக நிகழ்ந்த தின்றியா
மிறந்தநால் வேதமு மிலங்க மண்மிசை
யறிந்திடு மாறெவ்வா றென்ற மூங்குமுன். (௫)

வே று.

வரனுறு மண்மகட்கு மணிமுடி யாகுந் தொல்லை
விரிபொழின் மதுரை தன்னு ளிருப்பநா மெலியா தங்கண்
வருவிரேல் வேத நான்கு மயக்கற நவில்வ மென்றே
தெரிதர வுரைத்தான் விண்மேற் றீதறு புகழ்க்கு நல்லோன். (௬)

அந்தநல் லுரைகே ளாமு னழகன்வாக் கென்று வித்து
வந்துமா மதுரை தன்னுள் வள்ளல்பொற் கோயில் புக்குச்
சந்தையே வடிவாம் வேத புருடனே தாழா தெங்கள்
சிந்தையா குலங்க டரத் தெளிதர வுரைத்தி யென்றார். (௭)

மணங்கம ழிறைவன் யாருந் தொழுங்குரு வடிவங் கொண்டாங்
கணைந்துயர் முனிவர் யாரு மதிசயித் திறைஞ்சி யேத்த
விணங்குநூல் வேத நான்கு மினிய[2]வங் கங்க ளாறும்
பிணங்குத லறக்கவின்றான் பிணங்குறா லிணங்கு யார்பன். (௮)

பொருந்திய தவத்தான் மிக்கோர் பொருளொடு மடைவிற் கேட்
கரும்பெரு நிறைவு கூரு மளவினி லெழுந்து காணப் [டாங்
பருங்கைவெங் கயங்க டாங்கும் பசும்பொனு லிலங்கு வான்றோய்
திருந்துமா லயத்தொ ளித்தா னருளுடைத் தேசி கேசன். (௯)

வே று.

அன்னை யொப்ப வருள்சுரந் திப்படி
நன்ன யத்தி னடிமைக்கு நல்லவர்
சொன்ன யப்புறு சொக்கரை யல்லதிங்
கென்னி லத்தினு மில்லென வாழ்த்தினார். (௧௦)

---

கர்பம், கணிதம், பிரமம், சந்தம் என்பன: இசசெய்யுள் இரத்தினவளி யென்னும் அணி.

௬. 'புகழ்க்கு நல்லோன்': ௫௬: ௪.

௭. 'அழகன்': "அழகனீபுயங்கனீ", "முப்புரஞ் செற்றவழக" (திருஞா. தே.) "அழகனேயால வாயிலப்பனே" (திருநா. தே.) சந்தை - வேதம்.

(பி - ம்.) [1]'ஓதியோரும்' [2]'அங்கங்களோடு'

ஏட்டை [1]நீக்கு மிருடிகண் மன்னுயிர்
வாட்ட நீங்க மகிழ்வொடு மோதியே
கேட்ட வேதங் களைப் பொருளொடு
நாட்டி னெங்கு நயக்க விரித்தனர். (கக)

வேறு.

அண்டம டங்கலும் வெந்துக நெங்கனல் கொண்டொழி புங்காலை
[2] கண்டக டம்பவ னத்தர னருளது கலவலின் மானுந்தி
புண்டரி கந்தர வந்தவி ருஞ்பிர மன்றரு புந்தியினின்
றெண்டிசை யும்மறை யும்பிர வஞ்சமும் யாவையும் வந்தனவே. ()

ஆகத்திருவிருத்தம் - கஎசஎ.

---

## பயன் மதலியன.

சொக்கனென் றொருகா லோதிற் றுயர்கெடும் பகையு மாளுஞ்
சொக்கனென் றொருகா லோதிற் றொலைவிலாச் செல்வ முண்டாஞ்
சொக்கனென் றொருகா லோதிற் சுருதிசொல் யாண்டுஞ் செல்லுஞ்
சொக்கனென் றொருகா லோதிற் சொர்க்கமு மெளிதா மன்றே. (க)

திருந்திய விறைவ னெண்ணெண் டிருவிளை யாட்டி லொன்றைப்
பொருந்திமுன் கற்போர் கேட்போர் புவிபுக ழரச ராகிப்
பெரும்பயன் றுய்த்து நீங்காப் பிறப்பிறப் பொழித்திங் கெய்தா
வரும்பெருஞ் சிவலோ கத்தி னணைவதற் கைய மின்றே. (உ)

* சுந்தர னவதானங்கள்..................சிவலோகத்தே.

தீதில்வண் டருமை ரூபத் திருவிளை யாட றன்னை
யாதொரு போதி யாவ ரோதுவார் யாவர் கேட்பா
ராதரத் தோடு மங்க ணங்கயற் கண்ணி யோடும்
வேதநா யகனுங் கேட்பான் மேவுதற் கைய மின்றே. (௩)

வானுளீர் முற்றுஞ் சொன்னே னென்னவோர் மாற்ற மின்றிச்
சுரர்தொழு முனிவர் கண்ணீர் துளிப்பமெய் விதிர்ப்பச் செங்கை
நிரைமலர் குவியச் சிந்தை நிறைமல ரவிழத் துங்கக்
கரையழி பேரா னந்தக் கடலிடைத் திளைத்தா ரன்றே. (ச)

---

கக. ஏட்டை - இளைப்பு. கஉ. கலவலின் - கலத்தலினால்.

* இச்செய்யுளின் முழுப்பாகத்தை இப்புத்தகம் கஙக - ஆம் பக்கத்திற் காண்க.

(பி - ம்.) 1 'நீக்கும்' 2 'கண்டுகடம்ப வனத்தரனுத்திகள் கலவிடமால் கடலித்'

வேறு.

மின்றுபுகழ் தரும்பெரிய கருணைச் சொக்கன் விளையாட லறு பத்து நான்குஞ் சொன்னே, னென்னமறை விதியின்கட் கேட்ட பத்தி யிருடிகளெய் தாதபே றெய்தி யார்த்தார், கன்னிதிரு மால் காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரைப் புராண மின்று,முன் னரிய விதியின்கட் கற்போர் கேட்போ ருயரும்ப ருலகாள்வ ருண் மை யிதால். (ரு)

வேறு.

வியாதன்வான் மீகி யெச்சன் விரித்திறை விளையாட் டோங்க
வாதியில் வருமென் ருய்ந்த வறுபத்து நாலி லக்கந்
தூய்தகு கவிக டம்மைச் சுருக்கிமூ வாயி ரத்தி
லோதிஞ ணகத்தி யன்பின் புரைத்தனன் றமிழா லின்றே. (சு)

ஆகத்திருவிருத்தம் - ௩௭௱௬௩.

---

திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்

முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

## சிலகையெழுத்துப்பிரதிகளில்மட்டும் மிகையாக முதலில்வரையப்பெற்றிருந்த கடவுள்வாழ்த்துச் செய்யுட்கள்.

### சித்திவிநாயகர்.

விருத்தம்.

க. அத்த னார்விளை யாடல்க ளாமரு
பத்து நாலேயும் பாடுந் தமிழ்முற்ற
மத்த யானை யவுணனை மாய்த்தருள்
சித்தி யானைதன் சேவடி யேத்துவாம்.

### பொய்யாவிநாயகர்.

வெண்பா.

உ. செய்யபுகழ் மேனியனைத் தேவர் தொழுந்தேவை
மெய்யருளும் பொய்யா விநாயகனை - வையமெலாங்
காத்தானை யார்க்கு மிளையானைக் கந்தற்கு
மூத்தானை நாவே மொழி.

### முருகக்கடவுள்.

ங. மன்றல் கமழ்குழல்சேர் வள்ளிக்கு வாய்த்தானை
வென்றி மயிலேறும் வேதியனை - யொன்றின்
முளையானை யாவர்க்கு மூத்தானை யானைக்
கிளையானை நெஞ்சமே யேத்து.

### கலைமகள்.

ச. *ஆடகஞ் நின்றுறையு மன்னமே நின்னுடைய
பாடகமுஞ் சீறடியும் பற்றினேன் - றேடரிய
வற்புதமே யம்மே யணங்கே யணைநாறுங்
கற்பகமே நாயேனைக் கா.

### கவியின்கூற்று.

ரு. பல்லக்கு மேலேறிப் பல்லக்கு மேலிட்டோம்
பல்லக் கணிசொக்கைப் பாடினோம் - பல்லக்கு
மன்று குறையுண்டு மண்மதிக்கும் விண்மதிக்கு
மென்ன குறையுண் டெமக்கு.

---

ரு. பல்லக்குமேல் - சிவிகையின்மேல். பல்அக்குமேல் இட்டோம் - அநேகமாகிய உருத்திராக்கங்களை உடம்பின்மேலணிந்தோம். பல் அக்கு அணி - பலவாகிய எலும்புகளை யணிந்த. பல் அக்கும் மன்று குறையுண்டு - பலருடைய கண்களும் சேரப்பெற்ற குறையுண்டு; மேற்கூறிய காரணங்களால் எமக்கு என்ன குறையுண்டு என்றபடி.

* இச்செய்யுளுள்ளபிரதியில், 'புத்தக மக்க மாலை' (பக். எ) என்னும் செய்யுள் இல்லை.

## நூற்சிறப்புப்பாயிரம்.

---

### வெண்பா.

அம்பதுமத் தார்ச்செல்வி யாண்டான் கவுணியர்கோ
னம்பெரும்பற் றப்புலியூர் நம்பியெந் - தெம்பெருமா
னுதிவிளை யாட லறுபத்து [1]நான்கினையு
மோதி முடித்தா னுவந்து. (௧)

### விருத்தம்.

[2] கார்வளங்கொண் மண்டலத்துக் கப்பிஞ்சி நாட்டுரைத்தோன்
சார்பரசு ராமச் சதுர்வேதி மங்கலமாஞ்
சீர்தருதென் செல்லிநக ராண்டான்சொற் றில்லைநம்பி
[3] யார்புனைவான் விளையாட லறுபத்து நான்கன்றே. (௨)

---

நூற்சிறப்புப்பாயிரம்.

௧. பதுமத்தார் - தாமரைப்பூமாலை; அந்தணர்களுக்குரியமாலை தாமரைப் பூமாலையென்பது நூல்வழக்கு. "தாமரைத் தாராருரன்" (சுந்தர. தே. ஓமாம் புலியூர்.) செல்லி ஆண்டான்-செல்லியூரையுடையான்; இவ்வூர் பரசுராம சதுர் வேதி மங்கலமென்றும் வழங்கப்பெறும். கவுணியர்கோன் - கௌண்டின்னிய கோத்திரத்தார்களுள்ளே தலைமைவாய்ந்தவர். பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பது நூலாசிரியரது இயற்பெயர்; அது தில்லைநம்பியென்றும் வழங்கும்.

௨. கார்வளங்கொள் மண்டலமென்பது மதுரையம்பதிக்குக் கிழக்கேயுள்ளதான, 'மழைக்குப் பிணைகொடுத்த மங்கல நாடென்னுமிடமென்றும், கப்பிஞ்சி நாடென்பது, மேற்கூறிய நாட்டிலுள்ள ஒரு சிறிய நாடென்றும் சிலர் கூறுகின்றனர். உரைத்தோன் - உரைத்தான்; வினைமுற்று; ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று. சொல் - புகழ். தில்லைநம்பி - பெரும்பற்றப்புலியூர் நம்பி. ஆர் புனைவான் - ஆத்திப்பூமாலையை யணிந்தருளுகின்ற சோமசுந்தரக்கடவுளுடைய. விளையாடல் - திருவிளையாடல். தில்லைநம்பி விளையாடல அறுபத்துநான்கையும் கப்பிஞ்சி நாட்டில் உரைத்தானென்க.

(பி - ம்.) [1]'நான்கடைவே' [2]'கார்வளவங்மண்டிலத்துக்', 'காரவளமண்டிலத்துக்' [3]'ஆர்வானவிளையாடல்'

உ

கணபதி துணை.

---

வீரபத்திரக்கம்பரியற்றிய

திருவாலவாயுடையார் திருவிளையாடற்

# பயகரமாலை.

காப்பு.

## சித்தி விநாயகர்.

கட்டளைக் கலித்துறை.

மன்னிக் கிடக்குநின் பொற்றாளல் லாற்கதி மற்றில்லையென்
முன்னிக் கிடக்குமென் னுள்ளங்கண் டாயர வொன்றொன்று
பின்னிக் கிடக்குஞ் சடையிற் றஞ் சாமற் பிறைக்கொழுந்து
மின்னிக் கிடக்குந் தமிழ்க்கூடற் சித்தி விநாயகனே. (௧)

## கற்பக விநாயகர்.

பரிவொடு செல்வ மதுரா புரிச்சொக்கர் பாங்கிற்செய்த
திருவிளை யாடற் பயகர மாலையைச் செப்பிடவே
சொரிதரு மும்மத நால்வாய்த் தழைசெவித் துங்கச்செங்கட்
கரிமுகக் கற்பகக் கன்றே கழறந்து காத்தருளே. (௨)

---

நூல்.

௧.—இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்.

பூவிற் கவட விருத்தா சுரனைப் பொருதுகொன்று
மேவுற்ற பாவத்தை மண்பெண் புனன்மர மேனிறுத்திச்
சேவித் தொளிர்பொன் விமானமுஞ் சாத்திய தேவர்கள்கோன்
பாவத்தைத் தீர்த்தசொக் கேசபர தேசி பயகரனே. (௧)

---

காப்பு.

௧. கதி-புகலிடம்; "கதியாரு மில்லை" என்பர் பின்; கண்டாய்: முன்னிலையசை. பிறைக்கொழுந்து - மிக்க இளமையை யுடைய பிறை. பயகரன்-தம்மை நினைப்பவர்களுடைய பயத்தைக் கெடுப்பவர்; என்றது சோமசுந்தரக்கடவுளை; அவர்மீது செய்யப்பட்ட சொன்மாலை பயகரமாலை.

௨. பாங்கு - அழகு. நால்வாய் - தொங்கியவாய். தழைசெவி - தழைத்த காது. கழலைத்தந்து.

நூல்.

௧. பூவில் - பூமியில். கவடம்=கபடம் - வஞ்சனை. விருத்தாசுரன் - விருத்திராசுரன். தேவர்கள் கோன் - இந்திரன். சொக்கே - சொக்கநாதக்கட

உ.—வெள்ளானைக்குச்சாபந்தீர்த்த திருவிளையாடல்.

இந்திரன் கையிற் றுருவாச னிட்ட விணைமலரைச்
சிந்திவெண் சிந்துரந் தீங்கணேந் தேதென் மதுரைவந்து
முந்துறச் சென்று பணிந்தேத்த மெச்சி முதுபெருஞ்சா
பந்தனைத் தீர்த்தசொக் கேபர தேசி பயகரனே. (உ)

ங.—தடாதகையார் அவதரித்த திருவிளையாடல்.

சீராக வாழு மதுரா புரியிற் செழியர்குலப்
பேரா மரசன் மகவேண்டித் தந்தருள் பிள்ளையென்ன
நேராக மூன்று முலையா ளொருபெண்ணை நீதியுடன்
பாராளத் தந்தசொக் கேபர தேசி பயகரனே. (ங)

ச.—மணஞ்செய்த திருவிளையாடல்.

தாண்டிய வெம்பரித் தேரேறி மன்னர் தளத்தைவென்று
மீண்டிடு மூன்று முலையா டடாதகை மேவிநின்கண்
டீண்டி யிரண்டு முலையா மணஞ்செய்து தென்மதுரைப்
பாண்டிய னானசொக் கேபர தேசி பயகரனே. (ச)

ரு.—பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடல்.

விதம்பெற லேய்தென் மதுரையி லேமண வேள்வியிலற்
புதம்பெற வந்த முனிவர் குழாத்தைப் புசியுமென்ன
இதம்பெறத் தில்லை நடங்கண் டலாதுண லில்லையென்ற
பதஞ்சலிக் காடுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (ரு)

---

வுளை. பரதேசி பயகரன் - யாதொரு துணையுமில்லாதவருடைய அச்சத்தைக்கெடுப்பவர்; "அடுபழி யஞ்சா நீச ராயினு நினைக்கி னச்சம், படுபழி யஞ்சான் செய்த பாதகத் தொடக்குண் டெங்கும், விடுவதை யின்றி வேறு களைகணு மின்றி வீயக், கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணை மூர்த்தி" (திருவிளை. மாபாதகந். கூ௯), "அடியவருக் கெளியரிவர் பரதேசி காவலரென் றடியில வீழ்ந்து" (ஷை அங்கம். உஎ) என்னுந் திருவிருத்தங்களும் இதனைப் புலப்படுத்தும். பரதேசி பயகரனே அடியேனையும் காத்தருள்வாயாகவெனச்சில சொல்வருவித்து முடிக்க.

உ. இணைமலர் - தாமரைப்பூவும் துளவமாலையும்; "பங்கய நறும்பூ வொன்றுட் பகர்துள வத்தா ரொன்றுஞ், செங்கையினல்க" (உஉ: க) என்பதனானுணர்க. வெண்சிந்துரம் - வெள்ளையானை. சாபம் - காட்டானையாகுக வென்று துருவாச முனிவரிட்டசாபம்.

ங. பேராம் - புகழையுடையவனாகிய; அரசன் - மலயத்துவசன்; பிள்ளையைத் தந்தருள்.

ச. தளம் - சேனை; "கன்றென்ற தளமிரண்டி னரபாலர் பலர்திரண்டு கவ்லாகிற்ப" (வி. பாரத. சகூ-ஆம் போர். கசரு) என்பதனாலும், தளகர்த்தன், தளநாயகன், தளவாயென்னும் வழக்கானும் அறியலாகும். நின்கண் டீண்டி - உம்முடைய திருவிழிகள் நோக்கப்பெற்று.

ரு. விதம்பெறல் ஏய் - வந்தோர் பலவகைப்பயன்களையும் பெறுதல் பொருந்திய. மணவேள்வி - திருக்கலியாணம்; இருபெயரொட்டு. அற்புதம்

## ௬.—பூதமுண்ட திருவிளையாடல்.

அசியா ரமுதி னறுசுவை கூட்டித் துலங்குமன்ன
முசியா தளித்தவை யெல்லாரு முண்டு முடிவிலவாப்
புசியாக் குறையமு தூட்டக்குண் டோதரப் பூதத்திற்குப்
பசியாக் கியசொக்க னேபர தேசி பயகரனே. (௬)

## ௭.—ஆறழைத்த திருவிளையாடல்

அருகிருக் குங்குழி யன்னமெல் லாமுத ரத்தடக்கி
மருவுறு கேணி குளமுத லாவுண்டு வற்றியபின்
பெருகுவிக் கும்வைகை வெள்ளமெல் லாம்பெரும் பூதத்தினற்
பருகுவிக் குஞ்சொக்க னேபர தேசி பயகரனே. (௭)

## ௮.—கடலழைத்த திருவிளையாடல்.

பிரியா வெனது பிதாவின் றிவசம் பெருங்கடல்போய்த்
தரியா திரங்கி யருள்புரி வாயென்று சாற்றிடவே
[1] முரியா ரளகத் தடாதகை யாரன்னை மூழ்கமுந்நீர்
பரிவா யழைத்தசொக் கேபர தேசி பயகரனே. (௮)

## ௯.—மலயத்துவசனையழைத்த திருவிளையாடல்.

வித்தார மாக மதுரா புரியின்முந் நீரைவிடக்
கத்தா வுடனன்றி யான்மூழ் குவது கணக்கல்லவே
மைத்தா ரளகத் தடாதகை யென்ன மலயத்வசப்
பத்தாவைக் காட்டுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௯)

## ௧௦.—உக்கிரன்பிறந்த திருவிளையாடல்.

தடாதகை யார்தென் மதுரா புரியிற் றவமுமன்பும்
விடாவகை யாலுக் கிரனும் புதல்வனை மேநினிமே
லடாவகை யின்றி யரசாளும் வண்ண மழகிற்குறை
படாவகை யீந்தசொக் கேபர தேசி பயகரனே. (௧௦)

---

பெற - அறிவை அடைவதற்கு; "அற்புத மூர்த்தி" என்பர். புசியும் - உண்ணு மின. இதம் - இனிமை; "இதமாகடித்தனே" என்பர்பின்; ௩௨ தில்லை நடம் பரமானந்த தாண்டவ மெனப்படும்; "பதஞ்சலிக்காடிய பரம நாடக" (திருவா.)

௬. அசி - சுத்தம். அமுதின் - அமுதம்போலவே. முசியாது - இளைப்பு உறாதபடி. அன்னம் முடிவிலவாக.

௭. உதரம் - வயிறு.

௮. திவசம் - ச்ராத்ததினம். தரியாது - தாமதியாதபடி. முரி-வளைவு, சுருள். பரிவாய் - அன்புடன்.

௯. கத்தா=கர்த்தா - கணவன். கணக்கு - முறை. தடாதகை: விளி. பத்தா=பர்த்தா - கணவன்.

௧௦. புதல்வனை யீந்த.

(பி - ம்.) [1]'முரியாவளகத்'

**௧௧.—வளைவேல்செண்டுகொடுத்த திருவிளையாடல்.**

தெரியலர் வந்து வணங்கித் திறையிடுஞ் சீர்மதுரை
தரிபெற வேண்டுஞ் சடைமன்ன னேதரு நாட்டரையன்
கிரிகட லேபகை கிட்டின் வளைசெண்டு சத்திதந்தோம்
பரிகரி யென்னுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௧௧)

**௧௨.—நான்மாடக்கூடலான திருவிளையாடல்.**

மதியா வருணன் மழையால் வருத்தவிம் மாநிலத்தோர்
கதியாரு மிலலை சரணெனப் புட்கலா வத்தமுன்னு
னதியார் மதுரையை நான்மாடக் கூட னலஞ்சிறக்கப்
பதியாக் கியசொக்க னேபர தேசி பயகரனே. (௧௨)

**௧௩.—சித்தரான திருவிளையாடல்.**

சகம்புக ழுந்தென் மதுரா புரியிற் றரைமதிக்க
வகந்தொறு நீசெய்த வாடல்கண் டேயழ கார்வழுதி
யிகழ்ந்துநின் னைமமென் னென்னவெல் லாம்வல்ல சித்தரெனப்
பகர்ந்தருள் காட்டுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௧௩)

**௧௪.—கல்லானை கரும்புவாங்கின திருவிளையாடல்.**

நீங்காத செல்வ மதுரைநன் னாட்டி னிறைபுவியைத்
தாங்காவ லிற்புய மீதுவைத் தோர்தண் மதிக்குலத்தோ
ராங்கார மார்மன் னவன்கைக் கரும்பைக்கல் லானையினுற்
பாங்காக வாங்குஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௧௪)

**௧௫.—சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.**

உலக மகிழ்வெய்த முன்னாட் புலவ ருடனிருக்கு
மிலகு தவிசை யளித்தருள் வாயென் றெதிர்புகழும்
புலவர் மதுரையி லேமேழு பேரும் பொருந்தச்சங்கப்
பலகை தருஞ்சொக்க னேபர தேசி பயகரனே. (௧௫)

---

௧௧. தரிபெற - தரித்தலைப் பெற; நிலைபெற. உக்கிரபாண்டியர் சடையுடன் அவதரித்தமையால், 'சடைமன்னனே' என்றார். தரு நாட்டரையன் - இந்திரன். கிரி - மேருமலை. இந்திரன் முதலிய மூவரே ஒருகாலத்துப் பகையாவார். கிட்டின் - வருவாராயின். வளையும் செண்டும் ஒவ்வோராயுதம். சத்தி - வேல். பரிகரி - ஒழிப்பாய்.

௧௨. வருத்த - வருத்தச்செய்ய. புட்கலாவத்தமுன்னால் - புட்கலாவர்த்த முதலிய நான்கு மேகத்தால்; மதுரையை நான்கு மேகத்தால் நான் மாடக் கூடற்பதியாக்கியவரே. நான்மாடங்களின் பெயர்களாவன - கன்னி, கரியமால, காளி, ஆலவாயென்பன.

௧௩. அகந்தொறும் - வீடுகள் தோறும்.

௧௪. வைத்தோர் - பாண்டியவரசர். ஆங்காரம் - அகங்காரம்.

௧௫. தவிசு - ஆசனம்.

### ௧௬.—கிழியறுத்த திருவிளையாடல்.

மாப்பாட லஞ்செறி மாமது ராபுரி வாழ்வழுதி
காப்பா னினைந்த படிகவி பாடிக் கனகத்திறற்
கோப்பாகக் கட்டுங் கிழியை யறுத்துக் குலதிலகப்
பாப்பானுக் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (௧௬)

### ௧௭.—நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல்.

உயர்ந்தநற் கூடல் வழுதிமுன் னேயுன் னுடனெதிர்க்க
வியந்திட நன்னுதற் கண்ணழல் காட்டி மிகவஞ்சியே
கயந்தனில் வீழுநக் கீரனை நீர்க்கரை யேற்றியவன்
பயந்தனைத் தீர்த்தசொக் கேபர தேசி பயகரனே. (௧௭)

### ௧௮.—குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளையாடல்.

எண்ணுந் தமிழின் பெருமையிற் காட்டி விசைந்திடவு
முண்ணின்ற ஞானநக் கீரற்குண் டாகவு மோங்குபுகழ்
நண்ணுங் குறுமுனி வற்குப தேசநற் கூடலிலே
பண்ணுந் தமிழ்ச்சொக்க னேபர தேசி பயகரனே. (௧௮)

### ௧௯.—ஊமை தமிழறிந்த திருவிளையாடல்.

எழிறிகழ் கூடலி னின்பா லகப்பொரு ளின்பயனை
வழிபடு சங்கத் தவர்மொழி வாயென்று வந்துநிற்க
வொழிவிலிவ் வூர்ச்செல்வ னுப்பூர் கிழார்மக னூமன்றன்னுற்
பழுதொழி கென்னுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௧௯)

### ௨௦.—இடைக்காடன்பின்போன திருவிளையாடல்.

திருந்திய செல்வ மதுரைச் செழியன்முன் சென்றடியே
னருந்தமிழ் பாடினன் றள்ளின னேயென் றவன்செல்லவே
கரும்பன சொல்லி யுடன்வட பாலிடைக் காடனுக்காப்
பரிந்துபின் போனசொக் கேபர தேசி பயகரனே. (௨௦)

---

௧௬. பாடலம் - பாதிரிமரம். காப்பால் - சோலையின்கண். கோப்பு - கோத்தல், பெருமை. கிழி - கிழிக்கப்பட்டதணியாற்கட்டிய பொன்முடிப்பு. குலதிலகம் - குலத்தில் மேலான. பாப்பான் - தருமியெனபவன்.

௧௭. எதிர்த்தலாலும் தன்னைவியந்திடலாலும். நக்கீரன்: ந, சிறப்புப் பொருளைத் தருவதோரிடைச்சொல்.

௧௮. உள் நின்ற. குறுமுனிவற்கு - அகத்தியமுனிவருக்கு. உபதேசத்தைப்பண்ணிய.

௧௯. அகப்பொருளின் பயனை - இறையனாரகப் பொருளென்னு நூலின் பொருளை. உப்பூர்: ஓரூர். ஊமன் - உருத்திரசன்மர்.

௨௦. அவனென்றது இடைக்காடனை. கரும்பன்ன அன்ன.

## ௨௧.—கடல்சுவற வேலெறிந்த திருவிளையாடல்.

செருவேறு மன்ன ருடன்புவி மீதிற் றிகழ்சனமு
மருவே தனையுட னிங்கணெங் தாரணி கூடனகர்ப்
பெருவேலை வந்தது வாலுக் கிரனே பிடித்தெறிகின்
பருவேலை யென்னுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௨௧)

## ௨௨.—வலைவீசின திருவிளையாடல்.

இருமீன் பிடிக்கு மதியரை யன்முன் பெழின்மதுரைப்
பொருமீன்கண் ணாளைத் தருகெனக் கென்று பொருந்தியபின்
வருமீனுங் கப்பலு மங்குற வேசெபு மாமகரப்
பருமீன் பிடித்தசொக் கேபர தேசி பயகரனே. (௨௨)

## ௨௩.—வளையல்விற்ற திருவிளையாடல்.

நிகரற்ற தாரு வனமட வார்நின் மதுரைதன்னிற்
றகவுற்ற செட்டிப் புதல்விக ளாகச் சமைந்தவங்காண்
மிகவுற்ற நல்வளை கொள்ளுமென் றேயவர் வீதிதொறும்
பகர்செட்டி யானசொக் கேபர தேசி பயகரனே. (௨௩)

## ௨௪.—இலச்சினையிட்ட திருவிளையாடல்.

ஓங்கிய கூடற் பதிச்செம் பியன்வர வுள்ளஞ்சியே
யாங்குள வாச லிலச்சினை யிட்டிறை யாங்கிருப்ப
வீங்கொரு வாசல்விட் டேதொழு வித்திட பக்குறியே
பாங்குட னிட்டசொக் கேபர தேசி பயகரனே. (௨௪)

## ௨௫.—மாணிக்கம்விற்ற திருவிளையாடல்.

சாத்திய மேன்மை தவறு மதுரைத் தலமதனில்
வாய்த்தநற் செல்வ வணிகனைப் போல வளர்மதியின்
கோத்திர மன்னன் முடிகூட மாணிக்கங் குற்றமறப்
பார்த்திவற் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (௨௫)

---

௨௧. அருவேதனை - தீர்த்தற்கரியதுன்பம். பெருவேலை - பெரியகடல். ஆல்: அசை. வேலையெறி.

௨௨. இருமீன் - பருத்தமீனை. அதியரையன் - வலைச்சாதிக்கு அரசன். தருக எனக்கு. மகரப் பருமீன் - நந்திதேவராகிய பருத்த மகாமீனை.

௨௩. தாருவனம் - தாருகாவனம். பகர்தல் - விற்றல்.

௨௪. செம்பியன் - சோழன்; சிபிமரபிற் பிறந்தவ னென்றபடி. வாசலில். இலச்சினை - மீனமுத்திரை. இறை - அரசன்; இங்கே பாண்டியன். இடபக் குறி - இடபமுத்திரை.

௨௫. கோத்திரம் - குலம். மன்னன் - பாண்டியன்.

## ௨௬.—ஆனையெய்த திருவிளையாடல்.

வகையான தொன்றை யறியார் மறுமண் டலத்தமணர்
தொகையாக மேவி வழுதிதன் மேல்விடச் சூழ்ச்சியினுன்
மிகையானை வேந்தினைக் கூடற் பதியை விழுங்கவந்த
பகையானை யெய்தசொக் கேபர தேசி பயகரனே. (௨௬)

## ௨௭.—ஞானோபதேசஞ்செய்த திருவிளையாடல்.

ஞாலத்தர் போற்று மதுரைமன் னன்பொரு ணல்கியனு
கூலப் பெரும்பரி கொள்ளப் பெருந்துறை கூடியநா
ளாலித்த ஞான வுபதேசம் வாதவூ ராளிக்கன்பிற்
பாலித் தருளுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௨௭)

## ௨௮.—நரி குதிரையான திருவிளையாடல்.

அரியார்க்குஞ் சோலை மதுரையின் மன்ன னடற்பரிக்கா
வெரியார்த்த கோபத்தின் வாதவூ ராளி யிடுக்கணுறத்
தரியாத் திருவுளத் தாலே நரிதன்னைத் தாரணியிற்
பரியாக் கியசொக்க னேபர தேசி பயகரனே. (௨௮)

## ௨௯.—குதிரை நரியான திருவிளையாடல்.

வரிபயின் மீனத் துவசன்முன் னேதென் மதுரைதன்னில்
விரிவுறச் செண்டு வெளிதனிற் காட்டி விழுப்பமுட
னெருநலின் முன்றந்த பொன்னுக்கெல் லாம்பரி யீந்தொன்றபின்
பரிநரி யாக்குஞ்சொக் கேபர தேசி பயகரனே (௨௯)

## ௩௦.—மண்சுமந்த திருவிளையாடல்.

அடல்வந்த மானப் பரிக்கு நரியிட் டமைச்சனுக்காக்
கடல்வந்த வெள்ள மழைப்பித்துத் தென்கரை கட்டுதற்காச்
சடவந்த பிட்டுக்குக் கூடையி லேமண் சுமந்தடியும்
படலந்த தென்சொக்க னேபர தேசி பயகரனே. (௩௦)

---

௨௬. வகை - நற்செயலின் கூறுபாடு. மறுமண்டலம் - வேறு நாடு; பகைவர்நாடு. அமணர்-சைனர். அமணர் சூழ்ச்சியினுல்விட. யானை வேந்து - யானையையுடைய பாண்டியன்.

௨௭. நல்கி - நல்குதலால். பெருந்துறை - ஆளுடையார் கோயில்; பிரு ஹத்தீர்த்த மென்பது இத்தலத்தின் வடமொழிப்பெயர். ஆலித்த - களிப்புறு தற்குக் காரணமாகிய. வாதவூராளி - திருவாதவூரை ஆள்பவர்; திருவாதவூரர்.

௨௮. அரி-வண்டு. எரியார்த்த-நெருப்பை யொத்த. தரியா-தாங்காத.

௨௯. வரி - கீற்று. மீனத்துவசன் - பாண்டியன். செண்டுவெளி - குதிரையைச் செலுத்தும் முற்றவெளி. விழுப்பம் - சிறப்பு. நெருநல் - நேற்றைத்தினம்.

௩௦. அமைச்சனுக்கு - மந்திரிக்கு. என் - யாது.

### ௩௧.—விருத்தகுமார பாலரான திருவிளையாடல்.

சேவிகல் கூடற் புரத்தே மறையவன் செல்வமின்னை
மாலடி போற்று மறையோன் புதல்வன் வதுவைசெய்யக்
கோலமென் னென்ன விருத்தனு மாகிக் குமாரனுமாய்ப்
பாலனு மானசொக் கேபர தேசி பயகரனே. (௩௧)

### ௩௨.—மாறியாடின திருவிளையாடல்.

விதமான வெண்ணெண் கலைவல்ல கூடலின் மீனவனற்
புதமா நடத்தி னருமைகண் டேபொற் பதம்வருந்த
விதமா நடித்தனை யெத்தனை கால மெனவிரங்கிப்
பதமாறி யாடுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௩௨)

### ௩௩.—பழியஞ்சின திருவிளையாடல்.

செழியன் றமிழ்தெரி கூடலிற் பூசுரன் றேவிவடத்
திழியுமம் பாலுயி ரேகிற்றென் னுதிந்த வேடன்கொன்றான்
மொழியும் பரிசிவை யென்றாற்கும் வேந்தற்கு மூதலித்துப்
பழியஞ்சி யானசொக் கேபர தேசி பயகரனே. (௩௩)

### ௩௪.—மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

தோதக வாசகன் மாமது ராபுரி சூழ்பதியிற்
பேதக மாக மறையோன் புதல்வன் பிதாவைக்கொன்று
தீதகந் தன்னிலுஞ் செய்யா ததுசெய்யச் சேர்ந்தபெரும்
பாதகந் தீர்த்தசொக் கேபர தேசி பயகரனே. (௩௪)

### ௩௫.—அங்கம்வெட்டின திருவிளையாடல்.

புடவிக்குள் வீறு மதுரா புரியிற் புகழ்ப்பணிக்கன்
றிடமுற்ற மைந்தரிற் சித்தனென் போன்செய்த தீமையினாற்
கடகொட்டி வாளிட் டெதிரிட் டவன்றனைக் கண்டதுண்டம்
படவெட் டியசொக்க னேபர தேசி பயகரனே. (௩௫)

---

௩௧. கூடற்புரம் - கூடல் நகரம். என்னென்ன - என்னவென்று கூறிக கண்டோர் ஆச்சரியமடையும்படி.

௩௨. வல்ல மீனவன் - பாண்டியன். அற்புதமா - ஆச்சரியமாக. என - என்று பாண்டியன் வருந்திக் கூறினமையால்.

௩௩. வடத்து - ஆலமரத்தினின்றும். என்னுது-என்று நினையாமல். என்றாற்கும்-என்ற பிராமணனுக்கும். மூதலித்து-ஒப்புவித்து. அஞ்சி-அஞ்சியவன்.

௩௪. தோதக ஆசுஅகல் - வஞ்சகமாகிய குற்றம் நீங்கிய. பேதகம் - வேறுபாடு.

௩௫. வீறு - ஒப்புயர்வற்று ஓங்கிய. பணிக்கன் - ஆயுதவித்தை கற்பிக்கும் உபாத்தியாயன்; ௩௫: க, பார்க்க. மைந்தரில் - மாணாக்கருள்ளே. கடகு - கேடகம். எதிரிட்டவன் - சித்தன். ஒட்டி - பொருந்தி; சபதஞ்செய்தென்றுமாம். வாள் இட்டு - வாள்கொண்டு.

௫௬.—மதுரையான திருவிளையாடல்.

கதியங்கெய் தாத வமணர்க ளேவுங் கடியரவைத்
துதிகொண்ட பாண்டியன் வில்வாங்கிக் கொல்லத் தொடர்விடத்தை
மதிபொதி நீர்கொண்டு மாற்றிக் கடம்ப வனமதுரைப்
பதியெனப் பண்ணுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௫௬)

௫௭.—வேப்புத்தீர்த்த திருவிளையாடல்.

வந்தித் தவர்த மனத்துயர் தீர்க்கு மதுரையென்றே
சிந்தித் துயர்கதி சேராமற் றீநெறி சேர்ந்தபொல்லா
நிந்தைச் சமணும் வழுதிவெப் புங்கெட நீறிடச்சம்
பந்தர்க் கருள்சொக்க னேபர தேசி பயகரனே. (௫௭)

௫௮.—கழுவேறின திருவிளையாடல்.

இதத்த செழுந்தமிழ் சேர்கூடன் மன்னன்மு னேடெழுதி
விதத்துடன் சம்பந்தர் தீநீரிற் போட்டிட வெற்றிகண்டே
மதத்தபொல் லாத சமணரெண் ணாயிரர் வன்கழுவிற்
பதைத்திட வேறுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௫௮)

௫௯.—மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

விண்ணுடர் போற்று மதுரைதன் னிமன்மறு வேந்தன்வரத்
தண்ணுரு மந்திரிக் கொந்தக னார்செய்த தன்மங்கள்கண் [போர்
டெண்ணுப் பெரும்படை மெய்க்காட்டிட் டேயன் றெதிர்த்துவெம்
பாணமல் வெல்லுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௫௯)

௬௦.—உலவாக்கிழிகொடுத்த திருவிளையாடல்.

கோத்திர மன்னவன் வேதாந்தத் துண்மைகொள் ளாமன்முனஞ்
சாத்திர வேள்வி மறந்திட மாமழை தாழ்த்ததனாற்
காத்தரு ளென்ன மதுரையி லேகன கக்கிழியப்
பார்த்திபற் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (௬௦)

---

௫௬. கதி - முத்தி. கடியரவு - கடிக்கும் பாம்பு; கடி - அச்சமுமாம். மதிபொதி நீர்கொண்டு - அமுதத்தைக்கொண்டு.

௫௭. சிந்தித்து - நினைத்து. தீநெறி - பாவமார்க்கத்தை. சமணும் - சைனமதமும். வழுதிவெப்பும் - பாண்டியனது சுரநோயும். நீறிட அருள்;

௫௮. இதத்த - இனிமை செய்தலையுடைய. விதம் - வகை. தீநீரில் - தீயிலும் வையையாற்று நீரிலும். வெற்றி - ஏடு வேவாததும் எதிரேறியதும். ஏறும் - ஏறுதற்குக் காரணமான.

௫௯. மறுவேந்தன் - வேற்றரசன். மந்திரிக் கொந்தகனார் - கொந்தகக் குலத்திற்பிறந்த மந்திரியாகிய சுந்தர சாமந்தன். மெய்க்காட்டிட்டு - உடம்பு களைக்காட்டி.

௬௦. கோத்திரம் - குலம். தாழ்த்தல் - தாமதித்தல்.

சக.—மாமனாகவந்து வழக்குரைத்த திருவிளையாடல்.

எண்பார் மதுரை வணிகன் புதல்வரில் லாமையினு
ணண்பா மருகை மகவாக்கிச் சென்றபி ஞாதியர்கள்
கண்காணி கைக்கொள்ள மாமனைப் போல்வழக் காடச்செட்டிப்
பண்பாக வந்தசொக் கேபர தேசி பயகரனே. (சக)

சஉ.—அட்டமாசித்திபகர்ந்த திருவிளையாடல்.

நலங்கிளர் வெள்ளிப் பொருப்பினின் மூவிரு நாரியர்க
லெங்குப தேசம் பராமுகஞ் செய்திடத் தொன்மரத்தி
னிலங்கிய நீழலிற் கல்லாக்கி மாற்றிமுன் பெண்சித்தியும்
பலந்தரச் சொன்னசொக் கேபர தேசி பயகரனே. (சஉ)

சங.—தண்ணீர்ப்பந்தர்வைத்த திருவிளையாடல்.

மூந்நிப் பருதி குலத்தடன் மன்னன் முதிர்படையால்
வந்திடக் கண்டு மதுரையர் கோன்செய்யும் வாறெதென்னத்
தந்திரத் தாலவன் றோன்றோற்கு நீசெல்க வென்றுதண்ணீர்ப்
பந்தரை வைத்தசொக் கேபர தேசி பயகரனே. (சங)

சச.—இந்திரன்முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல்.

மடலவிழ் சோலை மதுரையர் வேந்தன் மழைபொழியா
திடர்செயுங் காரைச் சிறைவைக்க நீக்கென் றிமையவர்கோ
னடல்செயு நாளி லவன்முடி மேல்வளை யார நின்று
படவெறி யென்னுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (சச)

சரு.—பொன்னனையாளுக்கருள்புரிந்த திருவிளையாடல்.

மணிதிகழ் மாட மலிமது ராபுரி வாழ்சித்தரேந்
துணிவுட னின்னன்பு கேட்டணைந் தேமென்று சொல்லிப்பின்ன
ரணிதிகழ் பூவணப் பொன்னனை யாளுக்கன் றாணிப்பொன்னைப்
பணிவிடைக் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (சரு)

---

சக. மருகை - சகோதரியின் பிள்ளையை. ஞாதியர்கள் - ஞாதியர்; தாயாதியர். கண்காணி - கண் காணிக்கப்பட்ட விளைநில முதலியவை. செட்டிப் பண்பாக - வைசியவேடமாக.

சஉ. பராமுகஞ்செய்திட - அசட்டை செய்ய. தொன்மரம் - ஆலமரம். மாற்றி - மாறச்செய்து; பெண்வடிவமாக்கி. முன்பு எண்சித்தியும். பலம்-பிரயோசனம்.

சங. வாறு - விதம்; பிற்காலத்து நூல்களில் இச்சொல் இந்த உருவத்துடன் மோனையில் வழங்குகின்றது. தந்திரத்தால் - சேனைகளுடன். தோற்கும் - தோற்பான்.

சச. காரை - மேகத்தை. அடல் - போர். வளையைஎறி.

சரு. பூவணம்-திருப்பூவணம். ஆணிப்பொன்-உரையாணியாகிய பொன். பணிவிடை - கைங்கரியம்; "மூர்த்திபணிவிடை" என்பர்பின்; இக.

சசு.—சோழனைக்கொண்டாழியிற்றழ்த்த திருவிளையாடல்.

வேதா வணங்கு மதுரா புரியில் வெகுண்டடைந்தான்
றீதாக வந்த வளவனென் றோதச் செழியனுக்கா
வாதார மாய்ச்சென் றமராடிப் பண்டுகொண் டாழியென்னும்
பாதாளத் திட்டசொக் கேபர தேசி பயகரனே. (சசு)

சஎ.—திருவாலவாயான திருவிளையாடல்.

ஆம்பா ரனைத்து மலைகோத்து நீங்குமந் நாளினின்னை
வேம்பார் தொடைப்புய னெல்லை விளம்பென வேண்டிடவே
தேம்பாத செல்வத் திருவால வாயெனச் சீருடைய
பாம்பால் வளைத்தசொக் கேபர தேசி பயகரனே. (சஎ)

சஅ.—வரகுணனுக்குச் சிவலோகங்காட்டின திருவிளையாடல்.

வரகுண தேவன் பிரமத்தி வந்து வருத்தியநாட்
டிரமுட னேயிடை மாமரு தூரிற் செறுத்ததனை
யுரகமுற் சூழ்ந்த மதுரையி லேயவற் கூரறியப்
பரகதி காட்டினுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (சஅ)

சகூ.—விடைக்குறியம்பெய்த திருவிளையாடல்.

மடைத்தலை முத்தங் கொழிக்கு மதுரையின் மேல்வளவன்
றிடத்துட னேவரப் பாண்டிய னுள்ளந் தெளியச்செய்து
விடைக்குறி தீட்டிய வம்பாற் கரிபரி வீழ்ந்துமுற்றும்
படத்தொலை வித்தசொக் கேபர தேசி பயகரனே. (சகூ)

ருo.—உலவாக்கோட்டைவைத்த திருவிளையாடல்.

பெருங்கோ டிலாவும் வயல்சூழ் மதுரைப் பெரும்புரியின்
மருங்கோடு வாழ்கின்ற சூத்திர வாதித்தன் மாதவர்க்கா
யிருங்கோ டிலாத வமுதிட் டிளைத்தன னென்றவற்குப்
பருங்கோட்டை யீந்தசொக் கேபர தேசி பயகரனே. (ருo)

---

சசு. வளவன் - சோழன். வளவன் வெகுண்டடைந்தான். கொண்டாழி- தன்பாற் கொண்டு உள்ளேயழுத்திய இடம். பாதாளம் - மிகவும் ஆழமான நீர்நிலை.

சஎ. அலை - கடல். விளம்பென்று நின்னை வேண்டிடவே. தேம்பாத- குறையாத. ஆலவாயென்பது அன்மொழித்தொகையாகப் பாம்பின்பெயரா யிப் பின் அதன்வேண்டுகோளின்படி மதுரைக்காயிற்று.

சஅ. தேவரென்று அரசரைக் கூறுதல்மரபு. அதனைச் செறுத்தென்க. பரகதி - மேலான முத்தி.

சகூ. மடைத்தலை - நீர்மடையில. திடம் - வலி. விடைக்குறிதீட்டிய அம்பு - இடபமுத்திரை பொறித்தபாணம். பட - அழிய.

ருo. கோடு - கரை. மருங்கோடு - சுற்றத்தாரோடு. சூத்திரவாதித்தன் - வேளாளருள் உயர்ந்தோன்; சூத்திரசூளாமணியென்று முதனூலில் இவன் பெயர் கூறப்படும். கோடு-மறு. பருங்கோட்டை - பருத்த நெற்கோ

௫௧.—மூர்த்தியார்க்கு அரசளித்த திருவிளையாடல்.

கலித்துயர் தீர்க்கு மதுரையி லேயன்பர் காதலினு
லொலித்திடு பூசைக்குச் சந்தன முட்ட வுரைத்துச் செங்கை
சலித்திடு மூர்த்தி பணிவிடை யிம்மையிற் றாழ்வறவே
பலித்திட வீந்தசொக் கேபர தேசி பயகரனே. (௫௧)

௫௨.—காரியார் நாரியார் பாப்பகுந்த திருவிளையாடல்.

மாப்பல வுங்கமு கும்புடை சூழு மதுரைதன்னிற்
கோப்புடன் காரியர் நாரியர் மேற்குல வேந்தன்றன்மேல்
யாப்பலங் கார மெழுத்துப் பொருட்சொற் றியையச்செய்த
பாப்பகுந் திட்டசொக் கேபர தேசி பயகரனே. (௫௨)

௫௩.—புலிமுலைபுல்வாய்க்கருளின திருவிளையாடல்.

மாலொடு தேவர் மகிழ்ந்தேத்து நீப வனத்துழையைக்
கோலொடு வேடுவர் கொல்லக்கண் டேயதன் குட்டிக்குத்தாய்
போலுடன் வந்தந்தப் புல்வாய் மறிக்குப் புலியைமுலைப்
பால்கொடு வென்னுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௫௩)

௫௪.—சாதாரிபாடின திருவிளையாடல்.

புயவறழ் சோலை மதுரையின் மன்னன் புகழுவந்தோ
னியலிசை வல்ல னெனவே வரவியற் பாணனுக்கா
வியனுற வேழிசைச் சாதாரி பாட விறகுசுமை
பயனுற வேந்துசொக் கேபர தேசி பயகரனே. (௫௪)

௫௫.—திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.

வேடிக்கை யாக மதுரா புரிமன்னன் மேன்மையெலா
நாடிப் புகழு மியற்பாண பத்திர னல்லிசைக்காத்
தேடிக் கொடுக்கவும் போதாமற் சேரற்குச் சீட்டுக்கவி
பாடிக் கொடுத்தசொக் கேபர தேசி பயகரனே. (௫௫)

---

௫௧. கலித்துயர் - வறுமை முதலியவற்றில் துயர். ஒலித்திடு - மணி முதலியவைகள் முழங்கப்பெற்ற. மூர்த்தி - மூர்த்திநாயனர். ஈந்த - அரசாட்சியைக்கொடுத்தருளிய.

௫௨. மாப்பலவும் - மாமரமும் பலாமரமும்; பெரியபலவுமாம். காரியர் நாரியர் - காரியார் நாரியார் என்னும் புலவர்கள். யாப்பும் அலங்காரமும் எழுத்தும் பொருளும் சொல்லும் என்னும் ஐந்திலக்கணத்திற்கும் பொருந்த. பாப பகுந்திட்ட - செய்யுட்களைப்பிரித்திட்ட.

௫௩. நீபவனம் - கடம்பவனம்; மதுரை. உழையை - மானை. கோலொடு- அம்பைக்கொண்டு. புல்வாய் மறிக்கு - மான்குட்டிக்கு; "புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி" (திருவாசகம்.)

௫௪. பாணனுக்கு - பாணபத்திரர் பொருட்டு. சாதாரி - சாதாரியென்னும் பண்ணை; இப்பண்ணைத் தேவகாந்தாரி என்பர் வடநூலார்.

௫௫. பாணபத்திரன் - மேற்கூறிய பாணபத்திரர். சீட்டுக்கவியென்பது "மதிமலி புரிசை" என்னுங்கவிதை.

ருசு.—பலகையிட்ட திருவிளையாடல்.

முத்தமி ழோரெண் மதுரையி லுன்னைமுப் போதுமல்லா
மெத்திய யாமத்தும் பாடப்பெய்ம் மாரிக்கு வேண்டியதோர்
சித்திர மாம்பொற் பலகை செழுந்தமிழ்ப் பாணனென்னும்
பத்திரற் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (ருசு)

ருஎ.—இசைவாதுவென்ற திருவிளையாடல்.

முடிவொன் றிலாத மதுரா புரிமன்னன் முத்தமிழ்நூல்
குடிகொண்ட வெற்றி விறலிதன் னேடிசை கூறென்றநாள்
வடிவர் திகழ்பத் திரன்மனை யாளிசை வாதுவெல்லும்
படிவந் துதவுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (ருஎ)

ருஅ.—பன்றிக்குட்டிகளுக்குத் தாயான திருவிளையாடல்.

வென்றிகொள் கூடலில் வேளாளன் சேய்களமென் றூறகழ்ந்து
வன்றிறன் மாமுனி சாபத்துக் கேழல் வடிவுறத்தாய்க்
கொன்றிடப் பாண்டியன் றாய்போல வந்து கொழுமுலையப்
பன்றிகட் கீந்தசொக் கேபர தேசி பயகரனே. (ருஅ)

ருகூ.—பன்றிக்குட்டிகளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

நீலக் கரும்பன்றிக் குட்டிமூர் நான்குநின் பாலருந்திக்
கோலத் துடன்வளர்ந் தக்கோல நீங்கித்தென் கூடலிலே
சீலத் தவர்புகழ் வேளாளர் கோத்திரத் திற்செனிக்கப்
பாலர்க் கருள்சொக்க னேபர தேசி பயகரனே. (ருகூ)

சுo.—கரிக்குருவிக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

பொறையற்ற காகத்துக் காற்றும லேதினம் போதநொந்தே
குறைவற்ற செல்வ மதுரைவந் தேதன் குறையனைத்து
மறையமித் துஞ்சய மந்திரத் தாலக் கரிக்குருவிப்
பறவைக் கருள்சொக்க னேபர தேசி பயகரனே. (சுo)

---

ருசு. எண் - எண்ணுகின்ற. மெத்தியயாமத்தும் - நிரம்பிய பாதிபிரவிலும். மாரிக்கு - மழையாலுண்டாகும் துன்பத்தை நீக்கும்பொருட்டு.

ருஎ. விறலி தன்னேடு - மாற்றளாகிய விறலிதன்னேடு.

ருஅ. சேய்கள் - பிள்ளைகள். தூறு அகழ்ந்து - புதர்களைப் பெயர்த்து. கேழல்வடிவு - பன்றிவடிவம். பாண்டியன் தாய்ப்பன்றியைக் கொன்றிட.

ருகூ. மூர்நான்கும் - பன்னிரண்டும். கோலத்துடன் - அழகுடன்; பன்றிகளுடன் என்றுமாம். அக்கோலம் நீங்கி - அந்தவடிவம் நீங்கப்பெற்று. செனிக்க - பிறக்க. அருள் - மந்திரிகளாக இருக்கும்படி கருணைசெய்த.

சுo. காகத்திற்கு ஆற்றுமல் - காகம்செய்யுந் துன்பத்தைப் பொறுத்தற்கு வலியில்லாமல். போத நொந்து - மிகநொந்து. மித்துஞ்சயமந்திரத்தால் - மிர்த்தியுஞ்சய மந்திரத்தால்.

௬௧.—மாமேருவிற் கயல்சென்டுபொறித்த திருவிளையாடல்.

நான்மறை யோரை வழுதி யிகழுநன் மாரியின்றி
மேலுயர் பூதலத் தெல்லோரு மாழு மிடிகெடவே
சேலுடன் செண்டிட்டு மேருப்பொன் வாங்கித் திகழ்மதுரைப்
பால்வரச் செய்தசொக் கேபர தேசி பயகரனே. (௬௧)

௬௨.—சான்றழைத்த திருவிளையாடல்.

கதிசேர் வணிகன் விடத்தா லுயிர்விடக் கன்னிகையால்
விதிசேர் சம்பந்த னெழுப்ப மணந்தவர் மேவுறுநா
ணதிசேர் புறம்பயக் கூவ மிறைவன்னி நன்மதுரைப்
பதிசேரப் பண்ணுஞ்சொக் கேபர தேசி பயகரனே. (௬௨)

௬௩.—நாரைக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

கத்திக் கழனி தொறுமீ னருந்துஞ்செங் காலுரைதான்
முத்திக் குரிய பெரியோரைச் சேர்ந்த முகிழ்த்தத்தினு
லெத்திக்கு மெண்ணு மதுரா புரியிற்சென் றேகிச்செய்த
பத்திக் கருள்சொக்க னேபர தேசி பயகரனே. (௬௩)

௬௪.—வேதமுணர்த்திய திருவிளையாடல்.

மரியாத மாமறை மாய்ந்திட முன்னுகம் வந்தவந்நாட்
டெரியாம லந்தண ரெல்லாந் திகைப்பத் தெளிந்திடவே
விரிவான வேதத்தை யெல்லாருங் கண்டு விளம்புகென்னப்
பரிவாய்ப் பகர்ந்தசொக் கேபர தேசி பயகரனே. (௬௪)

## திருவிளையாடற் பயகரமாலை முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

---

௬௧. மிடி - தரித்திரம். சேலுடன் செண்டிட்டு - செண்டென்னும் ஆயுதத்தாலடித்து மீனமுத்திரைவைத்து.

௬௨. சான்று - சாட்சி. கதி - விளங்குதல், நடை. கன்னிகை - விவாகமாகாதவள். அவர்மணந்து - அவ்வணிகனும் அக்கன்னிகையும் கலியாணம் செய்துகொண்டு. கூவம் - கிணறு. இறை - சிவலிங்கப்பெருமான். வன்னி - வன்னிமரம்.

௬௩. கத்தி - முழங்கி. முகிழ்த்தம் - முகூர்த்தம்; நல்வேளை.

௬௪. மரியாத - இறவாத. முன்யுகம் - முதல்யுகம். தெளிந்திடவே விளம்புகென்ன, கண்டு - தரிசித்து.

உ

கணபதி துணை.

# கடம்பவன புராணம்.

பத்தாவது

## இலீலாசங்கிரகவத்தியாயம்.

### க.—இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்.

புரந்தரன்முன் விருத்திரா சுரனை வீட்டும் புன்பழியாற் சூழுர்கி நீக்கி வந்தே, யரந்தைதவிர் திருத்தங்கண் டிருக்கத தேவர் மனங்க வரு மடல்வேட்ட மென்னப் போந்து, வரந்தருநற் கதம்பவனத் தருளா லெய்தி வரதனைக்கண் டாவிப்பொற் கமலஞ் சூட்டித், திரந் தருசித் திரையில்விடாப் பழிநீங் கறக்கெண் டிண்கயமா னஞ்சாத்திச் சிறப்பின் வாழ்ந்தான். (க)

### உ.—வெள்ளானைக்குச் சாபந்தீர்த்த திருவிளையாடல்.

வாசவன்கூ றிடவயிரா வதநீ பக்கான் வந்தருளா லீசனைக்கண் டிறைஞ்சி வேந்தன், றேசுபெறு துருவாசன் கொடுத்த சேடந் திருமுடிசூ டாதிகழத் தென்னர் கோவாற்,பேசுறுமா முடிபிளக்க வெற்று ணென்றும் பெரிதுதுகைத் திடுமெனவின் னகன்று மண்ணிற், காசுறச்செல் கென்றுமுடன் சபிப்பப் போந்தே னெனக்கழறிக் கடுஞ் சாபந் தீர்ந்தே கிற்றால். (உ)

### ௩.—தடாதகையார் அவதரித்த திருவிளையாடல்.

தென்னன்மல யத்துவசன் காதன் மாதர்ச் சேர்ந்துநெடுங் காலங்கள் போக்கி வேந்த, ரின்னகைமா தனைமணந்து மகவி லாம லியற்றுதவத் தான் மூன்று முலையி னுமேலோர், மின்மகவை யருளவரு

---

க. வீட்டும் - கொன்ற. புன்பழியை. அரந்தை - துன்பம். நிருத்தம் - ஆடல். வேட்டம் மனங்கவருமென்று தேவர்கள்கூற. கதம்பவனம் - கடம்ப வனம்; கதம்பம் - கடம்பு. ஆவி=வாவி. திரம் - நிலைபெறுதலை. சித்திரையில - சித்திரைமாதத்தில், சித்திரைநட்சத்திரத்தில. எண்டிண் கயமானம் - திண்ணிய எட்டு யானைகளாற் சுமக்கப்பட்ட விமானம்.

உ. கூறிட - சொல்ல. நீபக்கான் - கடம்பவனம். வேந்தன் - இந்திரன். தேசு - ஒளி. சேடம் - சேஷம். இகழ - இகழ்தலால். எற்றுண் - அடிக்கப் படுவாய். காசு - குற்றம்.

௩. மலயத்துவசன்: கொடியில் பொதியில்மலை எழுதப்பெற்றிருத்தலின், இவனுக்கு இப்பெயர் வந்தது; இவனை மலைக்கொடி மன்னனென்பர்; ௪:௧.

ளால மைச்சன் விளங்கியபேர் தடாதகையாங் கணவற் கண்டான், மன்னுமுலை மறைந்தரசா மெனப்பொன் மோலி வைத்தரசன் வான டைந்தான் மதுரை யாண்டாள். (௩

௪.—மணஞ்செய்த திருவிளையாடல்.

மும்முலையாள் கணவனைவேட் டெழுந்தெண் டிக்கு முடுகிவிச யஞ்செய்து கயிலை மேவ, வம்மினென விமையவர்போர் புரிந்தாற் ருது வந்துரைப்ப வஞ்சலென்றீ சன்முன் கண்டான், செம்மையிற் காண் பளவின்மற்றைத் தனம றைந்த செயலறிந்தே யருளெனலுந் திருக்கண் சாத்தித், தம்முறையான் மணந்துமுடி சூடி வையந் தனை யாண்டு சிவலிங்கார்ச் சனையுஞ் செய்தான். (௪)

௫.—பதஞ்சலிக்கு நடஞ்செய்த திருவிளையாடல்.

திருமணத்தின் வந்தோர்க டமைநீ ராடிச்சென்மினிவ ணென மூழ்கி|முனிவர் தேவர், வருமவரிற் பதஞ்சலிமா முனிவன் றில்லை மன்றினடங் கண்டல்லாற் புசியே னென்னத், தருமகவான் சாத்திய பொன் மான மீது தளிர்ப்பொடுகண் டறிதியெனக் காட்டி முன்னே, யருமறைசூழ் கனகசபைத் தென்பால் வெள்ளி யம்பலத்தி னடம் புரிந்தான் புசித்தான் கண்டு. (௫)

௬.—பூதமுண்ட திருவிளையாடல்.

[illegible] தடாதகைசொல் வாளிறைவ னின்னே டிங்குத் தாவில்பலர் வருவ ரென வமைத்த வன்னம், விடாதசுரர் சுரர்நாகர் நரர்க ளுண்டு மிக வளருந் தொலைந்ததிலை யென்னும் வேலை, யடாதபசி யால்வருந்தி மெலிந்த குண்டோ தரனுற்றே னெனவலற வீசன் காட்ட, வடாது கயி லைக்கிரிநே ரன்னக் குன்றை வாரியயின் றதுநொடியின் மங்கை காண. (௬)

௭.—ஆறழைத்த திருவிளையாடல்.

பொருவருமா தபத்திரந்தாங் கியநான் சிற்றூண் புசித்திளைத்தே னென்றன்னங் குழிக ளுண்கின், வருதலுநாற் றிரளையாய் விழுங்கித் தெண்ணீர்த் தாகத்தான் மடுப்பொய்கை வாவி கூபப், பொருபுன லுன் ளனகுடித்தும் புனிதா நீரென் றோலிட்ட பூதந்தி யழைத்துக் காட்ட, வொருவுகிழக் கசன்ற புனன் மீண்டுஞ் செல்ல வுறிஞ்சியது மணல்பிறங்க வாயங் காந்து. (௭)

---

காதல் மாதர் - போகஸ்திரிகளை. அமைச்சன் கூறியதை, "ஐயமில்" (௩: அ) என்னுஞ் செய்யுளாலறிக. வேந்தரின்னகைமாது - குலஸ்திரீ.

௪. வேட்டு - விரும்பி. வம்மின் - வாரும். ஆற்றாது - வலியில்லாமல். அஞ்சல் - அஞ்சற்க. சிவலிங்கம் என்றது கடுவூரிற் பூசித்த சிவலிங்கப் பெரு மானை. அந்தச் சிவலிங்கத்தின் திருநாமம் இம்மையே நன்மைதருவார் என்பது.

௫. கனகசபை, இப்போதுள்ள வெள்ளியம்பலத்திற்கு வடக்கே யிருந்த தாக வேறுநூல்களாலும் தெரிகின்றது.

௬. வடாது - வடக்கின்கண்ணுள்ளது.

௭. ஆதபத்திரம் - குடை. கூபம் - கிணறு. ஓலிட்ட - ஓலமிட்ட.

### அ.—கடலழைத்த திருவிளையாடல்.

அன்புடைய வன்னைகட லாடற் கெண்ண வவண்மொழிகேட் டீசனைத்தன் வயத்த தாக்கு, நன்புடையா டொழுதுரைத்தம் மாற் றங் கூற நயந்தறியா ரெனவிருந்து முகம்வா டக்கண், டின்புடையின் முகவாட்டந் துணிந்து காண்பா னெண்ணியிருந் தேனெனவேழ் கடலுங் கூவத், தென்புடவி கடவாதவ் வடையின் வந்து சிவதீர்த் தத் தடத்துறவேழ் கடலென் றூர்கள். (அ)

### ௯.—மலயத்துவசனை யழைத்த திருவிளையாடல்.

வாருதியோ னுவந்தனையேழ் கடலு ளிங்கு வந்தனைக ளெனமறை யருளா லாடு கென்னப், பெருநதி மாமடவா ராடிற் கொள்ளுநர்கள் பிறங் குசுத னான்கன்றே டாடி னல்லாற், சாருறவா டாலென்றார் வர ரென் றியாய்முன் சாற்றுநல்சாற றப்பதியை யழைத்துக் காட்டிச், சீருதவு கணவனொடா டிப்போற் றுமுன் சிவலோகஞ் சொடுக்கவவர் சேர்ந்து வாழ்ந்தார். (௯)

### ௧௦.—உக்கிரன்பிறந்த திருவிளையாடல்.

பொன்மலய மயிலரசு புரிந்து காக்கும் புன்முழுதோர் புரமென வே புரக்கும் வேந்தன், மன்மதிநன் மரபாக வந்துங்கோ மாறன் மாறனுசுந் தரமாற னாகி மாறன், மென்முளரிக் கண்ணுதலவ னருளால் வேலோன் விமலைதடா தகைவயினுற் றிருந்தா னென்றோர், நன் மகவாய்ச் சடையொடுமுற பவிக்க மோலி நனிகவித்தாள் கோச்சடில வருமனென்றார். (௧௦)

### ௧௧.—வளைவேல்செண்டு கொடுத்த திருவிளையாடல்.

தாவருமுக் கிரன்றலையிற புவிவன் பாரந் தாங்கெனவைத் தருள் புரிந்தங் கிமையோர் வேந்த, னுறவப் பூடி சாடுமென வளையுந் தந்து நூக்குகடல சுவறவெறி கெனவ வேல் வீந்து, மேலவருநந் துகம் போல விமையோர் வாழ்பொன் மேருவினை யடிக்கெனவன் செண் டை நலகித், தேவர்புகழ் மணம்புணர்வித் தமலையோடுஞ் சிறந்த கணத் தொடுமறைந்தான் செழிக்க வையம். (௧௧)

---

அ. நன்பு - நன்மை. சிவதீர்த்தம் - எழுகடலுமுண்டாகிய தீர்த்தம்; கட ம்ப. ௪: ௪௭-பார்க்க.

௯. வாருதி = வாரிதி - கடல். உததி - கடல். சுதன் - பிரமன். ஆன் கன்று - பசுக்கன்று. சாருத - பொருந்த. வரர் - பெரியோர்.

௧௦. மலயம் - பொதியமலை. புரம் - நகரம். மதிநன்மரபு - சந்திர குலம். முளரிக்கண் - அக்கினிக்கண். வேலோன் - முருகக்கடவுள். வயின் - வயிறு, இடம். உற்பவிக்க - பிறக்க. சடிலம் - சடை. வருமன் - இரண்டாம் வருணத்தார்க்குரிய பொதுப் பெயர்.

௧௧. தாவரும் - கேடற்ற. ஓவம் - சித்திரவேலை. நூக்குகடல் - செலு த்துகின்றகடல். கந்துகம் - பந்து. செண்டு - ஓராயுதம். அமலை - தடாதகை.

### கஉ.—நான்மாடக்கூடலான திருவிளையாடல்.

தாணுவலி யறிவானங் கெண்ணி யேவுந் தடங்கடலைச் சுரர்சித்தர் மனிதர் நாகர், பூணரவா வெனுமுன்விடக் குடித்த வென்றிப் புட்கலா வருத்த முதற் புயல்க ளுன்கா, மாணுறுமா மழையையே வுற நான் மாட மாக்கிவலி தொலைவிக்க விகலவிட் டேகி, நாளுடு தாழ்ந் தருச்சித்தான் வருணன் றூய நகரிதனை நான்மாடக் கூடலென்றூர். (கஉ)

### கங.—சித்தரான திருவிளையாடல்.

மாத்திரைபொக் கணம்யோக பட்டத்தோடு மதுரையிலெல்லாம்வல்ல சித்த ராகி, யேத்திமட வாரெல்லாம் வீதி தோறு மினவளைசிந் திடவெங்கும் வந்து லாவிச், சேர்த்திடுமன் னுள்பிடிப்ப வகப்ப டாது சென்றுமருத் தின்றிசைக்கல் லிபத்தின் பாங்கர்த், தோத்திரஞ்சே ராலயத்துட் டென்னர் கோமான் றெழுதிடுவான் வரமதியா திருந்தான் சொக்கன். (கங)

### கச.—கல்லானை கரும்புவாங்கின திருவிளையாடல்.

வல்லவரீ யாக்கினு சித்த னுயின் வாங்குவிகல் லிபத்தால்யாங் காண்ப மென்றே, யெல்லவர்கா ணக்கைக்கன் னலைக்காட் டாமுன் வாங்கியயின் றிதுகமல நாள மென்றே, சொல்லருமார் பணிதரள வடமும் பற்றித் துணைவினயின் றதிரமுழங் கிடமுன் சீறும், வில்லரச னஞ்சியதி சயிப்ப வானில் விரைவினொடு நகைத்தொளித்தான் விமலச் சித்தன். (கச)

### கரு.—சங்கப்பலகைகொடுத்த திருவிளையாடல்.

தவிசுவிரும் பிப்புலவர் வேண்டக் கன்மாப் பாவறிவ தொருபலகை தந்தே பின்பு, புவிபுகழ்கீ ரன்பரணன் கபிலன் முன்னுப் புகழ்ந்தடைவி னிருந்துதமிழ் வைத்தாங் கெய்தி,விவிதமெனுங் காலநீளத்தாற் செய்யு டலைமயங்கி மீண்டொருகான் மலைதல் கொண்டாண், டவைபொருந்து பொருள்செய்து கூட்டித் தானு மேறினு னாறைற்பத் தொன்ப தென்றூர். (கரு)

---

கஉ. தாணு = ஸ்தாணு - சிவபெருமானுடைய. பூண் அரவா - அரவைப் பூணுகவுடையாய. இகல்விட்டு - மாறுபாட்டைவிட்டு.

கங. பொக்கணம் - ஒருவகைப்பை; திருச்சிற். உசஉ-பார்க்க. மன் ஆள் - அரசனுடைய ஆள். மருத்தின் திசை - வாயுமூலை. கல் இபம் - கல்லானை. கச. ஆக்கினுசித்தன் - ஆஞ்ஞாஸித்தன; இஃது அவருடைய திருநாமம். வாங்குவி - வாங்கச்செய்வாய். கன்னலை-கரும்பை. நாளம் - தாமரைக்காம்பு. மார்புஅணி - மார்பில் அணிந்த. துணைவின் - விரைவாக. கமலநாளமென்று வாங்கி அயின்றது.

கரு. கன்மாப்பாவறிவ தொருபலகை - பாக்களை அறிவிப்பதாகிய பெரியதொரு கற்பலகை; இது சங்கப்பலகை; "கன்மாப்பலகை யேறியிருந்து ஆராய்வுழி", "கன்மாப் பலகையேற்றி" (இறை. சூ. க-உரை.) விவிதம் - பலவகை. மலைதல் - போர்செய்தல். ஆரன் ஏதினன்.

## ௧௬.—கிழியறுத்த திருவிளையாடல்.

திருந்துசிவ முனிதருமி தளர்ந்தேன் மன்றல் செய்வான்வண் பொருளிலையென் றேத்த விங்குப், பொருந்துமடர் தையரொடுயர் தலத்து லாவும் புகழ்மாற னணைந்தமணங் கண்டு தெண்கொ, லருந் தமிழா லிது பொருந்தப் பாடு வாரே லளிப்பலென்றோர் பொற்கிழிநற் சபையுட் டேக்க, மருந்தனையான் கொங்கென்றோர் கவிதை பாடிக் கிழி யறுப்பான் வழங்கியொப்பித் தனன்கீழ் நின்றே. (௧௬)

## ௧௭.—நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல்.

நாவலவ ரன்பர்பிழை பொறுக்குஞ் சொக்கே நக்கீரன் பிழை பொறுத்துன் னுதற்கட் டீயால், வேவுறச்சுட் டிடுதுயர்நீத் தருளை நல்கி விளங்கியசொல் லெனும்புகழந் தாதி கேட்டுப், பூவைநயற் கண்ணிபொடும் பொய்கை மேவிப் பொன்மலர்ச்செங் கைகொடுத் துக் கரையேற் றென்றே, தேவர்புக ழாலயத்துட் சென்று போற் றத் தேவியொடுஞ் சென்றுகரை யேற்றி னானே. (௧௭)

## ௧௮.—குறுமுனிக்குத் தமிழுரைத்த திருவிளையாடல்.

ஒண்கவிகுன் றும்பின்ன முறுகீ ரறஙிங் குரைதமிழ்நூ லருள் பவர்யா ரெனவெம் மன்னே, திண்புவிப்போர் துயர்தருதென் றிசை வை கென்று தென்முனிக்குக் கயிலையின்முன் புகன்ற ஞான்று, விண்புகழ்முத் தமிழுரைத்தா யென்றி றைஞ்ச விளம்பியயான் மறந் தனனீ நினைத்தி ருந்தா, யெண்வழிநன் றென்றவற்கு முணர்த்து வா யென் றியன்முனிவா வெனவழைத்துள் ளுபதே சித்தான். (௧௮)

## ௧௯.—உண்மை தமிழறிந்த திருவிளையாடல்.

சங்கத்தா ரிறையனார் பொருட்கே மேனைருந் தகைமைபெற வுரை யெழுதி மலைந்து முன்சென், றெங்கட்கீ தறிபவனே நவில சொல் லென் றியம்பவெல்லா மறிவனிவ்வூர் வணிகன் மைந்தன், றுங்க வுருத் திரசன்ம னூமன் றன்னைத் தூயமண்ட பத்துவைத்துச் சொன்மி னன்மைக்,கங்கமுறும் புளகெனப்போர் திருத்திக் கண்டே யக்கீரன் முதன்மூவ ருரைகொண் டார்கள். (௧௯)

---

௧௬. சிவமுனி - தருமியின் தந்தை. தருமி - ஒரு பிரமசாரிப் பிராமணன். மன்றல் செய்வான் - கலியாணம் செய்துகொள்வதற்கு. பொற்கிழி - பொன் முடிப்பு. தூக்க - தொங்கக்கட்ட. மருந்து - அமுதத்தை.

௧௭. நக்கீரன் - சிறப்பையுடைய கீரன். வேவுற - வேகும்படி. சொல் எனும்புகழ் அந்தாதி - சொல் என்பதை முதலிலே பெற்ற கைலைபாதி காளத்தி பாதியந்தாதி யென்னும் பிரபந்தம் (௧௭: ௫.) பூவை-நாகணவாய்ப்புள். கயற் கண்ணி - மீனாக்ஷியம்மை. பொய்கை - பொற்றாமரை.

௧௮. யாரென - யாரென்று சோமசுந்தரக்கடவுள் வினவ. தென்முனி- அகத்தியர். எண்வழி - ஞாபக ஆற்றல்.

௧௯. இறையனார் பொருட்கு - இறையனாரகப்பொருட்கு. ஏனைரும் - மற்றையோரும். மலைந்து - சொற்போர்செய்து. நன்மைக்கு - நல்லபொருளை உங்களுக்குத் தெரிவித்தற்கு. மூவர் - நக்கீரர், கபிலர், பாணர்.

௨௦.—இடைக்காடன்பின்போன திருவிளையாடல்.

கூறுமிடைக் காடனியற் கவிதை பாடிக் கொடுகோண மன்னிகழ்ந்து தள்ள நொந்தே, வீறுயரா லயத்தணுகிப் பொருணீ சொல்லுன் மெல்லியெனு மறைபுகலு மிகழ்ந்த துன்னை, மாறகலுன் றேவியைமற் றிலையென் றேத்தி வரைந்தேக யானுமே குவலென் றேகி, யேறியசங் கத்தொடிருந் தழைப்பப் போந்தா னிடத்தைவட திருவால வாயென் றூர்கள். (௨௦)

௨௧.—கடல்சுவற வேலெறிந்த திருவிளையாடல்.

சிலமது ரையையாழி கொள்வான் மேவச் சிவனருண்ஞா னக்கண்ணுற் கண்ட போதே, யேலவருங் கனவினிலுக் கிரமா றன்பாலெய்தியரும் புதல்வகே ளெதிர்சென் றேகின், றோலமொடுங் கழியவருங் கடலை யாமுன் னுதவியவே லெறிந்துசுவற் றென்னப் போதும், வேலைசுவ றிடவேலை யெறிந்தா னுமம் வேலைவடிம் பலம்பகின்றா னென்றா ரன்றே. (௨௧)

௨௨.—வலைவீசின திருவிளையாடல்.

அம்பிகைக்கா கமங்களியம் புங்காற் கேட்ட வரியபொருண் மறந்திடக்கண் டமலன் சீறி, வெம்பரதர் குலத்துதிபோ கெனவுதித்த மெல்லியைக்கொ ள்வானுருக்கொண் டணுகிக் கேட்பக், கம்புததிக் கொலைமகர வரையொன் றுண்டெங் கவலறநீ வலைவீசிப் பிடித்துவந்தா, னம்புதரு குவமெனவம் முறையி னேடு நளிமகரம் பிடித்தடைவின் மணஞ்செய் தானால். (௨௨)

௨௩.—வளையல்விற்ற திருவிளையாடல்.

மாதவர்க ளாச்சிரமத் தெய்தி மாதர் மாமைகவர்ந் தவர்கொழுநர் சபிப்பப் போந்தே, சோதையர்நீள் வணிகர்குலத் துதித்திலங்கக் கோலவளை வணிகனுக் கூறிச் சென்று, வீதியின்மா லாக்கிச்சூ லாக்கித் தீயில் வீழ்ந்திடுவா ரொருப்படுங்கால் விருப்போ டஞ்சி,யாதியுருமறைத்தொருதன் னுருவங்காட்டி யவருவப்ப வுயர்குலமென் றருளிச் செய்தான். (௨௩)

---

௨௦. மன் - அரசன்; இங்கே பாண்டியன். மெல்லி-மென்மையையுடைய அம்பிகை; மெல்லியென்பர் பின்னும்; ௨௨.

௨௧. ஆழி - கடல். ஓலம் - முழக்கம். கழிய - மிக. போதும் வேலை-வருகின்றகடலை. வேலை எறிந்து - வேற்படையை எறிந்து. வடிம்பு - விளிம்பு. இதனால் உக்கிரகுமார பாண்டியருக்கு வடிம்பலம்பகின்ற பாண்டியரென்பது பெயராயிற்று; ௨௧: ௬, எ-ஆம் பாடல்களின் குறிப்பைப்பார்க்க.

௨௨. கண்டு - அறிந்து. குலத்து உதி - குலத்தின்கண் உதிப்பாய். கம்பு - சங்கம். மகரவரையொன்று - மலைபோன்ற மகரமீன் ஒன்று. எம் கவல்அற - எம்முடைய கவலை நீங்க. கம்பு - கம்புவாய்.

௨௩. ஆச்சிரமத்து - முனிவரிருப்பிடத்தில்; தாருகாவனத்தில். மாமை-பேரழகு. மாலாக்கி - மயக்கமுடையவர்களாகச்செய்து. சூலாக்கி - கருப்பத்தை அவர்களுக்கு உண்டாக்கி. ஒருப்படுங்கால் - துணிந்தகாலத்தில்; சீவக.

## ௨௪.—இலச்சினையிட்ட திருவிளையாடல்.

காடுவெட்டி யென்பானோர் பழுதில் சோழன் கனப்படையோ டெய்தி வையை வடதீரத்தி, னுடிவணங் குதற்கிரங்க வல்ல சொக்க னயர்ந்திரவு பகலாக்கிச் சென்று மாற, னிடுகயல் பொறித்தடைத்த வடபால் வாயி னெடுமதிலி னூடுமுரித்துக் கொணர்ந்து தான்றன், சேடுருவங் காட்டிவிடுத் தடைத்தா னேற்றின் றிகழுமிலச் சினை வாயி லெனப்பொறித்தே. (௨௪)

## ௨௫.—மாணிக்கம்விற்ற திருவிளையாடல்.

செழியர்குலத் தருளினு னுதித்தோர் மைந்தன் செறும்பருவ மைந்திலடல் வேட்டைக் காட்டிற், றழியபுலி தாதையைக்கொண் டேகவங்குச் சார்பில்லாப் புதல்வர்நிதி கவர்ந்தே கக்கண், டொழிவின் முடிசூடுவான் மறைத்துக் காத்த வமைச்சர்முடிக் காமணியின் றென் றோ யுங்காற், கொழிதமிழ்தேர் பட்டினத்துச் செட்டி யென்று கொணர்ந்துவிற்றான் மாணிக்க மவுலி சூட்ட. (௨௫)

## ௨௬.—ஆனையெய்த திருவிளையாடல்.

தவறறுமீ னவனையொரு சோழன் சென்று தன்படையால் வெலமாட்டான் சமணர் தம்மாற், புவனிவளர் மதுரையையோர் கவனமாகப் போந்துவிழுங் கெனவிட்ட களிறறை வீழ, விவர்புகழ் பே ரட்டாலை மீது நின்றோ ரேவிடக்கண் டியானைமலை யென்றா ரன்று, குவைகொள்சொரி யிலத்தியிலத் திமலை யென்றார் கோவொட்டா னட்டாலை வீர னென்றார். (௨௬)

## ௨௭.—ஞானோபதேசஞ்செய்த திருவிளையாடல்.

கணநாதர் தமிலொருவன் விடையிற போந்து கமழ்மதுக மகிழ் வாத புரத்து வாழந், தணராமாத தியர்குலத்துட் டோன்றி மாறன் றனக்குரிய மந்திரியா யிவுளி கொள்வான், வணமார்பொன் னோடு பெருந் துறைசேர்ந் தாசான் வழங்குபந்த சமுபபெற்றுத் தமிழ்பாடித்தன், னிணையாந்தொண் டருக்கிரும்பொ னீந்தே கென்ன மேவினான் றென்மதுரை வேந்தன் றன்பால. (௨௭)

---

௨௪. வடதீரம் - வடகரை. பொறித்து - எழுதி. முரித்து - உடைத்து. சேடு - பெருமை.

௨௫. பருவம் ஐந்தில - ஐந்தாம் பிராயத்தில. தழிய = தழுவிய - அகப்படுத்திக்கொண்ட.

௨௬. இவர்புகழ் - பரவியகீர்த்தி. அட்டாலை - மதின்மேற் செய்யப்பட்டுள்ள மண்டபம். ஏவிட - அம்பைப் பிரயோகிக்க. யானையை யானைமலை யென்றார்; இலத்தியை இலத்திமலையென்றார்.

௨௭. விடையில - கட்டளையிலே. மதுகம் மகிழ் - இருப்பைமரமும் மகிழ மரமும்; இவை திருவாதவூரிலுள்ள ஸ்தலவிருக்ஷங்கள். அந்தணர் ஆமாத்தியர் குலத்துள - அந்தணரில ஆமாத்தியர் பரம்பரையில். இவுளி - குதிரை. வணம் - வண்ணம். தமிழ் - தமிழ்ச்செய்யுட்கள். தன்னென்றது திருவாதவூரரை.

### ௫௮.—நரி குதிரையான திருவிளையாடல்.

வருமிவுளி யிடம்போதா மதுரை யென்றோர் மண்டபத்து மாற னுயர் சிறப்பின் வைகி, யொருமையொடு வினவவரும் வருமென் றோதிப் பரிதவிப்ப வுரைத்துவிட்ட முறைசெய் வோர்க, ளிருநிலெ னக் கொடுந்தண்ட மாற்றாராகி யின்புறுவா சகமோத விரங்கிச் சொக்க, னருநரிமா வாய்க்கொணர்ந்திட் டுகைத்துக் காட்டி யாடை யும்வாங் கிப்பரிமாற் றறுதி யென்றான். (௫௮)

### ௫௯.—குதிரை நரியான திருவிளையாடல்.

அருளாற்பந் தியிற்கட்டும் பரிக ளெல்லா மருக்கனெழு முன் னிமையோர் நகைப்ப வாழ்ந்த, பொருளாரம் புவிமாறன் பொருமி யேங்கக் குறுநரியாய் நெடியகுரல் காட்டப் போந்து, மருளாருந் துறையாள ருரைப்பச்சால மகிழ்ந்திருந்த மன்னவன்பால் வாத வூரர், வெருளாதுண் மகிழ்ந்தறியார் போன்று செல்ல வெகுண்டு கண்டு சிறைவைத்தான் மிகவுஞ் சீறி. (௫௯)

### ௬௦.—மண்சுமந்த திருவிளையாடல்.

மீதுயர்ந்து பௌவமெனப் பெருகும் வையை மேன்மைநதி யுடைப்படைப்பா னடைந்த வம்மை, யாதரிக்கும் பிட்டுதிர்க்கு மண்சுமந்தாண் டடிபட்ட மாறெங்கும் படவீ தேதென், றோதுங் கான் முனியைவிடு விடென்றோர் வாக்காங் குயர்வான்றோன் றச் சிறைவிட் டழைத்துள ளஞ்சிப், பாதமல ரிறைஞ்சிநும்மிச் சைபிற் போ மென்று பகர்ந்துவிட்டான் பெயர்மாற்றான் மாற னென்றார். ()

### ௬௧.—விருத்தகுமார பாலரான திருவிளையாடல்.

வரமுனிவ னொருவன்றன் மகளைப் பாகவதன்வரவே தங்கண் டீந் திடச்சீ றுற்று, ருரைசெயவுண் டென்றுறி விடுப்பச் சென்றே னுறுசைவன் மகளென்று தொடானம் மீச, னரைவிருத்த னய்ப்

---

௫௮. மதுரை இவுளிக்கு இடம்போதாது. வினவ - கேட்ப. முறை செய்வோர்கள் - தண்டிப்பவர்கள். இருநில் என-இருப்பாய் நிற்பாய் என்று. வாசகம் - திருவாசகம். நரி மாவாய் - நரியைக் குதிரையாய். உகைத்து-செலு த்தி. பரிமாற்று அறுதி என்றான் - குதிரையைவிற்றது இதனோடு முடிவாகும் என்றான்.

௫௯. பந்தி - குதிரைகட்டும் சாலை. அருக்கன் - சூரியன். துறையாளர் - பலவகைத் தொழில்களை ஆள்பவர்.

௬௦. பௌவம் - கடல். உடைப்பு - உடைந்தஇடம். அம்மை - பிட்டு வாணிச்சி: இவள் செம்மனச் செல்வி யெனவும் வந்தியெனவுங்கூறப்படுவள்; "சீருடைத் தவத்தின் மிகவாள் செம்மனச் செல்வி யென்னும், பேருடைநரை மூதாட்டி" (திருவாதவூரர். மணசுமந்த. ௨௨.) "பெய்துடைய பெம்மான் றன் பிட்டுண்ணப் புண்ணியஞ்,செய்துடைய செம்மனச் செல்வியும்"(திருவாரு லா, ௪௪௩.) பிட்டு உதிர்க்கு - உதிர்த்த பிட்டுக்கு. மாறு - பிரம்பு. முனி யை - திருவாதவூரரை. மாற்றல் - பிரம்பையுடைமையால்.

௬௧. பாகவதன் - திருமாலடியவன். கண்டு - அறிந்து. சீறு உற்றார் -

புகுந்துட் குமார ஞகி நனிமாமி வரவழும்பா லனுமாய்க் காட்டிப், பெரிதுமழ கிதென்றுதன்ள வுருவங் காட்டிப் பேதையையுங் கொண் டகன்ருன் வியக்க யாரும். (௩௧)

௩௨.—மாறியாடின திருவிளையாடல்.

தென்னனுவந் தறுபத்து மூன்ருய்ந் தெண்ணெண் டிண்கலை வல் லானெனவாங் கணைந்தோர் பாட்டன், பன்னியாட் டியமறியாய் வளவ ஞமம் வருசகல கலாவலவ னென்னக் கற்ருன், குன்னுமூன் ஞேர் தாள்வருத்தம் பொறுரேயந் தீச ஞெருதாளி னின்ருனென் றழுங்கு வாற்கண், டன்னபடை கீழ்பாலிந் திரற்கு மூன்ன மாடினுன் காலமாறி யாடி ஞனல். (௩௨)

௩௩.—பழியஞ்சின திருவிளையாடல்.

மனைவியொடும் போந்திருந்து வழிக்க ஞன்மேல் வனசரன் மூன் கிளியெய்த வம்புவிழ்ந்து, தனிமரணம் வரவருவே டணைத்த டுத்துத் தலைக்கடைசார்ந் தபயம்டும் பனவ ஞேடு, நனியிருளின் மணமனைபோ யருளானிறப நமன்படர்மா தினைக்கொன்ற விசேடஞ் சொல்லி, யினிவரனைப் பசுவாறகொல் வமெனக் கொலல வெழில வழூதி யினுந்தெ ளிந்தான் மறையோ னுள்ளம். (௩௩)

௩௪.—மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

அனையைமன மருட்டியொரு மறையோன் புல்லி யுளவறியா வத்தனைமண் கொட்டால் வெட்டாக், கனையிருளிற கொடுபோங்கால் வேடர் யாதைக் கைக்கொடுசெல வாரடித்த புண்ணீ மொய்ப்பத், துனைவினின்மண் ஞுலகினிலவா வென்பா ரின்றிச் சுழன்றுநவத தாற்கடம்ப வனத்தின் மேவத, தனையடைந்தோர்க் கருள்சொக்கன் வெறுத்து வேளைத் தவிராமா பாதகத்தைத் தவிர்த்தா னன்றே. (௩௪)

௩௫.—அங்கம்வெட்டின திருவிளையாடல்.

அன்பர்தமக் கிடர்வருமோ கருணைச் சொக்குன் டாகவெனும் பணிக்கனிடத் தடைந்து கறகுந், தென்பரவா யுதகலைகள் பயில்

---

கோபித்த உறவினர். உணடைனமு - எல்லா ரைமும் இப்பாகவதன்பால் உள்ளனவன்று. கரைவிருத்தனுய் - கரையயுடைய கிழவனுகி.

௩௨. அறுபத்துமூன்று - அறுபதத மூன்று கலைகளை. பாட்டன்-பாட் டையுடையவன்.

௩௨. அழுங்குவான் - வருந்துவான்.

௩௩. ஆலமேல - ஆலமரத்தின்மேல. வனசரன் - வேடன். தலைக் கடை - வாயில. பனவனேடு - பிராமணனேடு. நமன்படர் - யமதூதர்கள். வரனை - மணமகனை.

௩௪. உளவு - இரகசியம். மண்கொட்டு - மண்வெட்டி. கனையிருள் - மிக்க இருட்டு. புண்ணில் ஈமாய்ப்ப. வேளை வெறுத்து - மன்மதனை வெறுத்து.

௩௫. சொக்கு - சொக்கநாயகர். பணிக்கன் - உபாத்தியாயன். தென்

வோர் தம்முட் சித்தனெனு மொருதீம்பன் முற்றுங் கற்று, மின்பர
வா சான்மனைகை தொடக்கண் டீசன் விருத்தனென்றே விதுவினைந்
தாய் வெட்ட வாவென், றென்பகர்வ தவனுருக்கொண் டறைகூவிச்
சென் றில்லினுட்போய் மறுகேறி வெட்டி வீழ்த்தான். (௩௫)

௩௬.—மதுரையான திருவிளையாடல்.

வெஞ்சமணர் வைதிகநன் னெறிபொ ருது விடுமரவை நாகமலை
யென்ன முன்னம், பஞ்சவனோர் கணையினு லெய்ய வாயாற் படக்கக்
கும் விடம்பரந்து நரராற ருது, நஞ்சணிகண் டாவெனச்சென் றேத்
தத் திங்க ளைல்லமுதான் மதுரையென மதுர மாக்கி, வஞ்சகர்பின்
பசுவைவிட விடையை யேவி வலிதொலைத்தா னிடபகிரி பசுவெற்
பென்றார். (௩௬)

௩௭.—வெப்புத்தீர்த்த திருவிளையாடல்.

புகலியினில் வைதிகவா ரணமென் றியாரும் போற்றியசம் பந்
தரென்றோர் புதல்வர் தோன்றித், தகவுமையா டிருமுலைப்பா லமுத
முண்டு தந்தருண்ஞா னம்பெற்று மதுரை மேவிப், பகவனரு ளால்
விட்ட மடததி விட்ட படுதழன்மா றனுக்கேவித் தணியா வெப்புந்,
திகையமணர் சாணவொழித் தொழியாக் கூனுந் தீரவிர்த் தார்புனி
தத் திருவெண் ணீறால். (௩௭)

௩௮.—கழுவேற்ற திருவிளையாடல்.

திரண்டமண ரெரியினிடை யெழுதி யிட்டாற் றிறல்வேகா வே
டுடையார் வென்றா ரென்று, முரண்டருவா துரைத்தேறி யழலாா
வன்னி மூடுகி மிசை யேடெவையும் வேவ வேவா, தரண்டருநல்
லேடெடுத்தார் தம்மோடின்னு மாறறிவிட வாவென்றுற் றிட்டுத் தங்
கள், கரந்தருமே டாழிசெலக் காழி யாரே டெதிரேற வேறினார் கழு
வாய் மீது. (௩௮)

௩௯.—மெய்க்காட்டிட்ட திருவிளையாடல்.

அடற்படையா ளனவேண்டு மம்பொ னல்கி யரனடியார்க்கமு
தாக்கி யளித்த வென்றிச், சுடர்ப்படைவேற் படைத்தலைவன் கொந்த

---

பரவு - அழகுபரவிய. தீம்பன் - தீங்கு செய்பவன்; கீழ்மகன்; "சிவன்பொற் கோயிற் செம்பொனுங் கவர்ந்த தீம்பர்" (அருணகிரி. நாட்டு. உ௩.) அறை கூவி - போரவழைத்து.

௩௬. பஞ்சவன் - பாண்டியன். பட - உண்டாக.

௩௭. புகலி - சீகாழி. பகவன் - சிவபெருமான். விட்ட - தங்கிய. திகை அமணர் - திகைத்தலையுடைய சைனர்.

௩௮. வேகாத்திறலையுடைய ஏடு என்க. வன்னி - நெருப்பு. அரண் - காவல். கரம் தரும் ஏடு - கையினால் கொடுக்கப்பட்ட ஏடு.

௩௯. படையாள் - படையை ஆள்வாய். கொந்தவீரன் - கொந்தகக்குலத் திற்பிறந்தவீரன். யாவென்ன - எவையென்ன. புள்ளியும் வடுவும் வீரருக்

வீரன் சுந்தரசா மந்தனென்போன் றன்னைக் கூவி, மிடற்படைமீ னவனுண்ட படையா வென்ன விமலனுண்டே வவையுண்டென் றுரைத்தோ னுக்காத், திடப்படுபுள் ளியும்வடிவுங் காட்டிச் சொக்கன் சேனைகொணர்ந் தரியுகைத்து மெய்க்காட் டிட்டான். (௩௯)

## ௪0.—உலவாக்கிழிகொடுத்த திருவிளையாடல்.

ஈசனேயுண் டென்றேத்தி மறையோர் தம்மை யிகழ்ந்திமையோ ரவிமேவள்வி குன்றி வானம், பேசலகம் பொழியாமல வாடக் கண்ட பெருவழுதி களர்ந்திரவு துயிலும் போது, நேசமுனி வரையமர நாதனின் றுடு நிலைதளர்ந்த தவரைநம்போற் பழிச்சி தென்றுங், கேதசொடுகா ணப்பொலியும் பெயும்வா னென்றே செப்பினன்பொற் கிழி கனவில் வைத்தான் சென்றே. (௪0)

## ௪௧.—மாமனாகவந்து வழக்குரைத்த திருவிளையாடல்.

மகவிலா வொருவணிகன் றங்கை மைந்தன் மைமந்தனைத் தன்செல்வ நலகி யிங்குத், தகைமைபெற விருமெனவைத் தேகத் தள்ளித் தாயத்தா ரிலமொடு தனங்கைக் கொள்ள, விகழப்போம் வனிதைமக வொடுநேரா யிறம்போர் திறையவெனச் செய்திசொல்ல விரங்கிச் சொக்கன், மிகையுறுமா துலனுருக்கொண் டவையி லேறி வேண்டாரை விடவென்றான் வியப்ப யாரும். (௪௧)

## ௪௨.—அட்டமாசித்திபகர்ந்த திருவிளையாடல்.

அரன்கயிலை யின்கணிறைஞ் சியக்கி மாரோ ரறுவருயர் சித்தி யெட்டுங் கேட் குங் காலைத், தாமுறக்கே ளாதுமறந் துறைஞ்ச நீர் போய்த் தென்னாட்டிற் பட்டமங்க லத்தாற கீழ்வீழ்ந், தாராறுகல லாக்கிடத்திர் நீபக் கானத் துறைகுவம்யா மலனுறரே சித்தி யாவும், விரவவறை குவநுங்கல் லுருநீத் தென்ன மேவினாக்கு மேவியறி வித்தா னுய்ய. (௪௨)

## ௪௩.—தண்ணீர்ப்பந்தர்வைத்த திருவிளையாடல்.

பரிவேத்தா வெனவழுதி தனயன் கொள்வான் பகர்ந்திடுபெண் கொண்டபய னுடுங்கூ டிப்போய், வரவேறறு வடநாட்டுப் பகையும் வென்று வந்துதமிழ் மதுரைகொள்வா னெதிரக் கண்டு, தெரிவேகத

---

குள்ள சின்னங்கள்; ௩௯: ௩௧-ஆம் பாடலைப் பார்க்க. அரி உகைத்து - குதிரையைச் செலுத்தி.

௪0. அவி - அவிர்ப்பாகம். வானம் - மேகம். பழிச்சு - துதிப்பாய்.

௪௧. இரும் - இருங்கள். மிகையுறும் - மிகுதியுற்ற. வேண்டாரை - பகைவரை.

௪௨. இயக்கிமார் - யக்ஷப்பெண்கள். பட்டமங்கலம்மன்னுமூரில் ஆலமரத்தின் கீழே. நீபம் - கடம்பமரம். அவண - அவ்விடம்.

௪௩. பரிவேத்தா என்று சொல்லும்படி; பரிவேத்தா - தமையனுக்கு விவாகமாகாமலிருக்கும்பொழுது விவாகஞ்செய்து கொண்டவன். அபயன்

துடன் முன்னேன் சொக்குண் டென்று சிந்தித்தேற் றிடச்சென்று பாலை யாக்கி, யரிபோற்றுங் கடவுளனே யெனத்தற் சேர்ந்த வரசுவெல வுதவிவைத்தான் றண்ணீர்ப் பந்தர். (௪௩)

௪௪.—இந்திரன்முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல்.

மன்னவர்மூ வரும்வரவிந் திரனிங் கென்னீர் வந்ததென விரு வர்மழை யென்று போற்ற, வுன்னுமூன முதவியுரை கொடாத மா றற் குறுவலிகாண் பானூர முதவப் பூண, வின்னருளா விருந்தளங் கண் டேகு மென்ன வேகி னருள் வழுதிபுய லரசர் தம்மை, மின் னிகள மிடவவனுந் தோலை போக்க வேளாளர் பிணையில் விட்டான் மழைமல கிற்றால். (௪௪)

௪௫.—பொன்னனையாளுக்கருள்புரிந்த திருவிளையாடல்.

பூவணத்திற் பொன்னனையாள் பதியி லாண்மூன் புனிதனுருக் கும்பிடுவாண் மெழுகு சாத்தி, மேவணாற பொருள்பெறாள் சொக் குண் டென்று மிகவருந்துங் காற்சித்த ராச்சென் றாண்டு, மாவண வல் விரும்புதரச் சொல்லித் தீயின் மாட்டென்று பரிசனஞ்செய் தொ ளித்தான் றந்து, பாவணத்தாள் சொலிச்செய்திறை யுருக்கண்டாண் மெய்ப் பத்தியெழில் கண்டள்ளி முத்தங் கொண்டாள். (௪௫)

௪௬.—சோழனைக்கொண்டாழியிற்றாழ்த்த திருவிளையாடல்.

செம்பியன்றென் மதுரைகொள்வான றிறங்கள் பேசிச் சென்ற டா வெந்தையுண்டென் றிசைக்கு மாறன், றம்பமென வவனெதிரே தோன்றச் சொக்கன் றாண்டுபரி மேல்வேடக் குதிரை யாளாய், நம்பு விசைப் போர்துபரி காட்டிக் காட்டி நனிபார்ந்து மேற்றடத்துத் தீர த்தேறி, வம்பினுடன் பாய்ந்துகுசை தாங்காச் சோழ மனைக்கொண் டாழ்த் தத்தடங்கொண் டாழியென்றூ. (௪௬)

௪௭.—திருவாலவாயான திருவிளையாடல்.

ஓங்குபிர ளயத்தச்சுக் குலையா வாறிங் குயர்ந்திடகிற் றவினமேவூ ரென்றூர் மாறி, நீங்கியபி னொருசெழியன் றேன்றிச் சொக்கே நீண

சோழன். பாலையாக்கி - பாலைநிலமாகச்செய்து. அரி - திருமால். அரசு - பாண்டியன்.

௪௪. நீர்வந்தகாரியம் என்ன. இருவர் - சேரனும் சோழனும். ஆரம் - ஆரத்தை. ஏகினருள் - சென்ற மூன்றரசருள். புயலரசர் - மேக அரசர். கொந்து ஓலைபோக்க. * பிணை - புணை (ஜாமீன்.)

௪௫. பூவணம் - திருப்பூவணம். பதியிலாள் - கணவனில்லாதவள்; வே சை. உரு - திருவுருவம். மேவு அண்ண - விரும்புதல் பொருந்த. ஆண்டு - அங்கே. பரிசனஞ்செய்து - தொட்டு.

௪௬. திறங்கள் - வன்மைகள். எந்தையுண்டு - பாதுகாத்தற்குச் சிவபெரு மான் உளர். தம்பம் - தூண். வேடஆளாய் - வேடவீரனாகி. வம்பு-புதுமை. குசை - கடிவாளம். மனை - அரசனை; தொகுத்தல்.

௪௭.அச்சு - அச்சம். படிவாய் - பூமியில். கதி - நடை. மூடக்கல் - மதில் வளைந்து வளைதிருத்தலையுடைய ஊர். வாலம் - வால். பாம்பின் வாலை

கருக் கெல்லைகாட் டென்று போற்றப், பாங்குபெறக் காட்டென்று விட்ட பாந்தள் படிவாய்வால் வைத்துத்தன் கதியாற் சூழத், தேங்கு புகழ் மதுரை தனைத் திருமுடங்க றிருவால வாயால வாயென் றூர்கள்.

சஅ.—வாதவூரனுக்குச் சிவலோகங்காட்டின திருவிளையாடல்.

சினமாவேட் டம்போய்மீள் வாசித் தாளிற் றிகழ்நிசியில் வழி யுறங்கு மறையோன் றுஞ்சக், கனசாயை பலதருமஞ் செய்து நீங் கக் காணன்மெய் வருந்துங்கால் வெல்வான் போந்த, வினமார்செம் பியற்சயித்துத் தேயங்கைக்கொண் டிடைமருதிற் பிரமகத்தி யொ ழித்துப் போகி, மனமார்நின் னுலகிங்குக் காட்டென் றேத்தும் வர குணற்குச் சிவலோகங் காட்டி னானே. (சஅ)

சகூ.—விடைக்குறியம்பெய்த திருவிளையாடல்.

அன்புடையோ னொருசோழன் மதுரை கொள்வா னனுகலுங் கண் ணேர்ந்தளர்ந்தா லயத்துட் சென்றே, மன்பரம னருள்பெற்றுச் சிறிய தானை மருங்குவரப் போரின்கட் பொருவான் போந்த, பொன் பரவு முளந்தெளிந்த செழியற க்கோவோர் பொருகணையா லருகணையுஞ் சேனை மாளக்,கொன்பரவ வணைந்தறிவான் பொறித்துவிட்ட கோலில் விடை கண்டுவிடை கொண்டு போனான். (சகூ)

ருo.—உலவாக்கோட்டைவைத்த திருவிளையாடல்.

அஞ்சியவன் புடைவேளாண் டலைவ னொரு மானடியார்க் ககம கிழ மாதுந் தானும், விஞ்சுமனத தழுதுபடைத தொழு மாய மிடி புகுந்தாங் கழுதளித்தன் முட்டக் கண்டே, யெஞ்சினமண் ணிற்றனி சங் தருவா ரில்லை யீபவரைக் காட்டாயேன் மடிவ லென்ன, வுஞ்சிட நன் கனவினன விற்கா ணப்போய்க் காட்டியுல வாவரிசிக் கோட்டை வைத்தான். (ருo)

ருக.—மூர்த்தியார்க்கு அரசளித்த திருவிளையாடல்.

வைதிகத்தை யொழித்தமன்னர் கையில் வீழ்ந்து மதுரைகொண்டு வழுதியைவென் றுலகை யாளுநு, கைதவக்கன் னடனையுமண்

---

முன்னிட்டு வாலவாயென் றும் அதன் வாலையுமுன்னிட்டு ஆலவாயென்றும் மதுரை பெயர்பெற்றது.

சஅ. வாசித்தாள் - குதிரையின் அடி. நிசி - இரவு. துஞ்ச - இறக்க. சாயை - பிரமகத்தி. செய்தும். செம்பியன் - சோழனை. தேயம் - இங்கே சோழவளநாடு. இடைமருது - திருவிடைமருதூர்.

சகூ. கொன் - அச்சம். அணைந்து - சென்று. பொறித்துவிட்ட கோலில் - எழுதிவிடுத்த அம்பில். விடை - இடபமுத்திரை, விடுத்தல்.

ருo. அழுதுபடைத்து - உணவளித்து. மாய - அவ் வாழுக்கம் மாயும் படி. மிடி - தரித்திரம். முட்ட-குறைய; "செய்கடன் முட்டா வண்ணந் திருப் பணி செய்யு நாளில்" (பெரிய. அரிவாட். கூ.) தனிசு-கடன். உஞ்சிட - உய்ந்திட.

ருக. கைதவக்கன்னடனை - வஞ்சனையையுடைய கன்னடதேசத்தரசனை. உம்: எதிரதுதழீஇயது, மண்மழையாற் கன்னடனை அழித்து; ருக:அ-பார்க்க;

மழையான் மாற்றிக் காதலினாற் சாத்தொருநாண் முட்டக் கண்டு, பைதலொடு சந்தரைத்த முழங்கை வட்டப் பாறையிற்றேய்த் திடும் வணிக மூர்த்தி தன்னை, மொய்சடைமா மவுலியக்க மணிபூ ணீறு முழுப்பூச்சா மும்மையா லுலகாள் வித்தான். (௫௧)

## ௫௨.—காரியார் நாரியார் பாப்பகுந்த திருவிளையாடல்.

இலகுபுகழ்க் காரியார் நாரி யாரா மிருவர்கவிப் புலவர்வட நாட்டினின்று, நிலவுபுகழ்த் தென்னனைநன் கவிதை பாடி நேருங்கா னெறிமயக்க முறக்கண் டீசன்,திலகவடி விடையனாய் நிரையான் மேய்த்துச் செலும்வனத்திற் றோன்றியிது முன்னாந் தென்னர்க், குலகுபுக மூரியதென நவின்று காட்டி யுடன்பகுந்து சாத்துதமிழ் மாலை கொண்டான். (௫௨)

## ௫௩.—புலிமுலைபுல்வாய்க்கருளின திருவிளையாடல்.

சித்திரைச்சித் திரைக்குவந்து மகவான் பூசை செயுங்காலை மணற்புரத்தை நோக்கிச் செல்லு, மெத்துபுகழ் வணிகன்கண் டவண்டரித்து வியன்வனத்தை மற்றைநாட் சென்று சொல்லப், பத்தியொடு வருஞ்செழியன் புலிமுலைப்பால் பயந்தபுல்வா யுணக்கண்டு விசேட முள்ள, நித்தியவிப் பதிக்கெல்லை காட்டென் றேத்த நிகழ் சித்த னெனவெல்லை காட்டி னானால். (௫௩)

## ௫௪.—சாதாரிபாடின திருவிளையாடல்.

இசைவல்லா னெனும்பாணன் வடதே யத்தா னெய்திடமா றன்பத்தி ரனைவாவென்றே,வசையில்லா யவனொடுபா டுகவாதென்ன வந்துசொக்கன் டென்றிருப்பப் பாணர் வேந்த, னசைவில்லா வடிமையென விறகு கூறி யரையிருளிற சாதாரி யிறைவன் பாடத், திசைநில்லா தொளித்துவிடி வதன்முன் போனான் றிறற்பாணன் கிளைஞரொடும் வெருக்கொண் டாங்கு. (௫௪)

---

சாந்து - சந்தனம். முட்ட - குறைய. பைதல் - துன்பம். வட்டப்பாறை - சந்தனக்கல். சடையே மௌலி, உருத்திராக்கமே பூண், நீறே சந்தனம்.

௫௨. நெறிமயக்கமுற - மதுரைக்குச்செலலும்வழி இதுவோ அதுவோ வென்னும் மயக்கமுண்டாக. திலகவடிவு - மேலான வடிவையுடைய. நிரையான் - பசுக்கூட்டங்களை. பகுந்து - பகுத்து.

௫௩. சித்திரைச் சித்திரைக்கு - சித்திரைமாதத்துள்ள சித்திரை நக்ஷத்திரந் தோறும். மணற்புரம் - மணலூர். மெத்து - நிரம்பிய. தரித்து - தங்கி. பயந்த புல்வாய் - பெற்ற மான்குட்டிகளை; பயந்த - பசிக்கு அஞ்சிய வென்றுமாம்.

௫௪. வசை - நிந்தை. பாணவேந்தனுடைய அடிமையென்று. திறற்பாணன் - வாதுக்குவந்தபாணன்; இஃது இகழ்ச்சி.

### ௫௫.—திருமுகங்கொடுத்த திருவிளையாடல்.

இன்னிசைபா டும்புகழ்ப்பத் திரன்கொ டுப்பா னிறைவரிதி யில்லை
யென வருந்துங் காற்போய், மன்னுமதி மலிபுரிசை மாட மென்று
வரைந்ததோர்திரு முகங்கனவி னனவிற் காண, முன்னுதவி நம்மன்
பன் சேர மான்பான் முடுகென்று விடைகொடுப்பப் போனான் சால,
மின்னுபொருள் வேண்டுவன நல்க வாங்கி மேவியிருந் தனனவழங்
கிச் சொக்கை வாழ்த்தி. (௫௫)

### ௫௬.—பலகையிட்ட திருவிளையாடல்.

பெருகுபொருள் கண்டுமனம் பொருந்து மற்றப் பெரும்பாண
ரிருப்பப்பத் திரனு மன்பா, லுருகுமிசை முச்சந்தி யன்றிக் கங்கு
லுறுநள்ளும் பாடுதுமென் றெய்நப் பாட, வெருவுறமெய்ந் நோவக்
கன் மாரி யேவி மெய்யன்பு கண்டியாரும் வழுத்தச் சங்கக், கிருமை
யியற பலகைதந்தோ னிருந்து பாடென் றிசைப்பலகை கொணர்ந்திட்
டா னினிமை கூர்ந்து. (௫௬)

### ௫௭.—இசைவாதுவென்ற திருவிளையாடல்.

நவையறுபத் திரன்மனைவி முல்லை மாலை நனிவழுதி யிளைவுதனைத்
தள்ள நாணிப், புவனியிற்றீ பாந்தரத்து நின்றுந் தேடிய பொருவி
லொரு பாடுவோட் கொணர்ந்து தன்பே, ரவையினிற்றோற் றாள்சமக்க
வென்று பேசி யறுதியிசைத நிடவவையிற் பாடிச் சார்ந்த, சிவனரு
ளால் வரும்விறலி மாலை முல்லைத் தேமாலை கழுத்திலிடப் பெற்றா
ளன்றே. (௫௭)

### ௫௮.—பன்றிக்குட்டிகளுக்குத் தாயான திருவிளையாடல்.

உயர்தந்தை யிறந்திடப்பன் னிருவர் மைந்த ரூழ்வினையாற்
காட்டுறைவன் னியர்கள் போந்தோ, ரயர்வறுதூ றிருப்பமுனி வன்
சூழ்ந் தேதம் மங்கைகொட்டி யிகழவவர் தம்மைப் பன்றி, வயிறு
தியி னெனமுனிவன் சபிப்பத் தாயும் வந்துதியா முனம்வேட் டைக்
காட்டிற் றுஞ்ச, வியலுறுதா யிழந்தகுரு ளைகளீ ராறு மினிதுயத்
தாய் வடிவின்முலை யூட்டி னானே. (௫௮)

---

௫௫. "மதிமலிபுரிசைமாடம்" என்பது ஒருசெய்யுளின் முதற்குறிப்பு. கனவிற் காணும்படி திருமுகத்தைக் கனவித்துதல். முடுகு - விரைந்துசெல்.

௫௬. பெரும்பாணர் - ஒருவகைப்பாணர். முச்சந்தி - காலை உச்சி மாலை. கங்குல்நள் - பாதிஇரவு. கல்மாரி - கல்மழை. சங்கக்கு - சங்கப்புலவர்க்கு. இயற்பலகை - இயற்றமிழ் நூல்களை அறியும் கண்மாப்பலகையை.

௫௭. முல்லைமாலை - பத்திரன் மனைவியின் பெயர். தீபாந்தரம் - வேறு தீவு. அறுதி - முடிவு.

௫௮. காட்டுறை - காட்டுகோட்டி யுறைகின்ற. வன்னியர் - ஒருவகைச் சாதியார். அயர்வு - சோர்வு. தூற்றன்கண் இருப்ப. முனிவன்: எழுவாய். சூழ்ந்து - (முனிவனைச்) சுற்றிநின்று. வயின் - வயிற்றில். உதியாமுனம் - பிறக்குமுன்பே. குருளைகள் - குட்டிகள். உய=உய்ய - பிழைக்கும்படி.

## ருக.—பன்றிக்குட்டிகளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

அருளுமையாள் பெரியவனே சிறிய பன்றி யாகவெடுத் தணிமுலை ப்பா லளித்தா யுண்ட, குருளைகளீ ராறுமுய்யும் வண்ணங் கண்பார்த் தருளொளகம் மிறைகருணை கூர்ந்து பார்ப்பத், தெருளுறுவே ளாண் டலைவன் மைந்தராகித் தென்னனுக்கு மந்திரியாய் விசயஞ் செய்த, மருளறுவன் னியர்பன்றிக் குறும்ப ரென்பார் வளர்ந்தமலை யைப் பன்றி மலையென் பாரால். (ருக)

## சுo.—கரிக்குருவிக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

கொடிக்கஞ்சிக் கருங்குருவி போந்துகூடற் கோயில்வல மாளுஞ் சூழ் தரவே சொக்கன்,படிக்கஞ்சா மிருத்தியுஞ் சயம தென்னும் பகர் வென்றி மந்திரத்தை யுபதே சித்து, மிடிக்கஞ்சாய் கிளைகளொடு முச்ச ரித்து வெம்பகைவென் றிருக்கெனவந் தினங்க ளோடும், வடிக் குங்கூர் மூக்கலகாற் காக்கை யாதி வலிதொலைக்கக் கண்டிலகோர் வலியா னென்றார். (சுo)

## சுக.—மாமேருவிற் கயல்சேண்டுபொறித்த திருவிளையாடல்.

அந்தணரை யிகழ்ந்திடுமோர் வழுதி தாங்கு மவனியுளோர் மழையின்றி வருந்தல் கண்டிங், கெந்துசெய்வே னெனக்கனவி லீச னெய்தி யிருஞ்செண்டான் மேருவைச்சென் றுணர்த்தி வேண்டு, மைந்துதனந் தறித்தெடுத்துன் கயலு மிட்டு வந்தவரை வாழ்வித்தி யாக மோங்கக், கந்தரவான் பொழியுமெனச் சொன்ன செய்து கால மழை பொழிதரப்பல லூழி வாழ்ந்தான். (சுக)

## சுஉ.—சான்றழைத்த திருவிளையாடல்.

மல்குபொரு ளுடைவணிகன் கன்னி தன்னை மதுரைவளம் பதி யிருக்கு மருக னார்க்கே, நல்குமெனச் சொலித்துஞ்சக் கேட்குஞ் சுற்ற நகரத்தா ரோலைவிட வந்தோன் பாம்பா,லொல்குமிடை யொடும் போங்காற் புறம்பயத்தி லொழிந்தெழுப்புங் கவுணியரான் மணந்து போத,வல்குமனம் பொருத முன்கொண் மனைவி காண வழைத்தான் முச் சான்றீசன் கிணறு வன்னி. (சுஉ)

---

ருக. விசயம் - மிககவெற்றி.

சுo. கொடிக்கு - காக்கைக்கு. உச்சரித்து - ஓதி. வடிக்கும் - கூரிதா க்கிய.

சுக. எந்துசெய்வேன் - யாதுசெய்வேன்; "அதெந்துவேயென்று" (திரு வாசகம்.) மைந்து - வலி. தறித்து - வெட்டி. யாகம் ஓங்கவே. வான் - மேகம்.

சுஉ. துஞ்ச - இறப்ப. ஒல்குமிடை - வணிகக்கன்னி. ஒழிந்து - இற ந்து. அல்கு மனம் - சுருங்கியமனம். முன்கொண்மனைவி - முதல்மனைவி. முச்சான்று - மூன்றுசாட்சி.

### ௬௩.—நாரைக்கு அருள்புரிந்த திருவிளையாடல்.

வதிவாவி வற்றமீ னற்றுப் போந்தோர் மாதவராச் சிரமத்தா வியுட்பு காமுன், புதுநீரா டுறுதவமா முனிவர்ச் சூழ்ந்து புணராமீ னலியாது நிற்பக்கண்டு, ததிஞானம் பிறந்துகொலை தவிர்ந்து போந்து சொக்கனரு ளுடைய னெனக் கோயில் சூழும், விதிநாரை வந்தனை யை விரும்பி வாவி மீனொழித்துச் சிவலோகங் கொடுத்தா னன்றே.

### ௬௪.—வேதமுணர்த்திய திருவிளையாடல்.

பொற்புறுகண் ணுவன்முதலா முனிவ ரெல்லாம் போந்துதிரே தாயுகத்தா திக்கட் கூடி, முற்புகலுங் கலியுகத்தி லிறந்த வேத மொழி பவர்யா ரென்றுவருந் துங்கால் விண்மேற், றற்பரன்மா மதுரைதனி லிருப்பல் வந்தாற் சாற்றுவலென் றருளக்கேட் டணைந்து போற்ற, நற்பரம குருவடிவாய்ச் சொக்கன் வந்து நான்மறையும் வியாகரணத் தொடோ தினான். (௬௪)

---

௬௩. வதிதல் - தங்குதல். ஆவியுள் - தடாகத்தினுள்ளே.

௬௪. தற்பரன் - பரமசிவன். இருப்பல் - இருப்பேன். தற்பரன் விண் மேலருள.

கணபதி துணை.

# திருவுசாத்தான நான்மணிமாலை.

உஅ-ஆம் செய்யுள்.

## அகவல்.

உண்மையி னுணர்ந்த வுறுபொரு ளன்பர்
கண்ணினு ணிறைந்த காட்சியை யுரைப்பி
னிந்திரன் பழிதீர்த் திபத்தினுக் கருளி
வந்து மும்முலைத் தடாதகை பிறந்துழி
ரு யிதம்பெற மணஞ்செய் திறையா னதுவும்
பதஞ்சலி முனிக்குப் பரநட நடித்தது
நீறணி பூத நிறையா துண்டதற்
காறழைத் ததுமுய ரலைகட லழைத்ததுஞ்
சக்கர மலயத் துவசனை யழைத்தது
௧௦ முக்கி ரப்பெரு வழுதி பிறந்ததுங்
கூனல் வளைவேல் செண்டு கொடுத்தது
நான்மா டத்திருக் கூட லானது
மெல்லாம் வலல சித்த ரானதுங்
கல்லாம் யானை கரும்புவாங் கியதுஞ்
௧ரு சங்கப் பலகை தனையளித் ததுவுந்
துங்கப் பொற்கிழி தொடர்ந்தறுத் ததுவு
மறுவறு கீரனை வண்கரை யேற்றிக்
குறுமுனிக் குத்தமிழ் கூறியீந் ததுவு
முண்மை நற்றமி ழுமை யறிந்ததும்
௨௦ பண்புட னிடைக்கா டன்பின் போனது
மலைகடல் சுவற வயில்வே லெறிந்ததும்

---

௮. பரநடம் = மேலானநடம்; சொக்கதாண்டவம்.

௯. சக்கரம் = ஆஞ்ஞை.

வலைவீ சியதும் வளையல்விற் றதுவு
மேனுறு மிடப விலச்சினை யிட்டது
மாணிக்கம் விற்றதும் வல்லிப மெய்தது
௨௫ மூரிய ஞான முபதே சித்தது
நரிபரி யானதும் பரிநரி யானதும்
வருத்த மின்றி மண்சுமந் தருளி
விருத்த குமார பாலரா னதுவும்
பதமா றியதும் பழியஞ் சியது
௩0 மதிபா தகந்தீர்த் தங்கம்வெட் டியது
மதுரை யானதும் வன்சுரந் தீர்த்ததுங்
கதியி லமணர் கழுவே றியதும்
விலகா தரசன்முன் மொக்காட் டிட்டது
மூலவாக் கிழிகொடுத் துயர்வழக் குரைத்தது
௩௫ மட்டமா சித்தி யருளிய வதுவு
மிட்டமாய்த் தண்ணீர்ப் பந்தர்வைத் திருந்தது
முன்னமிந் திரன்முடி மிசைவளை யெறிந்ததும்
பொன்னனை யாளுக் கருளது புரிந்ததும
வெருவாச் சோழனை யாழியில வீழ்த்துத்
௪0 திருவால வாயெனச் செப்பிய செயலும்
வரகுணன் றனக்குச் சிவலோ கத்தினை
விரைவினிற் காட்டி விடைக்குறி யெய்தது
மூற்றமிக் குலவாக் கோட்டை வைத்தது
மூர்த்தி யார்க்கு முதலரா சளித்ததுங்
௪௫ காரியார் நாரியார் கவின்பாப் பகுந்ததும்
வார்புலி முலைப்புல் வாய்க்கரு ளியதுஞ்
சாரமா விசைச்சா தாரிபா டியதுஞ

---

௨௧. ஏண் - வலி, நிலைபேறு.
௨௪. வல்லிபம் - வலியயானை.
௨௮. பதமாறியது - கால்மாறி யாடியது.
௩௨. சுரம் - சுரநோய்.
௩௯. வெருவா - அஞ்சாத. ஆழி - கொண்டாழி.
௪௩. ஊற்றம் - வலி.
௪௬. புல்வாய் - மான்.
௪௭. சாரம் - ஸாரம்.

சேரமா னுக்குத் திருமுகங் கொடுத்ததும்
பலகை யிட்டதும் பாட்டிசை வென்றதுந்
௫௰ தலமிசைப் பன்றித் தாயா யருளிக்
கானக் கரிக்குரு விக்கரு ளியது
மீனக் கொடிபொன் மேருவிற் பொறித்ததும்
சாட்சி யழைத்ததுந் தரைவியர் தருள
வாட்சி நாரைக் கரும்பத மளித்ததும்
௫௫ வேதங் கரைகண் டருளிய வீறுமா
நாதனென் னெண்டிரு நடன நடித்தே
தெள்ளிய தில்லைச் சிற்றம் பலத்தும்
வெள்ளியம் பலத்தும் வியன்மா வனத்த
னமிர்தமெய் வடிவா யருளிய பெருமை
௬௰ நமர்களே யலது நவிலுவ தரிதே.

---

## திருவிளையாடற் கருணைத்திருவிருத்தம்.

**கக-ஆம் பாடல்.**

சந்தனமுட் டிடமுழங்கை தனையுரைத்தார்க் கினியவர சளித்து நூலோர், செந்தமிழைப் பாதிபகுந் திகல்செய்கொடும் புலிமுலையைச் சிறிய புல்வாய், வந்தருந்தும் படியளித்த மாமதுரை யங்கயற்கண் மணவா ளாசீர்க், கந்தமலர்க் கடம்பவன மேவுசுந்த ரேச்சுரனே கருணை வாழ்வே.

---

௫அ. மாவனம் - மாமரம்; திருவுசாத்தானத்திற்குரிய தலவிருட்சமாதலின் அத்தலம் மாவனமென்று கூறப்பட்டு இப்போது சூதவனம் என்று வழங்கப்படுகின்றது.

## திருவிளையாடற்புராணச்

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

[எண்—பக்கஎண்.]

# இலீலாசங்கிரகவத்தியாயச் செய்யுண் முதற்குறிப்பகராதி.

# அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் முதலியவற்றின் அகராதி.

பக்கம்.

உ

# திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.

## அரும்பத முதலியவற்றின் அகராதி.*

[எண்—பக்கஎண்.]



* இங்கே கொடுத்திருக்கும் பதங்களுட் பெரும்பாலனவற்றிற்குப் பொருள் முதலியன குறித்த எண்ணுள்ள பக்கங்களின் அடிக்குறிப்பில் உள்ளன.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கக | 29 | சிற்றறசர் | சிற்றரசர் |
| உஎ | 31 | இவுதரவி | இந்திரவி |
| சக | 21 | செர்ட்டி | கொட்டி |
| சரு | 16 | ஏஜ ஜி து | முதுமடை |
| எஉ | 38 | மண்டத்தை | மண்டபத்தை |
| எச | 36 | யார்வினெ | யார்வினொடு |
| கூஉ | 36 | ருட் | யருட் |
| கூச | 4 | வலவனைச் | வலனைவச் |
| கூசு | 23 | வலவன் | வலன் |
| கOக | 35 | குளம், | குளம்— |
| கOரு | 43 | பெருமன் | பெருமான் |
| கஉசு | 4 | தேர் | தோர் |
| கசரு | 21 | பரிகள் | பரிகல் |
| கசகூ | 27 | வவனுகிய | வனுகிய |
| கசஎ | 22 | சிற்றுயக் | செற்றுயக் |
| ககூஎ | 36 | மயறு | மாறு |
| ககூக | 15 | என்றவங் | என்றவங் |
| கககூ | 37 | பணி | பணிக்கு |
| கஎக | 13 | புனல | புனல் |
| கஅஉ | 13 | னேத்திடச | னேத்திடச் |
| உOஎ | 38 | 1 | 11 |
| உகஉ | 24 | வன்மை | வண்மை |
| உருO | 27 | தளர்வில | தளர்வில் |
| உருச | 14 | ரஙகி | ரங்கி |
| உருசு | 33 | பொருள்களை | பொருள்கள் |
| உசுக | 22 | மதுனை | மதுரை |
| ருகச | 3 | சேதிபர்கோமான் | சேதிபர்கோ |